ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞாநங்களைவிட
ஆயிரமடங்கதிஶயித்த
பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாநவித்தமராய்
ப்ரபந்நஜநகூடஸ்த்தராய்எழுந்தருளியிருக்கும்
மஹாப்ரபாவரான

# நம்மாழ்வாருடைய

பகவதநுபவ பரீவாஹரூபமான, த்ராவிடவேதஸாகரஸாரமாகிய

# திருவாய்மொழி

## மூன்றும்பத்து

## மூலமும் அதின்வ்யாக்யாநாதிகளும்.

---

இவை,

ஸ்ரீமத்-உபய-ஸ்ரீமான்-ஆழ்வார்திருநகரி. வடபத்ரஶாயி

**அரையர்ஸ்வாமி அவர்களாலும்**

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூளியாகிய,

**கா. ராமஸ்வாமி நாயுடு அவர்களாலும்**

அநேகப்ரதிகளைக்கொண்டு பரிசோதிக்கப்பட்டு

சென்னை, ராமாநுஜசித்தாந்தஸபாத்யக்ஷராகிய

ஸ்ரீமான்,

**முதலியாண்டான் முன்னிலையில்**

கண்ணபாளயம் - ஐயாபிள்ளை அவர்கள்குமாரர்

**ஸ்ரீரங்கப்பிள்ளை**

புலியனூர் - இரங்கசாமிமுதலியார் அவர்கள்குமாரர்

**கிருஷ்ணஸ்வாமிமுதலியார் இவர்களால்**

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

---

ஆழ்வார்திருவவதாராதிவர்ஷங்கள்-சகூஅக-பிரமாதிவர்ஷம்.

Madras. March 1880.

ஸ்ரீ

    

ஆழ்வார்திருவடிகளேசரணம்.
எம்பெருமானார்திருவடிகளேசரணம்.

# திருவாய்மொழி.

## மூன்றும்பத்து.

### முதற்றிருவாய்மொழின் ப்ரவேஶம்.

### ஆறுயிரப்படி.

(முடிச்சோதி) திருமலையை யநுபவித்துச் செல்லாநிற்கச்செய்தே, திருமலையிலே யழகனைக்கண்டு ப்ரீத்யதிசயத்தாலே............*

### பன்னீராயிரப்படி.

மூன்றும்பத்தில், கீழிரண்டுபத்தாலும் - ப்ராப்யமான ப்ரஹ்மஸ்வரூபத்தினுடைய சேஷித்வஸித்தமான ரக்ஷகத்வபோக்யத்வங்கள் சொல்லிற்று, அநந்தரம் மூன்றும்பத்தாலும் நாலாம்பத்தாலும் - ப்ராப்தாவான ப்ரத்யகாத்மஸ்வரூபத்தினுடைய பகவதேகசேஷத்வஸித்தமான ததேகாநுபவத்வமும் ததேகப்ரியத்வமும் சொல்லுகிறது. அதில்ததேகாநு பவத்வபரமான இம்மூன்றும்பத்தில் - பகவச்சேஷித்வ பாரம்யஸித்தமான ஆத்மசேஷத்வத்தினுடைய ஸ்வாபாவிகத்வத்தையும், அதுக்குவிரோதியானதேஹஸம்பந்தாதி நிவர்த்தநீயமென்னுமிடத்தையும், நிவ்ருத்தவிரோதிகனுக்கு சேஷவ்ருத்திப்ரகாரம் ப்ரார்த்தநீயமென்னுமிடத்தையும், சேஷியினுடைய ஸர்வாத்மபாவ ப்ரயுக்தமானசேதநனுடைய அப்ருதக்ஸித்தப்ரகாரத்வம் - சேஷத்வவேஷமென்னு மிடத்தையும், ஏவம்விதசேஷத்வ ரஸத்தால்வந்தப்ரேமவிகாரத்தையும், சேஷத்வப்ரதிஸம்பந்தி அர்ச்சாவதாரபர்யந்த மென்னுமிடத்தையும், தச்சேஷத்வாபி வ்ருத்திரூபமான ததீயசேஷத்வகாஷ்டையையும், ததீயபாரதந்த்ர்ய நிதாநமான ததநுபவாபிநிவேசத்தையும், அநுபவவிசேஷமான வாசிகாநுபவ வைலக்ஷண்யத்தையும், ஸர்வப்ரகாராநுபவஸித்தமான ஸம

ஸ்தவிரோதிநிவ்ருத்தியையு மருளிச்செய்து, இச்சேதநனுடைய பகவதேகாநுபவ த்வத்தை ப்ரதிபாதிக்கிறார்.

இதில் முதற்றிருவாய்மொழியில் - சேஷத்வத்தினுடைய ஸ்வாபாவிகத்வத் துக்குமூலமான சேஷியினுடைய ஸர்வப்ரகாரபாரம்யத்தை ப்ரதிபாதிப்பதாக, தெற்குத்திருமலையிலே கைங்கர்ய ப்ரதிஸம்பந்திதயா ஸந்நிஹிதரான அழகருடைய திவ்யஸௌந்தர்யத்தை யபரோக்ஷித்து; ஆபரணவயவ சோபையினுடையஸங்கடிதத்வத்தையும், உஜ்வலமான ஸௌந்தர்யத்தினுடைய வுபமாநராஹித்யத்தையும், ஸர்வப்ரகாரௌஜ்வல்யத்தாலுண்டான ஸர்வேஸ்வரத்வத்தையும், அந்தபாரம்யத்தினுடைய போக்யதாதிசயத்தையும், இந்தவைலக்ஷண்யத்தினுடையவாசாமகோசர மாஹாத்ம்யத்தையும், ஸமஸ்தவேதங்களாலும் ஸாகல்யோக்திபண்ணவொண்ணாமையையும், அதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மருத்ராதி தேவதாவர்க்கமும் சொல்லநினைத்தாலும் அவ்வௌஜ்ஜ்வல்யத்துக்கு மாலிந்யாவஹ மென்னுமிடத்தையும், அபூர்வனை யதிசயிதஜ்ஞாநனை யிருப்பானொரு ப்ரஹ்மாதலைப்படிலும்அதேஜஸ்கரமென்னுமிடத்தையும், ஆஸ்ரிதவாத்ஸல்யாதிசயத்துக்கு ஸங்கல்பமுகத்தாற் பண்ணும் ஸம்ஸ்ரிதரக்ஷணபாரம்யமும் திரஸ்காரகரமென்னுமிடத்தையும், ஏவம்விதமான பாரம்யத்தை யறிந்தீஸ்வராபி மாநிகளுமாஸ்ரயிக்கை யேற்றமல்லவென்னுமிடத்தையு மருளிச்செய்து, பரமசேஷியான ஈஸ்வரன் ஸந்நிதியிலே தச்சேஷத்வத்தினுடைய ஸ்வாபாவிகத்வத்தை யுபபாதித்தருளுகிறார்.....................*

---

## ஈடு.

“பொருளென்றிவ்வுலகம்படைத்தவன்புகழ்மேல் மருளில்வண் குருகூர்வண்சடகோபன்” என்று அவன்கல்யாணகுணவிஷயமாக அஜ்ஞாநமில்லையென்றார் கீழ்த்திருவாய்மொழியில்; அந்தகுணாதிகவிஷயந்தன்னிலோரஜ்ஞாந மநுவர்த்திக்கிறபடி சொல்லுகிறாரிதில். கீழ்ச்சொன்ன அஜ்ஞாநத்துக்கடி கர்மமாயிருக்கும், இங்குத்தை யஜ்ஞாநத்துக்கடி விஷயவைலக்ஷண்யமாயிருக்கும். நித்யஸூரிகளுக்குமுள்ளதொரு ஸம்ஸயமாயிற்றிது. ஸ்வரூபாநுபந்தியாயிருப்பதொரு ஸம்ஸயமாகையாலே ஸ்வரூபமுள்ளதனையும் நிற்பதொன்றிறேயிது.

திருமலையை யநுபவித்துக்கொண்டு வாராநிற்கச்செய்தே, “வட மாமலையுச்சியை” என்னுமாபோலே - திருமலையிலேகதேசமென்னலாம்படியாய், கல்பகதருபஹுஸாகமாகப் பணைத்துப்பூத்தாற்போலே நிற்கிற அழகருடையசௌந்தர்யத்தை யநுபவித்தார்; வேதங்களோடு வைதிகபுருஷர்களோடு ப்ரஹ்மருத்ராதிகளோடு வாசியறஸ்வயத்நத்தால் காணுமன்றுகாணவொண்ணாதபடி யிருக்கிறவிருப்பையும், தானேகொண்டுவந்துகாட்டுமன்று ஜந்மவ்ருத்தாதிகளால் குறையநின்றார்க்குங் காணலாயிருக்கிற விருப்பையு மநுசந்தித்து விஸ்மிதராகிறார்............*

---

## ஜீயர் அரும்பதம்

முடிச்சோதிப்ரவேஶ, கீழ்த்திருவாய்மொழியில் ப்ரமேயத்தையநுவதித்துக்கொண்டு, முதற்பாட்டோடே ரஸோக்தியாகஸங்கதி ( பொருளென்றித்யாதி ) இப்படிசொன்னல் வ்யாஹதமன்றோவென்ன ( கீழ்ச்சொன்னவித்யாதி ) ஹேதுபேதாத்விரோத மில்லையென்றபடி. ஹேதுபேதமுண்டானாலும் அஜ்ஞாநம்த்யாஜ்யமன்றோவென்ன ( நித்யஸூரிகளுக்குமித்யாதி ) ஆகையாலே த்யாஜ்யமன்றென்றுகருத்து. இது "த்யாஜ்யம்" என்றுசொல்லித்தவிர்க்கிறோமென்றாலும் தவிராதென்கிறார் ( ஸ்வரூபாநுபந்தீத்யாதியாலே ) பகவத்ஸ்வரூபாநுபந்தீத்யர்த்தஃ. ஸ்வரூபஶப்தேந - விக்ரஹவைலக்ஷண்யமுச்யதே. பகவத்விக்ரஹவைலக்ஷண்யப்ரயுக்தமித்யர்த்தஃ. பகவத்ஸௌந்தர்ய ஸௌகுமார்ய ப்ரயுக்தாஜ்ஞாநம் ஸூரிகளுக்கு முண்டென்னுமிடத்தில் - "ஆங்காரவாரமதுகேட்டு" இத்யாதிகளைப்ரமாணமாக வநுஸந்திப்பது.

கீழ்த்திருவாய்மொழியோடே ஸாக்ஷாத்ஸங்கதி ( திருமலையையித்யாதி ) திருமலையிலேகதேசமென்னலாம்படி யென்கையாலே - சரமபர்வமான திருமலையாழ்வாரநுபவத்தைவிட்டு ப்ரதமபர்வமான அழகரையநுபவிப்பானென்னென்கிற சங்கையும்பரிஹ்ருதம். "ஓதுவாரோத்தெல்லாம்" "வாழ்த்துவார்பலராக" "அரன்முதலா" பிறையேறு சடையானும்நான்முகனும்" இத்யாதிகளைப்பற்ற ( வேதங்களோடித்யாதி ) விசேஷணத்ரயம். "களிறளிப்பான்" என்றத்தைப்பற்ற ( தானேகொண்டுவந்தித்யாதி ) விஸ்மிதராகிறுரென்றது - ஆர்த்திகமாதல்; முதற்பாட்டினர்த்தத்தைப்பற்றவாதல். * அந்தாமத்தன்பிலும் - அழகன்றோசொல்லிற்று, அதிலிதுக்கு வாசியேதென்னில்; * ஆடியாடியில் வ்யஸநம்தீர "ஸுயாயஶோஜ்யா‌நஃ" ( அயதாயதம்ததாநஃ ) என்றடைவுகெடவொப்பித்துவந்தபடி சொல்லிற்றங்கு; இங்கு - அடைவுபடவொப்பித்துவந்தபடி சொல்லுகிறதென்று வாசிகண்டுகொள்வது......................................................................*





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## மூன்றாம்பத்து.

### முதற்றிருவாய்மொழி—முதற்பாட்டு.

முடிச்சோதியாயுனதுமுகச்சோதிமலர்ந்ததுவோ
அடிச்சோதிநீநின்றதாமரையாயலர்ந்ததுவோ
படிச்சோதியாடையொடும்பல்கலனாய்நின்பைம்பொற்
கடிச்சோதிகலந்ததுவோதிருமாலேகட்டுரையே.

### ஆறாயிரப்படி.

அழகருடைய திருவணிகலன்களுக்கும் திவ்யாவயவங்களுக்குமு ண்டானசேர்த்தியழகாலுள்ள அழகைவிஸ்மிதராய்க்கொண்டுபேசுகிறார்.

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஸ்ரீயஃபதியான சேஷியினுடைய ஆபரணாவயவசோபைக ளினுடைய ஸௌகடிதத்வத்தாலேவிவேகாயோக்யமாம்படிபிறந்த ஸம்ஶயத்தைத்தீ ர அருளிச்செய்யவேணுமென்று அவன்றன்னையபேக்ஷிக்கிறார்.

உனது - உன்னுடைய. முகம் - திருமுகத்தின். சோதி- ஒளியானது. முடி- திருவபிஷேகத்தின். சோதியாய் - ஒளியாய். மலர்ந்ததுவோ - மேலேகிளம்பிற் றோ. அடி - திருவடிகளின். சோதி - ஒளி. நீநின்ற - நீநின்ற. தாமரையாய் - ஆ ஸநபத்மமாய். அலர்ந்ததுவோ - கீழேபரம்பிற்றோ. பை - பரந்த. பொன் - அழ கையுடைய. நின் - உன். கடி - கடியின். சோதி - சோதியானது. படி - ஸ்வாபா விகமான. சோதி - ஒளியையுடைய. ஆடையொடும் - திருப்பரிவட்டத்தோடே. ப ல் - பல. கலனாய் - திவ்யாபரணங்களுமாய். கலந்ததுவோ - கீழும்மேலுங்கலந் ததோ. திருமாலே - ஸ்ரீயஃபதியாகையாலே "அர்த்தோவிஷ்ணுரியம்வாணீ" (அ ர்த்தோவிஷ்ணுரியம்வாணீ) என்கிறபடியேசப்தார்த்தங்களிரண்டுக்குங்கடவனே. கட்டுரை - இத்தைஸம்ஶயமறவருளிச்செய்யவேணும்.

ஸம்ஶயமிரண்டு கோடியிலுங்கிடக்கையாலே, முடிமுதலான ஆபரணாதி சோபைமுகம்முதலான அவயவசோபை யாயிற்றோவென்றுங்கொள்வது. படி-ஸ் வபாவம். கடி-அரைக்கட்டு. பை - விரிவு................................................*

---

### ஈடு - முதற்பாட்டு.

முதற்பாட்டில்-அழகருடைய திவ்யாவயவங்களுக்கும் திருவணி கலன்களுக்குமுண்டான ஸௌகடிதத்வத்தைக்கண்டு விஸ்மிதராகிறார்.

(முடிச்சோதியாயுனதுமுகச்சோதிமலர்ந்ததுவோ) உன்னுடைய திருமுகத்திலுண்டான தேஜஸ்ஸானது திருவபிஷேகத்தின் தேஜஸ்ஸாய்க்கொண்டுவிகஸிதமாயிற்றே. உன்னுடைய திருவபிஷேகத்தின்தேஜஸ்ஸானதுதிருமுகத்தின் தேஜஸ்ஸாய்க்கொண்டுவிகஸிதமாயிற்றேயென்றும்வரக்கடவது. சேஷபூதனுக்கு முற்படத்தோற்றுவது தன்னுடைய சேஷத்வ ப்ரதிஸம்பந்தியான அவனுடையசேஷித்வமிறே. அவனுடைய சேஷித்வப்ரகாசகமானதிருவபிஷேகத்தினழகு திருவடிகளிலேபோரவீசிற்று. (அடிச்சோதி) திருவடிகளின்தேஜஸ்ஸானது தேவர்நின்ற ஆஸநபத்மமாய்க்கொண்டு விகஸிதமாயிற்றே, நீநின்ற தாமரையடிச்சோதியாய்க்கொண்டு விகஸிதமாயிற்றே. (நீநின்ற) ஏகரூபனானவனும் நீரிலேநின்றாற்போலே யாதரித்துநிற்கும்படி. இதுப்ராப்யத்தினுடையசரமாவதியாகையாலேஅவ்வருகுபோக்கில்லையே, திருவடிகளின்தேஜஸ்ஸானதேறக்கொழித்தது; கடலுக்குட்பட்டதொரு த்ருணம்ஒருதிரையொருதிரையிலேதள்ளக்கிடந்தலையுமாபோலே, ஓரழகோரழகிலேதள்ளக்கிடந்து அவற்றையநுபவிக்கிறார். (படிச்சோதி) திருமேனியழகுபல்கலனாய்க்கலந்ததுவோ, பல்கலன்படிச் சோதியாய்க்கலந்ததுவோ; சோதியாடைகடிச் சோதியாய்க்கலந்ததுவோ, கடிச்சோதி சோதியாடையாய்க் கலந்ததுவோ. நின் பைம்பொற்கடிச்சோதி, படிச்சோதியாடை யொடும்பல்கலனாய்க்கொண்டு கலந்ததுவோ - உன்னுடைய அழகியதாய் ஸ்ப்ருஹணீயமான திவ்ய கடி ப்ரதேசத்திலுண்டான தேஜஸ்ஸானது, ஸ்வாபாவிகமான தேஜஸ்ஸையுடைத்தானதிருப்பீதாம்பரந்தொடக்கமானபலதிருவாபரணங்களாய்க்கொண்டு சேர்ந்ததுவோ. நீரிலேநீர்கலந்தாற்போலே பேதக்ரஹணத்துக்கநுபபத்தியேயாயிருக்கை. அன்றியே, படிச்சோதி - படியாணியான வொளியென்னவுமாம். (திருமாலே) இதுவுமொருசேர்த்தி யழகிருக்கிறபடி. "அகலகில்லேன்" என்றுபிரியமாட்டாம லிருக்கிறபிராட்டியும், ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான நீயுங்கூடவிசாரித்து இதுக்கொரு போக்கடியருளிச்செய்யவேணும். இன்றநுபவிக்கப்புக்கஇவர் "என்றுமோரியல்வினரெனநினைவரியவர்" என்பர்; நித்யாநுபவம் பண்ணுமவர்கள் "*பண்டிவரைக்கண்டறிவதெவ்வூரில்யாம்" என்றேபயிலாநிற்பர்கள்; ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனவன் *தனக்கும் தன்றன்மை யறியவரியனாயிருக்கும்; ஆக, இப்படியின்றநுபவிக்கப் புக்கஇவரோடு, நித்யாநுபவம்பண்ணுகிறவர்களோடு, அவன்றன்னோடு வாசியில்லை இஸ்ஸம்ஶயமநுவர்த்திக்கைக்கு, தமக்கிந்த ஸம்ஶயமறுதி யிடவொண்ணாதாப்போலே அவர்களுக்குமென்றிருக்கிறார் (கட்டுரையே) சொல்லவேணுமென்றபடி.................*

---

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (முடிச்சோதியித்யாதி) திருவணிகலன்கள் - திருவாபரணங்கள்.

“ உனதுமுகச்சோதி - முடிச்சோதியாய் மலர்ந்ததுவோ ” இத்யாதியாலே - நாட்டில்புருஷர்களுக்காபரணங்களாலே அவயவங்களுக் கௌஜ்ஜ்வல்யமுண்டாம், இவ்விஷயத்தி லவயவங்களாலே யாபரணங்களுக் கௌஜ்வல்யமென்று தோற்றுகிறது.

ஸம்ஶயம்கோடி த்வயாவலம்பியாகையாலேகோட்யந்தரத்தையுங் காட்டுகிறார் ( உன்னுடையதிருவபிஷேகத்தினித்யாதி ) ( வரக்கடவதிறே ) ஶ்வேதாஶ்வதரத்திலே “ 𑌕𑌿𑌙𑍍𑌕𑌾𑌰𑌣𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ” ( கிங்காரணம்ப்ரஹ்ம ) இத்யாதிவாக்யத்திலே - காரணம்ப்ரஹ்மகிம், “ 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌕𑌾𑌲𑌾𑌦𑌿𑌰𑍍𑌵𑌾 ” ( ப்ரஹ்மவாகாலாதிர்வா) என்றொருயோஜனை சொன்னார்களிறே; அங்கேகிம்ஶப்தபலத்தாலே - கோட்யந்தரமுபஸ்த்திதமானாற்போலே, இங்கும் “ ஓ ” என்கையாலே - கோட்யந்தரமுபஸ்த்தித மாகிறதென்றபடி. சேஷத்வாநுகுணமாகத் திருவடியையநுஸந்தியாதே, முற்படத்திருமுடியைச்சொல்லுவானென்னென்ன ( சேஷபூதனுக்கித்யாதி ) இவ்விடத்திலே - “ 𑌕𑌿𑌰𑍀𑌟𑌚𑍂𑌡𑌰𑌤𑍍𑌨𑌰𑌾𑌜𑌿𑌃 ” ( கிரீடசூடரத்நராஜிஃ ) இத்யாத்யநுஸந்தேயம்.

திருவபிஷேகத்தினழகை முடியவநுபவித்தாரோ, திருவடிகளிலே போவானென்னென்ன ( அவனுடையவித்யாதி ) நீ-ஏகரூபனானநீ. ஏகரூபனானவனும். ஸஹகாரிநிரபேக்ஷனானவனும். ஸவிகாஸமான தாமரைநீரிலே செவ்விபெறுமாபோலே, திருவடிகளுமாஸநபத்மத்தோட்டை ஸம்பந்தத்தாலே செவ்விபெற்று வருகிறதென்றபடி.

ஆனால்திருவடிகளுக்குக்கீழே போகாமல்மேலேபோவானென்னென்ன (இதுப்ராப்யத்தினுடையவித்யாதி) இது - திருவடிகள். ( போக்கில்லையே ) ஆகையாலே மேலேறக்கொழித்ததென்றபடி. * ஏகைகஸ்மிந் பரமவயவேநந்த ஸௌந்தர்யமாயிருக்க, அவயவாந்தரங்களிலே போகக்கூடுமோவென்ன ( கடலுக்குளித்யாதி ) ஓரழகோரழகிலே தள்ளப்போகிறாரித்தனையொழிய, அருசிபிறந்தாதல், முடியவநுபவித்தாத லல்லவென்றபடி. “ 𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌤𑌰𑌙𑍍𑌗𑌤𑌾𑌡𑌨𑌤𑌰𑌳𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑍃𑌤𑍍𑌤𑌿 ” ( ஸௌந்தர்யதரங்கதாடநதரளசித்தவ்ருத்தி ) என்னக்கடவதிறே. முந்தினவர்த்தத்தில், “ படிச்சோதி ” என்றும், “ சோதியாடை ” என்றும், “ சோதி ” என்றத்தையிரண்டிலும் கூட்டுவது. “ ஒடும் ” என்றது - அவ்யயமிப்போது. “ படிச்சோதி ” இத்யாதிக்கு யோஜநாந்தரம் ( மின்பைம்பொன்னித்யாதி ) இதுக்குசப்தார்த்தம் (உன்னுடையவித்யாதி) திருப்பீதாம்பரந் தொடக்கமானவென்கிற விசேஷணத்தாலே-இந்தநிர்வாஹத்தில், “ பல்கலன் ” என்றது - உதரபந்தநாதிதிவ்ய கடிப்ரதேசத்தில் திருவாபரணங்கள். த்விதியநிர்வாஹே, “ படிச்சோதியாடையொடும் பல்கலன், மின்பைம்பொற்கடிச் சோதியாய்க்கலந்ததுவோ ” என்றுமத்யாஹார்யம். “ கலந்ததுவோ ” இத்யநேந ஸூசிதமர்த்தமாஹ ( நீரிலேயித்யாதி ) முந்தினவர்த்தத்தில், “ படி ” என்று - விக்ரஹம். த்விதியார்த்தத்தில் ஸ்வாபாவிகமாதல் ; ஆணிப்பொன்னாதல்.

(இதுவுமொருசேர்த்தியிதி) இந்தத்திருமேனி யந்தத்திருமேனியாய் விகஸிதமாயிற்றே யித்யாதித்ரஷ்டவ்யம். “ திருமாலே - கட்டுரை ” என்றுமேலேகூட்

டி தாத்பர்யாந்தரம் (அகலகில்லேனித்யாதி) "கட்டுரையே" என்றத்தைக்ஷேபோக்தியாக விவக்ஷித்து ; க்ஷேபிக்கிறதென், ஒருவராலும் சொல்லப்போகாதோவென்ன (இன்றநுபவிக்கப்புக்கவித்யாதி) "என்றுமோரியல்வினர்" இத்யாதிக்கு - கீழ்ச்சொன்னதொழிய, வடிவழகாலே பரிச்சேதித்தறிய வொண்ணுதென்றர்த்தாந்தரம் கண்டுகொள்வது. (நித்யாநுபவமித்யாதி) "பண்டிவனை" இத்யாதியும், பிராட்டிதசையில் பாசுரமாகையாலே நித்யஸூரிகளுக்தி யாகலாமிறே. பரபுத்தேரப்ரத்யக்ஷத்வாத் அதெப்படி யிவர்க்குத்தெரியுமென்ன (தமக்கித்யாதி) கட்டுரையேயென்று - முழுச்சொல்......................................................*

# இரண்டாம்பாட்டு.

கட்டுரைக்கிற்றுமரைநின்கண்பாதங்கையொவ்வா
சுட்டுரைத்தநன்பொன்னுன்றிருமேனியொளியொவ்வா
தொட்டுரைத்திவ்வுலகுன்னைப்புகழ்வெல்லாம்பெரும்பாலும்
பட்டுரையாய்ப்புற்கென்றேகாட்டுமாற்பரஞ்சோதி.

## ஆறுயிரப்படி.

(கட்டுரைக்கில்) மெய்சொல்லில், தாமரை, கண்பாதங்கைகளுக்கு நிதர்ஶநமாகமாட்டாது. சுட்டுரைத்தநன்பொன் திருமேனிக்கு நிதர்ஶநமாகமாட்டாது. இப்படியிருக்கச்செய்தே யிவற்றைத்ருஷ்டாந்தமாகச்சொல்லி யிந்தலோகமுன்னைப்புகழாநிற்கும் ; அத்ருஷ்டாந்தமாகச் சொல்லுகிறவையெல்லாம் த்ருஷ்டாந்தமாகமாட்டாமையன்றியே, உனக்கு நிகர்ஷத்தையாவஹிக்குமென்றுகொண்டு திவ்யாவயவகதமான அழகைப்பேசுகிறுர்...........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உத்தமான வடிவழகினுடைய உபமானராஹித்யத்தை யருளிச்செய்கிறுர்.

பரஞ்சோதி - பரஞ்சோதியானவனே. கட்டுரைக்கில் - நிர்ணயித்துச்சொல்லில். தாமரை - தாமரையானவை. நின் - உன்னுடைய. கண் - திருக்கண்கள். பாதம் - திருவடிகள். கை - திருக்கைகளை. ஒவ்வா - ஒவ்வா. சுட்டு - ஓடவைத்து. உரைத்த - ஒப்பமிட்ட. நன் - நல்ல. பொன் - பொன்னுனது. உன் - உன்னுடைய. திருமேனி - அப்ராக்ருதமானதிருமேனியின். ஒளி - ஸமுதாயசோபையை. ஒவ்வாது - ஒவ்வாது. ஆகையால். இ - இந்த. உலகு - லோகம். ஒட்டு - உவமைச்செறிவை. உரைத்து - சொல்லி. உன்னை - உன்னை. புகழ்வு - புகழுமது. எல்லாம் - எல்லாம். பெரும்பாலும் - ப்ராயேண. பட்டுரையாய் - தோற்றிற்றுச்சொல்லிற்றுய். தார்ஷ்டாந்திகமானவாச்யத்தை. புற்கென்றே - புல்லியதாகவே. காட்டும் - காட்டாநிற்கும்.

புற்கு - புன்மை. ஒட்டு - உவமைச்செறிவு. தாமரையும் பொன்னுமொவ்வாமை - ஆகந்துகவைலக்ஷண்ய யுக்தமானவைஸ்வபாவதோவிலக்ஷணவஸ்துவுக்குத் தகுதியல்லாமையாலே. பெரும்பாலும் - மிகவுமென்றுமாம்.................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

அழகருடைய ஸௌந்தர்யத்துக்கு ஸத்ருஶமில்லாமையாலே லோகத்தார்பண்ணும் ஸ்தோத்ரமஙகுத்தைக்கவத்யமா மித்தனை யென்கிறார்.

(கட்டுரைக்கில்) அநுபவித்துக்குமிழிநீருண்டுபோமித்தனைபோக்கிச்சொல்லப்போகாது. (கட்டுரைக்கில்) கட்டுரையென்று - முழுச்சொல்லாய், சொல்லிலென்றபடி. சொல்லில், தாமரைஜாதியாக வுன்னுடையதிருக்கண்களுக்கும் திருவடிகளுக்கும் திருக்கைகளுக்கு மொப்பாகாது. ஓரோவ்யக்திகளுக்கும் தாமரைஜாதியாக வொப்பாகாது. குளிரநோக்கினகண், தோற்றுவிழும்திருவடிகள், எடுத்தணைக்கும் திருக்கைகள், இவையிருக்கிறபடி; "நஶாஸ்த்ரம் நைவசக்ரமஃ" (நஶாஸ்த்ரம் நைவசக்ரமஃ) என்கிறவிடத்தில் - அடைவுசொல்லுகிறதன்றே, இவருமநுபவத்துக்குப் பாசுரமிட்டுச்சொல்லுகிறாரித்தனையிறே; நின்கண் என்கையாலே - "உனதுமுகச்சோதி" என்றத்தைநினைக்கிறது; பாதமென்று - "அடிச்சோதி" என்றத்தைநினைக்கிறது; கையென்று - தாம் நடுவநுபவித்த அழகுக்குபலக்ஷணம்.

(சுட்டுரைத்தவித்யாதி) பொன்னை உபமாநமாகப் போராதென்கைக்கு சிக்ஷிக்கிறார். (சுட்டுரைத்த) காய்ச்சியோட வைத்துரைத்தநன்றானபொன் உன்னுடைய ஸ்வாபாவிகமான திவ்யவிக்ரஹத்தி னொளிக்கொப்பாகாது. இத்தனைசிக்ஷித்தாலாயிற்று ஒப்பாகச்சொல்லப்பாத்தம் போராதது. "ருக்மாபம்" (ருக்மாபம்) என்னக்கடவதிறே.

(ஒட்டுரைத்து) ஒட்டாவது-கூடுகை. அதாவது-சேருகை. ஸத்ருஶமாயிருக்கை. உனக்கு ஸத்ருஶமாகச்சொன்னார்களாய் (இவ்வுலகு) "மஞ்சாஃக்ரோஶந்தி" (மஞ்சாஃக்ரோஶந்தி) என்கிறபடியே. காண்கிறஇதுக்கு மேற்படவறியாத இந்தலௌகிகர். ப்ராக்ருதபதார்த்த வைலக்ஷண்யமு மறியாதவர்கள். (உன்னை) சாஸ்த்ரைக ஸமதிகம்யனாய், அவைதானும் புகழப்புக்கால் "யதோவாசோ நிவர்த்தந்தே" (யதோவாசோ நிவர்த்தந்தே) என்னும்படியானவுன்னை. (புகழ்வெல்லாம்) உள்ளதுஞ்சொல்லி, இல்லாதது மெல்லாமிட்டுக்கொண்டு சொன்னார்களா யிருக்கிறதுமெல்லாம். (பெரும்பாலும்) மிகவும். ப்ராயேண. (பட்டுரையாய்) பட்டதுரைக்கை - நெஞ்சில்பட்டத்தைச்சொல்லுகை. விஷயத்தைப்பாராதே ப்ரதிபந்தத்தைச்சொல்லுகை. (புற்கென்றேகாட்டுமால்) புன்மையையே காட்டாநின்றது. இவன்ப்ரதிபந்தத்தைச் சொன்னானாய் விஷயத்தில் ஸ்பர்ஶியாதே யிருக்குமாகில், அங்குத்தைக்குப்புன்மையேகாட்டும்படியென்னென்னில்; ரத்நமறியாதானொருவன் "குருவிந்தக்கல்

லோடொக்குமிது " என்றால், அவ்வளவாகவிறே யிவனுக்கிதில் ப்ரதிபத்தி, அவ்வழியாலே யதுக்கவத்யமாமிறே; அப்படியேயிவன் பண்ணும் ஸ்தோத்ரமிங்குத்தைக்கு அவத்யமாயேதலைக்கட்டும். இங்குத்தைக்குப் புன்மையைக் காட்டுகைக்கு நிபந்தநமென்னென்னில் (பரஞ்சோதி) "நாராயணபரோஜ்யோதி:" (நாராயணபரோஜ்யோதி:) என்கிறபடியே, நீசர்வவஸ்துவிஸஜாதியனுகையாலே.......... ..................*

---

## ஜீயர் அரும்பதம்

இரண்டாம்பாட்டு. (கட்டுரைக்கிலித்யாதி) பாட்டெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (அழகருடையவித்யாதி) "ஒவ்வா" என்றத்தைப்பற்ற (ஸத்ருஶமில்லாமையாலேயென்றது) "புற்கென்றேகாட்டும்" என்றத்தைப்பற்ற (அவத்யமென்றது.

"உரைக்கில்" என்றயதிசப்தார்த்தம் (அநுபவித்தித்யாதி) குமிழிநீருண்கை - தலஸ்பர்ஶியா யவகாஹிக்கை. சப்தார்த்தகதநார்த்தம் புநருபாதாநம் (கட்டுரைக்கிலென்று) "பொற்காற்றுமரை, நூற்காற்றுமரை" என்றாற்போலே விசேஷியாமையாலே யருளிச்செய்கிறார் (தாமரைஜாதியாகவென்று) "கண், பாதம், கை," என்றுப்ரத்யேகம் சொன்னதுக்குபாவம் (ஓரோவ்யக்திகளுக்கித்யாதி) "தாமரை" என்று - ஜாத்யைக்யம்விவக்ஷிதம். பாதாதிகேசாந்தமாதல், கேசாதிபாதாந்தமாத லநுபவியாதொழிவானென்னென்ன; த்ரேதாபரிஹரிக்கிறார் (குளிரநோக்கினவித்யாதி) பாவபந்தத்துக்கு ப்ரதாநஹேதுவாகையாலே சக்ஷுஷ: ப்ரதமாபிதாநமிதிபாவ:. த்விதீயபரிஹாரம் (நஶாஸ்த்ரமித்யாதி) "ந ஶாஸ்த்ரம் நைவ ச க்ரம:" (அத்யந்தபக்தியுக்தஸ்யநஶாஸ்த்ரம்நைவசக்ரம:) என்று - பக்திபாரவஶ்யத்தாலே சொல்லுகிறவிடத்திலே, க்ரமத்தையவலம்பித்திராதிறே யென்றபடி. கீழ்ப்பாட்டிலநுபவம் பின்னுடைறதென்று த்ருதீயபரிஹாரம் (நின்கண்ணித்யாதி)

பொன்னே - சிக்ஷிக்கிறாரித்யந்வய:. சப்தார்த்தம் (காய்ச்சியித்யாதி) ஓட்டைவத்துரைத்த - உருக்கிமெருகிட்ட. பொன்போலேதிருமேனிக்குவிசேஷணமிடாமையாலே பலிதம் (ஸ்வாபாவிகமானவென்று) "ஒவ்வாது" என்கைக்கித்தனை சிக்ஷிக்கவேணுமோவென்ன (இத்தனையித்யாதி) பாத்தம் - விஷயம். "ஒப்பன்று" என்கைக்குமித்தனை சிக்ஷிக்கவேணுமென்றபடி. "ஒவ்வாது" என்கைக்கு - ஒப்பாமென்று ப்ரஸக்தியுண்டோவென்ன (ருக்மாபமித்யாதி) "ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம் । ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்து புருஷம் பரம்" (ப்ரஶாஸிதாரம்ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம்। ருக்மாபம்ஸ்வப்நதீகம்யம்வித்யாத்துபுருஷம்பரம்) இதிமாநவேத்வாதஶேத்யாயே. "ருக்மாபம்" (ருக்மாபம்) என்கிறது - "சந்த்ரவத்ப்ரியவத்" (சந்த்ரவந்முகம்) என்றாற்போலே தர்ஶநீயதையைப் பற்றவாதல், "மயூரக்ரீவாஸத்ருஶம்" (மயூரக்ரீவாஸத்ருஶம்) என்கிறபடியே ஶ்யாமமாய்ச்சிவந்துமிருக்கையாலே மயூரக்ரீவா ஸத்ருஶதையைப் பற்றவாதல், *ஹிரண்யவர்ணையான

பிராட்டியோட்டைச் சேர்த்தியாலேயாதல், “ ஹிரண்மய:புருஷ: ” ( ஹிரண்மய:புருஷ: ) என்கிற அந்தராதித்ய புருஷவிஷயமாதல். ஸ்வப்நதீகம்ய:ம் - மாநஸஜ்ஞாநகம்யம்.

ஸத்ருஶமாகச் சொன்னார்களாய் - இதரபதார்த்தங்களை ஸத்ருஶமாகச் சொன்னார்களாய். “ இ ” என்றதுக்குபாவம் ( காண்கிறவித்யாதி ) “ உலகு ” என்று - அசேதநஸமாதியாகச் சொன்னதுக்குபாவம் ( ப்ராக்ருதேத்யாதி ) “ புகழ்வு ” என்றாற்போராதோ, “ புகழ்வெல்லாம் ” என்கிறதென்னென்ன ; புகழ்தான் - உள்ளத்தைச்சொல்லுகையும், இல்லாதத்தை யேறிட்டுச்சொல்லுகையுமிறே ; ஆகையாலே, அவைஇரண்டையு மருளிச்செயகிறார் ( உள்ளதித்யாதி )

“ புகழ்வெல்லாம் ” என்றவிடத்திலே - “ ஸ்தோத்ராணி ஸந்தி ” ( ஸ்தோத்ரங்நாமகிமாமசந்தி ) இத்யாதி, “ அந்யத்ராதத்குணோக்திர்பவதி ” ( அங்யத்ராதத்குணோக்திர்பகவதி ) இத்யாத்யநுஸந்தேயம். பட்டுரையாய் - அவாசகமாயிதிபலிதார்த்த:. புன்மை - அவத்யம். புற்கென்றே - அவத்யமாயே. தடஸ்த்தஶங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் ( இவனித்யாதி ) குருவிந்தக்கல். காவிக்கல். இவனுக்கு - ஶ்ரோதாவுக்கு. ( அவ்வழியாலேயிதி ) “குருவிந்தஶிலாஸமாநம் ” இதிபுத்திபோத்யத்வ ரூபமவத்யமுண்டாமிறே யென்றபடி. ( அப்படியேயிதி ) ஆபாதத:ஸ்தோத்ரமிவபாதி, வஸ்துதோநிரூப்யமாணே அவத்யாவஹமேவ பவதீத்யர்த்த:. ஆல் - அவ்யயம்.

இங்குத்தைக்கு - பகவத்விஷயத்துக்கு. ஸ்தோத்ரஸ்யாவத்யா வஹத்வே ஹேது: ( ஸர்வவஸ்துவிஸஜாதீயனுகையாலேயென்றது ) இங்கே - ஸ்தோத்ரத்தினுடைய அவத்யாவஹத்வத்திலே ஸர்வவஸ்துவிஸஜாதீயத்வத்தை ஹேதுவாகச் சொல்லிற்று, அவதாரிகையிலே - ஸௌந்தர்யத்துக்கு ஸாத்ருஶ்யமில்லாமையை ஹேதுவாகச்சொல்லிற்று; ஆகையாலே, இரண்டையும் ஹேதுவாகக்கண்டுகொள்வது. “பெரும்பாலும்” என்றதுக்கு, மிகவும், ப்ராயேணஇதிவாக்யத்வயஞ்ச-அர்த்தத்வயபரம். ஒட்டு - உவமைச்செறிவாதல். கட்டுரைக்கில்-நிர்ணயித்துச்சொல்லில்.

கட்டுரைக்கிலித்யாரப்ய, ஒவ்வாது ; பரஞ்சோதி - இவ்வுலகுன்னை ஒட்டுரைத்து - புகழ்வெல்லாம் - பட்டுரையாய் - பெரும்பாலும் - புற்கென்றே காட்டுமாலித்யந்வய:.......................................................................*

## மூன்றாம்பாட்டு.

பரஞ்சோதிநீபரமாய்நின்னிகழ்ந்துபின்மற்றோர்
பரஞ்சோதியின்மையிற்படியோவிநிகழ்கின்ற
பரஞ்சோதிநின்னுள்ளேபடருலகம்படைத்தவெம்
பரஞ்சோதிகோவிந்தாபண்புரைக்கமாட்டேனே.

### ஆறாயிரப்படி.

( பரஞ்சோதி ) நீயிப்படியழகிறு லெல்லாரிலும்மேற்பட்டுவர்த்தியாநின்று, பின்புமற்றுன்னைப்போலே அழகியாரில்லாமையாலே படி

யோவிவர்த்திக்கையாலே பரஞ்சோதிஸ்ஸப்தாபிதேயனாய், ஸர்வஜகத்காரணத்வ ப்ரயுக்தநிரவதிக தேஜஸ்ஸையுடையனாய், நிரவதிகஸௌஸீல்ய விசிஷ்டனாயிருந்த வுன்னுடைய இந்தக்குணங்களெனக்குச்சொல்ல நிலமல்லவென்கிறார்.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸர்வப்ரகாரௌஜ்ஜ்வல்யாதிசயத்தையுடைய வுன்ஸ்வபாவமெனக்குச்சொல்ல முடியாதென்கிறார்.

பரமாய் - ஸர்வஸ்மாத்பரனாய்க்கொண்டு. பரஞ்சோதி - நிரதிசயதேஜோரூபன். நீ - நீ. நின் - உன்னை. இகழ்ந்துபின் - ஒழிந்து. மற்று - வேறு. ஓர்பரஞ்சோதி - பரமாயிருப்பதொருவுஜ்ஜ்வலவஸ்து. இன்மையில் - இல்லாமையாலே. படி - உபமாநம். ஒவி - இல்லாதபடி. நிகழ்கின்ற-வர்த்தியாநிற்கிற. பரஞ்சோதி-பரஞ்சோதிஸ்ஸப்தவாச்யனான. நின்னுள்ளே - உன்ஸங்கல்பத்துக்குள்ளே. படர் - விஸ்தீர்ணமான. உலகம் - லோகத்தை. படைத்த - ஸ்ருஷ்டித்து. எம்பரஞ்சோதி - ஸ்ருஷ்டமானலோகத்தினுடைய ஸ்வபாவமுனக்குத்தட்டாதபடி நிற்கிற நிரதிசயௌஜ்ஜ்வல்யத்தையெனக்கு ப்ரகாசிப்பித்தவனாய். கோவிந்தா-அந்தப்பரத்வத்திலுங்காட்டில்கோபாலநாதி சீலௌஜ்ஜ்வல்யத்தையுடையவனே. பண்பு - உன்னுடையவிலக்ஷணவிக்ரஹபாரம்யத்தாலும், உபமாநராஹித்யாதிசயத்தாலும், ஜகத்காரணத்வபாரம்யத்தாலும், சீலாதிசயத்தாலும் உன்னுடைய ஔஜ்ஜ்வல்யஸ்வபாவத்தை. உரைக்க - பாசுரமிட்டுச்சொல்ல. மாட்டேன் - சக்தனல்லேன்....*

---

## ஈடு - மூன்றும்பாட்டு.

நம்பக்கல் முதலடியிடாத லௌகிகரைவிடும், வ்யாவ்ருத்தரோநீர், பேசினாலோவென்ன? என்னாலேதான் பேசப்போமோவென்கிறார்.

(பரஞ்சோதிநீபரமாய்) பரமாய் - பரஞ்சோதிநீ. வடிவழகிலேயாதல், ஐஶ்வர்யத்திலே யாதல் அல்பமேற்றமுடையானொருவனைக்கண்டால், "உன்றனைத் தேஜஸ்ஸுடையா னொருவனில்லை, உன்றனையைஶ்வர்யமுடையானொருவனில்லை" என்பர்களிறே; அங்ஙனன்றிக்கே, "இனியொருவ்யக்தியில்அவையில்லை" என்னும்படி பூர்ணமாகவுள்ளது உன்பக்கலிலேயாகையாலேபரமாய்க்கொண்டு பரஞ்ஜ்யோதிஸ்ஸாயிருக்கிறாய்நீ; "தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி" (தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி) என்கிறபடியே.

(நின்னித்யாதி) லோகத்தில் தன்னோடொத்தாரும் தனக்குமேற்பட்டாரும் அநேகராயிருக்கச்செய்தே "உனக்குஸமராதல்அதிகராதல் உண்டோ" என்னக்கடவதிறே; அங்ஙனன்றிக்கே, உன்னையொழிய வேறொரு பரஞ்ஜ்யோதிஸ்ஸில்லாமையாலே உபமாநரஹிதனாய்க்கொண்டு வர்த்தியாநின்றுள்ள பரஞ்ஜ்யோதிஸ்ஸுநீ.

தனக்குங்கூடக் கடவனல்லாதானொருவனை "நீயேயிறேநாட்டுக்கெல்லாம்கடவாய்" என்னக்கடவது ; அங்ஙனன்றிக்கே, உன்னுடைய ஸங்கல்பலவலேசத்திலே கார்யாகாரமாய்க்கொண்டு விஸ்த்ருதமாகாநின்றுள்ள லோகங்களையெல்லாமுண்டாக்கின எம்பரஞ்ஜ்யோதி. "புத்ரஸ்தேஜாதஃ" (புத்ரஸ்தேஜாதஃ) என்னுமாபோலே, அவற்றையுண்டாக்கினபின்பு திருமேனியிலேபிறந்தபுகர். ஸ்வாபாவிகமானமேன்மையது; காரணத்வப்ரயுக்தமானபுகரிது. இப்படியிருக்கிறமேன்மையை யெல்லைகாணிலும் (கோவிந்தா) நீர்மைதனைகாண வொண்ணாதாயிருக்கிறது. (பண்பு) உன்னுடையப்ரகாரம். அதென்றுற்சொல்லப்போகாது, அநுபவித்துப்போமித்தனை. (கோவிந்தாபண்புரைக்கமாட்டேனே) "நெஞ்சால்நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்" என்று, நெஞ்சால்நினைக்கவொண்ணாதது சொல்லத்தானேபோகாதிறே............*

---

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. (பரஞ்சோதியித்யாதி) "லௌகிகர்சொன்னதவத்யமாம்" என்றவநந்தரத்திலே, "தானுரைக்கமாட்டேன்" என்னும்போது, "நீர் சொல்லும்" என்றொருவுக்திகிடந்ததாக வேணுமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (நம்பக்கலித்யாதி) வ்யாவ்ருத்தரோநீர் - * மயர்வறமதிநலம்பெறுகையாலே வ்யாவ்ருத்தரோநீரென்றபடி. "உரைக்கமாட்டேன்" என்றத்தைப்பற்ற (என்னுலேதானித்யாதி)

"பரஞ்சோதி" என்னவமையாதோ, "பரமாய்" என்று விசேஷிப்பானென்னென்ன (வடிவழகிலேயித்யாதி) உன்தனை - உன்னைத்தனை. ஸௌந்தர்யைஶ்வர்யங்களால்வந்த பரஞ்ஜ்யோதிஷ்ட்வஞ் சொல்லுகிறதென்றுகருத்து. பகவத்தேஜஸ்ஸு ஸர்வோத்க்ருஷ்ட மென்னுமிடத்தில் ப்ரமாணம் (தஸ்யபாஸேத்யாதி) கடவல்லியிலே.

பின் - பின்பு. அதுக்குமேலே. நின்னிகழ்ந்து - உன்னையொழிந்து. மற்றோர்பரஞ்சோதியின்மையில் - வேறொரு பரஞ்ஜ்யோதிஸ்ஸில்லாமையாலே, படியோவிநிகழ்கின்ற - உபமாநரஹிதமாய்வர்த்திக்கிற. "பரஞ்சோதி-நீ" என்றத்தை - இரண்டிடத்திலும்கூட்டுவது. வடிவழகாலு மைஶ்வர்யத்தாலும் வந்தமேன்மையை வ்யதிரேகமுகத்தாலே த்ருடீகரிக்கிறார் (நின்னிகழ்ந்தவித்யாதியாலே) என்னுதல். ஸத்ருஶவஸ்த்வபாவத்தால்வந்த மேன்மையைச் சொல்லுகிறதென்னுதல். "மற்றோர்பரஞ்சோதியின்மையில்" என்று - விசேஷித்ததுக்குபாவம் (லோகத்திலித்யாதி)

"உலகம்படைத்த" என்னாதே, "நின்னுள்ளேபடர்" என்றதுக்குக்கருத்தென்னென்ன (தனக்குங்கூடவித்யாதி) மேலுக்கவதாரிகையாதல். கடவனல்லாதானொருவனை - காரணத்வேந கர்த்தாவல்லாத ப்ரஹ்மாதிகளிலேயொருவனை. "படைத்தவெம்பரஞ்சோதி" என்றதுக்கு - காரணத்வ ப்ரயுக்தமானமேன்மையாகக் கீழருளிச்செய்து ; அபரபாவியாக, காரணத்வப்ரயுக்தமான வடிவின்தேஜஸ்ஸாகவுமாமென்றர்த்தாந்தரம் (புத்ரஸ்தேஜாதஇத்யாதி)

உக்தத்லைநிகமித்துக்கொண்டு மேலில்பதத்துக்குஸங்கதி (ஸ்வாபாவிகமானவித்யாதி) (மேன்மையையெல்லைகாணிலுமிதி) அநேந - பரத்வமபிவக்ஷ்ந்நபோக்யத இதிபாவஸ்ஸூசயதே. ப்ரகாரம் - ஸௌலப்யமாதல், கீழுக்தமெல்லாமாதல். "உரைக்கமாட்டேன்" என்றதுக்குபாவம் (அதென்னலித்யாதி) அப்படி சொல்லப்போகாதோவென்ன; கிம்புநர்ந்யாயத்தாலே ஸாதிக்கிறார் (நெஞ்சாலித்யாதி) "பரஞ்சோதிகோவிந்தா" என்றது - ஸம்போதநே. (மாயம்செவ்வே நெஞ்சாலித்யாதி) திருவிருத்தம். (அவனுடைய ஆஸ்சர்ய சேஷ்டிதமானது நேரேநெஞ்சால் நினைக்கவரிது; ஆஸ்சர்யமேதென்ன; வெண்ணெயுண்டானென்று சொல்லப்பட்ட அபக்ருஷ்ட வசநமென்று பாசுரார்த்தம்.

நின்னுள்ளேபடருலகந்தொடங்கி, கோவிந்தா-நீ-பரமாயிருக்கிற பரஞ்சோதி; பின்னும் - நின்னிகழ்ந்து - மற்றோர்பரஞ்சோதிதொடங்கி, பரஞ்சோதியாகையாலே- பண்புரைக்கமாட்டே னித்யந்வய:...........................................*

## நான்காம்பாட்டு.

மாட்டாதேயாகிலுமிம்மலர்தலைமாஞாலநின்
மாட்டாயமலர்புரையுந்திருவுருவமனம்வைக்க
மாட்டாதபலசமயமதிகொடுத்தாய்மலர்த்துழாய்
மாட்டேநீமனம்வைத்தாய்மாஞாலம்வருந்தாதே.

### ஆறுயிரப்படி.

(மாட்டாதே) இப்படிபோக்யனாயிருந்த எம்பெருமானை யிந்தலோகமிழந்து போகிறபடிகாணென்று கொண்டின்னாதாகிறார்.........*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இந்தவைலக்ஷண்யத்தினுடைய போக்யதையிலேநீ அந்யபரனானல், அறிவில்லாதஜகத்து க்லேஸியாதோவென்கிறார்.

மலர் - திருநாபிகமலத்தை. தலை - தனக்குத்தலையாகவுடைய. இ - இந்த. மா-பெரிய. ஞாலம் - ஜகத்தானது. நின் - ப்ராப்தனானவுன்னுடைய. மாட்டாய-ஸ்வரூபத்திலேயாய். மலர்புரையும் - புஷ்பம்போலேஸுகுமாரமான, திருவுருவம் - திருமேனியை. மனம் - நெஞ்சிலே. வைக்க - வைக்கைக்கு. மாட்டாதேயாகிலும்-அசாதியாகமாட்டாதிருக்கச்செய்தேயும். மாட்டாத - விக்ரஹாநுஸந்தாநத்துக்குயோக்யமல்லாத. பலசமயமதி - பல்சமயஜ்ஞாநங்களை. கொடுத்தாய்-கொடுத்தாய். நீ - நீதான். மலர் - விகஸிதமான. துழாய்மாட்டே - திருத்துழாயினிடத்திலே. மனம் - நெஞ்சை. வைத்தால் - வைத்துபோகப்ரஸக்தனானல், மாஞாலம் - இந்தமஹாலோகம். வருந்தாதே - அந்யபரமாய்க்லேஸியாதோ.

க்லேஸித்தேவிடுமிறே யென்றுகருத்து. மாடு - இடம். மலர்தலை - மலர்மேலென்றுமாம்..............................................................................*

## ஈடு-நான்காம்பாட்டு.

தாம் "உரைக்கமாட்டேன்" என்றார், இவனுடைய போக்யதாதிசய மிருந்தபடியால் சிலராலேகிட்டலாயிருந்ததில்லை; இனிச்சம்ஸாரிகளிழந்துநோவுபட்டுப் போமித்தனையாகாதே என்று அழகருடைய அழகின் மிகுதிபேசுவிக்கப் பேசுகிறார்.

(மாட்டாதேயித்யாதி) நின்மாட்டாயமலர் புரையும்திருவுருவம் மனம்வைக்க - இம்மலர்தலைமாஞாலம் - மாட்டாதேயாகிலும். (நின்மாட்டாய) உன்னிடத்திலேயான. உன்பக்கலிலேயான. மட்டை - "மாட்டு" என்றுநீட்டிக்கிடக்கிறதாய், "ஐஷ்ட உத்ஸ:" (மத்வஉத்ஸ:) என்கிறபடியே மதுஸ்யந்தியாகையாலே நிரதிசயபோக்யமான திருமேனியையென்னுதல். இம்மலர்தலைமாஞாலமென்கிறது - மாட்டாமைக்கு நிபந்தநம் ஸ்ருஜ்யத்வகர்மவஶ்யத்வங்களென்கை. மாட்டை - மாடாய், நிதியாய்; உன்னுடைய, நிதிபோலே ஶ்லாக்யமாய், புஷ்பஹாஸ ஸுகுமாரமாயிருந்துள்ள திருமேனியிலேநெஞ்சைவைக்க, திருநாபிகமலத்தை யடியாகவுடைத்தான இம்மஹாப்ருதிவியானது மாட்டாதேயாகிலும். ஆகிலுமென்றது-மாட்டாதிருக்கச்செய்தேயென்றபடி. இதுதானேபோருமிறே அநர்த்தம்;கர்மஸம்ஸ்ருஷ்டரானசேதநர்க்கு,கர்மசம்பந்த மற்றாலநுபவிக்குமுன் திருமேனியிலே நெஞ்சைவைக்கப்போகாதிறே; அவ்வநர்த்தத்துக்குமேலே. (நின்திருவுருவம்மனம் வைக்கமாட்டாதபலசமயமதிகொடுத்தாய்) உன்திருமேனியிலே நெஞ்சைவைக்கமாட்டாதவையாய், அவைதான் பலவாயிருக்கிற, சமயமுண்டு - மதாந்தரங்கள்; அவற்றின்பக்கலிலே நெஞ்சைவைக்கப்பண்ணினாய். திருவுருவம் மனம்வைக்கவென்கிறவிடம் - கீழ்மேலிரண்டிடத்திலு மந்வயிக்கிறது. உன்திருமேனியிலே நெஞ்சைவைக்கவொண்ணாதபடி பாஹ்யமான பலசமயமதிபேதங்களையும் பண்ணிவைத்தாய்.

பண்டேயுன்னை யறியமாட்டாத சம்ஸாரிகளுக்கு மதிபேதங்களையுண்டாக்கினாய்;இவையித்தனையும்அஸத்ஸமமாமிறே நீதானிவற்றுக்குவந்து கிட்டலாம்படி யிருந்தாயாகில். (மலர்த்துழாய்மாட்டேநீமனம்வைத்தாய்) உன்திருவுள்ளத்தையும் கால்தாழப்பண்ணவல்ல திருத்துழாய் தொடக்கமான போக்யஜாதத்திலே திருவுள்ளத்தைவைத்தாய்.இத்தால்-உன்னுடைய போக்யதைசிலரால் கிட்டலாயிருந்ததோவென்றபடி. "மாடு" என்கிறவித்தை - மாட்டென்று கிடக்கிறதாய், மாடு - இடம். அதின்பக்கலிலேயென்றபடி.

(மாஞாலமித்யாதி) இம்மஹாப்ருதிவியானது இங்ஙனேநோவுபட்டே போமித்தனையாகாதே. கர்மவஶ்யராகையாலேதானேயுன்பக்கலிலே நெஞ்சைவைக்கமாட்டிற்றிலர், அதுக்குமேலே நீபலவிலக்கடிக

ளேயு முண்டாக்கிவைத்தாய் ; நீயோ, நிரதிசயபோக்யஜாதத்திலே ப்ர வணனாய், உன்னைவிட்டால்பின்னை, " ஬ுஂதிநாஶாத்ப்ரணஶ்யதி " ( புத்திநாஶாத்ப்ரணஶ்யதி ) என்னும்விஷயங்களில் இவர்கள் ப்ரவணரா ய் இங்ஙனேநோவுபட்டே போமித்தனையாகாதே.............................*

---

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. ( மாட்டாதேயித்யாதி ) ஸ்வாநுபவத்தைவிட்டு சம்ஸாரி களிழவிலே நெஞ்சுசெல்லுமது " யத்ர நாந்யத்பஶ்யதி " ( யத்ரநாந்யத்பஶ் யதி ) என்னும்படியான விஷயவைலக்ஷண்யத்துக்குக் கொத்தையன்றேவென்ன ( தாமுறைக்கவித்யாதி ) போக்யதாதிசயமென்றது - " மலர்த்துழாய்மாட்டே " என்றத்தைப்பற்றவாதல், " நின்மாட்டாயமலர் புரையுந்திருவுருவம் " என்றத் தைப்பற்றவாதல். முந்தினபக்ஷத்தில், போக்யதாதிசயம் - போகப்ராவண்யம். த் விதீயபக்ஷத்தில், யதாஸ்த்தித ஏவார்த்த:.

அந்வயிக்கிறார் ( நின்மாட்டாயவித்யாதி ) " மாட்டு " என்றதுக்கர்த்த த்ரயம் - இடமும், தேனும், நிதியும். முந்தினவர்த்தத்தில், "மாடு" என்னுமத்தை- " மாட்டு " என்கிறது. மாடு - இடம். மட்டு - தேன். மாடு - நிதி. த்விதீயமர்த்த மாஹ ( மட்டைமாட்டென்றித்யாதி ) த்ருதீயமர்த்தமாஹ ( மாட்டைமாடாயித் யாதி ) தலையென்று-காரணமாய், திருநாபிகமலத்தைக் காரணமாகவுடைய ஞால மென்றபடி. " ஞாலம் " என்னாமல், " இம்மலர்தலைமாஞாலம் " என்றுவிசேஷி க்கிறதென்னென்ன ( இம்மலர்தலையித்யாதி )

" இம்மலர்தலைமாஞாலம் நின்மாட்டாய " இத்யாரப்ய, " மாட்டாதேயா கிலும் " இத்யஸ்யபாவமாஹ ( இதுதானேயித்யாதி ) ஏததேவவிவ்ருணோதி (க ர்மஸம்ஸ்ருஷ்டரான்வித்யாதி ) ஏதத்வாக்யாநந்தரோ - ( இதுதானேபோருமிறே யரர்த்தம் ) என்றவாக்ய மநுஸந்தேயம். மதியென்று - மநஸ்ஸாதல், ஜ்ஞாநமாத ல்; மநஸ்ஸென்றவர்த்தம் ( உன்திருமேனியிலேயித்யாதி ) " மாட்டாத " என்ற து - * சமயத்துக்குவிசேஷணம். திருமேனியிலே நெஞ்சைவைக்கமாட்டாதவை யாய் - திருமேனியிலே நோக்கில்லாதவையாய். சமயங்களிலே - சாஸ்த்ரங்களி லே. யத்வா, " மனம்வைக்கமாட்டாத " என்கையாலே, ஸமயஸ்த்தபுருஷர்களை ச்சொல்லவுமாம். " திருவுருவம்மனம்வைக்க " என்கிறவிது - " மாட்டாதேயா கிலும் " என்றத்தோடே யந்வயித்ததிறேயென்ன ( திருவுருவம்மனம்வைக்க வென்கிறவிடமித்யாதி ) " மதி " என்று - ஜ்ஞாநமென்றபக்ஷத்தை யருளிச்செய் கிறார் ( உன்திருமேனியிலேயித்யாதி ) இந்தப்பக்ஷத்தில், " மனம்வைக்கமாட்டா த " என்று - க்ரியாவிசேஷணம். மனம்வைக்கவொண்ணாத படியித்யர்த்த:. பலச மயமதிபேதங்களை - சமயங்களடியாக வுண்டானபுத்திபேதங்களை.

கிளெல்லாம்கடாக்ஷித்து மேலுக்கவதாரிகை ( பண்டேயுன்னையித்யாதி ) இ வையித்தனையுமென்றது - ஸ்ருஜ்யத்வாதிகள். கேவலம், துழாய் என்னாதே, " மல ர்த்துழாய் " என்றத்தைப்பற்ற ( உன்திருவுள்ளத்தையுமித்யாதி ) திருத்துழாய் -

போக்யஜாதத்துக்கெல்லா முபலக்ஷணமென்றபடி. இத்தாலென்றது - கீழில்பதங்களெல்லாவற்றையும் கடாக்ஷித்ததால், கீழ்ப்பதமாத்ரத்தைப் பற்றவாதல். இந்த த்விதீயபக்ஷத்தில், உன்னுடைபோக்யதையென்றது - போக்யப்ராவண்யமென்றபடி. "மாட்டே" என்றால் - இவ்வர்த்தத்தைக்காட்டும்படி யெங்ஙனேயென்ன (மாடென்கிறவித்யாதி)

வருந்தாதே - வருந்தியேபோமித்தனையாகாதே. நோவுபட்டேபோகைக்கு ஹேதுக்களையும், நோவுபடும்ப்ரகாரங்களையும், பாட்டினர்த்தங்களைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (கர்மவஶ்யராகையாலேயித்யாதி) கர்மவஶ்யராகையாலேயென்றது - "இம்மலர்தலைமாஞாலம்" என்றத்தைப்பற்ற. (உன்னைவிட்டாலித்யாதி) "ய்ராயதொவிஷயாநுவஂஸஸ்ஜஸ்தெஷஉவஜாயதெ । ஸஜாத்ஸஜ்ஜாயதெகாமஃகாமாத்க்ரோதோஹிஜாயதெ । க்ரோதாத்பவதிஸம்மோஹஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரமஃ। ஸ்ம்ருதிப்ரம்ஶாத்புத்திநாஶோபுத்திநாஶாத்ப்ரணஶ்யதி" (த்யாயதோவிஷயாந்பும்ஸஸ்ஸங்கஸ்தேஷூபஜாயதே । ஸங்காத்ஸஞ்ஜாயதேகாமஃகாமாத்க்ரோதோபிஜாயதே। க்ரோதாத்பவதிஸம்மோஹஸ்ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரமஃ । ஸ்ம்ருதிப்ரம்ஶாத்புத்திநாஶோபுத்திநாஶாத்ப்ரணஶ்யதி) இதிதோஸஂத்விதீயே.

நின்மாட்டாய்மலர்புரையும் திருவுருவம் மனம்வைக்க-இம்மலர்தலைமாஞாலம் - மாட்டாதேயாகிலும் - திருவுருவம் மனம்வைக்கமாட்டாத பலசமயமதி கொடுத்தாய்; மலர்த்துழாய்தொடங்கி, வருந்தாதேயித்யந்வயஃ.....................*

## ஐந்தாம்பாட்டு.

வருந்தாதவருந்தவத்தமலர்கதிரின்சுடருடம்பாய்
வருந்தாதஞானமாய்வரம்பின்றிமுழுதியன்றாய்
வருங்காலநிகழ்காலங்கழிகாலமாயுலகை
யொருங்காகவளிப்பாய்சீரெங்குலக்கவோதுவனே.

## ஆறாயிரப்படி.

(வருந்தாத) "இப்படியென்னதபஸ்ஸுபண்ணிப்பெற்றதோ" என்னும்படி அதிகல்யாணமாய், ஸ்வாபாவிகமாய், நிரதிசயதேஜோமயமாயிருந்த திருவுடம்பையுடையனாய், ஸ்வாபாவிகாஸங்குசித திவ்யஜ்ஞாநவிசிஷ்டனாய், சர்வகாலமுமொருபடியே சர்வாத்மரக்ஷணைக ஸ்வபாவனாயிருந்த வுன்னுடையகுணங்களை நானெங்கேமுடியச்சொல்லுவதென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஏவம்விதவைலக்ஷண்யயுக்தனான வுன்குணகணங்களை யெங்ஙனேமுடியச்சொல்லுவேனென்கிறார்.

வருந்தாத-பக்நசாத்யமன்றியிலே. அரு - பெறுதற்கரிய. தவத்த-தபஸ்ஸி னுடைய பலமென்னலாம்படி. மலர்-விகஸிதமான. கதிரின் - ப்ரபையையுடைத் தான. சுடர்-தேஜஸ்தத்வத்தை. உடம்பாய் - வடிவாகவுடையவனாய். வருந்தாத-யத்நஸித்தமன்றியே ஸ்வாபாவிகமான. ஞானமாய் - ஜ்ஞாநத்தையுடையையாய்க் கொண்டு. வரம்பு-பரிச்சேதம். இன்றி-இல்லாதபடி. முழுது-ஸர்வபதார்த்தத்திலும். இயன்றாய்-வர்த்திப்பானாய். வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாய்-காலத்ரயத்திலும் ஸந்நிஹிதனாய். உலகை-லோகத்தை. ஒருங்காக-ஒருபடிப்பட. அளிப்பாய்-ரக்ஷிக்குமவனே. சீர்-உன்னுடைய ஸ்வரூபௌஜ்ஜ்வல்யத்தாலும் ஜ்ஞாநௌஜ்ஜ்வல்யத்தாலும் வ்யாப்தியாலும் ரக்ஷணத்தாலுமுள்ளகுணங்களை. எங்கு-எங்கே. உலக்க-முடிய. ஓதுவன்-சொல்லுவேன்.

முடியச்சொல்ல முடியாதென்றுகருத்து. உலக்க - முடிய......................*

---

## ௫- ஐந்தாம்பாட்டு.

மூன்றாம்பாட்டுக்கு மிப்பாட்டுக்கும் நேரேசங்கதி; நாட்டாரிழவுநடுவு ப்ரஸங்காத்ப்ரஸ்துதமித்தனை. " கோவிந்தாபண்புரைக்கமாட்டேனே " என்று சொல்லுவானேன்; நாட்டார்பேரிழவுகிடக்கிறீர், * மயர்வறமதிநலம்பெறுகையாலே நீர் வ்யாவ்ருத்தரோ; நாட்டாரில் வ்யாவ்ருத்தரானவளவேயோ, * விண்ணுளாரிலும் வ்யாவ்ருத்தரோ; நீர்நம்மைப்பேசமாட்டீரோவென்ன; என்னைவ்யாவ்ருத்தனாக்கினாயித்தனை யல்லது உன்னை ஸாவதியாக்கிற்றில்லையேயென்கிறார்.

(வருந்தாதவித்யாதி) இவ்வடிவழகை யென்னாலேதான் பேசலாயிருந்ததோ. (வருந்தாதவருந்தவத்த) ஸ்வாபாவிகமாய் வருவதாய், மிகவும் விகஸிதகிரணதேஜோரூபனாய். தவ-மிகுதி. திருமேனியைக்கண்டவாறே, " அரியதபஃபலமோ " என்றுதோற்றியிருக்கும்; சிறிதவகாஹித்தவாறே, " ஒருதபஃபலமல்ல, ஸஹஜபாக்யபலம் " என்றுதோற்றியிருக்கும். (மலர்கதிரின்சுடருடம்பாய்) விகஸ்வரகிரணதேஜோரூபமாய். அதுதன்னில் மண்பற்றைக்கழித்து - ரஜஸ்தமோமிஶ்ரமாயிருக்கையன்றிக்கே, சுத்தஸத்த்வமயமாய், நிரவதிகதேஜோரூபமாய், ஆத்மகுணங்களுக்கும் ப்ரகாசகமான திவ்யவிக்ரஹத்தையுடையனாயிருக்கு மிருப்பு. கர்மநிபந்தநமான தேஹங்கள்போலன்றிறே. * இச்சாக்ருஹீதமானதிருப்பது. அஸ்மதாதிகளுடையசரீரங்கள், பாபத்தாலேயாயிருப்பனசிலவும், புண்யத்தாலேயாயிருப்பனசிலவும், உபயத்தாலேயாயிருப்பனசிலவுமாயிருக்குமிறே. [ நாகாரணாத்காரணாத்வாகாரணாகாரணாந்நவ ] [ நாகாரணாத்காரணாத்வாகாரணாகாரணாந்நச ] அகாரணமென்கிறது-கார்யத்தை. காரணமென்கிறது-மூலப்ரக்ருதியை. காரணாகாரணமென்கிறது - மஹதாதிகளை. (அன்றியே, சுகசரீரமோ, துஃகசரீரமோ, உபயத்தாலுமானசரீரமோ. கம்-சுகம். அகம்-துஃகம். துஃகம் காரணமோ, சுகம்காரணமோ,

சுகதுஃகங்களிரண்டும் காரணமோவென்னில்; இவை இத்தனையுமன்று) [ ஶரீரக்ரஹணம்வ்யாபிந் ] [ ஶரீரக்ரஹணம்வ்யாபிந் ] சர்வகதனாய் ஜகச்சரீரனாயிருக்கிறநீ ஶரீரக்ரஹணம்பண்ணுகிறது. [ யத்ராணாயகேவலம் ] [தர்மத்ராணாயகேவலம்] "காணவாராய்" என்றுவிடாய்த்திருப்பார் கண்டநுபவிக்கைக்குத் தண்ணீர்ப்பந்தல்வைக்கிறபடியிறே, "நசாகாரஃ-பக்தாநாம்" (நசாகாரஃ-பக்தாநாம்) என்கிறபடியே. ( வருந்தாதஞானமாய் ) ஒருசாதநாநுஷ்டானத்தாலேயாதல், * மயர்வறமதிநலமருளப்பெற்றுதல்வந்ததன்றிக்கே, ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய். ( வரம்பின்றி முழுதியன்றாய்) வரம்பில்லாதவெல்லாவற்றையும் நிர்வஹித்தாய். உடையவனிறே உடைமையை நிர்வஹிப்பான். (இயன்றாய்) இயலுகையாவது-நிர்வஹிக்கை. உடையவனாய்க்கடக்கநிற்கையன்றிக்கே நோக்கும்படிசொல்லுகிறது. (வருங்காலமித்யாதி) காலத்ரயத்துக்கும் நிர்வாஹகனாய்லோகங்களை யொருபடிப்பட ரக்ஷித்துக்கொண்டு போருகிற உன்னுடையகல்யாணகுணங்களை யென்றாலேமுடியச்சொல்லித் தலைக்கட்டலாயிருந்ததோ. உன்னுடைய விக்ரஹவைலக்ஷண்யமது, சர்வத்தையும் யுகபத் சாக்ஷாத்கார சமர்த்தனாயிருக்கிறவிருப்பது, ரக்ஷகத்வமது, ஏதென்றுபேசித்தலைக்கட்டுவென்... ... ... ... ... ... ... ... ... ... *

---

## ஜீயர் அரும்பதம்.

ஐந்தாம்பாட்டு (வருந்தாதவித்யாதி) மூன்றும்பாட்டி லிப்பாட்டுக்கேற்றம் (விண்ணுளாரிலும்வ்யாவ்ருத்தரொன்றது)

பதாவதாரிகை ( இவ்வடிவழகையித்யாதி ) "வருந்தாதவரும், தவத்த" என்றுபதச்சேதமாக்கியர்த்தம் (ஸ்வாபாவிகமித்யாதி) அத்து, அ-சாரியை. அவ்யயமென்றபடி. யத்வா, வருந்தாததாய்-ஸ்வாபாவிகமாய், அருந்தவத்த-அரியதபஃபலமாயிருப்பதாயென்றர்த்தாந்தரம் விவக்ஷித்து; "வருந்தாத" என்றுவைத்து, "அருந்தவத்த" என்றால் வ்யாஹதமன்றோவென்ன (திருமேனியையித்யாதி) இந்தபக்ஷத்தில், "அருந்தவத்த-வருந்தாத" என்றந்வயமாதல். "கதிரின்சுடருடம்பு" என்றதுக்குபாவம் ( அதுதன்னில் மண்பற்றறையித்யாதிவாக்யம் )

குணப்ரகாசகத்வத்துக்கடியேதென்ன (கர்மநிபந்தநேத்யாதி) இவ்வர்த்தத்துக்குமேலே ப்ரமாணம்சொல்லுவாராக, ப்ரமாணார்த்தத்தை முந்தறவருளிச்செய்கிறார் (அஸ்மதாதீத்யாதி) அதாவது, அகமென்று - துஃகமாய், அரணமென்று-ப்ராபகமாய், துஃகப்ராபகமானபாபத்தைச்சொல்லுகிறது (அகாரணமென்று) கம் என்று-சுகமாய், அரணமென்று-ப்ராபகமாய், சுகப்ராபகமானபுண்யத்தைச்சொல்லுகிறது ( காரணமென்று ) காரணாகாரணமென்று-புண்யபாபங்களைச்சொல்லுகிறது. ஹேவ்யாபிந், தவசரீரக்ரஹணம், அகாரணாந்ந - துஃகப்ராபகாத்பாபாச்ச நபவதி; காரணாந்ந-சுகப்ராபகாத்புண்யாச்சநபவதி; காரணாகாரணாந்ந-உபயாச்ச நபவதி. ஸ்த்தாவராதிசரீரபரிக்ரஹஃகேவலம்பாபாத், தேவாதிசரீரபரிக்ரஹஃகே

வலாத்புண்யாத், மநுஷ்யசரீரபரிக்ரஹஸ்துபயாத்; ஏவம்தவசரீரபரிக்ரஹ:ஏதைர்நபவதி, கேவலம்தர்மத்ராணயேத்யர்த்த:. இந்தவர்த்தம் பிள்ளை யெங்களாழ்வானருளிச்செய்தது, இத்தையநுசரித்து இவ்விடத்திலே யிப்படி யருளிச்செய்தது. பிள்ளையெங்களாழ்வானருளிச்செய்ததின்னமோரர்த்தமுண்டு; அதாவது - அகாரணம்-அப்ரயோஜநம்; து:கம். காரணம் - ப்ரயோஜநம்; சுகம். காரணகாரணம்-உபயமிஶ்ரம். நாரகியைப்போலே பாபபலாநுபவத்துக்காகவன்றுன்னுடைய சரீரபரிக்ரஹம், ஸ்வர்க்கியைப்போலே புண்யபலாநுபவார்த்தமுமன்று, மநுஷ்யாதிகளைப்போலே உபயபலாநுபவார்த்தமுமன்று; கிந்துகேவலம் தர்மத்ராணயேதி. இப்படியெங்களாழ்வானருளிச்செய்த வர்த்தத்வயமொழிய, த்ருதீயார்த்தம் (அகாரணமென்கிறதித்யாதி) இதம்வசநம்பஞ்சமேம்ஸே பகவந்தம்ப்ரதிப்ரஹ்மணோவிஜ்ஞாபநம். கார்யத்தை-ஷோடஶவிகாரமாகிறகார்யத்தை. மஹதாதிகளை-மஹதாதிஸப்தகத்தை. (சரீரபரிக்ரஹம்பண்ணுகிறது) இவைகளினுலேயன்றென்றபடி. கேவலம்தர்மத்ராணய-தர்மரூபத்ராணயேத்யர்த்தோத்ரவிவக்ஷித:. ஆஶ்ரிதரநுபவிக்கைக்கு திவ்யவிக்ரஹபரிக்ரஹம்பண்ணுகிருனென்னுமதுக்கு ப்ரமாணம் (நசாகாரஇத்யாதி) ஜிதந்தாயாம். இதம்லிகிதம்.

வருந்தாதஞானமாய் - யத்நஸித்தமன்றியே ஸ்வாபாவிகமானஜ்ஞாநத்தையுடையனுய்.

வரம்பில்லாத வெல்லாவற்றையும் - பரிச்சேதமில்லாத ஸர்வபதார்த்தங்களையும். " ஒருங்காகவளிப்பாய் " என்றத்தோடு புநருக்தமாகாமைக்காக, " முழுதியன்ருய் " என்று - சேஷித்வத்தைச்சொல்லுகிற தென்றுவிவக்ஷித்து, " இயன்ருய் " என்ருல் - சேஷித்வத்துக்கு வாசகமாமோவென்ன ( உடையவனிறேயித்யாதி ) லக்ஷணயாசொல்லுகிறதென்றபடி.

மேலுக்கவதாரிகை ( உடையவனுயித்யாதி ) உடையவனுய் - சேஷியாய். வருங்காலம் - பவிஷ்யத். நிகழ்காலம் - வர்த்தமாநம். கழிகாலம் - பூதம். ஒருங்காக - ( ஒருபடிப்பட ) உலக்க - முடிய. "வருந்தாதவருந்தவத்த" இத்யாதிகாதாமாத்ரம் பராம்ருஶ்ரம்பாவமாஹ ( உன்னுடையவிக்ரஹேத்யாதி ) " யோவேத்தி யுகபத்ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத: " ( யோவேத்தியுகபத்ஸர்வம்ப்ரத்யக்ஷேணஸதாஸ்வத: ) என்றத்தைப்பற்ற ( ஸர்வத்தையுமித்யாதி ) " எங்கு-ஒதி-உலக்குவன் " என்றுவிவக்ஷித்தருளிச்செய்கிருர் ( ஏதென்றுபேசித் தலைக்கட்டுவனென்று. )

க்ரமேணுர்வய:...................................................................*



# ஆறம்பாட்டு.

ஓதுவாரோத்தெல்லாமெவ்வுலகத்தெவ்வெவையும்
சாதுவாய்நின்புகழின்றகையல்லாற்பிறிதில்லை
போதுவாழ்புனந்துழாய்முடியினய்பூவின்மேல்
மாதுவாழ்மார்பினுயென்சொல்லியான்வாழ்த்துவனே.

## ஆறாயிரப்படி.

( ஓதுவார் ) சர்வலோகங்களிலுமுள்ள அத்யேதாக்களெல்லாராலு மோதப்படுகிற சர்வவேதங்களாலு மளவிடமுடியாத கல்யாணகுணங்களையுடையனாய், நிரதிசயஸௌந்தர்யாதி கல்யாணகுணகணநிதியாய், ஸ்ரீயःபதியாயிருந்த வுன்னைநானொருவ னெத்தைச்சொல்லிப் புகழ்வதென்கிறார்.......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வவேதங்களுங்கூடிச்சொல்லப்புக்காலும் முழுக்கச்சொல்லவொண்ணாதவுன்னை யென்னபாசுரமிட்டுச் சொல்லுவேனென்கிறார்.

ஓதுவார் - நியதசாகரானவதிகாரிகளுக்கு அத்யேதவ்யமாய் ருக்யஜுஸ் ஸாமாதிபேதத்தையுடைத்தான. ஓத்தெல்லாம் - வேதங்களெல்லாம். எவ்வுலகத்து-எல்லாலோகங்களிலுமுண்டான. எவ்வெவையும்-சாகாபேதங்களெல்லாவற்றையுமுடைத்தாய். சாதுவாய் - யதாவ்தர்த்தபோதகத்வமாகிறநன்மையையுடைத்தாய்க்கொண்டு. நின் - உன். புகழின் - குணகணங்களினுடைய. தகையல்லால்- ப்ரகாராந்வயமாத்ரத்திலே பர்யவஸிக்குமதொழிய. பிறிது - முழுக்கச்சொல்லுதல் புறமபுபோதல்செய்கை. இல்லை - இல்லை. போது - பூவையுடைத்தான. புனம்-தன்னிலத்தில். வாழ்துழாய் - செவ்வித்துழாயாலேயலங்க்ருதமான. முடியினாய்-திருவபிஷேகத்தையுடையையாய். அவ்வொப்பனையழகையநுபவிக்கைக்கு, பூவின் மேல் - தாமரைப்பூவின்மேலேநித்யவாஸம்பண்ணுகிற. மாது - லக்ஷ்மியானவள். வாழ் - அத்தைவிட்டுகந்துநித்யவாஸம்பண்ணுகிற. மார்பினாய் - திருமார்பையுடையவனே. என்சொல்லி - போக்யதைக்குப்பாசுரமிட்டுச்சொல்லுவேனோ, ப்ரணயித்வத்துக்குப்பாசுரமிட்டுச்சொல்லுவேனோ, எத்தைச்சொல்லி, வாழ்த்துவன்-வாழ்த்துவது.

சாதுவாய் - நன்றாய். தகை - ப்ரகாரம்.......................................................*

---

## ஈடு - ஆறும்பாட்டு.

"எங்குலக்கவோதுவன்" என்றார்; வேதங்கள்நம்மைப் பேசாநின்றனவே, உமக்குப்பேசத்தட்டென்னென்ன; அவையுமிவ்வளவன்றோ செய்ததென்கிறார்.

( ஓதுவாரோத்தெல்லாம் ) ஓதுவாரென்கையாலே ·· அதிகாரிவை வித்யத்தைச்சொல்லுகிறது. ( ஓத்தெல்லாம் ) ருகாதிசதுர்வேதங்களும், ஆக, அத்யேத்ருபேதத்தாலே சாகாபேதங்களாய்க்கொண்டு பிரியுண்டவேதங்களெல்லாம். ( எவ்வுலகத்தெவ்வெவையும் ) எல்லாலோகங்களிலு முண்டானவெல்லாம். ஸ்வர்க்கலோகத்திலும் ப்ரஹ்மலோகத்திலும், அங்குள்ளபுருஷர்களுடைய ஜ்ஞாநாதிக்யங்களுக்குத் தக்கபடியே யவையும்பரந்திருக்குமிறே; ஸ்ரீராமாயணமென்றால், ப்ரஹ்மலோ

கத்திலநேகம் க்ரந்தமாயிருக்கச்செய்தே, இங்கு இருபத்துநாலாயிரமா யிராநின்றது. ( சாதுவாய் ) சப்தத்துக்கு ஸாதுத்வமாவது - அர்த்தத்து க்குபோதகமாயிருக்கை. அன்றியே, சாதுவான - புகழென்று - குணவி சேஷணமாகவுமாம். ( சாதுவாய்நின்புகழின் தகையல்லால்பிறிதில்லை ) உன்னுடைய கல்யாணகுணவிஷயமான வித்தனைபோக்கிப் புறம்புபோயி ற்றில்லை - விஷயந்தன்னை யெங்குமொக்க விளாக்குலை கொண்டது மில்லை. " வஷ்ரூ விஶெூநாஸிவாஜ்ஞளஸம்வ நாஹ்ஸ்வூ தஜாஹ: " ( வர்ஷபிந் தோரிவாப்தௌஸம்பந்தாத்ஸ்வாத்மலாப: ) என்னுமாபோலே - கட லிலேயொரு வர்ஷபிந்துவிழுந்தால் கடலையெங்கும் வ்யாபிக்கமாட்டா தே, தன்ஸத்பாவத்துக்கு மழிவில்லையிறே.

( போதித்யாதி ) வேதங்களுங்கூட ஏங்குவதிளைப்பதாகாநிற்க, நானிச்சேர்த்திக்குப்பாசுரமிட்டேத்தவோ. பூவையுடைத்தாய், தன்னி லத்திலேநின்றாற்போலே செவ்விபெற்றுவாழாநின்றுள்ள திருத்துழா யைத் திருவபிஷேகத்திலேயுடையவனே. திருத்துழாய்ப் பூமுடிசூடிவா ழாநிற்கிறது. இவ்வொப்பனையென்னாலே பேசலாயிருந்ததோ. ( பூவின் மேலித்யாதி ) பிராட்டிபிரிந்திருக்கிலிறே வைத்தவளையம்சருகாவது. இ வ்வொப்பனையை யொப்பனையாக்கு மவளோட்டைச்சேர்த்திதா னென் னாலேபேசலாயிருந்ததோ. தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடைய பெரி யபிராட்டியார் பூவடிகொதித்துப் போந்துவர்த்திக்கும் மார்வையுடைய வனே. பிராட்டி, பெருமாளைக்கைப்பிடித்தபின்பு, பிறந்தகமான ஸ்ரீமிதி லையை நினைக்குமன்றாயிற்று இவளுமிம்மார்வைவிட்டு, பிறந்தகமானதா மரையைநினைப்பது. ( என்சொல்லியான் வாழ்த்துவனே ) இவ்வொப்ப னைக்கும் இச்சேர்த்திக்கும் என்னாலேபாசுரமிட்டுச் சொல்லலா யிருந் ததோ........................................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( ஓதுவாரித்யாதி ) " நின்புகழின்தகையல்லால்பிறிதில்லை " என்றத்தைக்கடாக்ஷித்து சங்காபரிஹார முகேநாவதாரிகை ( எங்குலக்கவித்யாதி ) வேதங்கள் நம்மைப்பேசாநின்றனவென்றது - " தஸ்ய ருக்ச ஸாம ச கேஷ்ணௌ " ( தஸ்யருக்சஸாமசகேஷ்ணௌ ) " ஸர்வ்வே வேதா யத்பதமாமநந்தி " ஸர்வேவே தாயத்பதமாமநந்தி ) இத்யாதியைப்பற்ற. ( இவ்வளவன்றே செய்ததென்றது ) " தகையல்லால்பிறிதில்லை " என்றத்தைப்பற்ற.

வேதங்களெல்லாமொருபடிப்பட்டிருக்க, இந்தபேதங்களெங்ஙனேயென் ன ( ஆகவித்யாதி ) அதாவது - வேதங்களெல்லாமொரு போகியாய்க்கிடக்கை யாலே "மந்தமதிகளுக்கதிகரிக்கக்கூடாது" என்றுஸமஸ்தமான வித்தைவ்யாஸர், ருகாதிபேதேந பிரித்தாரிறே; அன்றுதொடங்கி அத்யேத்ருபேதங்களும், காடகா

ண்வாதி சாகாபேதங்களும், தந்நிபந்தநமான அத்யயநபேதங்களுமென்றபடி. "எவ்வுலகத்தெவ்வெவையுமான - ஓதுவாரோத்தெல்லாம்" என்றந்வயம். "ஓத்தெல்லாம்" என்றாலமையாதோ, "எவ்வுலகத்தெவ்வெவையும்" என்று விசேஷிப்பானென், இவ்விடத்திற்காட்டில் லோகாந்தரங்களிலே பரந்திருக்கைக்குத் தானடியேதென்ன (ஸ்வர்க்கேத்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (ஸ்ரீராமாயணமித்யாதி) "வரிதம்ரகுநாயஸ்யஶதகொடிப்ரவிஸ்தரம்" (சரிதம்ரகுநாதஸ்யஶதகோடிப்ரவிஸ்தரம்) என்னக்கடவதிறே. (இருபத்துநாலாயிரமாயிராநின்றது) அப்படிவேதங்களும் "அநந்தாவைவேதா:" (அநந்தாவைவேதா:) என்கையாலே - பரந்திருக்குமென்றபடி.

குணவிசேஷணமானபோது, சாதுவான, புகழ் - கல்யாணகுணங்கள். நின் - சாதுவாயபுகழென்றபடி. தகை - ஸ்பர்ஶம். தகையல்லால்பிறிதில்லை - ஸ்பர்ஶிக்கிறதொழிய ஸ்பர்ஶித்தவிடம்விட்டுப் புறம்புபோயிற்றில்லையென்றபடி. (விஷயந்தன்னையித்யாதி) இதுவும் - * தகையின்தாத்பர்யம். விளாக்குலைகொள்ளுகை - எங்குமொக்கவ்யாபிக்கை. விளாக்குலை கொண்டதுமில்லை - புறம்புபோயிற்றது மில்லையென்றபடி. ஆனால், ஸம்பந்திக்கிறதுக்கு ப்ரயோஜநமேதென்ன (வர்ஷபிந்தோரித்யாதி) அதாவது - ஸ்வஸத்தாஸித்தியே பலமென்றபடி. இதுக்கர்த்தம் (கடலிலேயித்யாதி) யத்வா, வேதவிசேஷணபக்ஷத்தில், "சாதுவாய்" என்றதுக்கு - சாதுவாகைக்காக; ஸ்வஸத்தாலாபார்த்தமாக வென்றர்த்தாந்தரம் (வர்ஷபிந்தோரித்யாதி) என்னுதல். ஸ்ரீரங்கராஜஸ்தவேபூர்வஶதகே, "அந்யத்ராதத்குணோக்திர்பவதி நதது தத்கர்ஷஸௌர்யை: பரேஷாம்ஸ்துத்யத்வாத்யாவதர்த்தாபணிதிரபிததாதஸ்ய நிஸ்ஸீமகத்வாத் । ஆம்நாயாநாமஸீம்நாமபிஹரிவிபவே வர்ஷபிந்தோரிவாப்தௌஸம்பந்தாத்ஸ்வாத்மலாபோநதுகபளநதஸ்ஸ்தோதுரேவம்நகிம்மே" (அந்யத்ராதத்குணோக்திர்பவதிநததுத்கர்ஷஸௌர்யை: பரேஷாம்ஸ்துத்யத்வாத்யாவதர்த்தாபணிதிரபிததாதஸ்ய நிஸ்ஸீமகத்வாத் । ஆம்நாயாநாமஸீம்நாமபிஹரிவிபவே வர்ஷபிந்தோரிவாப்தௌஸம்பந்தாத்ஸ்வாத்மலாபோநதுகபளநதஸ்ஸ்தோதுரேவம்நகிம்மே) ஆக, "சாதுவாய்" என்றதுக்கர்த்தத்ரயமாதல், அர்த்தத்வயமாதல். அதாவது, சாதுவாய் - அர்த்தபோதகமாயிதிப்ரதம: ; சாதுவான - புகழிதித்விதீய: ; சாதுவாகைக்காக - ஸத்தைபெறுகைக்காக விதித்ருதீய:.

மேலுக்கெல்லாம்தாத்பர்யம் (வேதங்களுங்கூடவித்யாதி) "போது - புனம்வாழ்-துழாய்முடியினாய்" இத்யந்வயேசப்தார்த்தம் (பூவையுடைத்தாயித்யாதி) (திருத்துழாய்ப்பூமுடிசூடிவாழாநிற்கிறதிதி) ரஸோக்தி:. இவ்வொப்பனையித்யாதிவாக்யம் - பூர்வவாக்யேந ஸஹைகபாவபரம்.

"பூவின்மேல" இத்யாதிக்கு - கீழேகூட்டிபூர்வபாவியாகதாத்பர்யம் (பிராட்டியித்யாதி) மேலேகூட்டி அபரபாவியாக தாத்பர்யாந்தரம் (இவ்வொப்பனையித்யாதி) "பூவின்மேல்மாது" என்று - புஷ்பவாசித்வத்தை நிரூபகமாகச் சொல்லி, மார்விலேவாழ்கிறு ளென்றத்தால்பலிதம் (தாமரைப்பூவையித்யாதி) "வாழ்" என்றவர்த்தமாநார்த்தம் (பிராட்டியித்யாதி) பிரித்துச்சொன்னத்தைத் தொகுத்தருளிச்செய்கிறார் (இவ்வொப்பனைக்குமித்யாதி) ஒத்து-வேதம்.

புனர்துழாய் - போதுவாழ் முடியினுய், பூவின்மேல் மாதுவாழ்மார்பினுய் எவ்வுலகத்திலுண்டான வெவ்வெவையுமான - ஓதுவாரோத்தெல்லாம் சாதுவாய் நின் புகழின்தகையல்லால் பிறிதில்லை ; என்சொல்லியான் வாழ்த்துவன் இத்யநவய8.........................................................................*



# ஏழாம்பாட்டு.

---

வாழ்த்துவார்பலராகநின்னுள்ளேநான்முகனை
மூழ்த்தநீருலகெல்லாம்படையென்றுமுதற்படைத்தாய்
கேழ்த்தசீரரன்முதலாக்கிளர்தெய்வமாய்க்கிளர்ந்து
சூழ்த்தமரர்துதித்தாலுன்றொல்புகழ்மாசூணுதே.

## ஆருயிரப்படி.

(வாழ்த்துவார்) நீரொருவராகையாலே வாழ்த்தமுடியாதென்கிறீராகில், பலரோடேநின்று வாழ்த்திலுலோவென்னில்.

வாழ்த்துவார் பலராகவாகிருர், நீபடைத்தப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டரான ருத்ராதிதேவதைகளிறே யேத்துவார்; அவர்களுமுன்னுடைய குணங்களைமுடியவேத்தவல்லரோ, ஏத்துகைக்குத்தானர்ஹரோ; அல்லரிறேயென்கிருர்.......................................................*

## பன்னீராயிரப்படி,

அநந்தரம், அதிசயிதஜ்ஞாநரான ருத்ராதிகளெல்லாரும் திரண்டு ப்ரயோஜகத்திலேசொல்லப்பார்த்தாலு முன்னுடைய ஸ்வாபாவிககுணங்களுக்கு மாலிந்யாவஹமென்கிருர்.

* ஸ்தவப்ரியனுகையாலே, வாழ்த்துவார்-உன்னைவாழ்த்துவார். பலர்-பலர். ஆக-உண்டாகைக்காக. நின்னுள்ளே-உன்ஸங்கல்பஸ்வரூபத்துக்குள்ளே. நான்முகனை-சதுர்முகனை. மூழ்த்தநீர்-காரணஜலமான ஏகார்ணவத்துக்குள்ளே. உலகெல்லாம்-ஸமஸ்தலோகத்தையும். படை-ஸ்ருஷ்டி. என்று-என்று. முதல்-ப்ரதமனுக. படைத்தாய்-படைத்தவனே. அவனுலேஸ்ருஷ்டமாய், கேழ்த்த - கெழுமின. சீர்-ஜ்ஞாநாதிகுணங்களையுடைய. அரன்-ருத்ரன். முதலா-முதலாக. கிளர்-கிளர்ந்ததிவ்யசக்தியுக்தராய்க்கொண்டு. அமரர்-நித்யத்வவிஶிஷ்டரான தெய்வமாய்-தேவர்கள் யாவதாயுஷம், கிளர்ந்து-உத்யுக்தராய். சூழ்த்து-ப்ரயோஜகங்களாலேகுணங்களைவளைத்து. துதித்தால்-ஸ்தோத்ரம்பண்ணினுல். உன்-உன்னுடைய. தொல் - ஸ்வாபாவிகமான. புகழ்-குணௌஜ்ஜ்வல்யம். மாசூணுதே-மாசேருதோ.

மூழ்த்த-நிரம்பின. கேழ்த்த-செறிந்த..........................................*

---

## ஈடு-ஏழாம்பாட்டு.

வேதங்கள்கிடக்கிடும்; வைதிகபுருஷர்களென்று சிலருண்டே, அவர்கள் நம்மையேத்தக்குறையென்னென்ன; அதுவுமுனக்கு நிறக்கேடென்கிறார்.

(வாழ்த்துவார்பலராக) "ஆனால் தான் வந்ததென், வேதங்களிலவர்கள்செய்தவேற்றமென்" என்றும் பட்டருளிச்செய்வது. அன்றிக்கே, வாழ்த்துவார் பலருண்டாகைக்காகவென்னுதல்.

(நின்னித்யாதி) உன்னுடையஸங்கல்பஸஹஸ்ரைகதேசத்திலே, சதுர்முகனை, கடல்சூழ்ந்தபூமியையெல்லா முண்டாக்கென்று முதல்படைத்தாய். மூழ்த்தநீரிலே-ஏகார்ணவத்திலே, லோகங்களையுண்டாக்கென்று சதுர்முகனையுண்டாக்கினாயென்னவுமாம். உன்னாலே ஸ்ருஷ்டனான சதுர்முகனாலே ஸ்ருஷ்டரானவர்கள் உன்னையேத்தவென்றொருபொருளுண்டோ.

ஆனாலிவர்களையொழிய ஜ்ஞாநாதிகரான ருத்ராதிகளையுங்கூட்டிக்கொண்டாலோவென்ன; அவர்களுக்கும் நிலமன்றென்கிறதுமேல் (கேழ்த்த) இப்பங்களத்தைவிட்டுக் கால்கடியரானவர்களேத்தப்புக்காலெல்லைகாணப்போமோ. கிளர்ந்தசீருண்டு-ஜ்ஞாநாதிகுணங்கள்; அவற்றையுடையனானருத்ரன் தொடக்கமாக ஈஸ்வரனோடு மசக்குப்பரவிடலாம்படி கிளர்ந்ததேவதைகள், முசுக்குவாலெடுத்தாற்போலே கிளர்ந்து, ஒருவர்சொன்னவிட மொருவர்சொல்லாதே ஓரோப்ரயோஜகங்களிலே, மிகைத்த ஆயுஸ்ஸுக்களையுடையராயிருக்கிறவர்கள் ஸ்தோத்ரம்பண்ணினாலுன்னுடைய ஸ்வாபாவிகமான கல்யாணகுணங்கள் மாசூணாதோ. "இவர்களேத்துமளவோ இவன்குணங்கள்" என்ன அவ்வழியாலே அவத்யமாய்த்தலைக்கட்டாதோ... ... ... .. ... ... ... ... ... *

---

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (வாழ்த்துவாரித்யாதி) பூர்வார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (வேதங்களித்யாதி) இப்பாட்டுக்கவதாரிகையும் வ்யாக்யாநமுமெல்லாம் பட்டர்நிர்வாஹத்திலே. இதுவ்யாக்யாநத்திலேவ்யக்தம்.

இவர்நிர்வாஹத்திலே, பூர்வார்த்தமெல்லாம் - கீழிற்பாட்டுக்குசேஷம். அதாவது-நித்யநிர்த்தோஷமான வேதம்சொல்லமாட்டாதவித்தை ஸ்ருஜ்யத்வகர்மவஶ்யத்வாதிகளையுடையவிவர்கள் சொல்லமாட்டுவர்களோவென்றபடி. வாழ்த்துகிற வ்யாஸாதிகள் பலருமுண்டாயிடுகவென்று காகுவாகசப்தார்த்தம் (ஆனால்தானித்யாதி) நின்னுள்ளே நான்முகனைமூழ்த்த நீருலகெல்லாம்படையென்று முதற்படைத்தாய், அத்தாலேவாழ்த்துவார் பலருமுண்டாயிடுக-ஆனாற்றான்வந்ததென், அவர்களாலே தானேத்தப்போமோ, வேதங்களிற் காட்டி லிவர்கள்செய்த வேற்ற

மென்னென்றுபாவம். வாழ்த்துவார் பலருண்டாகைக்காக - "படைத்தாய்" என்றவிரண்டாமர்த்தத்துக்கு - படைத்தாயாகிலு மதுகார்யகர மாயிற்றில்லையென்றுகருத்து.

"நீர்-சூழ்த்த" என்றுப்ரதமார்த்தத்துக் கர்வயம். நீர் - (கடல்) சூழ்த்த - (சூழ்ந்த) த்விதியார்த்தத்துக்கு, சூழ்த்தநீர் - (ஏகார்ணவம்) இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணம் - "மஹார்ணவே ஶயாநோ ப்ஸு மாம் த்வம் பூர்வமஜீஜந:" (மஹார்ணவேஶயாநோப்ஸுமாம்த்வம்பூர்வமஜீஜந: ) என்றது. அஜீஜந:-ஜநிப்பித்தாய். முதல்படைத்தாய் - ப்ரதமத்திலேயுண்டாக்கினாய். இத்தால்பட்டர் நிர்வாஹத்திலேபலிதம் (உன்னாலேயித்யாதி)

இவர்களையொழிய - வைதிகபுருஷர்களான வ்யாஸாதிகளையொழிய. மேலுக்குத்தாத்பர்யம் (இப்பங்களத்தையித்யாதி) பங்களம்-பதர்க்கூட்டம். கால்கடியர் - சக்திமான்கள். கேழ்த்தசீரரன் - செறிந்தஜ்ஞாநாதிகுணங்களை யுடையருத்ரன். கிளர்ந்த-மிக்க. (அவற்றையுடையனானருத்ரனிதி) "ஜ்ஞாநமிச்சேத் மஹேஶ்வராத்" (ஶங்கராத்ஜ்ஞாநமந்விச்சேத்) என்று - ருத்ரனை ஜ்ஞாநாதிகளுக்குச் சொல்லிற்றிறேயென்றபடி. மசக்குப்பரலிடலாம்படி-ஸம்ஶயிக்கும்படி. முசகு-கொண்டைமுசுறு. கோலாங்கூலம். "சூழ்த்து" என்றது - "துதித்தால" என்கிறக்ரியைக்குவிசேஷணம். கிளர்தெய்வமாய் - மிக்கதிவ்ய சக்தியுக்தராய். இது - அமரர்க்குவிசேஷணம். கிளர்ந்து-உத்யோகித்து. சூழ்த்து - அவச்சேதித்துக்கொண்டு. அதாவது - ஒருவர்சொன்ன விடமொருவர்சொல்லாதே கூறிட்டுக்கொண்டென்றபடி. சூழ்த்து - ஏகதேசத்தை வளைத்துக்கொண்டென்று நிஷ்க்ருஷ்டார்த்தம். (ஓரோப்ரயோஜகங்களிலே) குணவிபூத்யாதிகளாகிற வோரோவவச்சேதகங்களிலே. நம்ரியந்த இதி - அமரா:என்றத்தைச்சொல்லுகிறது. (மிகைத்தவாயுஸ்ஸுக்களித்யாதி) மாசூணாதோ - மாலிந்யத்தையடையாதோ. துதித்தால் மாசுண்பானென்னென்ன (இவர்களித்யாதி)

சூழ்த்தநீரொன்றுதொடங்கி, நின்னுள்ளேநான்முகனை - முதல்படைத்தாய்" வாழ்த்துவார்பலராக. கேழ்த்தசீரொன்று தொடங்கியந்வயம். "பட்டர்நிர்வாஹம், பூர்வார்த்தமெல்லாம் - கீழ்ப்பாட்டுக்குசேஷம்" என்றேபலகாலு மருளிச்செய்வர்..............................................................*

# எட்டாம்பாட்டு.

மாசூணாச்சுடருடம்பாய்மலராதுகுவியாது
மாசூணாஞானமாய்முழுதுமாய்முழுதியன்றாய்
மாசூணாவான்கோலத்தமரர்கோன்வழிப்பட்டால்
மாசூணாவுனபாதமலர்ச்சோதிமழுங்காதே.

## ஆறாயிரப்படி.

(மாசூணா) அந்ததேவதைகளோடேகூட, சர்வாதிபதியாய் நிர்த்தோஷஜ்ஞாநனான சதுர்முகன் நின்றேத்தினாலோவென்னில்; ஹேய

( நிற்பதென்ஞான்றுகொலோ ) அதென்நாளாகவற்றோ; "ஸுவீ த்ரீம்ஸகாலஸ்ஸ்யாத்" ( அபீதாம் த்ரிம்ஸகாலஸ்ஸ்யாத் ) என்னுமாபோலே. "'இந்நாள்' என்றோரவதிபெற்றதாகில் இன்றுபெற்றத்தோடொக்கும்" என்றுஞ்சொல்லுவர்கள். ........................................*

---

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( வன்மாவித்யாதி ) பூர்வார்த்தத்தைச் சடாக்ஷித்தவதாரிகை ( உம்முடையவித்யாதி ) உம்முடையவுடம்பென்றது - "ஆக்கையின்வழி" இத்யாதியைப்பற்ற. அதெவ்விடத்தேயென்ன ( வாமநவேஷத்தையித்யாதி )

"வையம்" என்றது - வையத்திலுள்ளானையாய், வன்மையாவது - ஹ்ருதயகாடிந்யமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரசங்கமருளிச்செய்கிறார் ( அவன்தானேயித்யாதி ) தானேதன்னைக்கொண்டுவந்து காட்டினவிடத்தில் நெஞ்சநெகிழ்ந்த பேருண்டோவென்ன ( ஆசுரோத்யாதி ) அவன்றானப்படி யிரங்கினானோவென்ன ( சுக்ராத்களித்யாதி ) அவர்கள் வழிபோயிற்றிலன் - அவர்கள்சொன்னபடி செய்திலன். த்விதீயார்த்தம் ( மஹாபலிமிடுக்காலேயித்யாதி ) சப்தார்த்தம் ( இப்படியித்யாதி ) கடிநமானபூமியென்று மூன்றாமர்த்தம் ( வடிவிணையித்யாதி ) வடிவுக்கொப்பின்றிக்கே யிருக்கிறபத்மோத்பவையான பெரியபிராட்டியாரும், மற்றையான பூமிப்பிராட்டியும் பிடிக்கும்ம்ருதுவான திருவடிகளையென்று பாசுரார்த்தம். உக்தமர்த்தத்ரயம் வ்யுத்க்ரமேணதர்ஶயதி ( சம்சாரிகளுடைய வித்யாதிவாக்யத்ரயேண ) இந்தமூன்றுவாக்யமும்-திருத்துவாக்யம். "எம்" என்றதுக்கு பாவம் ) அபஹ்ருதேத்யாதி )

"நின்பன்மாமாயப்பல்பிறவியிற் படிகின்றயான்" இத்யந்தஸ்யபாவமாஹ(மமமாயேத்யாதி)நிதாஸூஸப்தமே. பூர்வமேவலிகிதம். கார்யகதமான தேவாதிநாநாத்வத்தை - தேவாதிகார்யகத மானநாநாத்வத்தை. மாயமடியாக வுண்டானபிறவியென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( ப்ராக்ருதிசம்பந்தேத்யாதி ) "மா" என்றது - "துரத்யயா" (துரத்யயா) என்றபடி. வர்த்தமாநார்த்தம் ( தறைகாணாதேயித்யாதி) "தறைகாணாதே" என்றதின்விவரணம் (வர்த்தமாநேத்யாதி) சம்சாரபாந்தன்-சம்சாரமார்க்கசரன். சம்சாரபாந்தனென்றது - "அநேகஜந்மஸாஹஸ்ரீம்ஸம்ஸாரபதவீம்வ்ரஜந்" ( அநேகஜந்மஸாஹஸ்ரீம் ஸம்ஸாரபதவீம்வ்ராஜந் ) இத்யாரப்ய, "ததாஸம்ஸாரபாந்தஸ்யயாதிமோஹஶ்ரமஶ்ஶமம்" ( ததாஸம்ஸாரபாந்தஸ்யயாதிமோஹஸ்ரமஶ்ஶமம் ) இத்யந்தம் ஆறுமம்ஶத்தில் கேசித்வஜோக்த வசநத்தைப்பற்ற.

"தொடர்" என்று - ஒன்றோடொன் றநுபந்தித்திருக்கிற விதிப்ராதமிகார்த்தம். பஹூவசநார்த்தம் (-தான்குவாலாயிருக்கிறவென்று ) இரண்டாமர்த்தம் ( தொடரித்யாதி ) வல்வினையாகிற விலங்கென்றபடி.

"நின்" என்றதுக்கர்த்தம் ( பரமப்ராப்யமாயென்றது ) பரமப்ராப்தமாயென்றபடி. "மா" என்றதுக்கர்த்தம் ( நிரதிசயபோக்யமாயென்று ) நித்யனான சேதநனுக்கு நிலையாவதேதென்ன ( பறக்கிறதித்யாதி ) பறக்கிறது - எச்சிலிலை. உக்தார்த்தேப்ரமாணம் ( அதேத்யாதி ) எந்நாளாகவற்றோவென்றது - இன்ற

கவற்றோவென்றதாய், அப்படிசொன்னபேருண்டோவென்ன (அபீதாநீமித்யாதி) அயோத்யாகாண்டே வநப்ரயாணோத்யுக்தம் ராமம்ப்ரதி கௌஸல்யா, "அபீதாநீம் ஸகாலஸ்ஸ்யாத் வநாத் ப்ரத்யாகதம் புந: । யத் த்வா புத்ரக பஸ்யேயம் ஜடாமண்டலதாரிணம்" (அபீதாநீம்ஸகாலஸ்ஸ்யாத்வநாத்ப்ரத்யாகதம்புந:। யத்த்வாபுத்ரகபஸ்யேயம்ஜடாமண்டலதாரிணம்) ஹேபுத்ரக, ஜடாமண்டலதாரிணம்வநாத்புந: ப்ரத்யாகதந்த்வாம் யஸ்மாத்காலாத்பஸ்யேயம், ஸகால: இதாநீம்ஸ்யாதபீத்யந்வய:. என்னாளாகவற்றோவென்றதுக்கு-ப்ரஸ்நபரமாக்கி யர்த்தாந்தரம் (இந்நாளென்றித்யாதி) அவனொருநா ளிட்டுக்கொடுத்தால் பெற்றதாகக்கொண்டு தரித்திருக்கலாமென்றபடி.

(நின்பன்மாமாயமித்யாதி) நின் - உன்னுடையதாயுனக்கு லீலோபகரணமாய், குணபேதத்தாலும் தேவாதிகார்யபேதத்தாலும்பலவாய், மா - துரத்யயையான, மாயம் - ப்ரக்ருதிபடியான தேவாத்யநேகவித ஜந்மங்களிலே பொருந்திவர்திக்கிறநான், தொல் - அநாதியாய், மா-அபரிச்சேத்யமாய், வல்-விடுவிக்கவரிதாம்படி ப்ரபலமான, வினைத்தொடர்களை-பாவத்தொடர்ச்சிகளை யென்றுசப்தார்த்தம். சுக்ராதிகள் விலக்கச்செய்தே என்கிறவிடத்திலே - "இதி ஸஞ்சோதிதஸ் ஸுக்ரஸ் ஸ்வராஜ்ஞா பலிநா ந்ருப" (இதிஸஞ்சோதிதஸ்ஸுக்ரஸ்ஸ்வராஜ்ஞாபலிநாந்ருப) இத்யாதி, "ஆக தேவாம நேதேவ த்வயா தஸ்ய மஹாத்மந: । ப்ரதிஜ்ஞா நைவ கர்த்தவ்யா தத்யா மே தத்து வேதி வை" (ஆகதேவாமநேதேவேத்வயாதஸ்யமஹாத்மந:। ப்ரதிஜ்ஞாநைவகர்த்தவ்யாதத்யாமேதத்துவேதிவை) என்ற நாரசிம்ஹபுராணத்தில் சுக்ரவசநமநுசந்தேயம். க்ரமேணாந்வய:..................*

---

## மூன்றாம்பாட்டு.

---

கொல்லாமாக்கோற்கொலைசெய்துபாரதப்போ
ரொல்லாச்சேனையுமிருநிலத்தவித்தவெந்தாய்
பொல்லாவாக்கையின்புணர்வினையறுக்கலறு
சொல்லாயானுன்னைச்சார்வதோர்சூழ்ச்சியே.

### ஆறாயிரப்படி.

(கொல்லா) இப்படி ஸ்ரீவாமநனாய்வந்து புகுந்தருளின அதுவுமெனக்குக் கார்யகரமன்றியேயொழிந்தவாறே, பின்னையுமென்பக்கலுள்ள அபிநிவேசத்தாலே ஸ்ரீவசுதேவர் திருமகனாய்வந்துபிறந்தருளி, சர்வவசீகரணமாய் நிரதிசயாஸ்சர்யமான திவ்யசேஷ்டிதங்களைப்பண்ணி யருளாநின்றுகொண்டு சர்வசுலபனாய்நின்றருளின அன்று மூன்றிருவடிகளைச் சேரப்பெற்றிலேன்; இப்படி யநர்த்தகரமாயுன்னாலல்ல தறுக்கமுடியாதிருக்கிற இந்தப்ரக்ருதி சம்பந்தத்தை நீயேயறுத்து நானுன்னைச்சேருவதொரு விரகுபார்த்தருளாயென்கிறார் ...... ........ ........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவிரோதிநிரசநசீலனான வுன்னைநான் கிட்டுகைக்கொரு விரகருளிச்செய்ய வேணுமென்கிறார்.

கொல்லா-கொல்லுகைக்குக்கருவியன்றியே. மா - குதிரையைநடத்துவதான. கோல் - முட்கோல்கருவியாக. “ 𑌮𑌯𑍈𑌵𑍈𑌤𑍇𑌨𑌿𑌹𑌤𑌾𑌃 ” ( மயைவைதேநிஹதா: ) என்று சங்கல்பமாத்ரத்தாலே, கொலை-கொலையை. செய்து-செய்து. பாரதப்போர்-பாரதயுத்தத்திலே. எல்லாச்சேனையும் - சத்ருசேநையோடுபாண்டவசேனையோடு வாசியற பூபாரமான சமஸ்தசேனையையும். இருநிலத்து-தர்மக்ஷேத்ரமான பெரியபூமியிலே. அவித்த-நசிப்பித்த. எந்தாய் - என்னுடையஸ்வாமியே. பொல்லா-அநர்த்தஹேதுவான. ஆக்கையின் - சரீரத்தோடுண்டான. புணர்வினை-சம்பந்தத்தை. அறுக்கல்-அறுக்கவுத்யோகித்தாலும். அறா-என்றாலறுக்கலாம்படியல்ல. யான்-இதிலேயகப்பட்டநான். உன்னை- விரோதியையழித்துக்கொடுக்கவல்லவுன்னை. சார்வது-கிட்டலாம்படி. ஓர்-அத்விதீயமாயிருப்பதொரு. சூழ்ச்சி-நல்விரகு. சொல்லாய்-அர்ஜுநனுக்குச்சொன்னாற்போலேசொல்லவேணும்........*

---

## ஈடு - மூன்றாம்பாட்டு.

வாமநாவதாரம் முற்காலத்திலேயாகையாலும் நீர் பிற்பாடராகையாலுமிழந்து அங்குகிட்டப்பெற்றிலீராகில், ஒருத்தியுடைய மங்களசூத்ரத்துக்காகப்பாண்டவர்களுக்குச்சொல்லிற்றுச்செய்துதிரிந்தோமே, அங்கேவந்துகிட்டமாட்டிற்றிலீரோவென்ன; அங்குந்தப்பினேனென்கிறார்.

( கொல்லா ) துர்யோதநனும் அர்ஜுநனுமாக, க்ருஷ்ணன்பள்ளிகொண்டருளாநிற்கச்செய்தே படைத்துணைவேண்டிவந்து, துர்யோதநன் திருமுடிப்பக்கத்திலேயிருந்தான், அர்ஜுநன் திருவடிகளின்பக்கத்திலே யிருந்தான்; பள்ளியுணர்ந்தருளி, “ ராஜாக்கள்போந்ததென் ” என்ன; துர்யோதநன் “ நான்முற்படவந்தேன் ” என்ன; [𑌭𑌵𑌾𑌨𑌭𑌿𑌗𑌤𑌃𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑌤𑍍𑌰𑌮𑍇𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌸𑌂𑌶𑌯𑌃] [ பவாநபிகத:பூர்வமத்ரமேநாஸ்திஸம்ஶய:] என்று நீர்முற்படவந்ததுக்குக் குறையில்லை, நங்கண் முற்படப்பட்ட திவன்பக்கலிலேயென்று அவனுக்காகத்தான் சிலவழக்குச்சொல்லி, “உங்களுக்குவேண்டுவதென்” என்ன; “ படைத்துணைவேண்டிவந்தோம் ” என்ன; “ ஆகில் நாராயணகோபாலர்களை ஒருவன்கொள்ளுவது, என்னையொருவன்கொள்ளுவது ” என்ன; அசேதநக்ரியாகலாபங்களைப்பற்றுவாரைப்போலே துர்யோதநன் அவர்களைக்கொண்டுபோக, பீஷ்மாதிகள்கேட்டு, “ தப்புச்செய்தாய், இனிக்ருஷ்ணனாயுதமெடாதொழிவானாகவேண்டிக்கொண்டுபோராய் ” என்ன; அவனும்வந்து “ நீ ஆயுதமெடாதொழியவேணும் ” என்ன; “அப்படியேயாகிறது” என்றுசொல்லிவிட்டு, கொலைக்குப்பரிகரமன்றிக்கே குதிரையைநடத்துகிற கோலைக்கொண்டு முடித்துப்பொகட்டான். (பாரதப்போர்) பாரதசமரத்திலே.

(எல்லாச்சேனையும்) துர்வர்க்கமடையத் திரண்டதிறே உபயசேனையிலு ம். இங்கேநாலைந்துபேரும் அங்கேயொன்றிரண்டுபேருமொழிய முடித் துப்போகட்டானாயிற்று. (இருநிலத்து) அவர்கள்பக்கல் நன்மையில்லை யேயாகிலும், அங்கேபட்டார்க்கு வீரஸ்வர்க்கம்கிட்டும் தேசத்திலே.(அ வித்த) பீஷ்மாதிகள் காட்டுத்தீக்கிளர்ந்தாற்போலேவர, காளமேகம்வர் ஷிக்குமாபோலே அவித்தான். * மழைகொலோவருகின்றதென்றிறே ய வன்வரத்துத்தானிருப்பது. (எந்தாய்) பாண்டவர்களுக்கன்றுதவிற்றும் தமக்கென்றிருக்கிறார். (பொல்லாவாக்கை) நீயழியச்செய்த துர்யோதநா திகளளவல்லகிடா! யிதின்தண்மை. அநுகூலம்போலேயிருந்து பாதக மாமிறேயிது. தன்பக்கலிலே போக்யதாபுத்தியைப்பிறப்பித்து ஈஸ்வர னுடைய போக்யதையைத் திரஸ்கரிப்பிக்கும். சிஷ்டர்கள், ஒருவனுக்க நேகதோஷமுண்டானால் “அவன்தண்ணியன்” என்று விடுமித்தனையி றே, அப்படியே யிவரிதின் தண்மைகளையெல்லாம் திரளநினைத்து (பொ ல்லாவாக்கையென்கிறார்) சரீரத்துக்கடியாய் ஒன்றோடொன்று பிணைந் திருக்கிற பாபங்களானவை. புணர்வினை என்று - சரீரசம்பந்தந்தன்னை யென்னுதல். (அறுக்கலுறு) ராவணன்றலைபோலே முளையாநிற்கும்.

(சொல்லாய்) இத்தைக்கழித்து நானுன்னைக்கிட்டுமதொரு விரக ருளிச்செய்யவேணும். நானறியிற்றப்புவன், நானறியாதபடி விரகுபார் க்கவேணும், அதுதன்னை யெனக்குச்சொல்லவும்வேணுமென்கிறார். (யா ன்) சிறையிலேகிடப்பாரைப்போலே ப்ரக்ருதியோடே பிணையுண்டிருக் கிறநான். (உன்னை) ஒருதேசவிசேஷத்திலே நித்யசூரிகளநுபவிக்குமுன் னை. (சார்வதோர்சூழ்ச்சியே) சேருவதொருப்ரகாரஞ்சொல்லாய். அதா வது - “ஸவ்ஹவாவெஹ்ய ஹொக்ஷயிஷ்ஹாமி” (ஸர்வபாபேப்யோமோ க்ஷயிஷ்யாமி) என்றருளிச்செய்கையிறே. ............ ....................*

---

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு ( கொல்லாவித்யாதி ) “எல்லாச்சேனையுமிருநிலத்தவித்த வெந்தாய்” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (வாமநாவதாரமித்யாதி) முற்கா லத்திலேயென்றது - “அளந்த” என்கிற பூதநிர்த்தேசதாத்பர்யம்.

கொல்லா-கொலைக்குச்சாதநமன்றிக்கேயிருக்கிற. மாக்கோல்-குதிரையைந டத்துகிறகோலாலே. கொலைசெய்து-கொலையைச்செய்து. கொலை - கொல்லுகை. முடிக்கையென்றபடி. திவ்யாயுதங்களிருக்க, மாக்கோலாலே கொலைசெய்வானெ ன்னென்ன ( துர்யோதநனுமித்யாதி ) நங்கண் முற்படப்பட்ட திவன்பக்கலிலே யென்றது - “ ஹவா நஹி மத: வ-ஹெவ-ஹெது ஜெநாஷிஹஸம்ஶய:। ஜயாதஃ-ஜு ஷ: வ்ரும் ெகஃ-நீவ-ஃதாய நஜுய: ” ( பவாநபிகஃ:பூர்வமத்ரமேநாஸ்து ஸம்ஶய: । மயாதுத்ருஷ்ட:ப்ரதமம்குந்திபுத்ரோதநஞ்ஜய: ) என்றத்தைப்பற்ற. படைத்துணை - யுத்தஸஹாயம். அசேதநஸப்தத்தாலே-பலப்ரதாநாஸக்தியும், க்ரி

யாஶப்தத்தாலே-த்ரிக்ஷணாவஸ்த்தாயித்வமும்விவக்ஷிதம். ( பீஷ்மாதிகள்கேட்டுஇத்யாதி) "ந்யஸ்தஶஸ்த்ரோஹமேகத:" (ந்யஸ்தஶஸ்த்ரோஹமேகத:) என்றது கேட்டிருக்கச்செய்தேயும், பீஷ்மாதிகள்சொன்னபின்பு துர்யோதநன்மீளவும்வந்து "ஆயுதமெடாதொழியவேணும்" என்றுவேண்டிக்கொண்டது பாரதத்திலில்லாவிட்டாலும், இவரருளிச்செய்கையாலே கல்பபேதங்களிலேயாதல், புராணாந்தரங்களிலேயாதல் இப்படியுமுண்டென்றுகண்டுகொள்வது.

துர்யோதநசேனைமாத்ரமொழிய, உபயசேனையையு மழிக்கிறதென்னென்ன (துர்வர்க்கமித்யாதி) உபயகோடியிலு மெல்லாச்சேனையையும் கொன்றானேவென்ன (இங்கோநாலைந்தித்யாதி) இங்கோநாலைந்துபேரென்றது-தர்மபுத்ராதிகளை. அங்கேயொன்றிரண்டுபேரென்றது-அஶ்வத்தாமக்ருபாசார்யக்ருதவர்மாக்களை. இருமை-பெருமையாய், மஹநீயதையைச்சொல்லுகிறது. இருநிலத்து-புண்யபூமியிலே. வீரஸ்வர்க்கம் கிட்டுந்தேசமென்றது - "தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே" ( தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ) என்றத்தைப்பற்ற. அடர்த்த என்றதே, "அவித்த" என்றதுக்குபாவம் ( பீஷ்மாதிகளித்யாதி ) அவன்றானப்படிமறையோவென்ன (மறைகொலோவித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. மேகமோ வருகிறதித்யர்த்த:. * எந்தாய்தாத்பர்யம் (பாண்டவர்களித்யாதி)

இதின்தண்மையேதென்ன ( அநுகூலம்போலேயித்யாதி ) ஏதத்விவரணம் (தன்பக்கலிலேயித்யாதி) இந்தவாக்யம்- "பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்" (பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்) இத்யாதியைப்பற்ற. "பொல்லாவாக்கை" என்று சாமாந்யேநசொன்னால், ஏதாத்ருசாநேகதோஷங்கள் தோன்றுமோவென்ன (சிஷ்டர்களித்யாதி) விசிஷ்யசொல்லுவதில்லையிறேயென்றுகருத்து. ஶப்தார்த்தம் (சரீரத்துக்கித்யாதி)

விரகென்றதே, "சூழ்ச்சி" என்றதுக்குபாவம் ( நானறியிலித்யாதி ) சூழ்ச்சியாவது-அறியாதபடிசெய்கை. "விரகு" என்றதின்பலிதம் ( ப்ரகாரமென்றது ) சர்வபாபேப்ய இத்யாதிக்கு-பூர்வார்த்தத்திலேநோக்கு.

அறுக்கல்-அறுக்கப்பார்க்கில். அறா-அறுக்கலாம்படியிராது. க்ரமேணாந்வய:.*

---

## நான்காம்பாட்டு.

---

சூழ்ச்சிஞானச்சுடரொளியாகியென்று
மேழ்ச்சிக்கேடின்றியெங்கணுநிறைந்தவெந்தாய்
தாழ்ச்சிமற்றெங்குந்தவிர்ந்துநின்றாளிணைக்கீழ்
வாழ்ச்சியான்சேரும்வகையருளாய்வந்தே.

### ஆறாயிரப்படி.

(சூழ்ச்சி) சர்வாத்மாக்களையு முன்கருத்தில்வர்த்திப்பிக்கவற்றாய் நித்யஸித்தமாய் சர்வகதமாயிருந்த வுன்னுடையதிவ்யஜ்ஞாநமு மெனக்குக்கார்யகரமன்றியேயொழிந்தது; இப்படியுன்னுடைய ஜகத்ஸ்ருஷ்டிதிவ்

யாவதார சேஷ்டிததிவ்யஜ்ஞாநாதிகளை யெனக்குக்கார்யகரமாகாமே ப்ரதிபந்திக்கிற சமஸ்தப்ராக்ருத விஷயப்ராவண்யத்தையுந்தவிர்ந்து, நின்றுணிணைக்கீழ் வாழ்ச்சியான்சேரும்படி, சக்ரவர்த்திதிருமகனும் ஸ்ரீவசுதேவர் திருமகனும்வந்து பிறந்தருளினாற்போலே யின்னமும்வந்து பிறந்தருளியே செய்தருளவேணு மென்கிறார்..............................*

## பன்னீராயிரப்படி,

அநந்தரம், ரக்ஷணார்த்தமான வ்யாப்தியையுடைய வுன்திருவடிகளை நான் கிட்டும்ப்ரகாரம், என்முன்னேவந்து முகந்தோன்ற நின்றருளிச்செய்ய வேணுமென்கிறார்.

சூழ்ச்சி - எல்லாவற்றையுஞ்சூழ்ந்திருக்கிற. ஞானச்சுடர் - ஜ்ஞாநப்ரபையையுடைத்தான. ஒளியாகி - ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபனாய். என்றும் - சர்வகாலத்திலும். ஏழ்ச்சி - விகாசமும். கேடு - சங்கோசமும். இன்றி - இன்றிக்கே. எங்கணும் - சர்வப்ரதேசத்திலும். நிறைந்த - பரிபூர்ணமாகவ்யாபித்த. எந்தாய் - ஊமைவனைந்தொருவனைப்பிடிக்குமாபோலே யென்னையங்கீகரித்தஸ்வாமியே. மற்று - உன்னையொழிந்த. எங்கும் - சமஸ்தவிஷயங்களிலும். தாழ்ச்சி - கால்தாழ்கை. தவிர்ந்து - தவிர்ந்து. நின் - ப்ராப்தனானவுன்னுடைய. தாள் - போக்யமான திருவடிகள். இணை- இரண்டின். கீழ் - கீழே. வாழ்ச்சி - பாதந்த்ரனாய்வாழும் வாழ்க்கையை. யான் - இதுக்குமுன் அந்வயித்தறியாதநான். சேரும் - ப்ராபிக்கும். வகை- ப்ரகாரத்தை. வந்து - அவதாரமுகத்தாலே யென்முன்னேவந்துநின்று. அருளாய் - அருளிச்செய்யவேணும்.

வ்யாப்தமான ஸ்வரூபத்தால் போராதென்றுகருத்து.......................*

---

## ஈடு-நான்காம்பாட்டு.

இப்படிநீரிருந்தவிடத்தே நாம்வரச்செய்தேயுமிழந்திராகில்; அவதாரங்களைப்போலே ஒருகாலவிசேஷத்திலேயாகாதே எல்லாக்காலத்திலு மந்தர்யாமித்வேந, உகவாதார்பக்கலிலும் விடமாட்டாமையாலே புகுந்துநின்றோமே, அங்கேயநுகூலித்தும்முடையஅபேக்ஷிதம்பெற்றுப்போகமாட்டிற்றிலீரோவென்ன ; அதுக்கும்தப்பினேனென்கிறார். (சூழ்ச்சியித்யாதி) சேதநரைத்தப்பாதபடி அகப்படுத்திக்கொள்ளுகையாலே, வ்யாப்தியை - சூழ்ச்சியென்கிறது. எங்குமொக்க வ்யாபித்திருப்பதாய் விசததமமாயிருக்கிற ஜ்ஞாநப்ரபையை யுடையையாய். ஜ்ஞாநத்துக்காஸ்ரயமானஸ்வரூபத்தைச்சொல்லுதல், ஜ்ஞாநத்தைச்சொல்லுதல். ஸ்வரூபவ்யாப்தியும் ஜ்ஞாநவ்யாப்தியு மிரண்டும்சொல்லக்கடவதிறே, இரண்டும்பரார்த்தமாகையாலே. (என்றுமேழ்ச்சிக்கேடின்றி) எல்லாக்காலத்திலும், ஏழ்ச்சியாதல் கேடாதலின்றிக்கே. கர்மமடியாக ஆத்மாவுக்குவரக்கடவதான சங்கோசவிகாசங்களின்றிக்கேயிருக்கை. ஏழ்ச்சி-எழுச்சி-விகாசம். கேடு-குறைவு.சங்கோசம்.(எங்கணும்நிறைந்த)இப்படிவ்யாபிப்பதொரு ப்ரதேசத்திலேயோவென்னில் ; எங்கணும். கண்ணென்று-

இடமாய், "இடந்திகழ்பொருடொறும்கரந்து" என்கிறபடியே, எல்லாவிடத்திலுமுண்டான் எல்லாவற்றிலும், ஜாதி, வ்யக்திதோறும்பரிசமாப்ய வர்த்திக்குமாபோலே பூர்ணமாகவ்யாபித்திருக்கும். (எந்தாய்) ஒருவனைப்பிடிக்கநினைத் தூரைவளைவாரைப்போலே, வ்யாப்தியும்தமக்காக வென்றிருக்கிறார். உன்பக்கலிலே யகப்படுத்திக்கொள்ள விரகுதேடியுணர்ந்து என்னைவ்யாபித்துக்கொண்டு நிற்கச்செய்தேயும், விஷயப்ரவணனாய்த் தப்பினேனென்கை. (தாழ்ச்சிமற்றெங்குந்தவிர்ந்து) உன்னையொழிந்த மற்றுள்ளவிடத்தில் வரக்கடவதான தாழ்ச்சியையும் தவிர்ந்து. "யாதானும்பற்றி" என்கிறபடியே, நீயன்றிக்கே யொழியவமையுமே நான்மேல்விழுகைக்கு. (நின்தாளிணைக்கீழ்வாழ்ச்சி) வகுத்ததாய் நிரதிசயபோக்யமாயிருக்கிற உன்றிருவடிகளிலுண்டான கைங்கர்யத்தை, இதுக்குமுன் புதியதுண்டறியாத நான்கிட்டுவதொரு ப்ரகாரமருளிச்செய்யவேணும். இரண்டிடத்திலும் ப்ராவண்யமொத்திருக்க; தாழ்ச்சியென்றும் வாழ்ச்சியென்றும் சொல்லுகிறார் - "ஸர்வம்பரவஶம் துஃகம்" (ஸர்வம்பரவஶம்துஃகம்) என்றும், "ஸேவாஶ்வவ்ருத்திஃ" (ஸேவாஶ்வவ்ருத்திஃ) என்றும் அவற்றைச்சொல்லாநின்றதிறே; "சாயாவாஸத்வமநுகச்சேத்" (சாயாவாஸத்வமநுகச்சேத்) என்று இத்தைவிதியாநின்றது; அவற்றைப்பற்ற. இவ்வாழ்ச்சிக்கிட்டுப்பிறந்துவைத்து அத்தையிழந்திருக்கிறநான், கிட்டுவதொரு ப்ரகாரமருளிச்செய்யவேணும். (வந்தே) அதுதானும் முகந்தோற்றாதபடி நின்றருளவொண்ணாது; என்கண்ணுக்கிலக்காம்படி, ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள்போலே யெனக்காகவோரவதாரத்தைப்பண்ணியேயாகிலும் வந்தருளவேணும்.*

---

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (சூழ்ச்சியித்யாதி) "எங்கணும்நிறைந்தவெந்தாய்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்படியித்யாதி)

"சூழ்ச்சிஞானச்சுடரொளி" இத்யாதியாலே - ஸ்வரூபத்தையாதல், ஜ்ஞாநத்தையாதல் சொல்லுகையாலே, ஸ்வரூபவ்யாப்திபக்ஷத்திலே யருளிச்செய்கிறார் (சேதநனாயித்யாதி) ஜ்ஞாநவ்யாப்திபக்ஷத்திலே யருளிச்செய்கிறார் (எங்குமொக்கவித்யாதி) சூழ்ச்சி - சூழ்ந்திருக்கிற. சூழ்ச்சி - வலையும், விரகும். "சுடரொளி" என்கிறவீப்ஸைக்கர்த்தம் (விசததமமென்று) "சுடரொளி-ஞானமூர்த்தி" இத்யன்வயஃ. அர்த்தத்வயத்துக்கும் ப்ரயோஜநமேதென்ன (ஸ்வரூபேத்யாதி) பரார்த்தம் - பரரக்ஷணார்த்தம்.

ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதஃ, சங்கோசாதிகளுக்கு ப்ரஸக்தியேதென்ன (கர்மமடியாகவித்யாதி) கீழ், ஜ்ஞாநசப்தம் - ஜ்ஞாநாஶ்ரயமான ஸ்வரூபத்தைச் சொல்லுகிறபக்ஷத்திலே, "சூழ்ச்சி" என்று - வ்யாப்தியைச்சொல்லிற்றேயென்

அ

ன ; அங்குச்சொன்னவ்யாப்தி ப்ராதேசிகமாகவும் கூடுமென்று, க்ருத்ஸ்நவ்யாப்தியைச்சொல்லுகிற திங்கேயென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( இப்படிவ்யாபிப்பதித்யாதி ) பூர்வோக்தவ்யாப்த்யநு பாஷணமாதல். " சூழ்ச்சிஞானம் " என்றவிடத்திலே - ஜ்ஞாநவ்யாப்தியைச் சொல்லுகிறபோது, " எங்கணும்நிறைந்த " என்றது-ஸ்வரூபவ்யாப்தி பரமென்றுகண்டுகொள்வது. இதுவுமொருபக்ஷம். " நிறைந்த " என்றதுக்கர்த்தம் ( ஜாதிவ்யக்திதோறுமித்யாதி ) இத்தால்தாத்பர்யம் ( உன்பக்கலிலேயித்யாதி )

" சூழ்ச்சிஞானம் " இத்யாதி - ஸ்வரூபபரமானபோது, " என்றுமேழ்ச்சிக்கேடின்றி - சூழ்ச்சி-சுடரொளி-ஞானமாகி-எங்கணும்நிறைந்தவெந்தாய் " என்றந்வயித்து-ஸர்வகாலத்திலும் சங்கோசவிகாசங்களின்றியிலே யிருப்பதாய், சேதநரைத் தப்பாதபடி விஷயீகரிக்கவல்லதாய்... மிக்கதேஜஸ்ஸையுடைத்தான ஜ்ஞாநஸ்வரூபத்தையுடையனாய், அந்தஸ்வரூபத்தாலே யெங்குமுண்டான வெல்லாவஸ்துக்களிலும் வ்யாபித்தவெந்தாயென்று சப்தார்த்தம் ; ஜ்ஞாநபரமானபோது, கீழ்ச்சொன்னபடியே யந்வயித்து-சர்வகாலத்திலும் கர்மமடியாக வாத்மாவினுடைய தர்மபூதஜ்ஞாநத்துக்கு வரக்கடவதான சங்கோசவிகாசங்களின்றிக்கே யிருப்பதாய், எங்குமொக்கவ்யாபித்திருப்பதாய்,விசததமமாயிருக்கிற ஜ்ஞாநத்தையுடையனாய், ஜ்ஞாநத்தாலேயெங்குமுண்டான வெல்லாவஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கிற வெந்தாயென்றுசப்தார்த்தம்.

" மற்றெங்கும்-தாழ்ச்சிதவிர்ந்து " என்றந்வயித்தர்த்தம் ( உன்னையொழிந்தவித்யாதி ) " மற்று " என்றதுக்குஹார்த்தபாவம்.

வருத்ததாயென்றது- " நின் " என்றத்தைப்பற்ற. நிரதிசயபோக்யமாயென்றது- " இணை " என்றத்தைப்பற்ற. " யான் " என்றதுக்குமேலையும் கூட்டிக்கொண்டுபோவம் ( இதுக்குமுன்னித்யாதி ) புதியதுண்டறியாத - ஏகதேசாநுபவமுமறியாத, புதியதுண்கை - ஏகதேசாநுபவம். ( இரண்டிடத்திலும் ப்ராவண்யமொத்திருக்கவென்றது) இத்திருவாய்மொழியிலோடுகிற விஷயப்ராவண்யாநுசந்தாநம், பகவத்ப்ராவண்யமு மொத்திருக்கவென்றபடி. ( வாழ்ச்சியென்றும்சொல்லுகிறார்) இதுக்குக்கருத்தென்னென்னி லென்றுகூட்டுவது. இதுக்குத்தாத்பர்யம் ( சர்வமித்யாதி ) அவற்றைப்பற்ற - அந்தப்ரமாணங்களைப்பற்ற. " யான் " என்றதுக்குத்தாத்பர்யாந்தரம் ( இவ்வாழ்ச்சிக்கித்யாதி ) இட்டுப்பிறந்துவைத்து - யோக்யனாய்வைத்து. " வந்தே " என்றதுக்குபாவம் ( அதுதானுமித்யாதி ) " ஸேவாஶ்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத்தாம் பரிவர்ஜயேத் " ( ஸேவாஸ்வவ்ருத்திராக்யாதாதஸ்மாத்தாம்பரிவர்ஜயேத் ) இதிமாநவேதர்மசாஸ்த்ரே. பகவச்சாஸ்த்ரே மூலஸம்ஹிதாயாம், " யதா தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் சாயா வா ஸத்வமநுகச்சேத் " ( யதாதருணவத்ஸாவத்ஸம்வத்ஸோவாமாதரம் சாயாவாஸத்வமநுகச்சேத். )

க்ரமேணார்வயஃ.......................................................................................*

# ஐந்தாம்பாட்டு.

வந்தாய்போலேவந்துமென்மனத்தினைநீ
சிந்தாமற்செய்யாயிதுவேயிதுவாகிற்
கொந்தார்காயாவின்கொழுமலர்த்திருநிறத்த
வெந்தாயானுன்னையெங்குவந்தணுகிற்பனே.

## ஆறாயிரப்படி.

(வந்தாய்) அப்படிவருகை திருவுள்ளமன்றாகில்.

ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்தாப்போலேயாகிலும் வந்தென்மனத்தினைநீ சிந்தாமற்செய்கிறிலை. நீசெய்யாதொழிந்தால்நானென்னுடைய யத்நத்தாலுன்னைவந்து சேருகையென்றொருபொருளில்லை; இனியுன்னுடைய வழகைக்காணப்பெறாதே யிழந்துபோமித்தனையாகாதே நானென்கிறார்.................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷணவிக்ரஹயுக்தனான நீவந்தென்னெஞ்சைத் தரிப்பியாயாகிலுன்னழகை நானிழக்குமித்தனை யிறேயென்கிறார்.

வந்தாய்போலே - ப்ரஹ்லாதகஜேந்த்ரர்களுக்குவந்தாப்போலே. வந்தும்-ஒருப்ராதுர்ப்பாவம்பண்ணிவந்தாகிலும். என்-உன்னைக்கிட்டவாசைப்பட்டவென்னுடைய. மனத்தினை - நெஞ்சை. நீ - ஆபத்திலேயுதவினநீ. சிந்தாமல் - விரோதயநுசந்தாநத்தாலேசிதிலமாகாதபடி. செய்யாய் - பண்ணுகிறிலை. இதுவே - உதவாமையாகிறவிதுவே. இது - ஸ்வபாவமென்னுமிதுவாய். ஆகில் - நடக்குமாகில். கொந்து - கொத்துக்களாலே. ஆர் - நிறைந்த. காயாவின் - காயாவினுடைய. கொழுமலர் - செவ்விப்பூவின். திருநிறத்த - நிறத்தையுடையனாய். எந்தாய் - அவ்வழகைக்காட்டி யென்னையடிமைகொண்டஸ்வாமியே. யான் - உன்னழகொழியச்செல்லாதநான். உன்னை - இவ்வழகைக்காட்டினவுன்னை. எங்கு - எங்கே. வந்து - வந்து. அணுகிற்பன் - கிட்டவல்லேனாவது.......................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

நீர் "வந்தேயருளவேணும்" என்னாநின்றீர்; இதுநமக்குத்தட்டுப்படும் - ஒருவிசைபதினோராயிர மாண்டிருந்தோம், ஒருவிசைநூறாண்டிருந்தோம்; வருகைநமக்குப்பணி யுண்டுகாணுமென்ன; எனக்குமவைபோலே சிலநாளிருந்து பகரித்தருளப்பெறிலழகியது; அதுசெய்யத்திருவுள்ள மல்லவாகில், ஆனைக்குத்தோற்றினாற்போலேயும் ப்ரஹ்லாதனுக்குத் தோற்றினாற்போலேயும், எனக்குமொருதோற்றரவு தோற்றியேயாகிலு முதவவேணுமென்கிறார்.

(வந்தாய்போலேவந்தும்) வந்து சிலநாளிருந்தவைபோலன்றிக்கே, வந்தாய்போலேவந்தும். (என்மனத்தினைநீ) உன்னையொழியத்தரியாதபடியான என்மநஸ்ஸைதசையறிந்து தரிப்பிக்கும்நீ. உருவழிந்தவற்றையுண்டாக்கவல்லநீ. (சிந்தாமற்செய்யாய்) இதுத்ரவீபூதமாய் மங்கிப்போகாதபடிசெய்கிறிலே.

இதுவேயிதுவாகில் - எங்குவந்தணுகிற்பனென்கிறார். (இதுவேயிதுவாகில்) உன்னையொழியமங்கிப்போகையு மிதுக்குஸ்வபாவமாய், இது-மங்கக்கொடுத்துப் பார்த்திருக்குமது உனக்கு ஸ்வபாவமாய்விட்டதாகில். (கொந்தாரித்யாதி) "சிறியதுக்கினியதிடேன்" என்று இப்படிசெய்யக்கட்டவதாக இருந்தநீ இவ்வடிவில் சுவட்டையெனக்கறிவித்ததென். கொந்தார்ந்து - தழைத்திருந்துள்ள காயாவினுடைய கொழுவியமலர்போலே குளிர்ந்திருந்துள்ள திருநிறத்தைக்காட்டி யென்னையெழுதிக்கொண்டவனே. (யானித்யாதி) உன்னைக்கிட்டுகைக்கொரு கைம்முதலில்லாதநான். இவ்வடிவில் போக்யதையறிந்தநான். பிரியிற்றரியாத வடிவுபடைத்திருக்கிறவுன்னை, "தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" (தஸ்யைஷஆத்மாவிவ்ருணுதேதநூம்ஸ்வாம்) என்று - நீயேயநுபவிப்பிக்குமுன்னை. என்னசாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி எங்கேவந்துகிட்டக்கடவேன். "நானுன்னைக்கிட்டுகை" என்றொருபொருளுண்டோ ..........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (வந்தாயித்யாதி) "வந்தாய்போலேவந்தும்" என்றபதத்திலே நோக்காகவவதாரிகை (நீர்வந்தேயருளவேணுமித்யாதி) தட்டுப்படும்-ப்ரதிபந்தமாம், ப்ரயாசப்படுமென்றபடி. ததேவவிவ்ருணோதி (ஒருவிசையித்யாதி) ஒருவிசை - ஒருகால். பணியுண்டு - கார்யமுண்டு - ப்ரயாச சாத்யமென்றபடி. அவைபோலே - ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள்போலே. தோற்றரவு-அவதாரம். தோற்றியேயாகிலும் - பண்ணியேயாகிலும்.

வந்தாய்போலேவந்தும் - ப்ரஹ்லாதகஜேந்த்ராதிகளுக்கு வந்தாப்போலேயொருப்ராதுர்ப்பாவம் பண்ணிவந்தாகிலும். வந்திருந்தென்றதே, "வந்தாய்போலே" என்கையாலே - வந்திருந்தவையை வ்யாவர்த்திக்கிறதாக வருளிச்செய்கிறார் (வந்துசிலநாளித்யாதி) "வந்தும்" என்றசசப்தம் - அந்வாசயத்திலே. தசையறிந்தென்கிறது - "என்மனத்தினை-நீ" என்ற சமபிவ்யாஹாரசித்தார்த்தம். விவரணம் (உருவழிந்தவித்யாதி) இது - மநஸ்ஸு. சிந்தாமற்செய்யாய் - சிதிலமாகாதபடி செய்கிறிலே.

"இதுவே" என்றதுக்கர்த்தம் (உன்னையொழியவித்யாதி) "இதுவாகில்" என்றதுக்கர்த்தம் (இதுமங்கக்கொடுத்தித்யாதி)

" திருநிறத்தவெந்தாய் " என்றத்தைக்கடாக்ஷித் தருளிச்செய்கிறார் ( சிறியதுக்கித்யாதி ) என்று என்றவநந்தரம் - இராமலென்றுசேஷம். சிறியதுக்கினியதிடேனென்றிராமல் - ( எனக்கறிவித்ததென் ) என்றந்வயிப்பது. சப்தார்த்தம் ( தழைத்திருந்துள்ளவித்யாதி ) கொந்தார் - ( கொந்தார்ந்து ) கொத்துக்களிறு லேநிறைந்து. கொழுவிய - ஸ்நிக்தமான.

" யான் " என்றதுக்கர்த்தத்வயம் ( உன்னைக்கிட்டுகைக்கித்யாதிவாக்யத்வயேந ) அர்த்தசித்தம் - கைம்முதலில்லாமை. உக்தார்த்தத்வயாநுகுணம் " உன்னை " என்றதுக்கு மர்த்தத்வயம் வ்யுத்க்ரமேணஹ (பிரியிற்றரியாதவித்யாதிநா, தஸ்யைஷ இத்யாதிநாச ) தரியாத - தரிக்கவொண்ணாத. ஆக, இந்தவிரண்டர்த்தமும் - " யான் " என்கிறசப்தத்தினுடைய விரண்டர்த்தத்துக்கும் ப்ரதிகோடியாயிருக்கிறது. அதில் முந்தினவர்த்தத்துக்கிதி லிரண்டாமர்த்தம், அதிலிரண்டாமர்த்தத்துக்கிதில் முந்தினவர்த்தம். என்னசாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி யித்யாதிவாக்யத்வயமும் - க்ரமேண எம்பெருமானார் பூர்வாசார்ய நிர்வாஹத்வயாநுகுணம்.

கொந்தார் காயாவினித்யாரப்ய, எந்தாய்-வந்தாய்போலேதொடங்கி, இதுவேயிதுவாகில் - யானுன்னை யெங்குவந்தணுகிற்பன் இதிநிர்வாஹத்வயேப்யந்வடீ. " எங்கு " என்றது-பூர்வர்கள்நிர்வாஹே, க்ஷேபம்; பாஷ்யகாரநிர்வாஹே, ப்ரஶ்நம். அணுகிற்பன்-கிட்டவல்லேன்.......................................................*

# ஆறம்பாட்டு.

கிற்பன்கில்லேனென்றிலன்முனநாளா
லற்பசாரங்களவைசுவைத்தகன்றொழிந்தேன்
பற்பலாயிரமுயிர்செய்தபரமாநின்
நற்பொற்சோதித்தாணணுகுவதென்ஞான்றே.

## ஆறாயிரப்படி.

( கிற்பன் ) இதுக்கு முன்புள்ளகாலமெல்லா மூன்றிருவடிகளைச் சேருகைக்கீடாயிருப்பதொரு சுக்ருதத்தைச்செய்வோ மென்றுசெய்தல், அதுக்குவிரோதியான துஷ்க்ருதத்தைத்தவிருவோமென்று தவிர்தல்செய்திலேன் ; எடுத்தபடிசெய்துதிரிந்தேன். இப்படிசெய்து திரிந்தநிக்ஷுத்ரமானவிஷய ரஸத்தைபுஜித்து உன்றிருவடிகளைச் சேருகைக்காறனன்றிக்கே யகன்றுபோனேனென்று நசையற்றுப்போய்த் துவளப்புக்கவாறே பின்னையுமவனுடைய சர்வாத்மநிர்மாணநு குணநிரதிசயசக்தியோகத்தை யநுசந்தித்துப்போயுஜ்ஜீவித்து ; இந்தவபர்யந்தமான வாத்மாக்களெல்லாரையும் ஸ்ருஷ்டித்தருளின வுனக்கென்னையொருவனையுமுன்றிருவடிகளுக்கிடாம்படி பண்ணியருளுகை, ஒருபொருளோ, ஆனபின்புன்றிருவடிகளையென்றுநான் சேர்வதென்கிறார்.....................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம, அநாதிகாலம் விஷயப்ரவணனுயகன்றநான், எல்லாவற்றையும் நினைத்தபடிசெய்யவல்ல நிரவதிகசக்தியுக்தனுன வுன்னைக்கிட்டுவதென்றென்கிறுர்.

முனநாளால் - முற்காலமெல்லாம். கிற்பனென்றிலன் - " कुर्यात् " ( குர்யாத் ) என்று - நன்மைசெய்யவடுக்குமென்றுல் வல்லேனென்றிசைந்திலேன். கில்லேனென்றிலன் - " नकुर्यात् " ( நகுர்யாத் ) என்று - தீமைசெய்யலாகாதென்றுல்மாட்டேனென்றுதவிர்ந்திலன். இப்படிவிதிநிஷேதங்களுக்கு அவிஷயபூதனுய்க்கொண்டு, அற்பம் - அத்யல்பமான. சாரங்கள் - பசையையுடைத்தான. அவை-நாநாவித தர்விஷயங்களை. சுவைத்து-பசையுண்டாகப்ரமித்து-எதிர்ப்பசைகொடுத்துபுஜித்து. அகன்றொழிந்தேன்-அதடியாகதூரஸ்த்தனுய்விட்டேன். பற்பல-நாநாவிதமாய். ஆயிரம்-அஸங்க்யாதமான. உயிர்-ப்ராணிஜாதங்களை. செய்த - நினைத்தபடியுண்டாக்கவல்ல. பரமா-சக்திபாரம்யத்தையுடையவனே. நின்-வகுத்தஸ்வாமியானவுன்னுடைய. நல்-அப்ராக்ருதமாய். பொன்-அதிரமணீயமாய். சோதி - தேஜோமயமான. தாள் - திருவடிகளை. நணுகுவது - கிட்டுவது. எஞ்ஞான்று - எக்காலம்.

சக்திமானுன நீகிட்டுமதொழிய, என்னைப்பார்த்தால் கிட்டவிரகில்லையென்றுகருத்து.........................................................................*

---

## ஈடு - ஆறும்பாட்டு.

என்னைப்பார்த்தால் கிட்டவிரகில்லை, உன்னைப்பார்த்தால் தப்பவிரகில்லை ; ஆனபின்பு, நிரதிசயபோக்யமான வுன்திருவடிகளைக் கிட்டுவதென்றென்கிறுர். விதிநிஷேதங்களுக்கு வஶ்யனன்றிக்கே இதரவிஷயப்ரவணனுய்க் கைகழிந்துபோனநான் உன்திருவடிகளைக் கிட்டுவதென்றென்கிறுர்.

( கிற்பன்கில்லேனென்றிலன் ) " ஆழ்வீர், பகவத்விஷயத்தில்வந்தால் இச்சைக்குமேற்பட ஓராயாசமின்றிக்கே, பேற்றில்வந்தால் அபுநராவ்ருத்திலக்ஷண மோக்ஷமாயிருக்கும் ; அதுக்கிடாக ஒன்றைச்செய்யவல்லீரோ " என்றுல்; ஓம், அப்படிசெய்கிறேனென்றிலன். " இதரவிஷய ப்ராவண்யமாகிறது ஆயாசம்கனத்துப்பேற்றி லொன்றுமின்றிக்கேயிருப்பதொன்று, அத்தைத்தவிரவல்லீரோ " என்றுல் ; ஓம், தவிருகிறேனென்றிலன். இப்படிவிஹிதத்தைச் செய்யாமையும், அவிஹிதத்தைச் செய்கையுமென்று தொடங்கியென்ன ( முனநாளால் ) காலமெல்லாமெனக்கிதுவேயன்றோயாத்ரை.

இப்படிநெடுநாள்பட்ட, நம்மையொழியப்புறம்பேதுவக்கவல்லபடி போக்யபூதமான விஷயங்களுமுண்டாயிற்றோவென்னில். ( அற்பசாரங்கள் ( உன்பக்கல்வாராதபடி தகையவேண்டுவதுண்டு, அது நன்பக்கலிலா

ன்றில்லை. முள்ளிப்பூவில் ரசம்போலேதான் அல்பமாய், அவைதாம்பல வாய், தன்னுவில்பசைகொடுத்து புஜிக்கவேண்டும்படி யிருக்கிறவிஷயங் கள்தோறும் கால்தாழ்ந்து, சர்வசக்தியானதேவரை “ஓடினேன்” என்கிறபடியே கைகழியப்போனேன்.

நெடுநாளிப்படி நம்மைக்கைகழிந்தீராகில் நம்மையினிச்செய்யச் சொல்லுகிறதென்னென்ன (பற்பலாயிரமுயிர்செய்தபரமா) உயிர்செய் கையாவது - ஸ்த்திதிகமந சயநாதிகளுக்கு யோக்யமாம்படி சரீரத்தோ டே சம்பந்திப்பிக்கை. எண்ணிறந்தபதார்த்தங்களை யுண்டாக்கின சர்வா திகனே. இல்லாதவஸ்துவை யுண்டாக்கினவுனக்கு, உள்ளவஸ்துவுக்கொ ரு குணதாநம்பண்ணுகையரிதோ. (நின்னித்யாதி) உன்னுடைய, நன் ருய்ஸ்ப்ருஹணீயமாய் நிரவதிகதேஜோரூபமான திருவடிகளைநானென்று வந்துகிட்டக்கடவேன்......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு. (கிற்பனித்யாதி) தம்முடைய பூர்வாவஸ்த்தையையும், அவனுடைய ஸ்ருஷ்டியையும் சொல்லுகிறதுக்குப்ரயோஜந மருளிச்செய்யாநின்று கொண்டு, “நின்னற்பொற்சோதித்தாள் நணுகுவதென்ஞான்று” என்றத்தைக்க டாக்ஷித் தவதாரிகையை யருளிச்செய்கிருர் (என்னைப்பார்த்தாலித்யாதி) மேல்வா க்யவிவரணம் (விதிநிஷேதேத்யாதி)

“கிற்பன் - என்றிலன், கில்லேன்-என்றிலன்” என்றந்வயிப்பது - வல்லே னென்றிலன், மாட்டேனென்றில னென்றபடி. “கிற்பன்” இத்யாதிக்கர்த்தம் ஆழ்வீரித்யாதி) அதுக்கிடாக - மோக்ஷத்துக்கிடாக. ஒன்றை - இச்சையை. அத் வேஷாதிகளையாதல். (ஓமிதி) அங்கீகார ஸூசகமவ்யயம். இத்தால் - விஹிதாநு ஷ்ட்டாநமும் நிஷித்தாநுஷ்ட்டாநமும் பண்ணிப்போந்தேனென்றபடி.

தாத்பர்யம் (உன்பக்கலித்யாதி) அல்பதையை சநிதர்ஶநமாகவருளிச்செ ய்யாநின்றுகொண்டு, “சாரங்கள்” என்கிறபஹுவசநத்துக்கும், “சுவைத்தக ன்றொழிந்தேன்” என்கிறதுக்குமர்த்தம் (முள்ளிப்பூவிலித்யாதி) (தன்னுவிற்ப சைகொடுத்து) புஜிக்கிறதன்னுக்கிலீரத்தாலே யார்த்ரதையையுண்டாக்கி.

உயிர்செய்கை - சேதநஸ்ருஷ்டி:. நித்யமானவாத்மவஸ்துவைச் செய்கை யாவதென்னென்ன (உயிர்செய்கையாவதித்யாதி) சப்தார்த்தம் (எண்ணிறந்த வித்யாதி) பலிதம் (இல்லாதவித்யாதி) (குணதாநம்பண்ணுகையரிதோ) என் றுத்தர க்ரந்தமிருக்கையாலே, “ப்ரதிவசநப்ரகாரேணப்ரஶ்நார்த்தோவர்ணநீய:” (ப்ரதிவசநப்ரகாரேணப்ரஶ்நார்த்தோவர்ணநீய:) என்கிறந்யாயத்தா லே, நம்மையினிச்செய்யச் சொல்லுகிறதென்னென்ன வென்கிறப்ரஶ்நவாக்யத்தி லேயும் - இத:பரம் நம்மாலுஜ்ஜீவிப்பிக்கப் போமோவென்றபி ப்ராயங்கண்டுகொ ள்வது.

பற்பலாயிரமுயிர் செய்தபரமா - கிற்பன்கில்லே னித்யாரப்யாந்வய:. "ந ணுகுவதென்ஞான்றே" என்று - பாடமருளிச்செய்யும்படி. சாரம் - சாரம். முன நாள் - முற்காலமெல்லாம். ஆல் - ஐவ்யயம்..........................................*



# ஏழாம்பாட்டு.

எஞ்ஞான்றுநாமிருந்திருந்திரங்கிநெஞ்சே
மெய்ஞ்ஞானமின்றிவினையியல்பிறப்பழுந்தி
எஞ்ஞான்றுமெங்குமொழிவறநிறைந்துநின்ற
மெய்ஞ்ஞானச்சோதிக்கண்ணனைமேவுதுமே.

## ஆறாயிரப்படி.

(எஞ்ஞான்றும்) பகவத்ப்ராப்த்யுபாயமான தத்ஸ்வரூபரூபகுண விபூதி விஷயயாதாத்ம்ய ஜ்ஞாநஹீநராய், தத்ப்ராப்திவிரோதி சம்சாரத்திலே ப்ரவணருமாயிருப்பது; சர்வஜ்ஞனுகையாலே நம்முடையவிந்தவநர்ஹதையை யவனறிவது; எஞ்ஞான்று நாமிருந்திருந்தவனைக்காணவேணுமென்று வ்யஸநப்படுகை; அவனைக்காண்கைக்கு நமக்கெங்கேயுபகரண மென்கிறார்..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வ்யாப்தனானவன் சுலபனுனென்றால், ப்ராப்திசாதநமில்லாதார் புக்குக்கிட்டப்போமோ வென்கிறார்.

நெஞ்சே - நெஞ்சே. எஞ்ஞான்றும் - எப்போதும். இருந்திருந்து - இருந்திருந்து. இரங்கி - ப்ராப்யாகாங்க்ஷயாலே து:கித்து. மெய்ஞானம் - தத்சாதநமானதத்வஜ்ஞாநம். இன்றி - இன்றியே. வினை - தத்விரோதியானபாபத்தாலே. இயல் - ப்ரவ்ருத்தமான. பிறப்பு - ஜந்மங்களிலே. அழுந்தி - அழுந்தி. நாம் - இதுவேயாத்ரையானநாம். எஞ்ஞான்றும் - என்றுமொக்க. எங்கும் - எல்லாவஸ்துக்களிலும். ஒழிவற - ஒன்றுஞ்சோராதபடி. நிறைந்து - பரிபூர்ணமாகவ்யாபித்து. நின்ற - நின்ற. மெய்ஞானம் - நித்யஜ்ஞாநமான. சோதி - தேஜஸ்ஸையுடையனாய். கண்ணனை - ஆஸ்ரிதஸௌலப்யார்த்தமாகவந்தவதரித்தக்ருஷ்ணனை. மேவுதுமே - எக்காலங்கூடக்கடவோம்..........................................*



## ஈடு - ஏழாம்பாட்டு.

"நின்நற்பொற்சோதித்தாள்" என்று - திருவடிகளின் போக்யதையை யநுசந்தித்தவரறே, திருவுள்ளம்பதறத்தொடங்கிற்று; கெடுவாய் உன்படி ஆராயாதே நல்லத்தையாசைப்பட்டால் கிடைக்குமோவென்கிறார்.

(எஞ்ஞான்றித்யாதி) காலமெல்லாம் நாமிருந்து சிழகிச்சிழகிய முதாலென்னப்ரயோஜநமுண்டு. (நெஞ்சே) உன்னை நீயறியாயோ; இதுக்குமுன்பெல்லாம் பந்தஹேதுவாய்ப் போந்தாயல்லையோ. என்றுன், நமக்குப்பெறுகைக்குக்குறையென், அல்பாநுகூல்யமமையும் விஷயத்தைப்பெறவென்ன; இதுவன்றோ நம்முடைய பூர்வவ்ருத்தம்; மெய்ஞ்ஞானமில்லைகண்டாயே-" தஜ்ஞாநஜ்ஞாநமதோந்யதுக்தம் " (தத்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்) " வித்யாந்யாஶில்பநைபுணம் " (வித்யாந்யாஶில்பநைபுணம்) என்றுபுறம்பே சிலஜ்ஞாநமுண்டத்தனையல்லது சம்யக்ஜ்ஞாநமில்லைகண்டாயே.*ஆமாறறிவிலோமே.மெய்ஞ்ஞானமில்லாதவளவேயோ, பாபங்களிலே கொண்டுபோய் மூட்டக்கடவதான ஜந்மங்களிலே யழுந்திப்போரும்படி யாயன்றோநம்நிலை யிருக்கிறது. (எஞ்ஞான்றுமெங்கு மொழிவறநிறைந்துநின்ற) எல்லாக்காலத்திலும் எல்லாவஸ்துக்களிலுமொன்றும் பிறிகதிர்ப்படாமேகுறைவற வ்யாபித்துநின்ற.(மெய்ஞ்ஞானச்சோதிக்கண்ணனை) நம்நிலையறியாதா னொருவனைக் கிட்டப்பார்க்கிறோமோ. நித்யவஸ்துவாயிருக்கச்செய்தே ஜ்ஞாநசங்கோசவிகாஸார்ஹ மாகாநின்றதிறே இவ்வஸ்து, அங்ஙனன்றிக்கே, மெய்யான ஞானச்சோதியையுடைய க்ருஷ்ணனை; " ஏகோஹமஸ்மீதிசமந்யஸே " (ஏகோஹமஸ்மீதிசமந்யஸேத்வம்) என்னும்படியே. (நெஞ்சே-மெய்ஞ்ஞானச்சோதிக்கண்ணனைமேவுதுமே) " சுலபன் " என்னு, நம்மாலேகிட்டப்போமோவென்னுதல்; நிர்வாஹகனானவனை நம்மால்கிட்டப்போமோவென்னுதல். மெய்ஞ்ஞானச்சோதிக்கண்ணனை மேவுதுமே - நம்மாலேகிட்டப்போமோ;நெஞ்சே,மெய்ஞ்ஞானச்சோதிக்கண்ணனை-எஞ்ஞான்று-மேவுதுமென் றந்வயமாகவுமாம்.,.....................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (எஞ்ஞான்றுநாமித்யாதி) " எஞ்ஞான்று நாமிருந்திரங்கி-மேவுதும் " என்றத்தைக்கடாக்ஷித்து சங்காபரிஹாரரூபேணவதாரிகை (நின்நற்பொற்சோதியித்யாதி) " மெய்ஞ்ஞானமின்றி " இத்யாதியைப்பற்ற (கெடுவாயுன்படியித்யாதி)

சிழகி-விக்கி. சம்மோதிக்கிறவருடைய ஹார்த்தபாவம் (உன்னைநீயித்யாதி) " மித்ரபாவேந " (மித்ரபாவேந) இத்யாதியைப்பற்ற (அல்பாநுகூல்யமமையுமென்றது) " மெய்ஞ்ஞானமின்றி ) என்கையாலே-அல்பாநுகூல்யமுமில்லையென்றுகருத்து. "மெய்ஞ்ஞானம்" இதிவிசேஷண வ்யாவர்த்த்யந்தர்ஶயந்நர்த்தமாஹ (தத்ஜ்ஞாநமித்யாதி) ஸம்யக்ஜ்ஞாநாபாவமேவோபபாதயதி (ஆமாறறிவிலோமேயிதி (சப்தார்த்தகதநபூர்வகமாகதாத்யம் (மெய்ஞ்ஞானமில்லாதவித்யாதி) வினையியல்பிறப்பு - கர்மங்களிலே ப்ரவர்த்திப்பிக்கிறஜந்மம். இயலுகை - ப்ரவர்த்திப்பிக்கை. மூட்டுகையென்றபடி.

நாம்பண்ணினபாபமெல்லா மவனறிந்திருக்கிருனேவென்ன (எஞ்ஞான் றுமித்யாதி) ஒழிவற-ப்ரச்யுத்யபாவேந. பிறிகதிர்ப்படாமே - தப்பிப்போகாமே "மெய்" என்கிறவிசேஷணவ்யாவ்ருத்தி (நித்யவஸ்துவாயித்யாதி) இவ்வஸ்து-ஆத்மவஸ்து. எல்லார்படியுமறியு மென்னுமதுக்குப்ரமாணம் (ஏகோஹமித்யாதி)

"கண்ணனை" என்றதுக்கிரண்டர்த்தம் - சுலபனென்னுதல், நிர்வாஹக னென்னுதல். இந்தவிரண்டர்த்தத்தையு மருளிச்செய்கிருர் (சுலபனித்யாதிவாக்ய த்வயேந) பூர்வர்கள்நிர்வாஹத்திலே (நம்மாலேகிட்டப்போமோவென்று) ஏகார்த்தம் - பிரிநிலையிலே. கிட்டமாட்டோமென்றபடி. இந்தப்பக்ஷத்தில், "எஞ்ஞான்றும்" என்றதுக்கு - யதாந்வயம். எம்பெருமானர் நிர்வாஹத்துக்குச்சேரவர்த்தம் (நெஞ்சேமெய்ஞ்ஞானமித்யாதி) நெஞ்சேமெய்ஞ்ஞானமின்றி வினையியல்பிறப்பழுந்தி-நாமிருந்திருந்திரங்கி-எஞ்ஞான்று மெங்குமென்றதொடங்கி, கண்ணனை - எஞ்ஞான்று - மேவுதமே இத்யந்வய꞉; அஸ்மின்பக்ஷே, ஏகாரம் - ஈற்றசை. அவ்யயமித்யர்த்த꞉. மெய்ஞ்ஞானச்சோதி - நித்யஜ்ஞாநதேஜஸ்ஸையுடையவன்.

(தத்ஜ்ஞாநமித்யாதி) ஷஷ்டேம்ஶேபஞ்சமேமைத்ரேயம்ப்ரதிபராஶர꞉ "ஸஜ்ஞாயதேயேந" (ஸஜ்ஞாயதேயேந) இத்யாதிமஹாப்ரவேஶேலிகிதம். ப்ரதமேம்ஶேஏகோநவிம்ஶேத்யாயே, "தத்கர்மயந்நபந்தாய" (தத்கர்மயந்நபந்தாய) இத்யாத்யபி லிகிதந்தத்ரைவ. சம்பவபர்வணி அஷ்டத்ரிம்ஶேதஷ்யந்தம் ப்ரதிஶகுந்தலா, "ஏகோஹமஸ்மீதி சமந்யஸே த்வம் ந ஹ்ருச்சயம் வேத்ஸி முநிம் புராணம் । யோ வேதிதா கர்மண꞉ பாபகஸ்ய தஸ்யாந்திகே த்வம் வ்ருஜிநம் கரோஷி" (ஏகோஹமஸ்மீதிசமந்யஸேத்வம்நஹ்ருச்சயம்வேத்ஸிமுநிம்புராணம் | யோவேதிதாகர்மண꞉பாபகஸ்யதஸ்யாந்திகேத்வம்வ்ருஜிநம்கரோஷி...*



## எட்டாம்பாட்டு.

மேவுதுன்பவினைகளைவிடுத்துமிலே
னேவுதலின்றியுன்கழல்வணங்கிற்றிலேன்
ப்ாவுதொல்சீர்க்கண்ணவென்பரஞ்சுடரோ
கூவுகின்றேன்காண்பானெங்கெய்தக்கூவுவனே.

### ஆறுயிரப்படி.

(மேவு) கர்மயோகமாதல், பக்தியோகமாதல், ஜ்ஞாநயோகமாதலொன்றும் செய்கிறிலேன்; செய்யாதிருந்துவைத்து, சௌசீல்யவாத்ஸல்ய காருண்யாத்யசங்க்யேய திவ்யாத்மகுணங்களாலும் நிரதிசயௌஜ்ஜ்வல்யசௌந்தர்யசௌகந்த்யாத்யசங்க்யேயதிவ்யரூபகுணங்களாலும் பரிபூர்ணனுயிருந்த வுன்னைக்காணவேணு மென்றென்று கூப்பிடாநின்றேன்; இப்படிகூப்பிடுமுன்னைக்காண்கைக் கெங்கேகார்யகரமாகிறதென்கிருர்............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சௌலப்யகாரிதமான குணவிக்ரஹௌஜ்ஜ்வல்யத்தை யநுசந்தித்து, நிஸ்ஸாதநனானானெங்கே காணக்கூப்பிடுவதென்கிறார்.

மேவுதுன்பம் - அவிநாபூததுஃகத்தையுடைத்தான. வினைகளை - பாபங்களை. விடுத்துமிலேன் - தந்நிவர்த்தகமான *தபோஜ்ஞாநசமாதிகளாலே போக்குவதுஞ்செய்கிலேன். ஓவுதலின்றி - நிரந்தரமாக. உன் - ப்ராப்தனானவுன். கழல் - திருவடிகளை. வணங்கிற்றிலேன் - * வணக்குடைத்தவநெறியாலேவணங்குவதுஞ்செய்திலேன். பாவு-எங்குமொக்கப்பரம்பி. தொல் - ஸ்வாபாவிகமான. சீர் -ரக்ஷணைகாந்தகுணங்களையுடைய. கண்ணா - க்ருஷ்ணனாய், என் - எனக்காஸாஜநகமான. பரஞ்சுடரே - நிரவதிகதேஜோரூபமானவனே. காண்பான் - காணவேணுமென்று. கூவுகின்றேன் - சாதநாநுஷ்டாநம்பண்ணி யிழந்தார்கூப்பிடுமாபோலே யழைத்துக்கூப்பிடாநின்றேன். எங்கு - எங்கே. எய்த - கிட்டுவதாக. கூவுவன் - கூப்பிடுவேன்...........................................................................*

---

## ஈடு-எட்டாம்பாட்டு.

சாதநாநுஷ்டாநம்பண்ணினார் பலம்தாழ்த்துக் கூப்பிடக்கடவ கூப்பீட்டை, பேற்றுக்கிடாயிருப்பதொரு கைம்முதலில்லாத நானெங்கேவந்து கிட்டக்கூப்பிடுகிறேனென்கிறார்.

(மேவு) "திலதைலவத்தாருவஹ்நிவத்" (திலதைலவத்தாருவஹ்நிவத்) என்கிறபடியே யிவ்வாத்மாவொடு பிரிக்கவொண்ணாதபடியிருப்பதாய், துஃகத்தைவிளைப்பதா யிருக்கிறபாபங்களை, "தர்மேணபாபமபநுததி" (தர்மேணபாபமபநுததி) என்கிறபடியே விஹிதகர்மாநுஷ்டாநத்தாலே போக்கிற்றிலேன்.

(ஓவுதலின்றியுன்கழல்வணங்கிற்றிலேன்) "நிதித்யாஸிதவ்ய:" (நிதித்யாஸிதவ்ய:) என்கிறபடியேஅநவரதபாவனைபண்ணி உன்னைசாக்ஷாத்கரிக்க விரகுபார்த்திலேன். "ஓவுதலின்றி - மேவுதுன்பவினைகளை விடுத்துமிலேன், ஓவுதலின்றி - உன்கழல் வணங்கிற்றிலேன்" என்று எம்பாரருளிச்செய்யும்படி. "கண்ணாலப்பெண்டாட்டிக்குண்ணவவசரமில்லை" என்னுமாபோலே, இந்த்ரியங்களுக்கிரையிட்டுத் திரிந்தேனித்தனை; எனக்கொன்றும் ஹிதம்பார்த்திலேன்.

(பாவுதொல்சீர்க்கண்ணா) இங்ஙனேயிருக்க, உன்னையநுசந்தித்தவாறே விடமாட்டுகிறிலேன். "விதித:" (விதித:) என்கிறபடியே, உகவாதார்கோஷ்டியிலும் ப்ரசித்தமான ஸ்வாபாவிககல்யாணகுணங்களை யுடையக்ருஷ்ணனே, (என்பரஞ்சுடரே) சர்வப்ரகாரத்தாலுமுண்டான உத்கர்ஷத்தை யெனக்கறிவித்தவனே. (கண்ணாவென்பரஞ்சுடரே) தாழநின்று இவ்வடிவழகையெனக்கு முற்றூட்டாக்கினவனேயென்றுமாம். ("பரஞ்சுடருடம்பாய்" என்னக்கடவதிறே.) (கூவுகின்

றேன்காண்பான் ) சாதநாநுஷ்ட்டாநம்பண்ணி பலம்கைப்புகுந்தார் கூப்பிடுமாபோலே, காணவேணுமென்று கூப்பிடாநின்றேன்.

( எங்கெய்தக்கூவுவனே ) "ஒருகோசுகுகூப்பிட்டது" என்று ப்ரஹ்மாவினுலகத்திலே கேட்கப்புகுகிறதோ, எங்ஙனேவந்து கேட்கக் கூப்பிடுகிறேன்........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( மேவுதுன்பமித்யாதி ) பூர்வார்த்தத்தையும், "கூவுகின்றேன் காண்பான் எங்கெய்தக்கூவுவன்" என்றத்தையும்கடாக்ஷித்தவதாரிகை ( சாதநாநுஷ்ட்டாநமித்யாதி ) கைம்முதல் - சாதநம்.

மேவு - அவிநாபூதமாய்ப் பொருந்திவர்த்திக்கிற. ஆத்மாவோடே பொருந்தியிருக்குமதுக்குப்ரமாணம் ( திலதைலவதித்யாதி ) கத்யத்ரயே. இதம் - ப்ரக்ருத்யாத்மவிஷயமபி, துர்விவேசத்வே த்ருஷ்டாந்ததயோக்தம். துன்பவினை - துःக்கத்தையுண்டாக்குகிறவினை. தர்மாசரணம் பாபநிவர்த்தகமென்கைக்கு ப்ரமாணம் ( தர்மேணேத்யாதி ) இயம்ஶ்ருதிஃ தைத்திரீயகே. பாபங்களை - நிஷித்தகாம்யகர்மங்களை. விஹிதகர்மாநுஷ்ட்டாநத்தாலே - பலாபிசந்திரஹித கர்மாநுஷ்ட்டாநத்தாலே.

( ஓவுதலின்றியிதி ) நிரந்தரமாக வுன்றிருவடிகளை * வணக்குடைத்தவநெறியாலே வணங்குவதுசெய்திலேன். கர்மபக்தியோக ராஹித்யஞ்சொன்னது - ஜ்ஞாநயோகராஹித்யத்துக்கு முபலக்ஷணம், ஸந்தம்ஶய்யாயத்தாலே. யோஜநாந்தரம் ( ஓவுதலின்றியித்யாதி ) ஓவாதே - விச்சேதியாதே, பொருந்தியிருக்கிற துःக்காவஹபாபங்களைப்போக்கிற்றிலேன் என்றுசப்தார்த்தம். சர்வதா இந்த்ரியவஶ்யனுயே யிருந்தேனென்றபடி. தேனைவஹேதுநா சாதநாநுஷ்ட்டாநா க்ஷமஶ்சாஸமித்யர்த்தஃ. அமுமேவார்த்தமாஹ ( கண்ணுலப்பெண்டாட்டிக்கித்யாதி ) யத்வா வ்யதிரேகத்தால்பலிதம் ( கண்ணுலமித்யாதி ) "ஓவுதலின்றி" என்றது - "மேவு" என்றதுக்கு விசேஷணமாதல், * வினைகளுக்கு விசேஷணமாதல். இரை - ஆஹாரம்.

பாவுதல் - பரம்புதல். கீழேகடாக்ஷித்துபாவம் ( இங்ஙனேயித்யாதி ) சப்தார்த்தம் ( விதிதஇத்யாதி ) "விதிதஸ்ஸஹிதர்மஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸலஃ । தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி" ( விதிதஸ்ஸஹிதர்மஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸலஃ । தேநமைத்ரீபவதுதேயதிஜீவிதுமிச்சஸி ) இதிசுந்தரகாண்டே ராவணம்ப்ரதிசீதா. "பரஞ்சுடர்" என்றதுக்கிரண்டர்த்தம் - சர்வப்ரகாரோத்கர்ஷமாதல், வடிவழகாதல்; த்விதியார்த்தத்தில் "கண்ணு" என்றத்தைக்கூட்டிபாவம் ( தாழநின்றித்யாதி ) முற்றூட்டாக்கினவன் - பூர்ணபோஜநமாக்கினவன்.

"எங்கெய்தக்கூவுவன்" என்றவிடத்திலே - "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ । ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்"

( தர்மஸ்யபலமிச்சந்திதர்மம்நேச்சந்திமாநவா:। பலம்நேச்சந்திபாபஸ்யபாபமேவாசரந்திச ) என்றதநுசந்தேயம்.

பாவுதொல் சீர்க்கண்ணுவென் பரஞ்சுடரே - மேவுதன்ப மித்யாரப்யாந்வய:...........................................................................................*

## ஒன்பதாம்பாட்டு.

கூவிக்கூவிக்கொடுவினைத்தூற்றுணின்று
பாவியேன்பலகாலம்வழிதிகைத்தலமருகின்றேன்
மேவியன்றுநிரைகாத்தவனுலகமெல்லாந்
தாவியவம்மானையெங்கினித்தலைப்பெய்வனே.

## ஆறாயிரப்படி.

(கூவிக்கூவி) அசக்யநிஷ்க்ரமணமாய் நிரதிசயதுஃகாஸ்பதமாயிருந்தகொடுவினைத்தூற்றுள்ளேநின்று பாவியேன் பலகாலும் கூவிக்கூவி, எம்பெருமான்திருவடிகளிற்சென்று சேர்வழியறியாதே திகைத்தலமருகின்றேன்; திருவாய்ப்பாடியிலே சர்வஸுலபனாய்க்கொண்டு வர்த்தித்தருளினவன் திருவடிகளைச்சேரமாட்டிற்றிலேன்; அன்றொருதேசவிசேஷத்திலே வர்த்திக்கையாலே சேரப்பெறுதொழியவும் சம்பவிக்குமன்றோவென்னில்; சர்வதேசவர்த்திகளான சர்வாத்மாக்களும் தன்திருவடிகளினுள்ளேயகப்படும்படியுலகமெல்லாந்தாவியருளினவன்று உன்திருவடிகளைச்சேரப்பெற்றிலேன். அன்று சேரப்பெறுதநானென்று சேரவிருக்கிறேன், சேராதொழியி லிவ்வாத்மாமுடிகை நிஸ்சிதம். இனி அவனுடைய விஸ்வரத்வம் விகலமாகவாகாதே புகுகிறது, இனி யாத்மாவதிகமாக அவன்திருவடிகளைச்சேருகையென்றொரு பொருளில்லையென்று நசையற்றுக்கூப்பிடுகிறார். ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அறிவில்லாதாரோடு அறிவுடையாரோடு வாசியறும்படியுபகரித்த வுபகாரத்துக்குத் தப்பினநான் கிட்டுவதெங்கேயென்கிறார்.

கொடு-க்ரூரமான. வினை-பாபங்களுக்காகரமாய். தூற்றுள்-புக்காற்புறப்படவொண்ணாத சம்சாரமாகிறதூற்றிலகப்பட்டு. நின்று-நின்று. பலகாலம்-அநேககாலம். புறப்பட, வழி-வழி. திகைத்து-அறியாதேப்ரமித்து. அலமருகின்றேன்-அதுக்குள்ளேயலமராநிற்கிற. பாவியேன்-மஹாபாபியானநான். அன்று-கோபவ்ருத்தர்கள் பசுமேய்க்கக்கோலைக்கொடுத்தவன்று. மேவி - கார்யப்பாடாகவன்றியே நெஞ்சுபொருந்தி. ஆநிரை-பசுக்களை. காத்தவன்-ரக்ஷித்தவனாய். உலகமெல்லாம்-இப்படிப்ராதேஶிகமன்றியே சர்வலோகவிஷயமான. தாவிய-த்ரிவிக்ரமாபதாந

த்தையுடைய. அம்மானை-சர்வஸ்வாமியை. இனி-அன்றைக்குத்தப்பினபின்பு. கூவிக்கூவி-ஆர்த்தியாலே பலகாலும் கூப்பிட்டுக்கூப்பிட்டு. எங்கு-எங்கே. தலைப்பெய்வன்-கிட்டுவேன்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

## ஈடு-ஒன்பதாம்பாட்டு.

வரையாதே யெல்லார்க்குமொக்க முகங்கொடுத்த அவதாரங்களுக்குத்தப்பினநான் இனியுன்னைக் கிட்டுகையென்றொரு பொருளுண்டோவென்று நிராசராகிறார்.

(கூவி) ஸ்வரூபஜ்ஞாநத்தாலே ஆறியிருக்கமாட்டாதே சம்சாரத்திலேயிருந்து கூப்பிடாநிற்பர். (கூவி) ஒருகால் கூப்பிட்டறுதயித்து மீளுமதன்றிக்கே மேன்மேலனக்கூப்பிடாநிற்பர். (கொடுவினைத்தூற்றுள்நின்று) கூப்பீடுகேட்டிரங்கி யெடுப்பதாக ஈஶ்வரன்கைநீட்டினால், நீட்டினகைவாங்கவொண்ணாத நிலத்திலே யிருந்தாயிற்றுக்கூப்பிடுவது. (பாவியேன்) ஒருவால்மீகிபரிசரத்திலேயிருந்து தான்கூப்பிடப்பெற்றேனோ. (பலகாலம் வழிதிகைத்தலமருகின்றேன்) காலமெல்லா மறிவுகெட்டுத்தடுமாறுகிறநான். (மேவியித்யாதி) ஆபத்துக்குதவாதவனாய்த்தான் படுகிறேனோ. "கோகோபீஜநஸங்குலம்।அதீவார்த்தம்" (கோகோபீஜநஸங்குலம்।அதீவார்த்தம்) என்கிறபடியே-நோவுபட்டவன்று ஒருபசுவின்மேலே ஓரிடையன்மேலே ஒருதுளி விழாதபடி தோற்றிற்றொருமலையையெடுத்துபகரித்தவனை (மேவி) நித்யசூரிகளுக்கு நிர்வாஹகனானதன்கையிலேகோலைத்தந்து "பசுமேய்" என்றால், "ரக்ஷகனானமக்கு விஹிதமிறே" என்றிருக்கையன்றிக்கே அலப்யலாபமாகப்பொருந்தி. (அன்று) அதுவுமொருகாலமே. (வழிதிகைத்தலமருகின்றேன் - மேவியன்றுநிரைகாத்தவன்) காட்டிலேவழிதிகைத்தார்க்கு இடையர்போலேகாணும் வழிகாட்டுவார். ("மாமேகம்ஶரணம்வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்றுவழிகாட்டினவனிறே, வேறுவழிகாட்டினாரில்லையே. திருத்தேர்த்தட்டிலேநின்று சகலாத்மாக்களு முஜ்ஜீவிக்கும்படி வழிகாட்டினனவனிறே.) (உலகமித்யாதி) ஒருூர்க்குதவினவளவன்றிக்கே, சகலபதார்த்தங்களிலு மொன்றும் பிறிகதிர்ப்படாதபடி யெல்லார்தலைகளிலுமொக்கத் திருவடிகளைவைத்து, "தான்ஸ்வாமி" என்னுமிடத்தைஅறிவித்தவனை. (எங்கினித்தலைப்பெய்வனே) எங்ஙனேகிட்டப்போகிறேன். அந்ததுளிதாநத்துக்கும் தப்பினநான் பரீக்ஷைசொல்லிப்பெறப்புகுகிறேனோ. இத்தால்-அவன்றானேவந்துபகரித்தவன்று தப்பினநான் சாதநாநுஷ்டாநம்பண்ணி யெங்கேசென்று கிட்டப்புகுகிறேனோவென்று நசையறுகிறார்...*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (கூவியித்யாதி) த்விதீயத்ருதீயகாதைகளிற்சொன்ன வாமந க்ருஷ்ணவதாரங்களை யநுவதித்துக்கொண்டு நிராசராகிறுரிப்பாட்டிலென்கிறுர் (வளையாதேயித்யாதி) நிராசராகிறுரென்றது - "எங்கினித்தலைப்பெய்வன்" என்றத்தைப்பற்ற.

"தததஸ்யஸத்ருஸம்பவெத்" (தத்தஸ்யஸத்ருஸம்பவேத்) என்றிராதே கூப்பிடுவானென்னென்கிற சங்கையையும் பரிஹரித்துக்கொண்டர்த்தம் (ஸ்வரூபஜ்ஞாநேத்யாதி) ப்ராப்யத்வராதிசயாதிதிபாவஃ. "கொடுவினைத்தூற்றுள்நின்று - கூவி" என்றந்வயம் விவக்ஷிதமிவ்வாக்யத்தில். சம்சாரமாகிற பெருந்தூறென்றபடி. வீப்ஸைக்குபாவம் (ஒருகாலித்யாதி) அநுதபித்து- ஸ்வரூபவிரோதாநுசந்தாநத்தாலிதிபாவஃ. "கொடுவினை" இத்யாதிக்கு- க்ரூரமானபாபங்களுக்காகரமாய், புக்கால்புறப்படவொண்ணுத சம்சாரமாகிறதூற்றிலே யகப்பட்டுநின்றென்று சப்தார்த்தம். (கூப்பீடுகேட்டிரங்கியிதி) "ராஜ்யாத்ப்ரம்ஸோவநேவாஸஃ" (ராஜ்யாத்ப்ரம்ஸோவநேவாஸஃ) இத்யாதி.

"தூற்றுள்நின்று - கூவிக்கூவி" என்றபதத்தைக்கடாக்ஷித்து, "பாவியேன்" என்றதுக்குபாவம் (ஒருவால்மீகியித்யாதி) வால்மீக்யாஸ்ரமசமீப வர்த்தநத்தால் பிராட்டிக்கப்போதேக்லேசம்போயிற்றிறேயென்றபடி. இங்குபாபமாவது - தார்மிகபரிசராலாபம். வழிதிகைத்து - புறப்பட வழியறியாதேப்ரமித்து. தாத்பர்யார்த்தம் (அறிவுகெட்டென்று)

இவ்வபதாநத்தைச் சொல்லுகிறவருடைய ஹார்த்தபாவம் (ஆபத்துக்கித்யாதி) "காத்தவன்" என்றதுக்கிரண்டர்த்தம்-ரக்ஷித்தானென்னுதல், மேய்த்தானென்னுதல். "மேவி" என்றதுக்குமிரண்டர்த்தம் - சாவதாநமாகவென்னுதல், ஸ்வப்ரயோஜநமாக வென்னுதல். ப்ரதமார்த்தம் (கோகோபீத்யாதி) அன்று - ஆபத்தசையிலே. த்விதீயார்த்தம் (நித்யசூரிகளுக்கித்யாதி) "அன்று - என்றதுக்குபாவம் (அதுவுமித்யாதி) ஆபத்திலே யுதவியவன்றுனே ரக்ஷித்ததுமொருகாலமேயென்றபடி. பதச்சேர்த்திக்கு ரசோக்தியாகபாவம் (காட்டிலேயித்யாதி) அப்படிவழிகாட்டினுனேவிவனென்ன (மாமேகமித்யாதி) அது அர்ஜுநனுக்கன்றுே, எல்லார்க்குமில்லையேயென்ன, "பார்த்தம்ப்ரபந்நமுத்திஸ்யஸாஸ்த்ராவதரணம்க்ருதம்" (பார்த்தம்ப்ரபந்நமுத்திஸ்யஸாஸ்த்ராவதரணம்க்ருதம்) என்கிறத்தையுட்கொண்டு, எல்லார்க்குமுஜ்ஜீவிக்க வழிகாட்டினவனிவனென்கிறுர் (திருத்தேரித்யாதி) "மாமேகமித்யாதிவாக்யத்ரயம் - அத்ரப்ரக்ஷிப்தம்" என்றும்சொல்லுவர்கள். அப்போது, காட்டிலேயித்யாதிவாக்யத்துக்கு - "இத்தால் - சம்சாரத்திலே ப்ரமிக்கிறவர்களுக்கு சரமஸ்லோகத்தைக்காட்டி ரக்ஷிக்குமவனென்றுபாவம்" என்றருளிச்செய்வர். "உலகமெல்லாம்" இதயாதிக்கர்த்தம் (ஒரூர்க்கித்யாதி)

(அந்ததூளிதாநமித்யாதி) ரசோக்திஃ. தூளிதாநம் - பூரிதாநமிதித்வநிஃ; ஸ்ரீபாததூளிதாந மிதிஸ்வபாவார்த்தஃ. பரீக்ஷையென்றதுக்கு - சாதநாநுஷ்டாநமென்று ஸ்வபாவார்த்தம்; வேதசாஸ்த்ராதி பரீக்ஷேதித்வநிஃ. ரசோக்தியா

லேசொன்னத்தை ஸ்வபாவோக்தியாலே யருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி) நசை - ஆசை. தலைப்பெய்கை - கிட்டுகை.

" ததஸ்தத்கோகுலம்ஸர்வம்கோகோபீஜநஸங்குலம் । அதீவார்த்தம்ஹரிர்த்ருஷ்ட்வா மைத்ரேயாசிந்தயத்ததா" (ததஸ்தத்கோகுலம்ஸர்வம்கோகோபீஜநஸங்குலம் । அதீவார்த்தம்ஹரிர்த்ருஷ்ட்வா மைத்ரேயாசிந்தயத்ததா ) க்ரமேணாந்வயঃ......*

## பத்தாம்பாட்டு.

தலைப்பெய்காலநமன்றமர்பாசம்விட்டா
லலைப்பூணுண்ணுமவ்வல்லலெல்லாமகலக்
கலைப்பல்ஞானத்தென்கண்ணனைக்கண்டுகொண்டு
நிலைப்பெற்றென்னெஞ்சம்பெற்றதுநீடுயிரே.

### ஆறாயிரப்படி.

(தலைப்பெய்காலம்) உத்க்ராந்திவ்யஸநம்போலே அதிகோரமாய் அதிதுஸ்ஸஹமாயிருந்தவென்னுடைய அந்தபகவத்விஶ்லேஷ ஜநிதநிரவதிகவ்யஸநமும், " அவனுடையசர்வேஶ்வரத்வத்துக்கு வைகல்யம்வருகிறது " என்றுள்ளமஹாபயமும் நிஶ்ஶேஷமாகவெல்லாம்போய், என்னுடையவாத்மாவும் நித்யமாம்படி, சாஸ்த்ரைகசமதிகம்யனான வெம்பெருமானைத் திருமலையிலே கண்ணாலேகாணப்பெற்றேனென்கிறார்.........*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், " எங்கினித்தலைப்பெய்வன் " என்கிறநைராஶ்யத்தைக்கண்டு க்ருஷ்ணன்தான் பிற்பாடர்க்குதவும்படி ப்ரமாணசித்தமான ஆஸத்தியைப்ரகாசிப்பிக்க, அத்தாலேக்லேஶநிவ்ருத்திபிறந்து சந்துஷ்டராகிறார்.

நமன்றமர் - நமன்றமர். தலைப்பெய்காலம் - தலைப்படுங்காலம். பாசம் - பாசத்தை. விட்டால் - வீசினால். அலைப்பூண் - அவர்களாலலைக்கப்படுகையை. உண்ணும் - அநுபவிக்குமாபோலேவிரோதிதர்ஶநத்தால்வந்த. அ - அந்த. அல்லலெல்லாம் - து:கமெல்லாம். அகல - விட்டுப்போம்படியாக. பல் - பலவகைப்பட்ட. கலை - வேதங்களாலே. ஞானம் - அறியப்பட்டு. என் - எனக்குசுலபனான. கண்ணனை - க்ருஷ்ணனை. கண்டுகொண்டு - கண்டுகொண்டு. என்னெஞ்சம். சிதிலமானவென்னெஞ்சு. நிலை - ஸ்த்தைர்யத்தை. பெற்று - பெற்று. உயிர் - ஆர்த்தியாலேமுடியப்புக்கவாத்மாவும். நீடு - நித்யதையை. பெற்றது - பெற்றது............

## ஈடு - பத்தாம்பாட்டு.

இவர்நசையற்றவாறே "க்ரமப்ராப்தியற்றுதுபோலேயிருந்தது" என்று "நீரொருபெருவிடாயருண்டு' என்றறிந்துஉமக்காகவன்றோ வடக்குத்திருமலையிலே நிற்கிறது" என்று அந்நிலையைக்காட்டித் தரிப்பிக்கத் தரித்தினியராகிறார்.

(தலைப்பெய்காலநமன்றமர்) தலைப்பெய்காலம் - யமபடர்வந்து கிட்டுங்காலம். இவன்ஜீவிக்கும்நாள் ("நமக்கெதிருண்டோ" என்று மூலையடியேநின்று வேண்டிற்றுச்செய்துதிரியும்; நமன்றமர், நாடோறும்) செய்தகுற்றங்களுக்குப் பட்டோலையெழுதி, பலாநுபவசமயத்திலேவந்து முகங்காட்டுவர்கள். (பாசம்விட்டால்) அவர்கள் தங்கள்கையில் பாசத்தைவீசினால். (அலைப்பூணுண்ணும்) இவனுக்கிவ்வருகே நசைகிடக்கைபாலே அதிங்கேயிசிக்க, அவர்களங்கேயிசிக்க, படும்க்லேசத்துக் கோரவதியில்லையிறே. "அவ்வல்லல்" என்னுமித்தனை, த்ருஷ்டாந்தமில்லை. அதெல்லாம்காணக்காண விட்டுக்கடக்கநிற்க. "அத்தோடுஸஜாதீயமானவல்லல்" என்று எம்பாரருளிச்செய்வது - அவ்வோபாதிக்லேசம் போருமாயிற்று பகவத்விஶ்லேஷத்தால் வருமதிவர்க்கு. அன்றிக்கே, "பகவதலாபமேயானபின்பு யமவஸ்யதையும்வந்ததேயன்றோவென்று அந்தயமவஸ்யதைபோம்படியாக" என்றுண்டான் நிர்வஹிக்கும்படி. (கலையித்யாதி) "வெ௫ெஃஸஃவெ௵ஹமெவவெஃ்யஃ" (வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்யஃ) என்கிறபடியே, பலகலைகளாலுமறியப்பட்ட உத்கர்ஷத்தையுடையனை யிருந்துவைத்து, நெடுங்கைநீட்டாக ப்ரமாணங்களிலே கேட்டுப்போகாதபடி கண்ணுக்குவிஷயமாகக் ருஷ்ணனாய் வந்தவதரித்தவனைக் கண்டுகொண்டு. (நிலைப்பெற்றென்னெஞ்சம்) "சிந்தாமற்செய்யாய்" என்றநெஞ்சுமொருபடி தரிக்கப்பெற்றது.

(உயிர்-நீடு-பெற்றது) * அச்சேத்யமாய் அதாஹ்யமாயிருக்கிறஆத்மவஸ்துவு மழியப்புக்கதிப்போதாயிற்று நித்யத்வம்பெற்றது. நித்யமான ஆத்மவஸ்துவுக்குநாசமாவது- தாஸ்யாசித்தி. "ஸெஃ்ாதிவிஸஜாதீயஃ" (சேத்யாதிவிஸஜாதீயம்) என்றவித்தனைபோக்கி, தன்னில்சூக்ஷ்மமாய்ப்புக்கு வ்யாபித்தழிக்கவல்ல பகவத்குணங்களுக்கழியாமையில்லையிறே, சேஷவஸ்துவுக்கு சேஷத்வம் நிரூபகமானால், நிரூபகத்தையொழிய நிரூப்யசித்தியில்லையே.........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (தலைப்பெயித்யாதி) நசையற்றவாறேயென்றது - "எங்கினித்தலைப்பெய்வன்" என்றத்தைப்பற்ற. பற்றுது - பொறுது. "கண்ணனைக்

கண்டுகொண்டு" என்றத்தைப்பற்ற (அங்கிலையைக்காட்டியித்யாதி) இனியரா ருர் - ப்ரீதராகிருர்.

"தலைப்பெய்காலம்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (இவன்ஜீவிக்குமித்யாதி) நமன்றமர் - தலைப்பெய்காலம் - நமன்றமர்பாசம்விட்டால், இதிகாகாக்ஷிந்யாயேநோபயத்ராந்வேதவ்ய:.

அலைப்பு - அலைதல். ஊண் - அதாகிறவூண். உண்ணும் - அநுபவிக்கும். அவ்வல்லலெல்லாம் - அந்ததுக்கமெல்லாம். அவர்களாலலைக்கப்படுகையை யநுபவிக்குமந்த துக்கமெல்லாமென்று சப்தார்த்தம். அது - நகை. இசிக்க - இழுக்க. (இவனுக்கிவ்வருகே நகைகிடக்கையாலேயிதி) அத்ர - "[Grantha] " (புத்ராதய:கதமமீமயிஸம்ஸ்திதேஸ்யு:) இத்யநுசந்தேயம். தச்சப்ததாத்பர்யம் (இவ்வல்லலித்யாதி) "[Grantha]" (நகலுபாகவதாயமவிஷயம்கச்சந்தி) என்றிருக்க, வைஷ்ணவனுக்கு யமவஶ்யதையுண்டாகக் கூடுமோவென்ன; த்வேதாபரிஹரிக்கிருர் (அத்தோஸஜாதீயேத்யாதிநா, அன்றிக்கேயித்யாதிநாச) விவரணம் (அவ்வோபாதியித்யாதி) அவ்வோபாதி - யமவஶ்யதையோபாதி. ஆண்டான் நிர்வாஹத்துக்குக்கருத்து - ஸ்வதந்த்ரனுன வீஶ்வரனுபேக்ஷித்தால் யமவஶ்யதையுண்டாமென்று; நித்யசூரிகளோபாதி நித்யாநுபவயோக்யதை யுண்டாயிருக்கவிஶ்லேஷம் கூடினுப்போலே, இதுஸ்ரீபரதாழ்வான் பக்கலிலேகண்டதிறே.

(கலைகளாலுமறியப்பட்டவிதி) ஜ்ஞாயதஇதி-ஜ்ஞாநமென்ருய், அறியப்பட்டவென்றபடி. நெடுங்கைநீட்டாக - அதிதூரமாக.

"உயிர்நீடுபெற்றது" என்றதுக்கிரண்டுபாவம். முந்தினது (அச்சேத்யமாயித்யர்தி) இரண்டாவது (நித்யமானவித்யாதி) முந்தினவர்த்தத்திலே (இப்போதாயிற்று நித்யத்வம்பெற்றது) என்கைக்கு, அச்சேத்யமானவாத்மவஸ்துவுக் கழிவுண்டோவென்ன (சேத்யாதித்யாதி) த்விதீயார்த்தத்திலே, தாஸ்யாசித்திவிநாசமானபடியென்னென்ன (சேஷவஸ்துவுக்கித்யாதி)

நமன்றமர்-தலைப்பெய்காலம் - நமன்றமர்ப்பாசம்விட்டாலித்யாரப்ய, கண்டுகொண்டு-என்னெஞ்சம்-நிலைப்பெற்று-உயிர்-நீடு-பெற்றதித்யந்வய:. நிலை - ஸ்தைர்யம். நீடு-நித்யத்வம். பெற்று-கடைக்குறைத்தல், பெற்றது. கீதாஸூபஞ்சதஶே, "[Grantha] ॥ [Grantha]" (ஸர்வஸ்யசாஹம்ஹ்ருதிஸந்நிவிஷ்டோமத்தஸ் ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச । வேதைஶ்சஸர்வைரஹமேவ வேத்யோவேதாந்தக்ருத்வேதவிதேவசாஹம்) தத்ரைவத்விதீயே, "[Grantha] । [Grantha]" (அச்சேத்யோயமதாஹ்யோய மக்லேத்யோஶோஷ்யஏவச । நித்யஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம்ஸநாதந:... ...*

# பதினொன்றாம்பாட்டு.

உயிர்களெல்லாவுலகமுமுடையவனைக்
குயில்கொள்சோலைத்தென்குருகூர்ச்சடகோபன்
செயிரில்சொல்லிசைமாலையாயிரத்துளிப்பத்து
முயிரின்மேலாக்கையூனிடையொழிவிக்குமே.

## ஆறாயிரப்படி.

(உயிர்கள்) இப்படியாழ்வாருளராகையாலே யெம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வமுமவிகலமாய், திருநகரியுமடங்க ஸம்ருத்தியாயிற்றென்கிறது (உயிர்களெல்லாவுலகமுமுடையவனைக் குயில்கொள்சோலைத்தென்குருகூர்) என்கிறவிடம். இனிமேல் இத்திருவாய்மொழி பகவதநுபவவிரோதியான ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்குமென்கிறது...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக,தாமபேக்ஷித்த சரீரஸம்பந்த நிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

எல்லாவுயிர்கள் - எல்லாவுயிர்களையும். எல்லாவுலகமும் - எல்லாலோகங்களையும். உடையவனை-உடையவனை. குயில்கொள்-குயில்களையுடைத்தான. சோலை-சோலைகளையுடைய. தென்-அழகிய. குருகூர்ச்சடகோபன்- திருநகரிக்குநிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த. செயிர்-லக்ஷணக்குறை. இல்-அற்ற. சொல் - சொல்லையுடைத்தாய். இசை-இசையோடுங்கூடின. மாலை-தொடையையுடைத்தான. ஆயிரத்துள்-ஆயிரத்துள். இப்பத்தும்-இப்பத்தும். உயிரின்மேல்-ஆத்மாவுக்குவந்தேறியாய்பந்தகமான. ஊனுக்கையிடை-மாம்ஸாதிமயசரீரத்தினிடைநின்றும். ஒழிவிக்கும்- கழியும்படிபண்ணும்.

செயிர்-குற்றம்.

இது-கலிவிருத்தம்... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், (இத்திருவாய்மொழி, அப்யஸித்தார்க்கு சரீரசம்பந்தத்தை யறுத்துக்கொடுக்குமென்கிறார்.)

தம்முடைய ஆர்த்தியெல்லாம்போம்படி அவன்வந்துமுகங்காட்ட, "நிலைப்பெற்றென்னெஞ்சம்பெற்றதுநீடுயிர்" என்றாரிவர்; அவன்முகத்தைப்பார்த்தவாறே அவனுயிர் நீடுபெற்றதாயிருந்தது (உயிர்களித்யாதி) இவர்தரித்தபின்பாயிற்று அவன் எல்லாவுலகமு மெல்லா வுயிருமுடையவனாயிற்று; இங்கு இவரொருவரையுமிறே யிழக்கப்புக்கது, அங்கு ஸவிபூதிகனானவனையாயிற்றிழக்கப்புக்கது. ஏகாங்கம் விகலமானாலும் அங்கவைகல்யமுண்டிறே,இவரைப்பெற்ற பின்பாயிற்று

றே, ஸ்ரீவைகுண்டநாதனுக் கேற்றம்சொல்லுகிறேனேவென்றபடி. ஏற்றமல்லாதத்தைச்சொல்லுகைக்கு ஹேதுவேதென்ன, என்னுடையப்ராந்திகார்யமென்கிறார் (ஸ்ரீவைகுண்டநாதனுக்கித்யாதி) "ப்ரமித்தேன்" என்கிறதென், ஏற்றமன்றோவென்ன (கானமுமித்யாதி) கானமும்-காடும். வேடு - வேடர். ஓலக்கம-சபை. "திருவேங்கடத்தானுக்கு" என்றதுக்குபாவம் (பரமபதத்தையித்யாதி) கீழெல்லாவற்றுலும் பலிதம் (முடிகுடியித்யாதி) தட்டி-சிறை.

அத்தையோ - "ஈசன் வானவர்க்கென்பன்" என்றத்தையோ. இவற்றை நிரூபகமாகச்சொன்னதுக்குபாவம் (நீசத்வத்தையித்யாதி) இப்படிசொன்னபேருண்டோவென்ன (அமர்யாதஇத்யாதி) இதம்ஸ்தோத்ரே. "வஶஃ" (பஶுஃ) என்றதுக்கர்த்தம் (ஜநநிக்குமித்யாதி) இந்தத்ருஷடாந்தத்தால் பலித்தவர்த்தத்தையுபஜீவித்துக்கொண்டு, "அமய்யாதஃ" (அமர்யாதஃ) என்றதுக்கர்த்தம் (சாஸ்த்ரங்களித்யாதி) இவ்வாக்யத்தினடியிலே-அப்படியே யித்யத்யாஹார்யம். மீளமாட்டாதேயென்றது-காலவிசேஷநிர்த்தேசாபாவசித்தம். உத்தரோத்தரபதாநாம் பூர்வபூர்வபதசங்கதிம் ஹ்ருதிநிதாயததநுகுணமேவார்த்தமாஹ (கெடுவாயித்யாதி) க்ஷுத்ரஃ என்கிறவிடத்திலே-கேசிதுபதிஷ்டார்த்தக்ரஹணநுரூபஜ்ஞாநம் நாஸ்தீத்யுக்தம்; சலமதிரித்யத்ர-ஜ்ஞாநேஸத்யபிவிஸ்வாஸராஹித்யமுச்யதே. "அப்ரிய ஸ்ய தவ ஸ்ய க்தாஶ்ரோதா ஸதுர்லபஃ" (அப்ரியஸ்யதுபத்யஸ்யவக்தாஸ்ரோதாசதுர்லபஃ) என்றத்தைப்பற்ற. (அதவாசொல்லுவாரையுமித்யாதி)இதுக்குசம்வாதம். (நின்றவாநில்லாவித்யாதி)திருமொழி. ஒருபடிப்பட்டிராதநெஞ்சையுடையனித்யர்த்தஃ. "வஞ்சலஹிமநஃ" (சஞ்சலம்ஹிமநஃ) இத்யாதி. ஸ்மரபராணம்வஶஃ என்றிவ்விடத்திலேவிவக்ஷிதம். "தூர்த்தரோடிசைந்தகாலம்" என்னக்கடவதிறே. "வஞ்சநவரஃ" (வஞ்சநபரஃ) என்றவிடத்திலே - "துவர்த்தசெவ்வாயினார்க்கேதுவக்கறத்துரிசனானேன்" என்றத்தைக்கண்டுகொள்வது. துவக்கு-சங்கம். துரிசன் - கள்ளன். துவக்கற - அவர்களுக்கென்பக்கல் சங்கமறும்படி. "அதிஶாயிநேதமபிஷ்டநள" (அதிஶாயநேதமபிஷ்ட்டௌ) என்று இஷ்டன் ப்ரத்யயாந்தமாக வருளிச்செய்கிறார் (அதுதானுருவவித்யாதி) பாபேதிஷ்டதீதி-பாபிஷ்ட்டஃஎன்று வ்யுத்பத்திபண்ணி தாத்பர்யாந்தரம் (பாபத்திலேயாயிற்றித்யாதி) ப்ரர்சங்கிகம் (இதாளவந்தாரித்யாதி)

"நீசனேன்" இத்யாதிக்குபிண்டிதார்த்தம் (அநாத்மகுணமேயித்யாதி) "நீசனேன் நிறைவொன்றுமிலேனுகையாலே-வானவர்க்கீசனென்பன், என்றால்-என்கண்பாசம்வைத்தபரஞ்சுடர்ச்சோதியான-திருவேங்கடத்தானுக்கு - அதுதேசமோ" இத்யந்வயஃ. இவ்வந்வயம் பிள்ளைதிருநறையூரரையர் நிர்வாஹத்துக்கு."நீசனேன் நிறைவொன்றுமிலேனுகையாலே-வானவர்க்கீசனென்பன்" என்றந்வயித்தர்த்தம் (என்தண்மையுமித்யாதி) இவ்வார்த்தை -"வானவர்க்கீசன்" என்றவார்த்தை.

"வானவர்க்கு-ஈசன் என்கட்பாசம்வைத்த" என்றுகூட்டிபாவம் (நித்யஸூரிகளுக்கித்யாதி) பலிதம் (அவர்கள்சத்தையித்யாதி) யத்வா, வானவர்க்கீசன்-என்கட்பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதியானனென்கிறார் (அவர்கள்சத்தையித்யாதி) என்னுதல், வானவர்க்கீசன்-என்கட்பாசத்தையும்-பரஞ்சுடர்ச்சோதியையு

ம்-வைத்தானென்கிறார் (ப்ராதம்யத்துக்குமித்யாதி) ப்ராதம்யத்துக்கும்-ப்ரதமஃ பாணிக்ரஹணம்பண்ணினதுக்கும். "ஜ்யேஷ்ட்டபார்யைக்கு ஜீவநம்கொடுக்கவில்லை" என்கிறலோகாபவாதபயத்துக்கும், காஷாயவஸ்த்ரதாரணம்பண்ணி பிச்சை புக்காளாகில் வருகிறமஹாபவாதத்தாலும் மூத்தாளுக்கு தேஹதாரணமாத்ரத்துக்கு ஜீவநம்வைப்பாரோபாதியித்யர்த்தஃ. அவர்கள் - ஸூரிகள். "பூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவாஃ" (பூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவாஃ) என்கையாலே-ப்ராதம்யம். "பாசம்வைத்த" என்கையாலே - நெஞ்சுகொடுத்தமைசொல்லிற்று. "பரஞ்சுடர்ச்சோதிக்கு" என்கையாலே-உடம்புகொடுத்தமைசொல்லிற்று. என்னிடத்திலே ஸ்வவிஷயமானஸங்கத்தையுண்டாக்கினவென்றர்த்தாந்தரம் (அன்றியேயித்யாதி) "பரஞ்சுடர்" என்றதுக்கு, (ப்ராதம்யத்துக்கும்) இத்யாதிவாக்யத்திலே பூர்வபாவியாகவருளிச்செய்தது, அபரபாவியாகவர்த்தாந்தரம் (அஹ்ருதயமாயித்யாதி) "பரஞ்சுடர்ச்சோதி" என்கிறவிது-என்கட்பாசம்வைத்தமைக்கு ஜ்ஞாபகஹேதுகர்ப்பவிசேஷணமென்றபடி. மனிச்சுக்காக-மாநுஷ்யத்துக்காக. சப்தார்த்தம் (உஜ்ஜ்வலனுயிராகின்றானென்று) "பரம்" என்றவிசேஷணத்துக்குபாவம் (கலந்தபின்பித்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (பிராட்டியித்யாதி) "தயாஸராஜர்ஷிஸுதோபிராமயா" (தயாஸராஜர்ஷிஸுதோபிராமயா) இத்யாதிபாலகாண்டாந்தஶ்லோகோத்ராநுஸந்தேயஃ.

வானவர்க்கீசனென்பன், என்றால், நீசனேனென்றுதொடங்கி, சோதியான-திருவேங்கடத்தானுக்கு-அதுதேசமோவித்யந்வயஃ. பரஞ்சுடரித்யாதிக்கு - நிரதிஶயௌஜ்ஜ்வல்யவிஶிஷ்டமான தேஜோமயவிக்ரஹயுக்தனுக்கு. நீசனேனித்யாதிக்கு - தண்ணியேனாய் குணபூர்த்தியொன்று மின்றிக்கேயிருக்கிறவென்பக்கலிதிஸப்தார்த்தஃ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

# ஐந்தாம்பாட்டு.

சோதியாகியெல்லாவுலகுந்தொழு
மாதிமூர்த்தியென்றாலளவாகுமோ
வேதியர்முழுவேதத்தமுதத்தைத்
தீதில்சீர்த்திருவேங்கடத்தானையே.

## ஆறாயிரப்படி.

(சோதியாகி) எனக்குங்கூடத் தன்னைத்தந்தருளினானென்னுமிதுதானேற்றமோ! தன்படியைப்பார்த்தால்; அவனுடைய ஔதார்யாதிகுணங்களைச் சொல்லுமிடத்திலந்த வேதங்களேசொல்லவேண்டாவோ, நமக்குநிலமோ; ஆதலாலிப்படி பரமோதாரனான திருவேங்கடமுடையான், ,தன்திருவடிகளிலடிமைசெய்கையாகிற சம்பத்தையுங்களுக்குத் தந்தருளுமென்கிறார்..,.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சிலவானென்கிறவிவ்வளவோ, அந்தசீலத்தோடே நிரதிசயபோக்யபூதனானவனுக்கு சர்வேஸ்வரனென்றாற் பெருமையோவென்கிறார்.

வேதியர்-வைதிகருடைய. முழுவேதத்து - சமஸ்தவேதங்களிலும். "ஆநந்தோப்ரஹ்ம" (ஆநந்தோப்ரஹ்ம) "ரஸோவைஸஃ" (ரஸோவைஸஃ) என்று ப்ரதிபாதிக்கப்பட்ட, அமுதத்தை - போக்யதாதிசயத்தை யுடையனாய். தீது - போக்தாக்களுடைய யோக்யதையைப்பார்த் தநுபவிப்பிக்கையாகிற தீது. இல் - இன்றியே. சீர் - கானமும் வானரமும் வேடுமான தாழ்ந்தாரை யநுபவிப்பிக்கும் குணத்தை யுடையனான. திருவேங்கடத்தானை - திருவேங்கடமுடையானை. சோதியாகி - உஜ்ஜ்வலவிக்ரஹ விசிஷ்டனாய்க்கொண்டு. எல்லாவுலகும் - உத்கர்ஷாபகர்ஷவிபாகமறவெல்லாரும். தொழும் - ஆஸ்ரயிக்கும்படியாய். ஆதி - சமஸ்தகாரணபூதனான. மூர்த்தி - சர்வேஸ்வரன். என்றால்-என்றால். அளவாகுமோ-பெருமையோ.

மேன்மையுமாஸ்ரயணீயத்வமும் நீர்மையோடேகூடின போக்யதைக்குத்தகுதியல்லவென்று கருத்து. அளவு - பெருமை..........................................*

---

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

நித்யசூரிகளுக்கும் தன்னைக் கொடுத்தானென்ற தோரேற்றமோ எனக்குத் தன்னைத் தந்தவனுக்கென்றார் - கீழ்; எனக்குத் தன்னைத் தந்தானென்கிறவிதுதானேறேற்றமோ, என்னிலும் தாழ்ந்தாரைத்தேடிப் பெறாதே யிருக்கிறவனுக்கென்கிறாரிதில்.

(சோதியாகி) நிரவதிக தேஜோரூபமான திருமேனியை யுடையனாய். [ நீலதோயதமத்யஸ்தா ] (நீலதோயதமத்யஸ்த்தா) என்னுநிற்கச்செய்தே [ வீதாபா ] ( பீதாபா ) என்கிறது. அதாவது - ஸ்ரமஹரமானவடிவைப் புகர்முட்டாக் கிட்டிருக்குமென்கையும், அந்தப்புகர்தன்னையே ஸ்ரமஹரமான வடிவுதான் க்ரஸித்துக்கொண் டிருக்குமென்கையும். இத்தால் - ஒன்றையொன்றுவிடாதே யிரண்டும்நிரபேக்ஷமென்கை (பீதாபா என்றது - ஸ்வதேஜஸ்ஸை விக்ரஹந்தான் பாநம்பண்ணிக்கொண்டிருக்குமென்றபடி.) "தேஜஸாம்ராஸிமூர்ஜிதம்" ( தேஜஸாம்ராஸிமூர்ஜிதம் ) என்னக்கடவதிறே.

( எல்லாவுலகுந்தொழுமாதிமூர்த்தியென்றாலளவாகுமோ ) இப்படிசொன்னால்தா னவனுக்கேற்றமாகப்போருமோ. "எல்லாவுலகுந்தொழு மாதிமூர்த்தியென்றா லளவாகுமோ" என்கைக்கு, "எல்லாவுலகுந் தொழுமாதிமூர்த்தி" என்றாரோ பின்னையென்னில் - "எண்ணில்தொல் புகழ்வானவரீசன்" என்று, "ஈசன்வானவர்க்கென்பன்" என்றநுபாஷித்தவோபாதி, இங்குமப்படிசொன்னாரோவென்னில்; விழுக்காட்டாலே

சொன்னார்; எங்ஙனே சொன்னபடியென்னில்; கீழே, "நீசனேன்நிறை வொன்றுமிலேன்" என்றாரோ தம்மை - தாழ்வுக்குத்தம்மையெல்லாரிலு மிவ்வருகாகச்சொன்னாரோ, தாம் தொழுதபோதே எல்லாலோகங்களும் விழுக்காட்டாலே தொழுததாயிற்று; "எல்லாவற்றுக்கும் மேல்படியமி ழ்ந்தது" என்றால், "கீழ்ப்படியமிழ்ந்தது" என்று சொல்லவேண்டாவி றே. (தொழும்) [ யதார்ஹம்கேஶவவ்ருத்திமவஶாஃப்ரதிபேதிரே ] (ய தார்ஹம்கேஶவேவ்ருத்தி மவஶாஃப்ரதிபேதிரே) "தொழக்கடவோமல் லோம்" என்று சங்கல்பித்திருந்தவர்களும் தொழுதார்களாயிற்றுகண்ட வாறே. (ஆதிமூர்த்தி) ப்ரஹ்மஜிஜ்ஞாஸ்யமென்ன, ஜிஜ்ஞாஸ்யமான ப்ர ஹ்மத்துக்கு லக்ஷணமேதென்ன; ஜகஜ்ஜந்மாதிகாரணமென்றதிறே. (கா ரணவாக்யங்களொருங்கவிட்ட தெங்ஙனே, யென்னில்; "யதோவாஇமாநிபூதா நிஜாயந்தே - தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம" (யதோவாஇமாநிபூதா நிஜாயந்தே - தத்விஜிஜ்ஞாஸஸ்வதத்ப்ரஹ்ம) என்று,) ஆஶ்ரயணீயவஸ் துவேதென்ன, ("காரணந்துத்யேயஃ" (காரணந்துத்யேயஃ) "யோ ப்ரஹ்மாணம்விததாதிபூர்வம் - முமுக்ஷுர்வைஶரணமஹம்ப்ரப த்யே" (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்- முமுக்ஷுர்வைஶரணமஹம் ப்ரபத்யே) என்று) ஜகத்காரணவஸ்துவென்றதிறே; அப்படியே, கீழ் எல்லாவுலகும்தொழுமென்று - ஆஶ்ரயணத்தைச் சொல்லி ஆதிமூர்த்தி யென்று - ஆஶ்ரணீயவஸ்துவைச் சொல்லிற்றிறே. அளவாகாதென்று சொல்லும்போதும் சிறிதிடஞ்சொல்லிப்பின்னை [ யதோவாசோநிவர்த்தந்தே ] ( யதோவாசோநிவர்த்தந்தே ) என்னும் வேதம் வேண்டாவோ. (வேதியர்முழுவேதத்தமுதத்தை) "ஸாஹிஶ்ரீரம்ருதாஸதாம்" (ஸா ஹிஶ்ரீரம்ருதாஸதாம்) என்கிறபடியே வேததரான ப்ராஹ்மணருடைய எல்லா வேதங்களாலும் ப்ரதிபாதிக்கப்பட்ட போக்யதா ப்ரகர்ஷத்தை யுடையவனை. "ஸர்வேவேதாயத்பதமாமநந்தி" (ஸர்வேவேதாயத்பத மாமநந்தி) "ஸர்வேவேதாயத்ரைகம்பவந்தி" (ஸர்வேவேதாயத்ரை கம்பவந்தி) "வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்யஃ" ( வேதைஶ்சஸ ர்வைரஹமேவவேத்யஃ ) என்கிறபடியே, எல்லாவேதங்களாலும் ப்ரதி பாதிக்கப்படுகிற ஆநந்தகுணத்தை யுடையவனை. "ஆநந்தோப்ரஹ்ம" (ஆநந்தோப்ரஹ்ம) "ரஸோவைஸஃ" (ரஸோவைஸஃ) என்னக்கடவ திறே. (தீதில்சீர்த்திருவேங்கடத்தானையே) தீதென்று-குற்றம். இல்லெ ன்று - இல்லாமை. குற்றமற்றகுணங்களையுடையவனை. விஷயீகரிக்குமி டத்தில் "இன்னாராவர், இன்னாராகார்" என்னும் குற்றமின்றிக்கே யிருக் கை. கீழ் "எல்லாவுலகுந்தொழு மாதிமூர்த்தியென்று ல்ளவாகுமோ" என்றதிற்காட்டி லேற்றமாகச்சொன்னவர்த்தமென்னென்னில் - "ஈசன்

வானவர்க்கென்பன்" என்றதிற்காட்டில், "என்கண்பாசம்வைத்த" என்னுமிடத்திலேற்றங்கண்டோம்; அவ்வோபாதி "எல்லாவுலகுந்தொழும்" என்றதிற்காட்டில், "நீதில்சீர்" என்றவிடத்திலேற்றமென்னென்னில்; என்னை விஷயீகரித்தானென்ற விதோரேற்றமோ, என்னில் தாழ்ந்தாரைத்தேடிக் கிடையாமையாலே பட்டினிவிட்டு "ஆஶ்ரயாஶிவாநாஶ:" (ஆஶ்ரயாஶிவாநாமஃ) என்கிறபடியே அவசரப்ரதீக்ஷனாயிருக்கிறவனுக்கு. "நீசனேன்நிறைவொன்றுமிலேன்" என்ற இவருடைய குற்றத்தைக் குணமாகக்கொண்டு ஸ்வீகரித்து, இவருக் கவ்வருகு குற்றமுடையாரைத் தேடிக்கிடையாமையாலே நிற்கிறானாயிற்று. ரக்ஷகனுக்குரக்ஷ்யவர்க்கம் பெற்றவளவிலே த்ருப்திவருமது ரக்ஷகத்வத்துக்குக் குற்றமாமிறே; "ஸந்துஷ்ட:க்ஷத்ரியஸ்ததா". (ஸந்துஷ்டஃக்ஷத்ரியஸ்ததா) சீருக்குத்தீதாவது - ஆஶ்ரயிப்பார் குணாகுணநிரூபணம்பண்ணுகை..............*

---

## ஜீயர் அரும்பதம்.

ஐந்தாம்பாட்டு (சோதியாகியித்யாதி) "சோதியாகியெல்லாவுலகும் தொழுமாதிமூர்த்தியென்றால்" என்கிறவிது- "நீசனேன்" இத்யாதியினநுவாதம். "எல்லாவுலகும்தொழும்" என்றதுக்கு - நான்தொழுமென்று அர்த்தமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார். (எனக்குத்தன்னைத்தந்தானென்கிறவித்யாதி) என்னிலும் தாழ்ந்தாரைத்தேடியென்றது- "நீதில்சீர்" என்றத்தைப்பற்ற.

சப்தார்த்தம் (நிரவதிகேத்யாதி) தேஜஸ்ஸாகில் சிவந்தன்றோவிருப்பது, ஶ்யாமமான திருமேனியைச் சிவந்தசோதியாகச் சொல்லக்கூடுமோவென்ன; திருமேனிக்கு ஶ்யாமளதையுமுண்டு, தேஜஸ்ஸுமுண்டு, இரண்டுமந்யோந்யம்விட்டிராது, இரண்டுமுண்டானாலும் தேஜஸ்ஸேவிஞ்சியிருக்குமென்னுமிடத்தை ஶ்ருதியிலே தர்ஶிப்பிக்கிறார் (நீலதோயதேத்யாதி) ஶ்ருதிக்கர்த்தம் (ஶ்ரமஹரேத்யாதி) இவ்வாக்யத்வயத்தாலும் - நீலதோயதோமத்யஸ்த்தோ யஸ்ஸ்யாஸ்ஸாஎன்கிற பஹுவ்ரீஹியும், நீலதோயதஸ்யமத்யேதிஷ்ட்டதீதி-நீலதோயதமத்யஸ்த்தாவென்கிறதத்புருஷஸமாஸமும் விவக்ஷிதம். "இந்தஸமாஸத்வயமும் தோற்றும்படி 'நீலமுண்டமின்னன்னமேனி' என்பதே" என்றீடுபட்டருளிச்செய்வர். வஸ்துநோத்வைரூப்யாஸம்பவாதுக்தாகாரத்வயமெப்படிகூடுமென்ன (இத்தாலித்யாதி) இத்தால் - (முட்டாக்கிட்டிருக்குமென்கையும், க்ரஸித்துக்கொண்டிருக்குமென்கையும்) என்கிறவித்தால். நிரபேக்ஷிதம்-பூர்ணம். அதாவது - ஒரொன்றைப்பார்த்தால் "இதுவேஸ்வரூபம், இதுவேஸ்வரூபம்" என்றுதோன்றுமென்றுதாத்பர்யம். மயில்கழுத்துப்போலேயிருக்குமிதிபாவ:. இத்தால்- (நீலதோயதேத்யாதியாலே) வ்யுத்பத்தித்வயத்தாலும், ஶ்யாமளதையும் தேஜஸ்ஸுமுண்டென்றுசொல்லாநிற்கச்செய்தே, "பீதாபா" (பீதாபா) என்றுவிசேஷிக்கையாலே - தேஜஸ்ஸேவிஞ்சியிருக்குமென்றுகருத்து.

யத்வா, பீதாபா என்கிறது - பிராட்டியோட்டைச் சேர்த்தியாலேயாதல். "சோதியாகி" என்கிற மூலபதத்துக்கு ப்ரமாணம் (தேஜஸாமித்யாதி)

அளவு-ஏற்றம். எனக்குத்தன்னைத்தந்தானித்யாத்யவதாரிகாவாக்யத்திலே-புரோவாதாநுகுணமாக வநுவாதத்துக்கர்த்தம்சொல்லி, இங்கே - அநுவாதாநுகுண்யேபுரோவாதத்துக்கர்த்தத்தை சங்காபூர்வகமாக பலிப்பிக்கிறார் (எல்லாவுலகுந்தொழுமித்யாதி) "எல்லாவுலகுந்தொழும்" என்று - கீழேசொல்லவேணுமோவென்ன (எண்ணில்தொல்புகழித்யாதி) என்று - என்றுசொல்லி. விழுக்காட்டாலே-அர்த்தாத். விவரணம் (தாழ்வுக்கித்யாதி) இதுக்குதாஹரணம் (எல்லாவற்றுக்குமித்யாதி) (மேற்படியென்று) தாழ்வுக்கு ஸர்வாதிக்யம் சொல்லுகிறதென்றுகருத்து. "சோதியாகையாலே - எல்லாவுலகுந்தொழும்" என்று ஹேதுஹேதுமத்பாவேநதாத்பர்யம் (யதார்ஹமித்யாதி) இதுக்கர்த்தம் (தொழக்கடவோமல்லோமித்யாதி) "𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌕𑍃𑌷𑍍𑌣𑌂 𑌤𑌦𑌾𑌯𑌾𑌨𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌤𑌪𑌨𑍍𑌤𑌮𑌿𑌵𑍌𑌜𑌸𑌾 । 𑌯𑌥𑌾𑌰𑍍𑌹𑌂" (த்ருஷ்ட்வாக்ருஷ்ணம் ததாயாந்தம் ப்ரதபந்தமிவௌஜஸா । யதார்ஹம்) இத்யாதி, ஸபாபர்வணீராஜஸூயேபஞ்சஸப்ததிதமேத்யாயே.

"𑌤𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍇 𑌤𑌦𑌾 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌶𑌙𑍍𑌖𑌚𑌕𑍍𑌰𑌗𑌦𑌾𑌧𑌰𑌮𑍍 । 𑌅𑌪𑍂𑌰𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑍇𑌜𑌸𑌾𑌂 𑌰𑌾𑌶𑌿𑌮𑍂𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍" (தம்த்ருஷ்ட்வாதேததாதேவாஶ்ஶங்கசக்ரகதாதரம் । அபூர்வரூபஸம்ஸ்தாநம்தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) இதிப்ரதமேம்ஶே நவமே.

ஆதிமூர்த்தி-காரணபூதனான சர்வேஶ்வரன். ஆதிமூர்த்தியாகையாலே-காரணவஸ்துவாகையாலே, "எல்லாவுலகும் தொழும்" என்றுவிவக்ஷித்து, காரணவஸ்துவே யுபாஸ்யமென்கைக்கு ஸூத்ரத்தையும் ஶ்ருதியையுமருளிச்செய்கிறார். க்ரமேண; அதில்முற்பட "𑌅𑌥𑌾𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾, 𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌯𑌤𑌃" (அதாதோப்ரஹ்மஜிஜ்ஞாஸா, ஜந்மாத்யஸ்யயத:) என்கிறஸூத்ரத்தையருளிச்செய்கிறார் (ப்ரஹ்மஜிஜ்ஞாஸ்யமித்யாதி) (காரணவாக்யங்களென்று) 'திருத்துவாக்யம், அநந்தரம் "𑌕𑌶𑍍𑌚 𑌧𑍍𑌯𑍇𑌯𑌃, 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌤𑍁 𑌧𑍍𑌯𑍇𑌯𑌃" (கஶ்சத்யேய:, காரணந்துத்யேய:) என்கிறஶ்ருத்யர்த்தம் (ஆஶ்ரயணீயவஸ்துவேதென்னவித்யாதி) இயம்ஶ்ருதிரதர்வஶிகாயாம். தத்வத்ப்ரக்ருதேகிமித்யத்ராஹ (அப்படியேயித்யாதி)

மேலுக்கவதாரிகை (அளவாகாதென்றித்யாதி) (ஸாஹிஶ்ரீரம்ருதாஸதாமிதி) யஜுஷி. ஸா-ஶ்ருதி:, ஸதாம், அம்ருதா-நித்யா, ஶ்ரீ:-தநமித்யர்த்த:. "𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌮𑌯𑌂 𑌵𑍇𑌦𑌃" என்னக்கடவதிறே. வேதியர் - வேதநம். "அமுதத்தை" என்றதுக்கு, ஸ்வரூபநிஷ்ட்டபோக்யதாபரமாக - கீழருளிச்செய்து, குணக்ருதபோக்யதாபரமாக வர்த்தாந்தரம் (ஸர்வேவேதாஇத்யாதி) (வேதைஶ்சஸர்வைரித்யாதி) கீதாஸூபஞ்சதஶே. பூர்வமேவலிகிதம். ஸ்வரூபபோக்யதைக்கு ப்ரமாணம் (ஆநந்தோப்ரஹ்மேத்யாதி)

சீருக்குக்குற்றமேதென்ன (விஷயீகரிக்குமித்யாதி) "எல்லாவுலகுந்தொழுமாதிமூர்த்தி" என்றதிற்காட்டில் "சீதில்சீர்" என்கிறவிடத்திலேற்றம் சொல்லுகைக்காக தடஸ்த்தஶங்கையையநுவதிக்கிறார் (கீழெல்லாவுலகுமித்யாதி) ஏற்றமாகச்சொன்ன - இவ்விடத்திலேற்றமாகச்சொன்ன. ஏற்றம்சொல்லவேணுமோவென்ன (ஈசனித்யாதி) * சீதில்சீரினர்த்தம் என்னில் தாழ்ந்தாரைத்தேடியித்யாதி) * திருவேங்கடத்தானினர்த்தம் (ஆஶ்ரயிதுவேத்யாதி) "ஶங்கெஹநஸாஶ்ரூங்கம் தெத்ருவஷ்டிதொஷ்டிஹிவஸாந்ஹரந் । ஆஶ்யாயஷிவாநா:பகஞ்ச

ஷாவயேதி" (குஹேநஸார்த்தம்தத்ராவஸ்த்திதோஸ்மிதிவஸாந்பஹூந் । ஆஸ்யாயதிவாராமஃபுநஸ்ஸப்தாபயேதிதி) 'இதமயோத்யாகாண்டே ஏகோநஷஷ்டிதமே தசரதம் ப்ரதிஸுமந்த்ரவசநம். விவரணம் (நீசனேனித்யாதி) "நீதில்சிர்" என்றதுக்கர்த்தாந்தரம் (ரக்ஷகனுக்கித்யாதி) இவ்வர்த்தத்துக்குப்ரமாணம் (ஸந்துஷ்ட இத்யாதி) "அஸந்துஷ்டோத்விஜோநஷ்டஸ்ஸந்துஷ்டஃக்ஷத்ரியஸ்ததா। ஸலஜ்ஜாகணிகாநஷ்டா நிர்லஜ்ஜாவகுலாங்கநா" (அஸந்துஷ்டோத்விஜோநஷ்டஸ்ஸந்துஷ்டஃக்ஷத்ரியஸ்ததா।ஸலஜ்ஜாகணிகாநஷ்டாநிர்லஜ்ஜாசகுலாங்கநா) "நீதில்சிர்" என்றதின் முந்தினவர்த்தவிவரணம் (சீருக்கித்யாதி)

உத்தரார்த்தபூர்வகம் பூர்வார்த்தாநுஸந்தாநமந்வயஃ.........................*

---

# ஆறம்பாட்டு.

வேங்கடங்கண்மெய்ம்மேல்வினைமுற்றவுந்
தாங்கடங்கட்குநல்லனவேசெய்வார்
வேங்கடத்துறைவார்க்குநமோவென
லாங்கடமையதுசுமந்தார்கட்கே.

## ஆறாயிரப்படி.

(வேங்கடங்கள்) இந்தப்ராப்யத்தைப் பெறுகைக்குபாயமேதென்னில்; சர்வாதிகாரமா யத்யந்தசுகரமாயிருந்த வேங்கடத்துறைவார்க்குநமஃ என்கிறவிச்சொல்லைச் சொல்லவேயந்தக் கைங்கர்யப்ரதிபந்தகமான பாபங்களும் கரிஷ்யமாணமான பாபங்களுமெல்லாம் நிஶ்ஶேஷமாக தக்தமாய்ப்போம்; பின்னைத்தந்தாமுகந்தபடி யெல்லாம்செய்யப்பெறலா மென்கிறார்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமான பகவதநுபவபோகத்துக் குறுப்பான ஆஶ்ரயணஸௌகர்யத்தை யருளிச்செய்கிறார்.

வேங்கடத்து - திருமலையிலே. உறைவார்க்கு - சர்வசமாஶ்ரயணீயனும்படிவந்து நித்யவாசம்பண்ணுகிற ஸ்வாமிக்கநர்யார்ஹமாம்படி. நமோவெனலாம் - ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியுக்தமான அத்யந்தபாரதந்த்ர்யஸூசகமாய்சுலபமாய்ஸ்வரூபப்ராப்தமானநமோவாசகமாகிற. அது - "பூயிஷ்டாம்தே நமஉக்திம்விதேம" (பூயிஷ்ட்டாம்தேநமஉக்திம்விதேம) என்றுஶ்ருதிசித்தமான அந்த. கடமை - வ்யாபாரத்தை. சுமந்தார்கட்கு - அதிகாரவிசேஷத்யோதகமாம்படி தங்கள் தலையிலேசுமந்தவர்களுக்கு. கடங்கள் - அநுபவவிநாஶ்யமாம்படி ருணரூபமான பூர்வார்ஜிதபாபங்கள். மேல்வினை - ஆஶ்ரயணாநந்தரபாவியான உத்தராகங்கள். முற்றவும்வேம் - "தீயினிற்றூசாகும்" என்கிறபடியேதக்தங்களாம். மெய் - இதுநிர்த்தோஷவேதாந்த சித்தமாகையாலேசத்யம். இப்படியநிஷ்டம்ஸ்வயமேவ

நிஷ்க்ருஷ்டமாதலால், தாங்கள் - ஆஸ்ரிதரானதாங்கள். தங்கட்கு - தங்கள்ஸ்வரூபத்துக்கு. நல்லனவே - இனிமையைவிளைப்பதான பகவத்ஸ்வரூபாத்யநுபவத்தையே. செய்வார் - செய்வார்கள்.

கடமென்று - ருணத்ரயத்தையும், மெய்ம்மேல்வினையென்று - தேஹாநுபந்திகர்மங்களையுஞ்சொல்லுவர். உத்தராகத்தைவேமென்றது - பலப்ரரோஹமில்லாத ஸாம்யத்தாலே. சுமந்தாரென்றது - "அஞ்சலிபரம்" என்னுமாபோலே, ஈஸ்வராஹ்ருதயத்தாலேகனத்திருக்கை...............................................*

---

## ஈ௫ - ஆரும் பாட்டு.

கீழ் - திருமந்த்ரார்த்தத்தை யருளிச்செய்தார்; அதிலேயருளிச்செய்யாததோ ரர்த்தமுண்டிறே - நமஸ்ஸப்தார்த்தம். (அதாவது-அவித்யாதிகளுங்கழிகை.) அத்தையருளிச்செய்கிறார். அவன்ரக்ஷ்யவர்க்கத்திலே பெற்றவளவால் பர்யாப்தனன்றிக்கே யிருந்தாலும், நாமபிநிவிஷ்டராணாலும், சரீரசம்பந்த நிபந்தநமாக அநாதிகாலம் நாம்பண்ணிவைத்த பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தககர்மங்கள் செய்வதென்னென்ன; நாயிதிலே துணியவே அவையெல்லாம் தன்னடையே நசிக்குமென்கிறார்.

(வேங்கடங்கள்) கடமென்று - கடனென்றபடி. கடங்களென்றது - கடன்களென்றபடி. அவையாவன - [𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑍍𑌋𑌣𑌵𑌾 𑌜𑌾𑌯𑌤𑍇] (த்ரிபிருணவாஜாயதே) என்கிறபடியே - மூன்றுருணத்தோடேகூடவாயிற்று இவன்வந்துபிறப்பது; ([𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑍇𑌣 𑌋𑌷𑌿𑌭𑍍𑌯𑌃 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌜𑌯𑌾 𑌪𑌿𑌤𑍃𑌭𑍍𑌯𑌃] (ப்ராஹ்மசர்யேணருஷிப்யஃயஜ்ஞேந தேவேப்யஃப்ரஜயாபித்ருப்யஃ) என்கிறபடியே -) ப்ரஹ்மசர்யத்தாலும், யாகத்தாலும், ப்ரஜோத்பத்தியாலும் ருஷிகளுக்கும், தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் தனிசிறுக்கக்கடவன். "𑌋𑌣𑌾𑌨𑌿 𑌤𑍍𑌰𑍀𑌣𑍍𑌯𑌪𑌾𑌕𑍃𑌤𑍍𑌯" (ருணாநித்ரீண்யபாக்ருத்ய) என்னாநின்றதிறே. (மெய்ம்மேல்வினைமுற்றவும்) ப்ரக்ருதிசம்பந்தநிபந்தநமாக வரக்கடவபாபங்களைச் சொல்லுகிறது. ஆக, "கடன்கள், மெய்ம்மேல் வினைமுற்றவும், வேம்-நசிக்கும்." என்றிங்ஙனேயாளவந்தா ரருளிச்செய்யும்படி. இத்தையெம்பெருமானார் கேட்டருளி, "இதுக்குவேதாந்தத்தில் சொல்லுகிறகட்டளையிலேபொருளாகவமையாதோ" என்றிங்ஙனே யருளிச்செய்வர். அதாவது - "𑌉𑌤𑍍𑌤𑌰𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌘𑌯𑍋𑌰𑌶𑍍𑌲𑍇𑌷𑌵𑌿𑌨𑌾𑌶𑌼𑍌' (உத்தரபூர்வாகயோரஸ்லேஷவிநாஸௌ) என்றும், '𑌏𑌵𑌂 𑌹𑌾𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌃 𑌪𑍍𑌰𑌦𑍂𑌯𑌨𑍍𑌤𑍇' (ஏவம்ஹாஸ்யஸர்வேபாப்மாநஃப்ரதூயந்தே) என்றும்சொல்லுகிறபடியே, வேம்என்கையாலே - பூர்வாகத்துக்குவிநாசமும், உத்தராகத்துக்கு, ஸ்லேஷமுமாகச்சொல்லுதல்; அன்றிக்கே, இவ்விநாசந்தான் - மற்றையதுக்கு முபலக்ஷணமாய், ஸ்லேஷியாமையைச்சொல்லிற்றாகவு

மாம்." பூர்வாகமாவது - ஜ்ஞாநம்பிறப்பதற்குமுன்பு புத்திபூர்வகமாகப் பண்ணிப்போரும் ப்ராதிகூல்யம். உத்தராகமாகிறது - ஜ்ஞாநம்பிறந்தபின்பு ப்ராமாதிகமாகப்பண்ணும் ப்ராதிகூல்யம். பின்பும்விரோதியானதேஹசம்பந்த மநுவர்த்திக்கையாலே பாபங்களிலே ப்ரவர்த்தியாநிற்கும்; அநந்தரம், ஜ்ஞாநம்பிறவா, கடுகமீண்டு முன்புசெய்ததுக்கு " நாமென் செய்தோமானோம் " என்றநுதபித்துப்படும். கட்டங்கள் - மேல்வினைமுற்றவும் - வேம்; இதுமெய்-இதுசத்யம். "ஏவம்ஹாஸ்யஸர்வேபாப்மாந: ப்ரதூயந்தே" ( ஏவம்ஹாஸ்யஸர்வேபாப்மாந:ப்ரதூயந்தே ) என்றதிறே. ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமத்துக்குமூலமாய் ப்ரமநிவர்த்தகருமாயிருக்கும் ; அங்ஙனன்றியே, " யதாபூதவாதிஹிஶாஸ்த்ரம் " ( யதாபூதவாதிஹிஶாஸ்த்ரம் ) என்கிறபடியே - ஶாஸ்த்ரஞ்சொல்லிற்றென்றால் அவ்வர்த்தம் மெய்யாயிருக்குமிறே. முதற்பாட்டிலேசொல்லவேண்டுவதோரர்த்தஞ்சொல்லாதேபோந்ததிறே, அவ்வம்சமிங்கேசொல்லுகிறார். கட்டுக்குத்தொடுத்த அம்பை, அவன்நாலடிவரநின்றவாறே, அநந்தரத்தே "உன்விரோதிகளைச்சொல்லாய்" என்றானிறே. இவ்விடத்திலேபட்டர் ஒரு இதிஹாசமருளிச்செய்வர் -" பண்டு, தலையில்மயிரின்றிக்கேயிருப்பானொருவன் நெற்பரிமாறாநின்றானாய், அங்கேயொருவன்சென்று 'மயிரைப்பேணாதேநீர் தனியேநின்று பரிமாறுகின்றீரென்ன, 'என்றான் நடந்தது?' என்ன; 'ஒன்றுமில்லை' 'கண்டுபோகவந்தேன்' என்ன, 'ஆகிலொருகோட்டையைக்கொண்டுபோகலாகாதோ' என்றெடுத்துவிட, அவனத்தைக்கொண்டுவாராநிற்கச்செய்தே எதிரேயொருவன்வந்து 'இதெங்கேபெற்றது' என்ன, 'உன்றனமொட்டைத்தலையன்தந்தான்' என்றானாய், அவனத்தைச்சென்றங்கே ' இன்னுமும்மைவைதுபோகாநின்றானீ! ' என்ன, ' அட்டா ! என்னெல்லையுங்கொண்டென்னையும்வைதுபோவதே ' என்றுதொடர்ந்துவந்தானாய், அவன்புரிந்துபார்த்து 'என்றான்குழல்களையவலைய ஓடிவாராநின்றதி!' என்ன, 'ஒன்றுமில்லை' இன்னமொருகோட்டைகொண்டுபோகச்சொல்லவந்தேன், என்றானாய்; அப்படியே, கடலைமுகங்காட்டுவித்துக் கொள்ளுகைக்காகக் காலைப்பிடிப்பது கோலைத்தொடுப்பதாகாநிற்க, அவன்வந்துமுகங்காட்டினவாறே,'உனக்கம்புதொடுத்தோம்' என்னலஜ்ஜித்து, 'உன்விரோதிகளைச்சொல்லுநாமித்தைவிட, என்றானிறே". ( தாங்களித்யாதி ) இதுதான், பலபோக்தாவானவனுக்கு உத்தேஶ்யத்தோபாதி ப்ரார்த்தித்துப்பெறவேண்டியிருக்குமோவென்னில்; அதுவேண்டா, தாங்கள் தங்களுக்குநன்றானகைங்கர்யத்தைப்பண்ணுகிற்கவமையும், இவ்விரோதி தன்னடையேபோமென்கிறார். " தாங்கள் தங்களுக்கு நன்றானப்ரதிபந்தத்தைச்செய்யவமையும்" என்னவொண்ணாதிறே, "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்கிறஅதிகாரியை

க்குறித்துச்சொல்லுகையாலே. அதிகாரிவைலக்ஷண்யமும் வ்ருத்திவைலக்ஷண்யமும் தோன்றும்படி - "தாங்கள்தங்கட்கு" என்றிங்ஙனேயுமொன்றிச்சொல்லுமாமநந்தாழ்வான். (தாங்கள்) இதரவிஷயங்களில்விரக்தராய் கைங்கர்யருசியுடையராயிருக்கு மவர்கள். (தங்கட்கு) இப்படிப்பட்டருசியுடையராயிருக்கிற தங்களுக்கு. (நல்லனவேசெய்வார்) தங்கள் ஸ்வரூபத்தோடுசேர்ந்த கைங்கர்யத்தையேபண்ணுவார். "தாங்கள் தங்கட்கு நல்லனவேசெய்வார்" என்கிறது-இவர்களை யெங்ஙனேயாகநினைத்தென்னில் (வேங்கடத்தித்யாதி) (வேங்கடத்துறைவார்க்கு) சதுர்த்தியினர்த்தஞ்சொல்லுகிறது. (நமః) எனக்கன்று, அவனுக்கென்றபடி, (எனல்) இதுதான் நெஞ்சிலுண்டாகவும்வேண்டா, உக்திமாத்ரமேயமையும். இதுதானல்பமாகிலு மிவன்றனக்கருமையாயிருக்குமோவென்னில் (ஆம்) ஸுலபம். "எளிது" என்று, ஸ்வரூபத்தோடே சேராததாயிருக்குமோவென்னில் (கடமை) ப்ராப்தம். (அதுசுமந்தார்கட்கே) பெறுகிற பேற்றின்கனத்தையு மிவனுடையநேர்த்தியி லல்பதையையும்பார்த்து, "இப்பேற்றுக்கிவனிம்மலையைச்சுமவானே" என்பாரைப்போலே "அதுசுமந்தார்கட்கு" என்று தம்கருத்தாலே சொல்லிற்றாகவுமாம். பெறுகிற பேற்றின்கனத்தையும் பகவத்க்ருபையையு மறிந்திருக்கிற இவர்கருத்தாலே சொல்லிற்றுதல்; இவன்பக்கலுள்ளதைக்கனக்க நினைத்திருக்குமவன்கருத்தாலே சொல்லிற்றுதல்; "ஹுயிஷாம்" (பூயிஷ்ட்டாம்) என்றிறேயவனிருப்பது. த்ரௌபதி, திருநாமஞ்சொல்ல - "கோவிந்தா" என்றவாறே, "நம்பேரைச்சொன்னாள்" என்று திருவுள்ளம்புண்பட்டிருக்குமவனிறே. [ க்ருஷ்ணாரோஹ்ணவாஸிநம் ] [ க்ருஷ்ணமாம்தூரவாஸிநம் ] அவளைக்கொண்டாடா, தன்னைநிந்தியா, வ்யஸநப்பட்டானிறே. அப்போது சதஸ்ஸில் பிறந்தபரிபவம் பரிஹ்ருதமாகச்செய்தேயும், நம்பேரைச்சொல்லிக்கூப்பிட்டவளுக் காற்றுமையிலே முகங்காட்டப்பெற்றிலோம்" என்றுள்ளதனையு மிழவுபட்டிருந்தானிறே. "நம்பேர்தன்காரியஞ்செய்ததத்தனைபோக்கி, நாமிவளுக்கொன்றும் செய்திலோமிறே" என்றிருந்தான். அசங்கதமாக இரண்டுசப்தத்தைச் சேர்த்துச்சொல்ல, அதுவிஷஹரணத்துக்குடலாகாநின்றதிறே சப்தசக்தியாலே; அவ்வோபாதியும் போராமையில்லையிறே திருநாமம்.

(வேங்கடத்துறைவார்க்கு நமோவெனலாம்கடமை யதுசுமந்தார்கட்கு - கடங்கள்மெய்ம்மேல் வினைமுற்றவும்வேம். மெய், ஆகையால் தாங்கள் தங்கட்கு நல்லனவேசெய்வார்.................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆரம்பாட்டு (வேங்கடங்களித்யாதி) பரமப்ரக்ருதத்துக்குச்சேரமுதற்பாட்டோடே சங்கதி (சிழித்யாதி) மேழிற்பாட்டோடேசங்கதி ( அவன்ரக்ஷயேத்யா

தி ) சரீரசம்பந்தநிபந்தநமாகவென்றது - ஆளவந்தார்நிர்வாஹத்தைப்பற்ற. "வேங்கடத்துறைவார்க்கு நமோவெனல்" இத்யாதியைப்பற்ற (நாமிதிலேதுணியவித்யாதி) இதிலே - கைங்கர்யத்திலே. அவை - கர்மங்கள்.

(கடனென்றபடியிதி) "மனக்களுழறிவரும்" என்றுகொண்டு-மகாரனகாரங்கள் மாறுடிவருமென்றபடி. ருணவா-ருணவாநித்யர்த்தః. "஬்ரஹ்மசர்யேண ருஷிப்யோ யஜ்ஞேந தேவேப்ய: ப்ரஜயா பித்ருப்ய:" (ப்ரஹ்மசர்யேணருஷிப்யோயஜ்ஞேநதேவேப்யஃப்ரஜயாபித்ருப்யஃ) இதிவாக்யம் ஸ்ருதிரிதாயாஹ (ப்ரஹ்மசர்யத்தாலுமித்யாதி) தனிசு-கடன். தனிசிறுக்கவேணுமோவென்ன (ருணநீத்யாதி) "ருணாநி த்ரீண்யபாக்ருத்ய மநோ மோக்ஷே நிவேசயேத் । அநபாக்ருத்ய மோக்ஷந்து ஸேவமாநோ வ்ரஜத்யத:" (ருணநித்ரீண்யபாக்ருத்யமநோமோக்ஷநிவேசயேத் । அநபாக்ருத்யமோக்ஷந்துஸேவமாநோவ்ரஜத்யதஃ) மோக்ஷ என்றது - மோக்ஷாஸ்ரமத்திலே. சந்யாசாஸ்ரமத்திலேயென்றபடி. ஆளவந்தார்நிர்வாஹத்துக்கு, "கடங்கள்" என்று - ருணங்களையும், "மெய்ம்மேல்வினைமுற்றவும்" என்று - பூர்வோத்தராகங்களையும் சொல்லுகிறது. மெய்-சரீரம்.

எம்பெருமானார்நிர்வாஹத்திலே, "கடங்கள்" என்று - கடன்போலே அவஸ்யாநுபாவ்ய கர்மங்களைச்சொல்லி, "மேல்வினைமுற்றவும்" என்று - உத்தராகத்தைச்சொல்லுகிறது. அஸ்லேஷமுமாகச்சொல்லுதலென்றது- "அஸ்லேஷவிநாஸௌ" (அஸ்லேஷவிநாஸௌ) "பாபம் கர்ம ந ஸ்லிஷ்யதே" (பாபம்கர்மநஸ்லிஷ்யதே) என்று சூத்ரஸ்ருதிகளுக்குச்சேர, சாராவென்றபத மத்யாஹார்யமென்றபடி. மற்றையதுக்கும் - அஸ்லேஷத்துக்கும். உபலக்ஷணமாய் - நாசபர்யாயமானநைஷ்பல்யத்தைலக்ஷிக்கிறதாயித்யர்த்தః, ஆக, கடங்கள்-வேம், மேல்வினைமுற்றவும் சாரா இதிப்ரதமநிர்வாஹః. சாராவென்கிறபதத்தை அத்யாஹரியாதே, நாசவாசகமான "வேம்" என்கிறபதந்தானே - "ஶத்ரௌ ச ஸமுஹ்ஞி" (சத்ரிணேகச்சந்தி) இத்யத்ரசத்ர்யச்சத்ரிஸமுதாயவாசகச்சத்ரிஶப்தவதஜஹல்லக்ஷணயா அஸ்லேஷத்தையும் சொல்லுமென்றிரண்டாம்நிர்வாஹம். (அஸ்லேஷமுமாகச்சொல்லுதல்) என்கிறவிடத்திலே, அஸ்லேஷசப்தத்தைச்சொல்லுதலென்றுபாடமானபோது-அஸ்லேஷப்ரதிபாதகமான சாராவென்கிறபதத்தையென்றபடி. உத்தரபூர்வாகங்களை விவிச்யதர்ஶயதி (பூர்வாகமாவதித்யாதிவாக்யத்வயேந) ப்ரபந்நனுக் குத்தராகப்ரஸக்தியுண்டோவென்ன (பின்பும்விரோதியானவித்யாதி) "ப்ரபந்நஸ்ய ந கர்த்தவ்யம் பாதகம் । ஜ்ஞாத்வாபி பாதகம் கர்ம குர்வந் மூட: பதத்யத:" (ப்ரபந்நஇதிகர்வேணநகுர்யாத்புருபாதகம்। ஜ்ஞாத்வாபிபாதகம்கர்மகுர்வந்மூடஃபதத்யதஃ) என்னக்கடவதிறே. பூர்வாகத்துக்கு விநாசமென்றும், உத்தராகத்துக்கஸ்லேஷமென்றும் நியமிக்கிறதென், அஸ்லேஷவிநாசங்களை மாறுடிச்சொன்னாலோவென்னில்; "பாபமாவது-பகவந்நிக்ரஹமாகையாலே, இவன்பக்கலாநுகூல்யம் பிறந்தபின்பு 'நஸ்மரத்யபகாராணாம் ஶதமபி' (நஸ்மரத்யபகாராணும்ஶதமபி) இத்யாதிப்படியே பூர்வாகத்தை விஸ்மரிக்கும், 'அவிஜ்ஞாதா ஹி பக்தாநாமாகஸ்ஸு கமலேக்ஷண:' (அவிஜ்ஞாதாஹிபக்தாநாமாகஸ்ஸுகமலேக்ஷணஃ) இத்யாதிப்படியே ப்ராமாதிகத்தில் கண்வையாமையாலே பதில் நெஞ்சுசெல்லாது; ஆகையாலே பூர்வாகத்துக்குநா

சமும் உத்தராகத்துக்கஸ்லேஷமுமொழிய மாறுடிச்சொல்லப்போகாது" என்றருளிச்செய்வர். பிறவா-பிறந்தவுடனே. எம்பெருமானுருடைய த்விநியநிர்வாஹத்தி லந்வயங்காட்டுகிறுர் (கடங்களித்யாதி) இதுசத்யமென்றெப்படி யறியலாமென்ன (ஏவம்ஹாஸ்யேத்யாதி) வேதம்சொன்னுல் மெய்யாகவேணுமோவென்ன (ப்ரத்யக்ஷாதிகளித்யாதி) (யதாபூதவாதிஹிசாஸ்த்ரமிதி) த்ரமிடபாஷ்யே. ப்ரமத்துக்கு மூலமாயென்றது - "ஐடிஂரஜிதஂ" (இதம்ரஜிதம்) இத்யாதியைப்பற்ற. ப்ரமநிவர்த்தகமென்றது -"நேடஂரஜிதஂ" (நேதம்ரஜிதம்) என்றத்தைப்பற்ற.

"தாங்கள் தங்கள்" இத்யாதிக்சவதாரிகை (முதற்பாட்டிலேயித்யாதி) ஓரர்த்தம்-நமஶ்ஶப்தார்த்தம். யத்வா, இத்தால்சொல்லிற்றுயிற்றேதென்ன (முதற்பாட்டிலேயித்யாதி) என்னுதல். இங்கேசொல்லுகிறுர்-வ்யாக்யாதமான "வேங்கடங்கள்" என்கிறவாக்யத்திலே சொல்லுகிருனென்றபடி.

ஸிம்ஹாவலோகநந்யாயேந, மேல்வினைமுற்றவும் சாராவாகில் அவற்றுக்குப்போக்கடியேதென்ன (கடலுக்கித்யாதி) யத்வா, ஆபிமுக்யம்பண்ணினமாத்ரத்திலே பூர்வோத்தராகங்களை க்ஷமிக்குமோவென்ன; க்ஷமிக்கிறமாத்ரமன்றிக்கே சத்ருக்கள்மேலே போக்குமென்கிறுர் (கடலுக்கித்யாதி) என்றுமாம். ஆபிமுக்யம் பண்ணினமாத்ரத்திலே யிவன்பண்ணினதோஷங்களை மறக்குமென்கைக்கோணாஹ்ருபமருளிச்செய்கிறுர் (இவ்விடத்திலேபட்டரித்யாதி) இவ்விடத்திலே -"அவன் நாலடிவரநின்றவாறே அநந்தரத்தே யுன்விரோதிகளைச்சொல்லாயென்றுன்" என்றவிடத்திலே. கடலுக்கம்புதொடுத்த ப்ரஸங்கத்திலே இதிவார்த்தை. மொட்டைத்தலையன் - மழுங்கல்தலையன். காலை-விற்காலை. கோலை-அம்பை. நாமித்தைவிடவென்றுரிறே என்றவநந்தரம் - "முதற்பாட்டிலேசொல்லவேண்டுவது" இத்யாதி வாக்யமநுஸந்தேயம்.

இதுதான் - விரோதிநிவ்ருத்திதான். உத்தேஶ்யத்தோபாதி - பலத்தோபாதி. "தாங்கள்" இத்யாதிக்கு-தங்களுக்கு ஸுகருபமான ஸ்வேச்சாவிஹாரங்களைச்செய்வாரென்றர்த்தமாறுலோவென்ன் (தாங்கள் தங்களுக்கு நன்றுன்ப்ரதிபந்நத்தையித்யாதி) (அதிகாரியைக்குறித்துச் சொல்லுகையாலேயிதி) உபதேஶ்யமுமதிகாராநுகுணமாயிருக்கவேணுமென்றுகருத்து. ஆறுல், "தாங்கள்" என்னவமையாதோ, "தங்கட்கு" என்ற த்விருக்திக்கு ப்ரயோஜநமேதென்ன (அதிகாரிவைலக்ஷண்யமுமித்யாதி) யத்வா, "நல்லன" இத்யத்ர -கைங்கர்யமேவவிவக்ஷிதமென்னுமதுக்கு சம்வாதம் (அதிகாரிவைலக்ஷண்யமுமித்யாதி) என்னுதல். தாத்பர்யஸித்தசப்தார்த்தம் (இதரவிஷயங்களித்யாதி)

எங்ஙனேயாகநினைத்தென்றது - எந்தஸாதநாநுஷ்டாதாக்களாக நினைத்தென்னுதல், எந்தவதிகாரிகளாக நினைத்தென்னுதல். இந்தசங்கதி -"நமோவெனல்" என்றத்தைப்பற்ற. 'அதாவது-அல்பாநுகூல்யருசகோக்தியையுடையவர்களுக்கென்றபடி. "நல்லனவேசெய்வார்" என்கிறபேர் எப்படிப்பட்டவர்களென்னிலென்று நிஷ்க்ருஷ்டார்த்தம். "வேங்கடத்துறைவார்க்கு" என்கிறவாக்யமும்- நமஶ்ஶப்தார்த்தமென்கிறுர் (வேங்கடத்துறைவார்க்கித்யாதி) சதுர்த்தியினர்த்தம்- அகாராத்பாலுப்தசதுர்த்தியினர்த்தம்; "ஶகாராஶ்யாமெயெவஸ்வஹெஶமஹ்யம்ந" (அகாரார்த்தாயைவஸ்வமஹமதமஹ்யம்ந) என்றுரிறேபட்டர். (உக்திமாத்ரமேயமையுமிதி) "நஜெதெவ்வயொஸ்யா நஜகஸ்ஶயா.நிவதஃ।தஸ்ய

ரூ:பொஹவெி்ஹாகஃ" (நமஇத்யேவயோப்ரூயாந்மத்பக்தஸ்ஸ்ரத்தயாந்விதஃ। தஸ்யாகூயோபவேல்லோகஃ) என்று, ப்ரூயாத் என்று - உக்திமாத்ரத்தையேசொல்லிற்றிறேயென்றகருத்து. (அல்பமாகிலுமிவன்றனக்கருமையாயிருக்குமோவென்னிலென்றது) ஔஷதஸேவை அல்பமாகிலுமருமையாகக்காண்கையாலே. (ஸுலபகம்) ஸுலபகமாம்.

ஸுலபமானால் "சமந்தார்கட்கு" என்கிறதென்னென்ன; த்ரோதாபரிஹரிக்கிருர் (பெறுகிறவித்யாதி) நேர்த்தியில்-ப்ரயாசத்தில். முந்தினநிர்வாஹத்வயமும்-ஆழ்வாரபிப்ராயத்தாலேயாய், முந்தினது-க்ஷேபோக்தி; இரண்டாவது-தத்த்வகதநத்தைப்பற்ற; மூன்ருவது - பகவதபிப்ராயத்தாலே. அவன்கினை வப்படியிருக்குமோவென்ன (பூமிஷ்ட்டாமித்யாதி) யஜுஷி "கூஹெநய"(அக்நேநய)இத்யாதி. (பூமிஷ்ட்டாந்தே நமஉக்திம்விதேம) தே-பூயிஷ்ட்டாம்நமஉக்திம்விதேம. நம இத்யுக்திமாத்ரமபிபகவதபிப்ராயேணபூயிஷ்ட்டம்பவதீத்யர்த்தஃ. நினைத்திருக்கிறமாத்ரமன்றிக்கே அநுஷ்ட்டாநமுமுண்டென்கிருர் (த்ரௌபதியித்யாதி) "ெகாவிஂெதியதாகூந்தகூஷாௗேஸாவாஸிநம। ரூணஂவ்ரவூரிவமெஹூஃயாளுாவஸவ௰தி" (கோவிந்தேதியதாக்ரந்தத்க்ருஷ்ணுமாம்தூரவாஸிநம்। ருணம்ப்ரவ்ருத்தமிவமேஹ்ருதயாந்நாபஸர்ப்பதி) இதி உத்யோகபர்வண்யே கோநபஞ்சாஶேத்ருதராஷ்ட்ரம்ப்ரதிசஞ்சயோக்தம் க்ருஷ்ணவசநம். நிந்தியா- நிந்தித்து. கொண்டாடா-கொண்டாடி. தூரவாஸிநமென்று - தன்னைநிந்தியாவென்றபடி. பூர்வவாக்யவிவரணம் (அப்போதித்யாதி) "ருணஂவ்ரவூஂ" (ருணம்ப்ரவ்ருத்தம்) இத்யாதியைப்பற்ற (உள்ளதனையுமிழவித்யாத்) இழவுபடுகிறதென், கார்யஞ்செய்யவில்லையோவென்ன (நம்பேரித்யாதி) க்ருஷ்ணனையொழியத் திருநாமமே கார்யஞ்செய்யவற்ருேவென்ன (அஸங்கதமாகவித்யாதி)

தாங்கள் தங்கட்குநல்லனவேசெய்வாராய் வேங்கடத்துறைவார்க்கித்யாரப்ய, சமந்தார்கட்கு-கடங்களும் மெய்ம்மேல்வினைமுற்றவும்-வேம் என்ருளவந்தார்நிர்வாஹத்திலந்வயம். முன்புபோலே தாங்களித்யாரப்ய, அதுசமந்தார்கட்கு-கடங்கள்-வேம், மேல்வினைமுற்றவும்சாரா, இதுமெய்யென் றெம்பெருமானர் நிர்வாஹத்திலந்வயம். நமோவெனல் - நமோவாசகத்தை. நமஸ்ஸப்தத்தையித்யர்த்தஃ. "ஆம், கடமை, அது," என்கிறமூன்றுபதமும்- "நமோவெனல்" என்கிறதுக்குவிசேஷணம். அதாவது-வேங்கடத்தில் நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கு அநந்யார்ஹமாம்படி ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியுக்தமான வத்யந்த பாரதந்த்ர்யஸூசகமாய் ஸுலபமாய் ப்ராப்தமாய் "ஹூயிஷாஂதெநஉக்திஂவிெயஃ" (பூயிஷ்டாந்தேநமஉக்திம்விதேம) என்ற ஶ்ருதிப்ரஸித்தமாயிருக்கிற நமோவாசகத்தையதிகாரிவிசேஷத்யோதகமாம்படி சமந்தவர்களுக்கென்று சப்தார்த்தம் .........*

---

## ஏழாம்பாட்டு.

சமன்கொள்வீடுதரும்தடங்குன்றமே.

சமந்துமாமலர்நீர்சுடர்தூபங்கொண்
டமர்ந்துவானவர்வானவர்கோனொடு
நமன்றெழுந்திருவேங்கடநங்கட்குச்
சமன்கொள்வீடுதருந்தடங்குன்றமே.

## ஆறாயிரப்படி.

( சுமந்து ) இஸ்ஸம்ருத்தி பெறுகைக்குத் திருவேங்கடமுடையானை யிப்படி வருந்தவேணுமோ, பரமப்ராப்யபூத பகவத் கைங்கர்யாபேக்ஷராயிருந்த நம்பக்கல் குணநிரூபணபூர்வகமாக நமக்கந்த ப்ராப்யத்தைத் தவிருகையாகிற இப்பழுதொன்றும் வாராதபடி நிர்ஹேதுகமாகத் திருமலைதானே, * அயர்வறு மமரர்களுக்குக் கொடுத்தாப்போலே திருவேங்கடமுடையான் திருவடிகளே தான்செய்யும் சேஷவ்ருத்தி யெல்லாம் நமக்குத் தருமென்கிறார்................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம் ப்ரஸ்துதமான வாஶ்ரயணத்தினுடைய காஷ்ட்டாஸூசநார்த்தமாக அவன் நின்றருளின திருமலைதானே பரம ஸாம்யாபத்தியைத் தருமென்கிறார்.

மா - ஶ்லாக்யமான. மலர் - புஷ்பங்களையும். மா - நன்றான. நீர் - ஜலத்தையும். மா - விலக்ஷணமான. சுடர் - தீபத்தையும். மாதூபம் - அகருதூபத்தையும். சுமந்துகொண்டு - ஸாதரமாகவஹித்துக்கொண்டு. அமர்ந்து - ப்ரயோஜநாந்தரங்களில் பரகுபரகற்று அநந்யப்ரயோஜநரா யமர்ந்து. வானவர் - நித்யஸூரிகள். வானவர்கோனொடும் - தங்களுக்கு நிர்வாஹகரான சேனைமுதலியாரோடேகூட. நமன்று - அத்யந்த பாரதந்த்ர்ய ப்ரகாசகமான நமநத்தைப்பண்ணி. எழும் - ஸ்வரூபலாபம்பெற்று க்ருதார்த்தராம்படியாய். திருவேங்கடம் - திருவேங்கடமென்று திருநாமத்தையுடைத்தாய். நடம்- லக்ஷ்மீஸஹாயனான ஸர்வேஶ்வரன் ஸ்வைரவிஹாரம்பண்ணும்படி ஸுவிஸ்தீர்ணமான. குன்றம் - திருமலை. நங்கட்கு- ப்ராப்யருசியையுடைய நமக்கு. சமன் - பரமஸாம்யாபத்தியை. கொள் - உடைத்தான. வீடு - மோக்ஷாநந்தத்தை. தரும் - தரும்.

பகவச்சேஷதைகரஸமான ஸ்வஸாம்யத்தை மோக்ஷரூபபலமாகத் தருமென்றுமாம். நமன்று - வணங்கி. "வானவர்வானவர்கோனொடுமென்று - ப்ரஹ்மாதிகளோடுகூடினதேவர்கள்" என்றுஞ் சொல்லுவர்...............................*

---

## ஈடு - ஏழாம்பாட்டு.

முதற்பாட்டில் ப்ரார்த்தித்த கைங்கர்யத்தைத் திருமலை தானே தருமென்கிறார். ப்ராப்திபலமாய் வருமதிறே கைங்கர்யம்.

( சுமந்தித்யாதி ) மாமலர், நீர், சுடர், தூபம், இவற்றைச்சுமந்து கொண்டென்னவுமாம்; அன்றிக்கே, மாமலர் - சுமந்து, நீர்சுடர்தூபங் கொண்டென்னவுமாம். ஒரு கருமுகைமாலையேயாகிலும், "இத்தைக்கண்டருளக்கடவனே, சாத்தியருளக்கடவனே, நம்மைவிசேஷகடாக்ஷம் பண்ணக்கடவனே" என்றிருக்கிற இவர்களாதராதிசயத்தாலே கனத்து

த்தோற்றிற்றுகவுமாம் ; அன்றிக்கே, அநுகூல ஸிட்டதாகையாலே ஸர்வேஸ்வரன் றனக்குக் கனத்துத் தோற்றிற்றுகவுமாம். ஸ்ரீபுருஷோத்தமமுடையானுக்கு ராஜபுத்ரன் செண்பகப்பூக்கொண்டு சாத்தினபடியை நினைப்பது. அதாவது - ஸ்ரீபுருஷோத்தமமுடையான் செண்பக முகந்து சாத்துவர் ; சில ராஜபுத்ரர்கள் செண்பகங்கொண்டுசாத்தத்தேடி, முன்பே பூவெல்லாம் விற்றுப்போய் ஒருபூவிருந்ததுகடையிலே ; அப்பூவுக்குச் செருக்காலே ஒருவர்க்கொருவர் த்ரவ்யத்தைப்போரவேற்றி இவர்களிலொருவன் நினைக்கவொண்ணுதபடி த்ரவ்யத்தைப்போரஇட்டுக்கொண்டுவந்து சாத்தினுன் ; அன்றிரா அவன் ஸ்வப்நங்காண்கிருன் ; "நீயிட்டபூ எனக்குக் கனத்துச் சுமக்க வொண்கிறதில்லை" என்றருளிச்செய்தார். ( அமர்ந்தித்யாதி ) நித்யசூரிகளேயும் ஸ்ரீசேனுபதியாழ்வானேயும் சொல்லிற்றுகவுமாம், தேவர்களேயும் ப்ரஹ்மாவையும் சொல்லிற்றுகவுமாம். அமர்ந்து - பொருந்தி. ப்ரஹ்மாதிகளேச் சொல்லிற்றனபோது, அவர்கள் ப்ரயோஜநாந்தரபரரோயாகிலும் அவர்களேயு மநந்யப்ரயோஜநராக்குமாயிற்று இது தன்னின்ஸ்வபாவம். இப்படி சமாராதநோபகரணங்களேக்கொண்டு, நமன்றெழுவர்களாயிற்று - வணங்கிக்கொண் டெழுவர்களாயிற்று. "துயரறுசுடரடிதொழுதெழு" என்கிற தம்வாசனையவர்களுக்குமுண்டென் றிருக்கிருர். ( நங்கட்கு ) கைங்கர்ய ருசியை யுடையநமக்கு. ( சமன்கொள்வீடுதரும் ) "ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி" ( ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி ) என்றும், "நிரஞ்ஜநஃபரமம்ஸாம்யமுபைதி" ( நிரஞ்ஜநஃபரமம்ஸாம்யமுபைதி ) "மமஸாதர்ம்யமாகதாஃ" ( மமஸாதர்ம்யமாகதாஃ ) "தம்மையேயொக்கவருள்செய்வர்" என்றுஞ்சொல்லுகிறபடியே அவனேடு ஸாம்யாபத்திருபமான மோக்ஷத்தைத்தருமென்னுதல் ; அன்றிக்கே, "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" ( ஸ்வேநரூபேணபிநிஷ்பத்யதே ) என்கிறபடியே, இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபமான மோக்ஷத்தைத் தருமென்னுதல் ; அன்றுனுமன்றிக்கே, திருமலேதானே தன்னேடொத்த பேற்றைப் பண்ணித்தருமென்னுதல். திருவேங்கடமுடையானேத் திருமுடியிலே யெழுந்தருளுவித்துக்கொண்டிறே திருமலேயாழ்வார்தாமிருப்பது, அப்படியே "நின்செம்மாபாதபற்புத்தலேசேர்த்து" என்று இவர் ப்ரார்த்தித்தபேற்றை ( தடங்குன்றமே - தரும் ) திருமலேயாழ்வார் தாமேதந்தருளுவர். (தடங்குன்றம்) திருவேங்கடமுடையானுக்கு ஸ்வைரஸஞ்சாரம் பண்ணலாயிருக்கும்படி யிடமுடைத்தாயிருக்கை. [ ஸாநுபகஃ ] ( ஸாநுபகஃ ) வீறுடைத்தாயிருக்கை. [ கிரிராஜோபமஃ ] ( கிரிராஜோபமஃ ) திருமலே

யோடொத்திருக்கை. [ யஸ்மிநுவஸதி ] ( யஸ்மிந்வஸதி ) அதுக்கு ஹேதுசொல்லுகிறது. [ காகுத்ஸ்த்தஃ ] ( காகுத்ஸ்த்தஃ) போகத்துக்கேகா ந்தமான ஸ்த்தலந்தேடி யநுபவிக்கும் குடியிலே பிறந்தவர்விடாதே வி ரும்பி வர்த்தித்தாரொன்பது யாதொன்றுண்டு. [ குபேரஇவநந்தநே ] ( குபேரஇவநந்தநே ) துஷ்டஸத்த்வ ப்ரசுரமானதேசத்திலே, செருக்க னனவைஶ்ரவணன் போதுபோக்குகைக்காகத் தன்னுத்யாநத்தி லுலாவு மாபோலே சஞ்சரித்தார்.......................... .................*

## ஜீயர் அரும்பதம்

ஏழாம்பாட்டு. ( சுமந்தித்யாதி ) “ வீடுதரும் ” என்றால் - ப்ராப்தியைத் தருமென்றன்றோ சொல்லும், கைங்கர்யத்தைச் சொல்லும்படி யென்னென்ன ( ப்ராப்திபலமாயித்யாதி )

ப்ரதமநிர்வாஹே, “ சுமந்துகொண்டு ” என்று - முழுச்சொல். மாலைசு மையாமோ, “ சுமந்து ” என்கிறதென்னென்ன ( ஒருகருமுகையித்யாதி ) அநு கூலரிட்டது கனத்துத் தோற்றுமென்னு மதுக்கு ஸம்வாதம் ( ஸ்ரீபுருஷோத்தம மித்யாதி )

அமர்ந்து - அநந்யப்ரயோஜநராய். ப்ரஹ்மாதிகளுக்கு அமர்கைகூடுமோ வென்ன ( ப்ரஹ்மாதிகளையித்யாதி ) இது தன்னின் ஸ்வபாவம் - இந்நிலத்தின் ஸ்வபாவம்.

நமன்று - வணங்கி. ப்ரயோஜநாந்தரபரரா “ எழும் ” என்கிறதென்னெ ன்ன ( துயரறுவித்யாதி ) கீழே - திருமலையின் ஸ்வபாவத்தாலே யநந்ய ப்ரயோ ஜநரொன்றுவைத்து, இங்கே தம்வாஸனை யென்றது - அவர்களுடைய ஸ்வாபாவி காகாரத்தைப்பற்ற.

“ சமன் ” என்றதுக்கு மூந்தினவர்த்தமும் மூன்றுமர்த்தமும் - ஸாம்ய மென்றபடி. ( சமன்கொள்வீடு ) சமனைக்கொண் டிருக்கிற - ஸாம்யாபத்திருபமா ன, மோக்ஷத்தையித்யர்த்தஃ. இரண்டாமர்த்தம் - தகுதியிலேயாய், ஸ்வரூபத்து க்கு ஸத்ருஶமான மோக்ஷத்தையென்றபடி. ப்ரஹ்மைவ என்றது - “ நிரஞ்ஜநஃ பரமம்ஸாம்யமுபைதி ” ( நிரஞ்ஜநஃபரமம்ஸாம்யமுபைதி ) இத்யாத்யநு குணமாக ப்ரஹ்மேவ என்றபடி. “ விஷ்ணுரேவபூத்வா ” ( விஷ்ணுரேவபூத் வா ) என்றவிடத்தில் - விஷ்ணுரிவ என்று கொண்டாற்போலே. “ ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி ” ( ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி, ) “ நிரஞ்ஜநஃ ” ( நிர ஞ்ஜநஃ ) இத்யாதிசமுண்டோபநிஷதி. “ இதம்ஜ்ஞாநமுபாஶ்ரித்யமமஸாதர்ம்ய மாகதாஃ । ஸர்கேபிநோபஜாயந்தேப்ரளயேநவ்யதந்திச ” ( இதம்ஜ ஞாநமபாஶ்ரித்யமமஸாதர்ம்யமாகதாஃ । ஸர்க்கேபிநோபஜாயந்தேப்ரளயேநவ்ய தந்திச ” இதிகீதாஸு சதுர்த்தஸே. ( ஸ்வேநரூபேணேத்யாதி ) சாந்தோக்யே. கீழ்வாக்யவிவரணம் ( திருவேங்கடமுடையானையித்யாதி )

அவதாரணார்த்தம் ( திருமலையாழ்வாரித்யாதி ) " தடம் " என்றதுக்குபாவம் ( திருவேங்கடமுடையானுக்கித்யாதி ) " ஸ்வைரஸஞ்சாரம்பண்ணலாயிருக்கும்படி " என்றதுக்கு - ஸம்வாதமாதல், த்ருஷ்டாந்தமாதல் ( ஸுபகஇத்யாதி ) நந்தநேகுபேர இவகாகுத்ஸ்த்தோ யஸ்மிந்வஸதி, கிரிராஜோபமோ ஸௌசித்ரகூடோ கிரிஸ்ஸுபகஇத்யந்வய:. ஸுபக: - பாக்யவாநித்யர்த்த:. இதமயோத்யாகாண்டேஷ்டநவதிதமே. வீறு - ஶ்லாக்யதை. அதுக்கு - திருமலையோடே யொத்திருக்கைக்கு. " வஸதி " என்றவர்த்தமாநார்த்தம் ( விடாதேயித்யாதி ) ( யாதொன்றுண்டு ) அது ஹேதுவென்று கூட்டுவது. துஷ்டஸத்த்வப்ரசுரமான தேசத்திலே யென்றதுக்கு - ஸஞ்சரித்தாரென்றத்தோடேயந்வயம். செருக்கனான - மத்தனான. நந்தயதீதி - நந்த: இதிவ்யுத்பத்த்யா, நந்தநஶப்தேந - குபேரோத்யாநமுச்யதே.

வானவர்வானவர்கோனொடும் - மாமலரென்றுதொடங்கி, அமர்ந்து - நமன்றெழும்படியிருக்கிற - தடங்குன்றமான - திருவேங்கடம்நங்கட்கு சமன்கொள்வீடுதருமித்யந்வய:. மாமலர் - ஶ்லாக்யமானபுஷ்பம். சுடர் - தீபம். எழும் - ஸ்வரூபம்பெற்றுஜ்ஜீவிக்கும்படியிருக்கிற; திருமலைக்கு விசேஷணம்.

ஸ்ரீபுருஷோத்தமமுடையானுக்கு ராஜபுத்ரன் செண்பகப்பூக்கொண்டுசாத்தினகதையாவது - ஸ்ரீபுருஷோத்தமத்திலே கடைவீதியிலே யொருராஜபுத்ரனும் ஒரு செட்டிப்பிள்ளையுமாக வொருத்வாதசிநாள் அந்தியம்போதாகக் கூடவாராநிற்க, ஒருகடையிலே யொருசெண்பகப்பூவைக்கண்டு "இதுஸ்வாமிக்காகவேணும்" என்று " இதுநான்கொண்டுசாத்துவன்", " நான்கொண்டுசாத்துவன் " என்றொன்றுக்கொன்றிசலி, அவன் " ஒருகாசுகொடுக்கிறேன் " என்ன, " நானிரண்டுகாசுகொடுக்கிறேன் " என்ன, இங்ஙனே கோடிதநத்தளவாகவேற்ற, அவ்வளவிலே செட்டிப்பிள்ளை யிளைத்துக் கைவாங்க, ராஜபுத்ரன் தநமுடையவனுகையாலே யந்தத்ரவ்யத்துக் கந்தப் பூவைக்கொண்டு ஸ்ரீபுருஷோத்தமமுடையானுக்குச் சாத்த, அவனுமவ்வளவிலே திருவுள்ளமுகந்து " ராஜபுத்ரன் நமக்காதரத்தோடேயிட்டபூச்சுமக்கவொண்கிறதில்லை"என்று ஸ்வப்நத்திலேதிருவுள்ளமாயருளினாராம்.

---

## எட்டாம்பாட்டு.

குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவ
னன்றுஞால மளந்தபிரான்பரன்
சென்றுசேர்திரு வேங்கடமாமலை
யொன்றுமேதொழ நம்வினையோயுமே.

### ஆ று யி ர ப் ப டி.

( குன்றமேந்தி ) ஸ்வரூபகுண சேஷ்டிதாதிகளெல்லாவற்றாலும் ஸ்வஸ்யபரஸ்யசநிரதிசயபோக்யபூதனான வெம்பெருமானுக்குங்கூட பர

மப்ராப்யமான திருமலை, தான் வேறொன்றைத் தரவேணுமோ, தானே பரமப்ராப்யமன்றோ; ஆதலால் திருமலை தன்னையே யநுபவிக்க, நம்முடைய க்லேஶமெல்லாம் போமென்கிறார்.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஏவம்பூதமான திருமலையை யநுபவிக்க, ப்ராப்திப்ரதிபந்தகங்கள் ஸ்வயமேவ நஶிக்குமெனகிறார்.

குளிர்மழை-கன்மாரியாலே கோகோபீஜநங்களீடுபட்டவன்று. குன்றம்-ஒருமலையை. ஏந்தி. சுமந்து. காத்தவன்-காத்தவனாய். அன்று-மஹாபலியாலே அபஹ்ருதமானவன்று. ஞாலம்-பூமியை. அளந்த-அளந்து வ்யாபரித்து. பிரான்-அநந்யார்ஹமாக்கிக்கொண்ட வுபகாரகனான. பரன்-பரமசேஷியானவன். ஒருமலையை மேற்கொண்டு ரக்ஷிக்கலாமென்றும், நின்றவிடத்தேநின்று ரக்ஷிக்கலாமென்றும், சென்று-சென்று. சேர்-சேர்ந்த. திருவேங்கடம்-திருவேங்கடமாகிற. மா-பெரிய. மலை-திருமலை. ஒன்றுமே-ஒன்றையுமே. தேசிகனளவுஞ்செல்லவேணுமென்கிற நிர்ப்பந்தமற்று, தொழ-அநுபவிக்க. நம்-நம்முடைய. வினை-தேசிகாநுபவ ப்ரதிபந்தகபாபங்கள். ஓயும்-தன்னடையேகழலும்.................................*

---

## ஈடு - எட்டாம்பாட்டு.

"வேங்கடங்கள்" என்கிறபாட்டிற்சொன்ன விரோதி நிவ்ருத்தியையும் திருமலையாழ்வார் தாமே பண்ணித்தருவரென்கிறார். ஒருபுருஷார்த்தத்தைத்தரவேணுமோ, திருமலைதானே நமக்குத்தேஶ்யம்; சேஷிக்குத் தேஶ்யமானது சேஷபூதனுக்குத் தேஶ்யமாகச் சொல்லவேணுமோவென்கிறாராகவுமாம்.

(குன்றமேந்திக்குளிர்மழைகாத்தவன்) என்றும் துஃகநிவ்ருத்திக்குப்பரிகரம்மலையேயாயிற்று. "஗ோ஗ோபீஜநஸங்குலம்।அதீவார்தம்" (கோகோபீஜநஸங்குலம்-அதீவார்த்தம்) என்கிறபடியே, பசுக்களுமிடையரும் வர்ஷத்திலே தொலையப்புக, கண்ணுக்குத்தோற்றிற்றொருமலையைப்பிடுங்கி ஏழுநாளொருபடிப்படத்தரித்துக்கொண்டுநின்று அவற்றை ரக்ஷித்தவன். (அன்றித்யாதி) ஒரு ஊருக்காக வுதவினபடிசொல்லிற்றாயிற்று-கீழ், ஒருநாட்டுக்காக வுதவினபடிசொல்லுகிறது - மேல், விரோதியான மஹாபலியாலே பூமியபஹ்ருதையானவன்று, எல்லை நடந்து மீட்டுக்கொண்ட வுபகாரகன். சர்வரக்ஷகனுமாய் ஆஶ்ரிதரக்ஷகனுமாயிருக்கிறபடி சொல்லுகிறது. (பரன்) சர்வஸ்மாத்பரன். (சென்றுசேர் திருவேங்கடமாமலை) அவன் "தனக்குத்தேஶ்யம்" என்றுவந்து வர்த்திக்கிறதேசம். (ஒன்றுமேதொழ) உள்ளேயெழுந்தருளியிருக்கிறவன் றானும் வேண்டா, திருமலையாழ்வார் தாமேயமையும். (நம்வினையோயு

மே ) "ப்ராப்யத்தைப்பெற்றிலோம்" என்கிறவினையென்னுதல். "வேங்கடங்கள்" என்கிறபாட்டிற்சொன்ன ப்ராப்திப்ரதிபந்தகங்களைப் போக்குமென்னுதல்.......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (குன்றமித்யாதி) "நம்வினையோயும்" என்றதின்ர்த் தத்வயாநுகுணமாக வவதாரிகாத்வயம். த்விதீயாவதாரிகைக்கு - கீழ்ப்பாட்டோடே சங்கதி. இதுக்கடியேதென்ன (சேஷிக்கித்யாதி) "சென்றுசேர்" என்றதைப்பற்ற (சேஷிக்குத் தேஶ்யமென்றது.

"திருவேங்கடமாமலை" இத்யாதிகளையுங் கடாக்ஷித்துபாவம் (என்றும் ஐகவிவ்ருத்திக்கித்யாதி) தொலைய-ஈஶிக்க.

அவரோ ஹக்ரமேண பதத்வயபலிதம் (சர்வரக்ஷகனுமாயித்யாதி) யத்வா, ஆஶ்ரிதனென்றது-இந்த்ரனையாதல்; "ரக்ஷிதாஜீவலோகஸ்ய - ஸ்வஜநஸ்ய ரக்ஷிதா" (ரக்ஷிதாஜீவலோகஸ்ய-ஸ்வஜநஸ்யசரக்ஷிதா) என்னக்கடவதிறே.

"ஒன்றுமே" என்கிறவவதாரணத்துக்கர்த்தம் (உள்ளேயித்யாதி)

த்விதீயாவதாரிகாநுகுணம் ப்ரதமாவதாரிகாநுகுணஞ்சக்ரமேணபாவமாஹ (ப்ராப்யத்தை யித்யாதிவாக்யத்வயேந) முந்தினவர்த்தத்திலே, "வினை" என்று-லக்ஷணயா, பாபகார்யமான து:கத்தைச்சொல்லுகிறது. ஓயும்-விட்டுக்கழியும்.

சென்றுசேர்-வந்துவர்த்திக்கிற. மாமலை-பெரியமலை. "ததஸ்தத்கோகுலம் ஸர்வம் கோகோபீஜநஸங்குலம், அதீவார்த்தம் ஹரிர்த்ருஷ்ட்வா மைத்ரேயாசிந்தயத்ததா" (ததஸ்தத்கோகுலம்ஸர்வம்கோகோபீஜநஸங்குலம், அதிவார்த்தம்ஹரிர்த்ருஷ்ட்வாமைத்ரேயாசிந்தயத்ததா) இதிபஞ்சமேம்ஸே ஏகாதஸே. க்ரமேணாந்வய:..............................................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

---

ஓயுமூப்புப்பிறப்பிறப்புப்பிணி
வீயுமாறுசெய்வான்திருவேங்கடத்
தாயனுண்மலராமடித்தாமரை
வாயுள்ளும்மனத்துள்ளும்வைப்பார்கட்கே.

## ஆறுயிரப்படி.

(ஓயுமூப்பு) திருவேங்கடமுடையானன்றோ ப்ராப்யம், திருமலையே ப்ராப்யமென்று சொல்லுவானென்னென்னில்; திருவேங்கட

முடையானுடைய ப்ராப்யத்வமும் திருமலையோடுள்ள சம்பந்தத்தாலே வந்ததாதலால் திருமலையே ப்ராப்யமென்கிறார்.........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தேசிகனான திருவேங்கடமுடையானுக்கும் விரோதி நிவர்த்தகத்வம் தேசஸம்பந்தத்தாலே யென்கிறார்.

நாண்மலராம் - "நாட்பூமலர்ந்தது" என்னலாம்படி ஸுகுமாரமான. அடித்தாமரை - திருவடித்தாமரைகளை. வாயுள்ளும் - வாக்குள்ளும். மனத்துள்ளும் - நெஞ்சினுள்ளும். வைப்பார்கட்கு - வைக்குமவர்களுக்கு. ஒயும் - பலஹாநியைப்பிறப்பிக்கக்கடவ. மூப்பு - மூப்பு. பிறப்பு - அந்த சரீரத்துக்கடியானபிறப்பு. இறப்பு - அதின்விநாசம். பிணி - மூப்போடு பிணைந்துவருகிற வ்யாதிகள். வீயுமாறு - இவற்றை நசிக்கும்படி. செய்வான் - பண்ணுமவன். திருவேங்கடத்து - திருமலையிலே வர்த்திக்கிற. ஆயன் - க்ருஷ்ணன்.................................*

---

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

நம்விரோதியையும்போக்கி ப்ராப்யத்தையும் திருமலையாழ்வார் தாமே தருவரென்றார் - கீழிரண்டுபாட்டாலே; இப்படி விரோதிபாபங்களைப்போக்கி ப்ராப்யத்தைத் தருகைக்குத் திருமலையாழ்வாரெல்லாம் வேணுமோ, திருமலையாழ்வாரிலே ஏகதேசமமையாதோ வென்கிறாரிதில். (ஏகதேசமென்கிறது அப்பனை; ) "வடமாமலையுச்சி" என்னக்கடவதிறே - திருவேங்கடமுடையானை.

(ஒயுமூப்புப்பிறப்பிறப்பு) ஜந்மஜராமரணாதிகளோயும். இப்போது, ஒயுமென்கையாலே - முன்பநாதிகாலமுச்சி விடும்விடாதே போந்ததென்னு மிடந்தோன்றுகிறது. பிணிவீயுமாறுசெய்வான் - திருவேங்கடத்தாயனென்று - அவனோடே யந்வயம். பிணிவீயுமாறு செய்கைக்காகத் திருமலையிலே நிற்கிறவன், "இவர்கள் பிணியுமிங்ஙனே சென்றிடுவதாக" என்றிருந்தானாகில் கலங்காப்பெருநகரத்திலே யிரானோ. இங்கு, பிணியென்கிறது - சரீரசம்பந்த நிபந்தநமாக வருமவையெல்லாவற்றையும் நினைத்து. கீழே, (ஒயுமூப்புப்பிறப்பிறப்பு) என்றதாகில், இனி (பிணிவீயுமாறுசெய்வான்) என்றதுக்குக் கருத்தென்னென்னில் ; இவனுடைய இங்குத்தைதுஃக நிவ்ருத்தியைப்பண்ணிக் கொடுக்கைக்காகவென்கை. ஆக, துஃகத்தைப்போக்கும் ஸ்வபாவனென்கை. அவனேவந்து போக்கானாகில் இவ்வெலி யெலும்பனுக்குப்போக்கிக் கொள்ளப்போகாதிறே. (நாண்மலராமித்யாதி) அவன் கால்காண, "மூப்புப்பிறப்பிறப்புப்பிணி" என்கிற வினையெல்லாம் நசிக்கும். இப்வேப்பங்குடி நீரா

யிற்று குடிக்கச்சொல்லுகிறது விரோதிபோகைக்கு. செவ்விப்பூவைத் தலையிலேவைப்பானைப்போலே யிருப்பதொன்றிறே. (வாயுள்ளுமித்யாதி) இவையிரண்டும் - காயிகத்துக்கு முபலக்ஷணமாய், திருவடிகளை மனோவாக்காயங்களாலே யநுஸந்திப்பார்க்கு. வாயுள்வைக்கையாவது- "ஓவாதுரைக்குமுரை" என்கிறபடியே யுரைக்கை. மனத்துள்வைக்கையாவது - மறவாதிருக்கை. இப்படி கரணங்களுக்கடைத்த காரியங்களைக் கொள்ளவே, ஸ்வரூபவிரோதியாய் வந்தேறியானவை தன்னடையே போம்.

பிணிவீயுமாறுசெய்வான் திருவேங்கடத்தாயனுடைய நாண்மலராமடித்தாமரை வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கு - மூப்புப் பிறப்பிறப்பு - ஓயும்..........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (ஓயுமித்யாதி) கீழே - சரமாவதியான திருமலையைப் பற்றினவர், ப்ரதமாவதியான திருவேங்கடமுடையானைச் சொல்லுவானென்னென்ன (இப்படிவிரோதீத்யாதி) ஏகதேசமோவென்ன (வடமாமலையித்யாதி) திருமொழி.

ஓயும் - விச்சின்னமாம், உச்சிவீடு - மத்யாஹ்னத்தில்விடுகை.

(அவனோடேயந்வயமென்றது) "பிணிவீயுமாறுசெய்வான்" என்றது - ப்ரதமைகவசநமாய், இவற்றைப்போக்கும் ஸ்வபாவனென்று திருவேங்கடத்தாயனுக்கு விசேஷணமென்றபடி. அமிந்ப்ரத்யயாந்தமாக வர்த்தாந்தரம் (பிணிவீயுமாறுசெய்கைக்காகவித்யாதி) "திருவேங்கடத்தாயன்" என்றதுக்குபாவம் (இவர்கள்பிணியுமித்யாதி) பிணிவீயுமாறு செய்கைக்காக வந்த திருவேங்கடத்தாயனை யாஸ்ரயித்தால் பிணிவீயுமென்ன வேண்டியிருக்க, "மூப்புப்பிறப்பிறப்பு. ஓயும்" என்கிறதென்னென்ன (இங்குப்பிணியித்யாதி) அதாவது - ஷட்பாவவிகாரங்களுக்கு முபலக்ஷணமென்றபடி. புநருக்தியை சங்கித்து பரிஹரிக்கிறார் (கீழேயோயுமித்யாதி) "து:கத்தைப்போக்கவேணும்" என்று ஸங்கல்பித்துக்கொண்டு வந்துநின்றானென்றபடி. "பிணிவீயுமாறு செய்கைக்காகத் திருவேங்கடத்தாயனானவனுடைய நாண்மலராம்" இத்யாரப்ய, வைப்பார்கட்கு - மூப்புப்பிறப்பிறப்பு - ஓயும் இத்யந்வய:. "வீயுமாறுசெய்வான்" என்று - ப்ரதமைகவசநமான பக்ஷத்தை விவரிக்கிறார். (ஆகது:கத்தையித்யாதி) ஆகவென்று - அன்றிக்கேயென்றபடி. அவன் வந்து போக்கவேணுமோ, இவனுற் போக்கிக்கொள்ள வொண்ணாதோவென்ன (அவனேயித்யாதி) எலியெலும்பன் - அல்பசக்திகன்.

"மூப்புப்பிறப்பிறப்பு" இத்யாரப்ய, "வைப்பார்கட்கு - மூப்புப்பிறப்பிறப்புப்பிணி - ஓயும்" என்றந்வய விவக்ஷயாபாவம் (அவன்கால்காணவித்யாதி) "நாண்மலர்" என்ற விசேஷணத்துக்குபாவம் (இவ்வேப்பங்குடியித்யாதி) இவ்வேப்பங்குடிநீரை - இதி வ்யங்க்யோக்தி:. "தாமரை - நாண்மலராமடியை" இ

த்யர்வயஃ. தாமரையினுடைய ஸத்யோவிகஸிதமான புஷ்பமென்னலாம்படி ஸுகுமாரமாய் நிரதிசயபோக்யமான திருவடிகளென்று சப்தார்த்தம். அப்படி வாங்மநஸ்ஸுகளிலே வைக்கைக்கு போக்யமா யிருக்குமோவென்ன (செவ்விப்பூவித்யாதி)

“வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கு - மூப்புப்பிறப்பிறப்பு - ஒழியும்” என்கிறவிடத்தில் - ஸாதநத்வசங்கையை பரிஹரிக்கிறார் (இப்படியித்யாதி)

அந்வயங்காட்டுகிறார் (பிணிவீயுமாறித்யாதி) மூப்பு - வ்ருத்தத்வம். பிணி - வ்யாதி. வீயுமாறு - நஶிக்கும்படி..........................................*

---

# பத்தாம்பாட்டு.

---

வைத்தநாள்வரையெல்லைகுறுகிச்சென்
றெய்த்திளைப்பதன்முன்னமடைமினோ
பைத்தபாம்பணையான்திருவேங்கட
மொய்த்தசோலைமொய்பூந்தடந்தாழ்வரே.

## ஆறாயிரப்படி.

(வைத்த) ஆதலாலிண்டெனச்சென்று திருமலையையநுபவியுங்களென்கிறார்...............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயபோக்யமான திருமலையை பரமப்ராப்யமாகப்பற்றுங்கோளென்று ஸ்வஜநத்தைக்குறித் துபதேசிக்கிறார்.

பைத்த-விரிகிறபணங்களையுடைய. பாம்பு-அநந்தனை. அணையான்-அணையாகவுடைய சர்வேஶ்வரன். திருவேங்கடம் - தத்ஸாரூப்யத்தாலே யாதரிக்கிறதிருமலையில். மொய்த்த-செறிந்த. சோலை-சோலையினுடைய. மொய்-அழகிய. பூ - பூக்களையுடைத்தான. தடம்-இடமுடைய. தாழ்வர்-திருத்தாழ்வரையை. வைத்த-உங்களுக்கு சங்கல்பித்துவைத்த. நாள்-நாளினுடைய. வரை-அவதியான. எல்லை - முதலெல்லையானது. குறுகி-உங்களைக்கிட்டி. எய்த்து - கரணங்களுக்கு பலஹாநிபிறந்து. இளைப்பதன்முன்னம்-அதடியாகநெஞ்சிளைப்பதற்குமுன்னே. சென்று - “போம்குமரருள்ளீர்புரிந்து” என்கிறபடியேசென்று. அடைமின்-ப்ராபியுங்கோள்.

தாழ்வர்-தாழ்வரை. மொய் - செறிவும், அழகும் ...........................*

---

## ஈடு - பத்தாம்பாட்டு.

ஆக, திருமலையாழ்வாரெல்லார்க்குமொக்க வுத்தேஶ்யமானபின்பு எல்லாருமொக்கத் திருமலையாழ்வாரை யாஶ்ரயியுங்கோளென்கிறார்.

(வைத்தநாள்வரையெல்லைகுறுகி) சர்வேஶ்வரனிச்சேதநனுக்கு சரீரஸம்பத்திலையக்கொடுத்தது நரகாவஹமானவிஷயங்களிருந்தவிட

ந்தேடிப்போகைக்கல்ல, திருமலைக்குப்போகைக்கென்றாயிற்று; "விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும்" (விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும்) என்னக்கடவதிறே. [ஸ்ருஷ்டத்வம்வநவாஸாய] [ஸ்ருஷ்டத்வம்வநவாஸாய] ஐயர்சொல்லிற்றுச் செய்யவேண்டுகையாலே பெருமாள்காட்டேற வெழுந்தருளாநின்றார், நானுங்கூட சேவித்துப்போவேனென்ன; அவர்காட்டிலே யெழுந்தருளாநிற்கப் படைவீட்டிலேயிருக்கைக்கோ! நாமும்மைப்பெற்றது, நீரிப்படிசெய்தீராகில் நானும்மைப்பெற்றப்ரயோஜநம்பெற்றேனாகிறேன். அவர்க்குயாதொருபோது துணைவேண்டிற்று, அப்போதுநீர் துணையாகைக்காகவன்றே நானும்மைப்பெற்றது. [ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே] [ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே] நீர் ஸுஹ்ருஜ்ஜநத்தின்பக்கல் ஸ்வநுரக்தரல்லீரோ, ஆகையாலே யெல்லார்க்கும் வேர்ப்பற்றான பெருமாளைநோக்கித்தாரீர். அன்றிக்கே, [ஸுஹ்ருஜ்ஜநே-ராமே] [ஸுஹ்ருஜ்ஜநே-ராமே] என்றாய், பெருமாள்பக்கல் பண்டேஸ்நேஹித்தன்றோ நீரிருப்பது, இப்போது "போம்" என்றுநானுமக்குச்சொல்லவேண்டியிருந்ததோ. [ராமேப்ரமாதம்மாகார்ஷீ:] [ராமேப்ரமாதம்மாகார்ஷீ:] இப்படியிருக்கிறவும்மை நியமிக்கவேண்டுவதொன்றுண்டு - ப்ரமாதத்தைப்பண்ணாதேகொள்ளும். என்றான், ப்ரமாதமென்னென்னில் [புத்ரப்ராதரிகச்சதி] [புத்ரப்ராதரிகச்சதி] உங்கள்தமையனார்நடப்பர்கிடீர், அவர்நடையிலேநடைகொள்வர், அவர்நடையழகிலேகண்வைத்துக்காவற்சோர்வுபடவிடாதேகொள்ளும். அப்படியே, இச்சேதநனையுமிங்குவைத்தது திருமலைக்குப்போகைக்காகவாயிற்று. (வைத்தநாள்வரையெல்லைகுறுகிச்சென்று) ஈஸ்வரன் நியமித்துவைத்த ஆயுஸ்ஸினுடைய முடிவான எல்லையைச் சென்றுகிட்டி. (எய்த்திளைப்பதன்முன்னமடைமினோ) "திருமலைக்குப்போகவேணும்" என்னும் ஶ்ரத்தையுமநுவர்த்தியாநிற்கச்செய்தே "பாவியேன்கரணபாடவதசையுண்டாகப்பெற்றிலேன்" என்னும்தசைவருவதற்குமுன்னேபோகுங்கோள். (பைத்தவித்யாதி) தன்னோட்டை ஸ்பர்ஶத்தாலேவிரித்த பணங்களையுடைய திருவநந்தாழ்வானைப்படுக்கையாகவுடைய சர்வேஶ்வரன், அப்படுக்கையிற்காட்டிலும் விரும்பிவர்த்திக்கிறதேசம். அன்றியே, திருமலையாழ்வார்தம்மைத் திருவநந்தாழ்வானாகவும் சொல்லக்கடவதிறே. (மொய்த்தவித்யாதி) செறிந்தசோலையையும், பரப்புமாறப்பூத்த தடாகங்களையுமுடைத்தான திருத்தாழ்வரையை-எய்த்திளைப்பதன்முன்னம்- சென்று- அடைமினோ. எய்த்திளைக்கையாவது-ஒன்றுநெஞ்சிளைப்பு, ஒன்றுசரீரத்தினிளைப்பு... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (வைத்தவித்யர்தி) "தாழ்வர் - சென்று-அடைமினோ" என்றபதத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (ஆகவித்யாதி) (எல்லார்க்குமொக்க வுத்தேஶ்யமென்றது) "வானவர்வானவர்கோனொடும்" இத்யாதியாலே - நித்யஸூரிகளுக்கும், "பரன்சென்றுசேர்" என்று ஈஶ்வரனுக்கு முத்தேஶ்யமென்றபடி.

"அடைமினோ" என்னுமளவும் கடாக்ஷித்து "வைத்த" என்றதுக்குபாவம் (ஸர்வேஶ்வரனித்யாதி) வைத்த - ஸ்ருஷ்டித்து வைத்த. என்றுயிற்று - (கொடுத்தது) என்றந்வயிப்பது. உக்தத்துக்கு ப்ரமாணமும் த்ருஷ்டாந்தமும் (விசித்ரேத்யாதி) "விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும் - பூர்வமேவக்ருதாப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா" (விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராயநிவேதிதும் । பூர்வமேவக்ருதாப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா) இதி ஶ்ரீவிஷ்ணுதத்த்வே.

(ஸ்ருஷ்டஸ்த்வமித்யாதி) "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே । ராமே ப்ரமாதம் மாகார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி" (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாயஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே । ராமேப்ரமாதம்மாகார்ஷீ: புத்ர ப்ராதரிகச்சதி) இதி அயோத்யாகாண்டே சத்வாரிம்ஶே லக்ஷ்மணம்ப்ரதிஸுமித்ரா. "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய" (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய) என்று சொல்லுகைக்கு ப்ரஸங்கமருளிச்செய்கிறார் (ஐயரித்யாதி) இப்படி செய்தீராகில் - பெருமாள்பின்னேபோனீராகி லித்யர்த்த:. "பெருமாள் காடேறப்போகக்கூடப்போகவேணும்" என்றேற்கவே யறிந்தோவென்னைப்பெற்றதென்ன (அவர்க்குயாதொருபோதித்யாதி) அனுப்புகிறவளிருக்கைக்கு ஹேதுவானத்தைச் சொல்லலாமோவென்ன (நீர்ஸுஹ்ருஜ்ஜநத்திலித்யாதி) ப்ரமாதமென்று - அநவதாநத்தைச் சொல்லுகிறது. "ப்ரமாதோநவதாநதா" (ப்ரமாதோநவதாநதா) இத்யமர:. (நடையிலேநடைகொள்வர்) தம்முடைய நடையழகாலே "காலாழும் நெஞ்சழியும்" என்கிறபடியே யும்மை யீடுபடுத்துவர். காவற்சோர்வுபடவிடாதே - ஸாவதாநதைக்கு நழுவுதலுண்டாம்படி விடாதேயித்யர்த்த:. படுகை- உண்டாகை. உக்தார்த்தநிகமநம் (அப்படியேயித்யாதி) "வைத்த" என்றதுக்கு - ஸங்கல்பித்துவைத்த வென்றர்த்தாந்தரம் (ஸர்வேஶ்வரன் நியமித்துவைத்தவித்யாதி) நாள் - ஆயுஸ்ஸு. வரையானவெல்லை - (முடிவானவெல்லை) "சென்று-குறுகி" என்றந்வயிப்பது. "குறுகி" -(கிட்டி) முடிவானவெல்லையாவது - வார்த்தக்யம்.

எய்த்து - காரணங்களுக்கு பலஹாநிபிறந்து. இளைப்பதன்முன்னம் - அதடியாக நெஞ்சிளைப்பதற்குமுன்னே.

பாம்பணையானுடைய - திருவேங்கடமென்று முந்தினவர்த்தம். த்விதீயார்த்தத்துக்கு "மனக்களுழறிவரும்" என்கிற ந்யாயத்தாலே பாம்பணையாம் திருவேங்கடமென்றபடி. அணை - படுக்கை. திருவநந்தாழ்வானுகிறபடுக்கை தானுயிருக்கிற திருவேங்கட மித்யர்த்த:. பைத்த - விரித்த. பணங்களை யுடையவென்று கூட்டுவது.

விரோதமில்லையென்றபடி. ( தானென்று சொல்லலாம்படி ) " ஸதேவ " ( ஸதேவ ) என்கிறபடியே தானென்கிறசொல்லுக்குள்ளே யரம்படியித்யர்த்த:. ( தட்டாதபடிநிற்கும் ) என்கிறதவ்விடத்திலேயென்றபடி. " அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்குமென்றதாகிறது ) இவ்விடத்திலென்றபடி. ஜீவனைப்போலன்றிக்கே தத்கததோஷாஸ்பர்சத்துக்கடியேதென்ன ( அதுக்கடியித்யாதி ) அதுக்கடி-தத்கததோஷா ஸம்ஸ்ப்ருஷ்டத்வத்துக்கடி. ப்ரவேசஹேதுவிசேஷமாவது - சேதநன்கர்மமடியாக ப்ரவேசிக்கும், ஈஸ்வரனநுக்ரஹமடியாக ப்ரவேசிக்கும், ஆகையாலீஸ்வரனுக்கு வாராதென்றபடி.

ஆதுமில்காலத்தெந்தை யச்சுதனமலனை-சாதிமாணிக்கமென்கோ வித்யாரப்யாந்வய:. ஆதுமில்காலத்து - ஒன்றுமில்லாத ஸம்ஸ்ருதிசமயத்தில். எந்தை-தன்னோடுண்டான ஸம்பந்தத்தை யெனக்கறிவித்தவன். அச்சுதன்-என்னைநழுவவிடாதவன். அமலன்-நிர்மலன்.................................................*

---

# ஐந்தாம்பாட்டு.

அச்சுதனமலனென்கோவடியவர்வினைகெடுக்கு
நச்சுமாமருந்தமென்கோநலங்கடலமுதமென்கோ
அச்சுவைக்கட்டியென்கோவறுசுவையடிசிலென்கோ
நெய்ச்சுவைத்தேறலென்கோகனியென்கோபாலென்கேனோ.

## ஆறாயிரப்படி.

( அச்சுதன் ) அசேஷதோஷப்ரத்யநீகனாயாஸ்ரிதரோடு நித்யஸம்ஶ்லேஷஸ்வபாவனாயாஸ்ரிதஜநஸமஸ்த து:கநிரஸந ஸ்வபாவனாய் பரமபோக்யனாயிருக்கு மென்கிறது...................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷணரஸவத்பதார்த்த விபூதித்வத்தை யருளிச்செய்கிறார்.

அச்சுதன்-போக்தாக்களை நழுவவிடாதவினிமையையுடையவன். அமலனென்கோ - தன்பேறுகவநுபவிப்பிக்கும் நைர்மல்யத்தையுடையவன். அடியவர் - உறவுடையாரை. வினை - போகாலாபக்லேசத்தை. கெடுக்கும் - போக்குமதாய். நச்சும் - ஸாரஸ்யத்தாலேநச்சப்படுவதான, மாமருந்தமென்கோ - பசுமருந்து. நல் - க்ஷீராத்மகதையால்வந்தவைலக்ஷண்யத்தையுடைத்தாய். அம் - பகவத்ஸம்பந்தத்தாலேதர்ஶநீயமான. கடல் - கடலில். அமுதமென்கோ - அவன்கடைந்தெடுத்தஅம்ருதம். அ - அந்தவம்ருதத்தினுடைய. சுவை - ரஸத்தையுடைத்தான. கட்டியென்கோ - கருப்புக்கட்டி. அறுசுவை - மதுராம்லலவணகடுகஷாயதிக்தாத்மகஷட்ரஸயுக்தமான. அடிசிலென்கோ - அடிசில். நெய் - நெய்யின். சுவை - சுவையையுடைத்தான. தேறலென்கோ - மது. கனியென்கோ - பக்வமாய்புஜித்தல்லதுநிற்கவொண்ணாதகனி. பாலென்கேனோ - ஸ்வாபாவிகரஸவத்தான பாலென்றுசொல்லுவேனோ.

பசுமருந்தென்று - விக்ரஹம். மருந்தென்றது - க்லேசநாசகரத்வத்தாலே. கடையவேண்டாத கடலில்கிடந்த வம்ருதமென்றுமாம். நெய்த்தலையுஞ்சுவையை யுமுடைத்தான தேறலென்றுமாம்.........................................*

## ௫-ஐந்தாம்பாட்டு.

ரஸவத்பதார்த்தங்களை விபூதியாக வுடையனாயிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(அச்சுதனமலனென்கோ) நித்யவிபூதியோடே கூடியிருக்குமிருப்புக்கொருநாளு மழிவில்லாதபடி யிருப்பானாய், ஹேயப்ரத்யநீகனாய் கல்யாணைக தானனாயுள்ளவனென்பேனோ. (அடியவரித்யாதி) இப்படி "தூரஸ்த்தன்" என்று ஆஸ்ரிதர்க்கிடர் படவேண்டாதபடி, ஆனையிடர் பட்டமடுவின் கரையிலேவிழும்ஸ்வபாவன். (அடியவர்வினைகெடுக்கும்) தன்பக்கலிலே ந்யஸ்தபரரானாருடைய சகலதுரிதங்களையும் போக்கிரக்ஷிக்குமவன். (நச்சுமாமருந்தம்) இடர்பட்டபோதாகப்போய் மலைபுகவேண்டாதே, "அவன் தூரஸ்த்தனானாலுனேயாகிலும் நாமாபந்நரான சமயத்திலேவந்துரக்ஷிக்கும்" என்றுவிஸ்வசிக்கலாம்படி யிருப்பானொருவன். (நச்சுமாமருந்தம்) ஆசைப்படுமொருஔஷதம். (மாமருந்தம்) மஹௌஷதம். வ்யாதியினளவல்லாதபேஷஜம். அதாவது - மேல்காற்றிலே காட்டநோய்தீருமாயிருக்கை. ஏகமூலிகையாய் ஸக்ருத்ஸேவ்யமாயிருக்கை. அன்றிக்கே, அபத்யஸஹமான ஔஷதமென்னுதல். அதாவது- இவன்ப்ராமாதிகமாகப் பண்ணும்பாபங்களையும் காணக்கண்ணிடவல்லனாயிருக்கை. புத்திபூர்வகமாகப்பண்ணுமன்று பிறந்தஜ்ஞாநத்தோடு விரோதிக்குமிறே, தன்னையறிந்தபின்பு முதலிலேயிவற்றில்மூளான்; ஆனபின்பும்விரோதியான தேஹமநுவர்த்திக்கையாலேநெஞ்சிருண்டுபாபங்களிலே ப்ரவர்த்தியாநிற்கைதவிரான்; அநந்தரம் ஜ்ஞாநம்பிறவா அநுதபித்துக்கைவாங்கும் ; அங்ஙனன்றிக்கே, புத்திபூர்வம் ப்ரவர்த்தித்தானாகில் ஜ்ஞாநம்பிறந்த தில்லையேயாமித்தனை.

(நலங்கடலமுதமென்கோ) கடலிலேகடையாதேவந்த அம்ருதமென்பேனோ. (அச்சுவைக்கட்டியென்கோ) அம்ருதாநந்தரம் சொல்லுகிறகட்டியாகையாலே, கருப்புக்கட்டியாமித்தனை. ப்ரஸ்துதமான அம்ருதத்தோடொத்த ரஸத்தையுடைத்தான கருப்புக்கட்டியென்பேனா. (அறுசுவை) அவையாவன-கைப்பு, புளிப்பு, கார்ப்பு, தித்திப்பு, துவர்ப்பு, உவர்ப்பு. இப்படி ஆறுபடிப்பட்டரசத்தையுடைத்தான அடிசிலென்பேனோ. (நெய்ச்சுவைத்தேறலென்கோ) நெய்-மிகுதி. மிக்கசுவையையுடையதேன். சுவையையுடைத்தான நெய்யென்பேனோ சுவையையுடைத்தான மதுவென்பேனோ. (கனியித்யாதி) ஒருகாலத்திலே யினியதாம் பழமென்பேனோ, இனியதான பாலென்பேனோ...........................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( அச்சுதனித்யாதி ) " நலங்கடலமுதம் " இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை ( ரஸவதித்யாதி )

" यस्मान्नच्युतपूर्वोऽहमच्युतस्तेन कर्मणा " ( யஸ்மாந்நச்யுதபூர்வோஹமச்யுதஸ்தேநகர்மணா ) இத்யாதிகம், ஹேயப்ரத்யநீகத்வ வ்யாப்தம்கல்யாணைகதாநத்வமிதிச ஷ்ருதிரிதாயாஹ ( நித்யவிபூதியோடேயித்யாதி ) நித்யவிபூதியோடே கூடியிருக்கு மிருப்புக்கென்றது - கீழிற்பாட்டிலே " ஆதியஞ்சோதியென்கோ " என்றத்தைப்பற்ற.

தாத்பர்யம் ( இப்படிதூரஸ்த்தனித்யாதி ) கீழேநித்யவிபூதியி லிருப்பைச் சொல்லுகையாலே ( இப்படிதூரஸ்த்தனென்றது ) நச்சுதல்-விஶ்வஸித்தலாதல், ஆசைப்படுதலாதல். " மா " என்றதுக்குமூன்றர்த்தம். முந்தினது ( வ்யாதியினள வல்லாதவித்யாதி ) ( மேல்காற்றிலேகாட்டவென்று ) இதுக்குதாஹரணம் - " நமனும்முற்கலனும் " இத்யாதி. த்விதியார்த்தம் ( ஏகமூலிகையித்யாதி ) ஏகமூலிகையாவது - ஸஹாயாந்தரநைரபேக்ஷ்யம். ஸக்ருத்ஸேவ்யமென்றது - " सकृदेव हि " ( ஸக்ருதேவஹி ) இத்யாதியைப்பற்ற. மூன்றுமர்த்தம் ( அன்றிக்கேயித்யாதி ) அதாவது - அபத்யஸஹத்வமாவது. " प्रामादिकः " ( ப்ராமாதிகம் ) என்றுவிசேஷிக்கிறதென்னென்ன ( புத்திபூர்வகமித்யாதி ) " प्रपन्नो बुद्धिपूर्वेण न कुर्यात् पुरुपातकम्। ज्ञात्वापि पातकं कर्म कुर्वन्मूढः पतत्यधः " ( ப்ரபந்நஇதிகர்வேணநகுர்யாத்புருபாதகம் । ஜ்ஞாத்வாபிபாதகம்கர்மகுர்வந்மூட:பதத்யத: ) இத்யாத்யநுஸந்தேயம். ஆனால்பாபங்களிலேமூளும்ப்ரகாரமென்னென்ன ( ஆனபின்புமித்யாதி ) ப்ரக்ருதிவஶ்யனுகையாலே புத்திபூர்வகமாகவும் ஸம்பவிக்குமென்றபடி; வாலியைக்கொன்றவ்யாஜம் மஹாராஜர்க்குமுண்டாயிருக்க, ரக்ஷித்தாரிறே. யத்வா, ப்ராமாதிகமாகத்தான் வரும்வழியேதென்ன ( ஆனபின்புமித்யாதி ) என்னுதல். நெஞ்சிருண்டுபாபங்களிலே ப்ரவர்த்தித்தாலது ப்ராமாதிகமானபடியென்னென்ன ( அநந்தரமித்யாதி ) பிறவா-பிறந்தவுடனே. அங்ஙனன்றிக்கே-அநுதபித்துக்கைவாங்குகை யன்றிக்கே.

நலங்கடலமுதம் - கடலில் நலமானவமுதமென்றபடி. நன்மை-அயத்நஸித்தத்வம்.

சுவை-ரஸம். அச்சுவைக்கட்டி-அந்தவம்ருதத்தோடொத்த ரஸத்தையுடையகட்டி. கட்டி-வெல்லக்கட்டி.

கார்ப்பு - க்ஷாரம்.

" நெய் " என்றதுக்கர்த்தாந்தரம் ( சுவையையுடைத்தானவித்யாதி )

க்ரமேணுந்வய: ......................................................*

# ஆறும்பாட்டு.

பாலென்கோநான்குவேதப்பயனென்கோசமய்நீதி
நூலென்கோநுடங்குகேள்வியிசையென்கோவிவற்றுணல்ல
மேலென்கோவினையின்மிக்கபயனென்கோ,கண்ணனென்கோ
மாலென்கோமாயனென்கோவானவராதியையே.

## ஆறாயிரப்படி.

(பாலென்கோ) பாலென்றுசொல்லுவேனோ; சர்வவேதங்களாலும், சர்வவேதார்த்தநிர்ணயகமாய் ஹேதுமத்தாயிருந்த ப்ரஹ்மஸூத்ரபதங்களாலும் பரமபுருஷார்த்ததயா ப்ரதிபாத்யமாநனென்றுசொல்லுவேனோ; போக்யதையாலவன், நுடங்குகேள்வி யிசையென்றுசொல்லுவேனோ; இங்குச்சொல்லப்பட்ட போக்யபதார்த்தங்களெல்லாவற்றிலும் மேற்பட்டபோக்யமென்று சொல்லுவேனோ; சகலபுண்யபலமென்று சொல்லுவேனோ; ஆஸ்ரிதசுலபனென்று சொல்லுவேனோ; ஆஸ்ரிதவத்ஸலனென்றுசொல்லுவேனோ; ஆஸ்சர்யபூதனென்று சொல்லுவேனோ; வானவராதியை யெங்ஙனேசொல்லுவேனென்கிறார்......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வேதவைதிகாத்மகமாய் காநபர்யந்தமான சப்தராசிப்ரகாரத்வத்தையருளிச்செய்கிறார்.

வானவர்-சமஸ்ததேவர்களுக்கும். ஆதியை - சத்தாதிஹேதுபூதனானவனை. நான்குவேதம்-வேதங்களினுடைய. பாலென்கோ-சாகாதிவிபாகங்கள். நான்குவேதம்-ததாவிதசதுர்விதவேதங்களின். பயனென்கோ-ப்ரயோஜநம். சமயம்-அர்த்தவ்யவஸ்த்தாபகமான. நீதி-ந்யாயத்துக்குப்ரதிபாதகமாயுள்ள. நூலென்கோ-மீமாம்ஸாசாஸ்த்ரம். நுடங்கு-ஸ்ரோதாக்களையீடுபடுத்தும். கேள்வி-கேள்வியையுடைத்தான. இசையென்கோ-கீதம். இவற்றுள்-உக்தமானவிவற்றுக்குள்ளே. நல்ல-விலக்ஷணமாய். மேலென்கோ-அநவதிகாதிசயமானபோக்யம். வினையில்-சாதநத்தினளவன்றியே. மிக்க-அதிசயிதமான. பயனென்கோ - பலம். கண்ணனென்கோ-அந்தபலரூபனுயாநந்தாத்மகனானக்ருஷ்ணன். மாலென்கோ -தன்னைபுஜிக்குமவர்களை வ்யாமுக்தனுப்புஜிக்குமவன். மாயனென்கோ - ததநுரூபமான ஆஸ்சர்யசேஷ்டிதாதியுக்தனென்பேனோ.

பாலென்று - பகுதியாய், சாகாதிவிபாகம்....................................*

---

## ஈடு-ஆறும்பாட்டு.

வேதந்தொடக்கமான இயலுமிசையுமான சப்தராசியை விபூதியாகவுடையனாயிருக்கிறபடியைப் பேசுகிறார்.

(பாலென்கோ) கீழில் ரஸ்யதை பின்னாடினபடி.

(நான்குவேதப்பயனென்கோ) நாலுவகைப்பட்ட ப்ரமாணஜாதத்தில் ஸாரபூதமானவேதமாகிற ப்ரயோஜநமென்பேனே. வேதத்திலே வேறேயுமோரம்ஸ மொருவனைஸ்துதிக்கிறிறே - நான்குவேதத்தில் பயனென்கோவென்னவேண்டுவது. அங்ஙனன்றியே, வேதந்தான் - ஆராதந ஸ்வரூபஞ்சொல்லுமிடமும் ஆராத்யஸ்வரூபஞ்சொல்லுமிடமுமாய்க்கட்டடங்கஇவனையேசொல்லுகையாலே, வேதத்தில் நாலுமூலைக்குமுள் ப்ரயோஜநமில்லாதவிடமில்லை; "வெடெஶ்வஸவெ-ரஹமெவவெ ஷஃ" (வேதைஸ்சஸர்வைரஹமேவவேத்ய:) என்றுனிறே, (சமயம்) வைதிகசமயத்துக்கு நிர்வாஹகமான இதிஹாஸபுராணங்களென்பேனே. வேதார்த்தத்தை விஶதீகரிக்குமவையிறேயிவை. "ஊதிஹாஸவ-ராணாஹ்ராம்வெஷம்ஸஊவவ்யம்ஹயெசு" (இதிஹாஸபுராணப்யாம் வேதம்ஸமுபப்ரும்ஹயேத்) (நுடங்கு) கேட்டாரை நஞ்சுண்டாற்போலே நுடங்கப்பண்ணக்கடவ ஶ்ரவணத்தையுடைத்தான இசையென்பேனே.

(இவற்றுள்நல்லமேலென்கோ) எல்லாம்சொல்லவேணும், எல்லாம்சொல்லமாட்டார். கீழ்ச்சொன்னவற்றிலெல்லாம் விலக்ஷணமாய் அவ்வருகாயிருப்பதொன்றென்பேனே. (வினையில்மிக்க) அல்பயத்நத்தாலே யநேகபலத்தை பலிப்பதொன்றென்பேனே; கலநெல்லைவித்தி நூறுயிரக்கலமாக விளைத்துக்கொள்வாரைப்போலே. இத்தலையிலுள்ளது * மித்ரபாவமாய் அதுக்கு "நதஜெயம்" (நத்யஜேயம்) என்னும்படியிருக்கை. (கண்ணனென்கோ) "உனக்குநானிருந்தேனே" என்று [ மாஶுவ: ] [மாஶுச:] என்னும்க்ருஷ்ணனென்பேனே. நாம்தருமத்தை நீவிலக்காதே ஸ்வீகரிக்குமித்தனையேவேண்டுவது, உனக்குநானிருந்தேன் என்னுமவனிறே. (மாலென்கோ) (ஆஶ்ரிதவிஷயத்தில் வ்யாமுக்தனென்பேனே) இப்பாசுரத்தைச்சொல்லா, "ஊஷம்தெநாதவஸ்காய" (இதம்தேநாதபஸ்காய) என்னும்வ்யாமுக்தனென்பேனே. "ஊஷம்துதெஶுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாமி" (இதம்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாமி) என்றவோபாதி, "ஊஷம்தெநாதவஸ்காய" (இதம்தேநாதபஸ்காய) என்றதுவும் முன்னேசொல்லிக்கொள்ளவிறே யடுப்பது; அங்ஙனன்றிக்கே, முந்தறச்சொல்லி, பின்னை "ஊஷம்தெநாதவஸ்காய" (இதந்தேநாதபஸ்காய) என்றுனிறே. "இதுதனக்கடியென்" என்று ஜீயர்பட்டரைக்கேட்க; "த்ரௌபதி, குழலைவிரித்துக் கிடக்கையாலே அதுமுடிக்கைக்காக, செய்வதறியாமையாலே மூலையில்கிடந்தாரை முற்றத்தேயிட்டான்; பின்னையர்த்தத்தின் சீர்மையையநுஸந்தியா, 'ஆரதிகாரிகளாகச்சொன்னோம், கைப்பட்டமாணிக்கத்தைக்கடலிலேயிட்டோம்' என்று, 'பதண்பதண்' என்றுன்காணும்" என்றருளிச்செய்தார். (மாயனென்கோ) ஆஶ்ரிதர்க்கு தூத்யஸாரத்யாதிகளைப் பண்ணுமாஶ்சர்ய

பூதனென்பேனே. "க்ருதார்த்தாபுஞ்ஜதேதாஃ" (க்ருதார்த்தாபுஞ்ஜதேதூதாஃ) (வானவராதியையே) ப்ரஹ்மாதிகளுடையசத்தாதிகள் தன்னதீநமாம்படி யிருக்கிறவன் என்னதீநமான சத்தாதிகளையுடையனா யிருக்கிறவிருப்பை நானெத்தையென்றுசொல்லுவது.......................*

---

## ஜீயர் அரும்பதம்

ஆரும்பாட்டு. (பாலென்கோவித்யாதி) "நான்குவேதப்பயனென்கோ" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (வேதந்தொடக்கமானவித்யாதி)

புநருக்திபரிஹாரம் (கீழிலித்யாதி)

பயனானநான்குவேதமென்பேனோவிதிசப்தார்த்தஃ. (ப்ரமாணஜாதத்திலிதி) "அங்காநிவேதாஸ்சத்வாரோமீமாம்ஸாந்யாயவிஸ்தரஃ। புராணம்தர்மஶாஸ்த்ரஞ்ச" (அங்காநிவேதாஸ்சத்வாரோமீமாம்ஸாந்யாயவிஸ்தரஃ।புராணம்தர்மஶாஸ்த்ரஞ்ச) இத்யாதி. நான்குவேதமாகிறபயனென்பானென், நான்குவேதத்திற்பயனென்றுலோவென்ன (வேதத்திலித்யாதி) அங்ஙனன்றியே - அப்படியொருவனைஸ்துதிக்கையன்றியே. (ப்ரயோஜநமில்லாதவிடமில்லையிதி) பகவத்பர்யந்தத்வவ்யதிரேகேண கேவலதேவமநுஷ்யாதி ப்ரதிபாதகப்ரதேசமில்லையென்றபடி. சர்வவேதங்களு மவனையேசொல்லுகிறதென்னுமிடத்தில் ப்ரமாணம் (வேதைஶ்சஸர்வைரிதி) கீதாஸூபஞ்சதஶே; பூர்வமேவலிகிதம்.

"சமயம்" என்று - சித்தாந்தமாய்; நீயதேஅநயேதி - நீதிஃஎன்றாய்; அதாவது-நிர்வாஹகமென்றாய், வைதிகசித்தாந்தத்துக்கு நிர்வாஹகமானவென்றபடி. நூல் - சாஸ்த்ரம். நிர்வாஹகத்வமாவது - விஶதீகரிக்கை. நிர்வாஹகத்வத்தை யுபபாதிக்கிறார் (வேதார்த்தத்தையித்யாதி) இதுக்குப்ரமாணம் (இதிஹாஸேத்யாதி) "பிபேத்யல்பஶ்ருதாத்வேதோமாமயம்ப்ரதரிஷ்யதி" (பிபேத்யல்பஶ்ருதாத்வேதோமாமயம்ப்ரதரிஷ்யதி) இத்யுத்தரார்த்தம். இதம்பார்ஹஸ்பத்யஸ்ம்ருதௌ.

நுடங்க-மயங்க. ஈடுபடும்படியித்யர்த்தஃ. கேட்டமாத்ரத்திலே யீடுபடுத்தவல்ல காநமென்பேனோ விதிநிஷ்க்ருஷ்டார்த்தஃ. "ஶைலோக்நிஶ்சஜலாம்பபூவமுநயோமுக்தாம்பபூவுர்ஜடாஃ ப்ராஜ்ஞாமாஸூரகாஸ்ஸகோபமம்ருதாமாஸூர்மஹாஶீவிஷாஃ। கோவ்யாக்ராஸ்ஸஹஜாம்பபூவுரபரோத்வந்யாம்பபூவுஃப்ரபோத்வந்தேஷ்வந்யதமாம்பபூவிதபவேத்வேணுக்வணோந்மாதநே" (ஶைலோக்நிஶ்சஜலாம்பபூவமுநயோமுக்தாம்பபூவுர்ஜடாஃ ப்ராஜ்ஞாமாஸூரகாஸ்ஸகோபமம்ருதாமாஸூர்மஹாஶீவிஷாஃ।கோவ்யாக்ராஸ்ஸஹஜாம்பபூவுரபரோத்வந்யாம்பபூவுஃப்ரபோத்வந்தேஷ்வந்யதமாம்பபூவிதபவேத்வேணுக்வணோந்மாதநே) என்னும்படிபண்ணுகை - நுடங்கப்பண்ணுகையாவது.

மேலும் விபூதியோகம்சொல்லாதே, " இவற்றுள்நல்ல" என்றுதொடங்கி-நிஷ்க்ருஷ்டரூபத்தைச்சொல்லுவானென்னென்ன (எல்லாம்சொல்லவித்யாதி)

வினையைப்பற்றவுமதிசயிதமான ப்ரயோஜநமென்று சப்தார்த்தம்விவக்ஷித்து, இத்தால்பலிதமாஹ (அல்பயத்நேத்யாதி) ஸத்ருஷ்டாந்தமாகவிவரணம் (கலநெல்லித்யாதி) " [illegible] " (மித்ராபாவேநஸம்ப்ராப்தம்நத்யஜேயம்கதஞ்சந ) இத்யாதியுக்தகாண்டே அபயப்ராதாநப்ரகரணேராமவாக்யம்.

நானிருந்தேனேயென்றது-* அஹம்ஶப்தார்த்தம். பூர்வார்த்தத்தி லர்த்தத்தையுங்கூட்டி விவரிக்கிறார் ( நாம்தருமத்தையித்யாதி ) தருமத்தை - தருகிறபலத்தை.

இப்பாசுரத்தை - சரமஶ்லோகத்தை. வ்யாமுக்தன் - ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமோஹத்தையுடையவன். இதுவ்யாமோஹகார்யமாக வேணுமோவென்ன ( இதம்துதேஇத்யாதி ) " [illegible] " ( இதம்தேநாதபஸ்காயநாபக்தாயகதாசந । நசாஶுஶ்ரூஷவேவாச்யம்நசமாம்யோப்யஸூயதி. ) " [illegible] " ( இதம்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே । ஜ்ஞாநம்விஜ்ஞாநஸஹிதம்யத்ஜ்ஞாத்வாமோக்ஷ்யஸேஶுபாத் ) வ்யாமோஹத்தாலே சரமஶ்லோகத்தைச் சொன்னானென்றதுக்கு ஸம்வாதம் ( இதுதனக்கித்யாதி ) " மால்" என்றவ்யாமோஹம் - த்ரௌபதிவிஷயமென்றபடி. அநுஸந்தியா - அநுஸந்தித்தவுடனே. பதண்பதனென்றான் - தபித்தான்.

தூதுபோனதுக்குப்ரமாணம் ( க்ருதார்த்தா இத்யாதி ) உத்யோகபர்வணிசதுர்நவதிதமே, " [illegible] " ( மத்க்ருஹேபுங்க்ஷ்வ ) இத்யுக்தவந்தம்துர்யோதநம்ப்ரதிக்ருஷ்ண:, " [illegible] " ( க்ருதார்த்தபுஞ்ஜதேதூதா:பூஜாம்க்ருஹ்ணந்திசைவஹி । க்ருதார்த்தம்மாம்ஸஹாமாத்யஸ்த்வமர்சிஷ்யஸிபாரத ) இதுக்கர்த்தம் - க்ருஷ்ணன்தூதெழுந்தருளினபோது, துர்யோதநன் " என்னகத்திலேயமுதுசெய்யவேணும் " என்ன ; தூதுவந்தவன்தான் வந்தகார்யமானால் தூதுவந்தக்ருஹத்திலே புஜிக்கும், அப்படியேநானு முன்னிடத்தில் தூதுவருகையாலே நான்வந்தகார்யம்செய்தா லுன்னகத்திலே புஜிக்கிறேனென்றானென்றபடி.

" மாயனென்கோ " என்றதுக்குச்சேரபாவம் ( ப்ரஹ்மாதிகளித்யாதி ) ஆஶ்ரிதர்க்குள்ளே தாமுமந்தர்ப்பூதராகையாலே ( என்னதீநமான ஸத்தாதிகளையுடையனென்று ) எத்தையென்று சொல்லுவது - எவ்வளவென்று பரிச்சேதித்துச்சொல்லுவது.

வானவராதியை - பாலென்கோவித்யாரப்யார்வ:.........................*

# ஏழாம்பாட்டு.

வானவராதியென்கோவானவர்தெய்வமென்கோ
வானவர்போகமென்கோவானவர்முற்றுமென்கோ
ஊனமில்செல்வமென்கோவூனமில்சுவர்க்கமென்கோ
வூனமில்மோக்கமென்கோவொளிமணிவண்ணனையே.

## ஆறாயிரப்படி.

(வானவர்) வானவருடைய தாரகமென்றுசொல்லுவேனோ, அவருடைய தைவமென்று சொல்லுவேனோ; அவர்களுடைய போகமென்றுசொல்லுவேனோ; அவர்களுடைய சர்வஸ்வமென்றுசொல்லுவேனோ; ஐஹிகமான பூர்ணசம்பத்துக் காத்மபூதனென்று சொல்லுவேனோ; பூர்ணஸ்வர்க்க புருஷார்த்தத்துக் காத்மபூதனென்று சொல்லுவேனோ; பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷத்துக் காத்மபூதனென்றுசொல்லுவேனோ; இவனை யெங்ஙனேசொன்னால் பூர்ணமாகச்சொல்லிற்றாவதென்கிறார்...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போகமோக்ஷவிபூதித்வத்தையருளிச்செய்கிறார்.

ஒளி - உஜ்ஜ்வலமான. மணி - மாணிக்கம்போலேயிருக்கிற. வண்ணனை-வடிவையுடையவனை. வானவர்-போகசக்தரானதேவர்களுக்கு. ஆதியென்கோ - உத்பாதகன். வானவர்-அவர்களுக்கு. தெய்வமென்கோ-ஆராத்யதைவதம். வானவர்-அவர்களுக்கு. போகமென்கோ-ஆராதநபலமானபோகம். வானவர்-அவர்களுடைய. முற்றுமென்கோ-சர்வவிதரக்ஷணம். ஊனமில் - அநஶ்வரமான. செல்வமென்கோ-ஐஶ்வர்யம். ஊனமில்-ஆகல்பாவஸாநஸ்த்தாயியான. சுவர்க்கமென்கோ - ஸ்வர்க்கஸ்த்தாநம். ஊனமில்-இந்தபோகத்துக்கவ்வருகுபட்ட கைவல்யம்போலன்றியே அசங்குசிதமான. மோக்கமென்கோ-மோக்ஷாநந்தமென்பேனோ.

"வானவரென்கிறவிடம்-சூரிகளைச்சொல்லுகிறது" என்பாருமுளர்........*

## ஈடு-ஏழாம்பாட்டு.

ஐஶ்வர்யாதி புருஷார்த்தங்களெல்லாம் தனக்கு விபூதியாகவுடையனாயிருக்கிறபடியைப்பேசுகிறார்.

(வானவராதியென்கோ) கீழ், "வானவராதி" என்றவிடம்-ப்ரஹ்மாதிகளுக்குக்காரணபூதனென்னுமிடம் சொல்லிற்று; இங்கு - நித்யசூரிகளுக்கு நிர்வாஹகனாய் அவர்கள் சத்தாஹேதுவாயிருக்கும்படியைச்சொல்லுகிறது. இரண்டிடத்திலும் சப்தமொத்திருக்க, இவ்விபாகம்பண்ணித்தருவாரானென்னில்; ப்ரஹ்மாதிகளுக்கு அவர்களுத்பத்தியிலேயுபகரித்துவிடுமித்தனை, அவ்வளவன்றிக்கே நித்யசூரிகளுக்கு, "எல்லாம்கண்ணன்" என்கிறபடியே எல்லாம்தானேயாயிருக்கும். அவர்கள்

தாங்களும், "வாஸுதேவஸ்ஸர்வம்" (வாஸுதேவஸ்ஸர்வம்) என்கிறபடியே, எல்லாம் தானேயாகநினைத்திருப்பர்கள்.

(வானவராதியென்கோ) நித்யஸூரிகளுக்கு சத்தாஹேதுவானவனென்பேனோ. சத்தாஹேதுவாகையாவதென், அதுபின்னை நித்யையாயன்றோவிருப்பதென்னில்; நித்யையாகவுமாம், அநித்யையாகவுமாம். அவனுடைய நித்யேச்சையாலேயிருக்கு மிதினுடைய நித்யத்வம், அந்தவிச்சைநெகிழில் இதினுடைய நித்யத்வமும் மாறும்படியாயிருக்கும். "எத்தேவர்வாலாட்டு மெவ்வாறுசெய்கையு மப்போதொழியும்" என்கிறபடியே, அவன்நெகிழ்ந்தவன்று பின்னையில்லையிறே; (வானவர்தெய்வமென்கோ) அவர்களுக்காஸ்ரயணீயனென்பேனோ. (வானவர்போகமென்கோ) அவர்களுக்கு * உண்ணும்சோறுபருகுநீர்தின்னும்வெற்றிலையுமெல்லாமானவனென்பேனோ. (வானவர்முற்றுமென்கோ) அவர்களுக்கநுக்தமான எல்லாமென்பேனோ.

(ஊனமில்செல்வமென்கோ) சிலநாள்நின்றுவற்றுமதன்றிக்கே, ஒருநாளுமழியாத சம்பத்தென்பேனோ. (ஊனமில்சுவர்க்கமென்கோ) சிலநாளிருந்துபின்னை "த்வம்ஸ" (த்வம்ஸ) என்று தள்ளும்படியானதன்றிக்கே ஒழிவில்லாத ஸ்வர்க்கமென்பேனோ. இவைதானு மவனுக்குவிபூதியன்றோ, இங்ஙன்சொல்லுவானென்னென்னில்; "ஸ்ரீமதூர்ஜிதமேவவா" (ஸ்ரீமதூர்ஜிதமேவவா) என்றுவிசேஷித்துச்சொல்லாநின்றதிறே. (ஊனமில்மோக்கமென்கோ) ப்ரகாரமான ஆத்மாநுபவமாத்ரத்திலன்றிக்கே ப்ரகாரியளவும் செல்லஅநுசந்திக்கையாலே, பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷமென்பேனோ. (ஒளிமணிவண்ணனையே) இவ்வசாதாரணவிக்ரஹத்தோபாதியிருக்கிறதாயிற்றுக்கீழ்ச்சொன்னவையுமெல்லாம்.

---

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (வானவரித்யாதி) "ஊனமில்செல்வம்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (ஐஶ்வர்யாதீத்யாதி)

இரண்டிடத்திலும்-கீழுமிவ்விடத்திலும். (இவ்விபாகம்) கீழ் - ப்ரஹ்மாதிபரம், இங்கு-ஸூரிபரமென்கிறவிபாகம். ப்ரஹ்மாதிகளைச்சொல்லில், "வானவர்போகமென்கோ" இத்யாதிசேராது, ஆனபின்பு - "வானவர்போகம்" இத்யாதிபதத்வயமே யிவ்விபாகஜ்ஞாபகமென்றுகருத்து. எல்லாம்தானேயாயிருக்கும் - தாரகபோஷகபோக்யங்களெல்லாம் தானேயாயிருக்கும். அர்த்தஸ்த்திதியப்படியாணு மவர்க்கநிலையில்லாவிடில் ப்ரயோஜநமில்லையேயென்ன (அவர்கள்தாங்களுமித்யாதி)

நித்யேச்சையாலே யித்யத்ர - "இச்சாதஏவதவவிஶ்வபதார்த்தஸத்தா" (இச்சாதஏவதவவிஶ்வபதார்த்தஸத்தா) இத்யாத்யநுஸந்தேயம். தாதநிந்யோப

யாதநம் ( அந்தவிச்சையித்யாதி ) அவனுபேக்ஷித்தால் சத்தையில்லையென்னுமதுக் குப்ரமாணம் ( எத்தேவரித்யாதி ) நாலாந்திருவந்தாதி. " அகைப்பில் " இத்யாதி. உகைக்குமேல் - உபேக்ஷிக்குமாகில், எத்தேவர்-எத்தனையேனும் தங்களைப்போரப் பொலியநினைத்திருக்கும் ப்ரஹ்மாதிதேவர்களுடைய, வாலாட்டும்-கர்வமும். (எவ் வாறுசெய்கையும்) ஆறு - சாதநாநுஷ்டாநம்; அவர்களையுத்தேசித்திங்குள்ளவர் கள் பஹுவிதமானயாகாதிசாதநங்களை யநுஷ்டிக்குமதுவும், அழைப்பு-"ஐந்த்ர ஆகச்ச, ஹரிவ ஆகச்ச" (இந்த்ரஆகச்ச, ஹரிவஆகச்ச) என்றழைக்கையும், அவ் வோகர்மங்களை யநுஷ்டிக்குமிடத்தில், "ப்ராஹ்மணமாவாஹயாமி" ( ப்ரஹ்மா ணமாவாஹயாமி ) என்றாற்போலேயுண்டான தத்தத்தேவதாஹ்வாநங்களும், அ ப்போது - அவனுபேக்ஷித்தவந்தக்ஷணத்திலே, ஒழியும் - இன்றிக்கேபோய்விடும்.

ஆஶ்ரயணீயன் - ஆராத்யன்.

" வானவராதியென்கோ " இத்யாதிபதத்ரயத்தாலும் - சேஷித்வசரண்ய த்வ ப்ராப்யத்வங்களைச்சொல்லுகிறது.

அநுக்தமானவெல்லாம் - அநுக்தமான சர்வவிதபந்துவும்.

"சுவர்க்கம்" என்று - ஸ்வர்க்காநுபவத்தைச்சொல்லுகிறது, (த்வம்ஸ என் று தள்ளும்மடியானதன்றிக்கே) என்றிருக்கையாலே. "செல்வம்" என்று - இஹ லோகைஸ்வர்யம். இவைதானுமவனுக்கு விபூதியன்றோவென்றது-ஊனமுண்டான வைஸ்வர்யாதிகளுமவனுக்கு விபூதியன்றோ, "ஊனமில்" என்று விசேஷிப்பானெ ன்னென்னிலென்றபடி. " ஊனமில்மோக்கம் " என்றவிடத்திலே, ஊனமென்று - சங்கோசத்தைச்சொல்லுகிறது. இத்தால் - கைவல்யவ்யாவ்ருத்தி.

விபூதியைச்சொல்லுகிறவிடத்திலே, " ஒளிமணிவண்ணன் " என்கிறதென் னென்ன (இவ்வஸாதாரணேத்யாதி)

ஒளிமணிவண்ணனை - வானவராதியென்கோ வித்யாரப்யாந்வயம். "யத்ய த்விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவவா। தத்ததேவாவகச்சத்வம் மமதேஜோம் ஸஸம்பவம்" (யத்யத்விபூதிமத்ஸத்வம்ஸ்ரீமதூர்ஜிதமேவவா । தத்ததேவாவகச் சத்வம் மமதேஜோம்ஸஸம்பவம்) இதிகீதாஸூதசமே.................................*

# எட்டாம்பாட்டு.

ஒளிமணிவண்ணனென்கோவொருவனென்றேத்தநின்ற
நளிர்மதிச்சடையனென்கோநான்முகக்கடவுளென்கோ
அளிமகிழ்ந்துலகமெல்லாம்படைத்தவையேத்தநின்ற
களிமலர்த்துளவனெம்மான்கண்ணனைமாயனையே.

## ஆறாயிரப்படி.

( ஒளிமணிவண்ணன் ) ஸர்வலோகஸம்ரக்ஷணைகபோகனாய் ஸர் வஜகத்ஸ்ரஷ்டாவாய் சதுர்முகாதி ஸர்வஜனஸ்ஸம்ஸ்துயமானனா யிருக் கும் களிமலர்த்துளவனெம்மான் கண்ணனைமாயனை நிரவதிகஸௌந்தர்

ய மஹோததியென்று சொல்லுவேனோ; லோகமெல்லா மைஸ்வர்யத்திலே அத்விதீயனென்று சொல்லியேத்தும்படி ருத்ரனுக்கைஸ்வர்யத்தைக்கொடுத்து அவனுக்காத்மபூதனானவனென்று சொல்லுவேனோ, சதுர்முகாந்தராத்ம பூதனென்று சொல்லுவேனோ, எங்ஙனேசொல்லுவேனென்கிறார்.................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், லோகப்ரதாநகாரணேஸ்வர விபூதித்வத்தையருளிச்செய்கிறார்.

அளி - ரக்ஷணோபகாரநிமித்தமான. மகிழ்ந்து - உகப்பையுடையனாய்க்கொண்டு. உலகமெல்லாம் - சமஸ்தலோகங்களையும். படைத்து - ஸ்ருஷ்டித்து. உபகாரஸ்ம்ருதியாலே அவை-அவை. ஏத்த - ஸ்தோத்ரம்பண்ண. நின்ற - அத்தாலே க்ருதக்ருத்யனாய்நிற்பானாய். களி - மதுஸ்யந்தியாய். மலர் - விகஸிதபுஷ்பமான. துளவன் - திருத்துழாய்மாலையழகாலே. எம்மான் - என்னையநந்யார்ஹனாக்கின. மாயனை-நவநீதசௌர்யாத்யாஸ்சர்யசேஷ்டிதயுக்தனான. கண்ணனை-க்ருஷ்ணனை. "ஆயர்கொழுந்தா யவராற்புடையுண்ணும்மாயப்பிரானை யென்மாணிக்கச்சோதியை" என்கிறபடியேயவர்கள்கட்டியடிக்க. மணி - சாணையிலேறிட்டமாணிக்கம்போலே. ஒளி-ஒளிபெற்றுஸ்லாக்யமான. வண்ணனென்கோ-வர்ணத்தையுடையவன். "ஏகஏவருத்ர:" (ஏகஏவருத்ர8) என்கிறபடியே ஸ்வாஸ்ரிதர் ஒருவனென்று-ஒருவனென்று. ஏத்த - ஸ்துதிக்கும்படி. நின்ற - நிற்குமவனாய். நளிர்-குளிர்ந்த. மதி-சந்த்ரகலாதாரணத்தாலும். சடையனென்கோ - ஜடாதரத்வத்தாலும் போகதப:பரனானருத்ரன். நான்முகன் - தேவதாவர்க்கம்கையெடுக்கும்படி சதுர்முகனான. கடவுளென்கோ - தைவமென்பேனோ. ..............................*

---

## ஈடு-எட்டாம்பாட்டு.

ஜகத்தில்ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளை விபூதியாகவுடையனானபடியைப் பேசுகிறார்.

(ஒளிமணிவண்ணனென்கோ) கீழ்ச்சொன்னவடிவழகு பின்னாடினபடி.

(ஒருவனித்யாதி) இவன்ஜகத்துக்கு ப்ரதாநனென்று அவிவேகிக ளேத்தும்படியாய், குளிர்ந்தமதியையும் சடையையுமுடைய ருத்ரனென்பேனோ. (நளிர்மதிச்சடையனென்கோ) தலையானமதியையுடையவனென்பேனோ. அவர்கள்ப்ரமம்போக்கித் தன்பக்கலொன்றுமில்லை. அவனுக்குங்கூட ஜநகனானசதுர்முகனாகிற தைவமென்பேனோ. (அளிமகிழ்ந்து) ரக்ஷணத்தையேயாதரித்து லோகங்களையடைய ஸ்ருஷ்டித்து அவையேத்தநின்ற. யாதொருப்ரயோஜநத்தை நினைத்துஸ்ருஷ்டித்தான், அந்தப்ரயோஜநம்பெற்றுநின்ற. (களிமலரித்யாதி) களியென்று-தேன். மலரென்று - பூ. மதுவையும் மலரையுமுடைத்தான திருத்துழாய்மாலையை யுடையனாய், அம்மாலையாலே யென்னையநந்யார்ஹமாக வெழுதிக்

கொண்டவனுமாய், எனக்கு சுலபனுமாய், ஆஸ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையவனு மானவனே..................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (ஒளிமணியித்யாதி) "களிர்மதிச்சடையன்" இத்யாதியைப்பற்ற வவதாரிகை (ஜகத்திலித்யாதி)

புரஸ்சசொல்லுவானென்னென்ன (கீழ்ச்சொன்னவித்யாதி)

"ஏகவருத்ரோநத்விதீயாயதஸ்த்தே" (ஏகஏவருத்ரோநத்விதீயாயதஸ்த்தே) என்றத்தைப்பற்ற (ஏத்தும்படியென்றது) "சடையன்" என்றபதஸாமர்த்த்யத்தைப்பற்ற (அவிவேகிகளேத்தும்படியாயென்றது) ஒருவன் -அத்விதீயன். ப்ரதானனென்றபடி. ஒருவனென்று ப்ரமித்தேத்தவத்தாலே தேவதையாக நின்றவித்யர்த்த:. சாடுவுக்கு, தலையானமதி - ஶ்லாக்யமானஜ்ஞாநம். தலையிலேயான சந்த்ரனென்று ஸ்வபாவார்த்தம். "சடையன்" என்றதுக்குபாவம் (அவர்கள்ப்ரமமித்யாதி) களிர்-குளிர்த்தி. கடவுள்-தேவதை.

அளி-ரக்ஷணம். பலிதம் (யாதொருவித்யாதி)

உத்தரார்த்தாநு ஸந்தாந பூர்வகம் பூர்வார்த்தாநு ஸந்தாநமந்வய:........*

# ஒன்பதாம்பாட்டு.

கண்ணனைமாயன்றன்னைக்கடல்கடைந்தமுதங்கொண்ட
வண்ணலையச்சுதனையனந்தனையனந்தன்றன்மே
னண்ணிநன்குறைகின்றானைஞாலமுண்டுமிழ்ந்தமாலை
யெண்ணுமாறறியமாட்டேன்யாவையும்யவருந்தானே.

## ஆறுயிரப்படி.

(கண்ணனை) ஆஶ்ரிதஸுலபத்வார்த்தமாக தத்ஸஜாதீயதயாவதீர்ணனாய், ஆஶ்சர்யாதிமநோஹர திவ்யசேஷ்டிதங்களை யுடையனாய், ஆஶ்ரிதரைக்கைவிடாத ஸ்வபாவனாய், அநந்தகல்யாணகுண விசிஷ்டனாய், அநந்தகல்யாணகுண மஹோததியான திருவனந்தாழ்வானை திவ்யசய்யாஸநாதிகளாகவுடையனாய், ஸர்வலோகபரிபாலகனாய், ஸர்வாந்தராத்மபூதனான வெமபெருமானை இங்ஙனே சொல்லுவேனென்றறிகிலேனென்கிறார்....................................................*

## பன்னீராயிரப்படி,

அநந்தரம், உக்தவிபூதிமாத்ரமன்றியே சகலசேதனாசேதநங்களும்தானேயானவனைப்பரிச்சேதிக்கும் ப்ரகாரமறியேனென்கிறார்.

யாவையும் - எல்லாவகைப்பட்டவசேதநமும், யவரும் - எல்லாவகைப்பட்டசேதநரும், தான் - தானேயாய்வைத்து, கண்ணனை - ஆஶ்ரிதசுலபனாய், மா

யன்றன்னை - ஆஶ்சர்யாவஹமான குணசேஷ்டிதநிரூபணியனாய். அர்வாசீநப்ரயோஜனார்த்திகளுக்கும் கடல் - கடலை. கடைந்து - கடைந்தும். அமுதங்கொண்ட - கார்யஞ்செய்யும். அண்ணலை - சர்வஸ்வாமியாய். அச்சுதனை - ஆஶ்ரிதரைநழுவவிடாதவனாய். அனந்தனை - அபரிச்சிந்நஸ்வரூபாதிவைபவத்தையுடையனாய். அனந்தன்றன்மேல் - அத்தனையுந்தனக்குள்ளேயடங்கும்படியான திருவனந்தாழ்வான் மேலே. நண்ணி - பொருந்தி. நன்கு - உகந்து. உறைகின்றானை. கண்வளராநிற்குமவனாய். ஞாலம் - ரக்ஷ்யத்துக்குஆபத்துவந்தால், உண்டு - வயிற்றிலேவைத்து நோக்குவது. உமிழ்ந்த - வெளிநாடுகாட்டுவதான. மாலை - வாத்ஸல்யத்தையுடையனானவனை. எண்ணுமாறு - பரிச்சேதித்துநினைக்கும்படி. அறியமாட்டேன் - அறிகிறிலேன்.................................................................*

---

## ௯ - ஒன்பதாம்பாட்டு.

அவனுடைய விபூதிவிஸ்தாரங்கள் தனித்தனியே பேசமுடியாது, கார்யகாரணரூபமான சேதநாசேதநங்களவனுக்குவிபூதியென்று ப்ரயோஜகத்திலே சொல்லலாமித்தனை யென்கிறார்.

(கண்ணனைமாயன்றன்னை) "எத்திறம்" என்னும்படியான குணசேஷ்டிதங்களை யுடையவனை. (கடலித்யாதி) ப்ரயோஜநாந்தர பரரானவர்களுக்கும், உடம்புநோவக்கடல்கடைந்து அவர்களபேக்ஷித ஸம்விதாநம்பண்ணும்ஸ்வாமியை. (அச்சுதனை) தன்னையாஶ்ரயித்தாரை ஒருநாளும்நழுவவிடாதே ரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனை. (அனந்தனை) ஸ்வரூபரூபகுண விபூதிகளாலபரிச்சிந்நனானவனை. (அனந்தனித்யாதி) ஶேஷத்வகாஷ்டையிலேநிற்கையாலே ஶேஷியானவனையும்விளாக்கொலைகொள்ள வல்லனான திருவனந்தாழ்வான் மேலேகிட்டி, பிராட்டிமார் திருமுலைத்தடத்தாலும் நெருக்கியெழுப்ப வொண்ணாதபடி கண்வளர்ந்தருளுகிறவனை. (ஞாலமுண்டுமிழ்ந்தமாலை) ஆபந்நருண்டானாலப்படுக்கையிலும் பொருந்ாதவனை. (எண்ணுமாறறியமாட்டேன்) அவனும் விபூதிவிஷயமாகப் பரக்கச்சொல்லிக்கொண்டுபோரா, "நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே" (நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே) என்றானிறே; அப்படியேயிவரும் கீழேசிலவற்றைச்சொல்லா, இவனைச்சொல்லும் ப்ரகாரமறிகிறிலேனென்கிறார்.

ஆனாலும் ப்ரயோஜகத்தில் சொன்னாலோவென்னில் (யாவையும்யவருந்தானே) சேதநாசேதநங்களுடைய ப்ரகாரமாகத்தான் ப்ரகாரியா யிருக்குமித்தனை.................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (கண்ணனையித்யாதி) "எண்ணுமாறறியமாட்டேன்யாவையும்யவரும்தானே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அவனுடையவித்யா

தி ) (ப்ரயோஜகத்திலே) சேதநத்வாசேதநத்வரூபோபாதி க்ரோடீகாரேணேத்யர்த்த8.

பதச்சேர்த்திக்கர்த்தம் (எத்திறமித்யாதி) (குணசேஷ்டிதங்களையுடைய) க்ருஷ்ணனையென்றுகூட்டுவது.

பாவகர்ப்பிதசப்தார்த்தம் (ப்ரயோஜநாந்தரேத்யாதி) ஸம்விதாநம்-நிறைவேற்றிக்கொடுக்கை.

(நழுவவிடாதே) நச்யாவயதிதி - அச்யுத8 என்றுகருத்து.

அனந்தனை - அபரிச்சின்னனை.

" அனந்தன் " என்று - சேஷத்வத்தி னுத்தராவதி யில்லாதவனென்றபடி. விளாக்கொலைகொள்ளுகை - கபளீகரிக்கை. அதாவது - வ்யாமுக்தனுக்குகை. " நன்கு " என்றபதத்துக்குவாஸனை (பிராட்டிமாரித்யாதி)

" நன்குறைகின்றானை, ஞாலமுண்டுமிழ்ந்தமாலை " என்கிறசேர்த்திக்குபாவம் (ஆபந்நரித்யாதி)

" அறியமாட்டேன் " என்கிறதென், முடியச்சொல்லப் போகாதோவென்ன (அவனுமித்யாதி) " [Grantha script passage] " (அதவாபஹுநைதேநகிஜ்ஞாதேநதவார்ஜுந। விஷ்டப்யாஹமிதம்க்ருத்ஸ்நமேகாம்ஸேநஸ்த்திதோஜகத்) என்றகீதாவசந மநுஸந்தேயம். சொல்லா-சொல்லி. கார்யேகாரணோபசார இத்யபிப்ராயேணஹ (சொல்லும்ப்ரகாரமிதி)

ப்ரயோஜகம் - ஸங்க்ஷேபம்.

" [Grantha script passage] " (ஹந்ததேகதயிஷ்யாமிவிபூதிராத்மநஸ்ஸுபா8। ப்ராதாந்யத8 குருஸ்ரேஷ்ட்டநாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே) இதிகீதாஸூதஸமே.............................................................*

## பத்தாம்பாட்டு.

யாவையும்யவருந்தானுயவரவர்சமயந்தோறுந்
தோய்விலன்புலனைந்துக்குஞ்சொலப்படானுணர்வின்மூர்த்தி
ஆவிசேருயிரினுள்ளாலாதுமோர்பற்றிலாத
பாவனையதனைக்கூடிலவனையுங்கூடலாமே.

### ஆறுயிரப்படி.

(யாவையும்) இப்படி சர்வவஸ்துக்களோடு மாத்மதயாசம்பந்தமுண்டாயிருக்கச்செய்தே, ஹேயப்ரத்யநீகதயாஸ்வேதரசமஸ்தவஸ்துவிஸஜாதியனாய் ஜ்ஞாநஸ்வரூபனாயிருக்கையாலே ஸ்வஸரீரபூத சமஸ்தவஸ்துகத சர்வதோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும். இதுகூடுமோவெ

ன்னில்; இந்தசரீரத்திலேவர்த்திக்கிற இந்தப்ரத்யகாத்மாவுக் கிந்தசரீரகததோஷங்களினாலஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கையாகிற இஸ்ஸ்வபாவங்கூடுமாகி லெம்பெருமானுக்கு மிதுகூடுமென்கிறார்.........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி ப்ரகாரபூத சிதசித்துக்களின்படி யவன்றனக்குத்தட்டாதபடியை யநுஸந்திக்கிறார்.

யாவையும் - எல்லாவசேதநமும். யவரும்-எல்லாச்சேதநரும். தானாய்-தானேயாய். அவரவர்-அந்தர்தச்சேதநருடைய. சமயந்தோறும்-அசித்ஸம்ஸர்க்கநிபந்தநமான தேவாதிவ்யவஸ்த்தைகளில். தோய்விலன்-அவர்களைப்போல்தனக்கு ஸங்கமில்லாதவனாய். புலனைந்துக்கும்-இந்த்ரியபஞ்சகத்துக்கும். சொலப்படான்-விஷயமாகச்சொல்லப்படாதவனாய். உணர்வின்மூர்த்தி- ஸ்வயம்ப்ரகாஶஜ்ஞாநஸ்வரூபனாயிருக்குமாதலால். ஆவி-ப்ராணாஶ்ரயமானசரீரத்தோடு. சேர்-சேர்ந்த. உயிரின்-ஆத்மாவினுடைய. உள்-ஸ்வரூபத்தில். ஆதும்-ஶரீரகதமானஜடத்வபரிணாமித்வாதிஸ்வபாவங்கள். ஓர்-ஒன்றிலும். பற்று-தொற்று. இலாத-இல்லாத. பாவனை-ப்ரதிபத்தியானது. அதனை-அந்தஸ்வரூபத்தை. கூடில்-கிட்டுமாகில். ஆதுமோர்பற்றிலாதபாவனை-சமஸ்தசேதநாசேதநஸ்வபாவங்களிலுமொரு தொற்றில்லையென்கிற ப்ரதிபத்தி. அவனையும்-கீழ்ச்சொன்னஸ்வயம்ப்ரகாஶஜ்ஞாநஸ்வரூபனான ஈஶ்வரனையும். கூடலாம்-சேரலாம். ஏ-நிஶ்சிதம் ......................................*

---

## ஈடு - பத்தாம்பாட்டு.

சேதநாசேதநங்களுக்கந்தராத்மதயா வ்யாபித்துநின்றால் தத்கததோஷைர ஸம்ஸ்ப்ருஷ்டனென்கிறார்.

(யாவையும்யவருந்தானாய்) சேதநாசேதநங்களுடைய "தான்" என்கிறசொல்லுக்குள்ளே யடங்கும்படி ப்ரகாரமாகத்தான் ப்ரகாரியாய். (அவரவரித்யாதி) அவரவரென்கிறது - சேதநருடையபன்மையைப் பற்ற. கீழே "யாவையும்யவரும்" என்றுரைக்கவெடுக்கையாலே, அநுபாஷிக்கிறவிடத்திலும், அவையவையென்று - அசித்தும் தன்னடையே வரும். அவைதன்னையெடாதொழிவானென்னென்னில், அப்ராதாந்யத்தாலும் ப்ரகரணபலத்தாலும் தன்னடையேவருமென்னுமிடங்கொண்டும். சமயமென்கிறது - வ்யவஸ்த்தைகளை. அசித்தினுடைய பரிணாமாதிகளையும் சேதநத்தினுடைய சுகித்வதுஃகித்வங்களையும் நினைக்கிறது. (தோய்விலன்) சேதநாசேதநங்கள் "தான்" என்கிறசொல்லுக்குள்ளே யடங்கும்படி அவற்றோடேகலந்துநிற்கச்செய்தே, அவற்றினுடையதோஷங்கள் தன்பக்கல் தட்டாதபடிநிற்கும். சேதநர்க்கு அசித்கதமான பரிணாமாதிகளில்லையேயாகிலும், அந்த அசித்ஸம்ஸர்க்கத்தாலே சுகித்வ துஃகித்வங்களுண்டாகாநின்றதே; அப்படியே யிச்சேதநாசேதநங்களெங்கும்புக்கு

வ்யாபித்துநின்றால், தத்கததோஷமிவனை ஸ்பர்ஶியாதோ வென்றால்; அவற்றாலஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும். எல்லாம்செய்தாலுமிவற்றுக்கு சுகித்வதுஃகித்வங்களின்றியிலேயிருக்க, இவ்வசித்தோட்டைச் சேர்த்தியாலேயன்றோவுண்டாகிறது, அப்படியிவனுக்கும் கூடாதோவென்னில்; கூடாது, அதுக்கடி-ப்ரவேஶஹேதுவிசேஷத்தாலே. இவனைப்போலே கர்மமடியாகவன்றிக்கே அநுக்ரஹமடியாகவிறே அவனுக்கிவற்றோட்டை ப்ரவேசமிருப்பது. சிறைக்கூடத்திலே சிறையனும்கிடந்தான், ராஜகுமாரனுமிருந்தான்; சிறையன்கர்மமடியாக ப்ரவேசிக்கையாலே துஃகஹேதுவாயிற்று, ராஜகுமாரனிச்சையாலே ப்ரவேசிக்கையாலே போகரூபமாயிருந்தது; "ஸமாநம்வ்ருக்ஷம்பரிஷஸ்வஜாதே-அநஶ்நந்ந்ய:" (ஸமாநம்வ்ருக்ஷம்பரிஷஸ்வஜாதே - அநஶ்நந்நந்ய: ) என்னுநின்றதிறே. (புலனைந்துக்கும்சொலப்படான் ) ஶ்ரோத்ராதிகளைந்துக்கும் விஷயதயா சொல்லப்படானென்னுதல்; அன்றிக்கே, நினைத்திறேசொல்லுவது, அச்சொலவுக்கும் முன்பில்நினைவைலக்ஷித்து, அவற்றால்ஸ்மரிக்கப்படானென்னுதல். பின்னையவன்றானிருக்கும்படி யென்னென்னில் ( உணர்வின் மூர்த்தி ) ப்ரகாசத்தையேவடிவாகவுடையனாயிருக்கும். (மூர்த்திசப்தம்-ஸ்வரூபவாசி.)

எல்லாஞ்செய்தாலு மிவற்றோடுண்டான ஸம்ஸர்க்கம் மெய்யாயிருக்க, இவற்றினுடையதோஷம் தன்பக்கல்தட்டாதபடி யிருக்குமென்னு மிதுகூடுமோவென்னில் (ஆவிசேரித்யாதி) ஆவியுண்டு - ப்ராணாஶ்ரயமானஶரீரம். அத்தோடுசேர்ந்திருந்துள்ள, உயிருண்டு - ஆத்மா. அதின்பக்கலந்த ஶரீரகதமான பால்யயௌவநாதிகளொன்றாலு மொருசம்பந்தமுமில்லையாம்படியாக அநுசந்திக்கிற அநுசந்தாநமானது அந்த ஆத்மாவுக்குக்கூடாநின்றபின்பு, அப்பொருளவனையுங்கூடத்தட்டில்லை. இங்ஙனன்றிக்கே, "இதுக்குவேறேயு மிரண்டுபொருள் சொல்லுவர்கள்" என்றருளிச்செய்வர் - அவன்பக்கலிலே பக்தியுண்டாகி லவனைக்கிட்டலாமென்றும், புறம்புண்டான - உபாயாந்தரங்களிலுண்டானபற்றடைய விட்டு அவனையேபற்றி லவனைக்கிட்டலாமென்றும். அன்றியே, அந்திமப்ரத்யயமுண்டாமாகி லவனைக்கூடலாமென்றுமாம். இத்தையெம்பெருமானார்கேட்டருளி; "கீழ் - வ்யாப்தியைச்சொல்லிநின்றபின்பு, இனி-வ்யாப்யவஸ்துகதமானதோஷங்கள் வ்யாபகனானவனுக்குத்தட்டாதென்னுமிடமவஶ்யம் சொல்லவேணும், ஆனபின்பு இத்தையேசொல்லிற்றாகவமையும்" என்றருளிச்செய்வர்......................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (யாவையுமித்யாதி) "தோய்விலன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சேதநாசேதநங்களுக்கித்யாதி) நின்றால் - நின்றாலும்.

தானென்கிற சொல்லுக்குள்ளேயடங்குகை - சர்வேஶ்வரனுடைய அஹம் சப்தத்தோடே சமாநாதிகரிக்கயோக்யமாயிருக்கை. வீப்ஸைக்குபாவம் (அவரவரித்யாதி) "யாவையும்யவரும்" என்றத்தையநுபாஷிக்கிறாகில், "அவரவர்" என்றவோபாதி, அவையவையென்று மநுபாஷியாதொழிவானென்னென்ன (கீழே யாவையுமித்யாதி) இத்தை சங்காபூர்வகமாக விவரிக்கிறார் (அவைதன்னையித்யாதி) (என்னுமிடங்கொண்டும்) என்ற சஶப்தத்துக்கர்த்தமில்லை. வ்யவஸ்த்தைகள்தானேதென்ன (அசித்தினுடையவித்யாதி) "தோய்வு" என்று-ஸ்பர்ஶமாய், "இல்" என்று - இல்லாமையாய், சேதநாசேதநகதமானதோஷஸ்பர்ஶமில்லாதவனென்றபடி. (சேதநாசேதநங்களிதி) பால்யயௌவநாத்யவஸ்த்தாயதா ஜீவாத்மாநம்நஸ்ப்ருஶந்தி, தத்வதிதிபாவ:.

தத்ரசங்கதே. (சேதநர்க்கித்யாதி) "𑌸𑌂𑌭𑍋𑌗𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑌿𑌚𑍇𑌨𑍍𑌨 𑌵𑍈𑌶𑍇𑌷𑍍𑌯𑌾𑌤𑍍" (ஸம்போகப்ராப்திரிதிசேந்நவைஶேஷ்யாத்) என்ற ஸூத்ரத்தையுட்கொண்டு உக்தார்த்தவிவரணம் (எல்லாம் செய்தாலுமித்யாதி) அப்படியிவனுக்குங்கூடாதோவென்னிலென்கிறது - "𑌸𑌂𑌭𑍋𑌗𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑌿𑌚𑍇𑌤𑍍" (ஸம்போகப்ராப்திரிதிசேத்) என்றதினர்த்தம். "𑌨 𑌵𑍈𑌶𑍇𑌷𑍍𑌯𑌾𑌤𑍍" (நவைஶேஷ்யாத்)' என்றதினர்த்தம் (கூடாதித்யாதி) ஸூத்ரார்த்தஸ்து - பாஷ்யே, "𑌜𑍀𑌵𑌸𑍍𑌯𑍇𑌵 𑌪𑌰𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌶𑍍𑌶𑌰𑍀𑌰𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌮𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌤𑌂𑌚𑍇𑌤𑍍𑌤𑌦𑍍𑌵𑌦𑍇𑌵 𑌶𑌰𑍀𑌰𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍋𑌪𑌭𑍋𑌗𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑌿𑌚𑍇𑌤𑍍. 𑌤𑌨𑍍𑌨, 𑌹𑍇𑌤𑍁𑌵𑍈𑌶𑍇𑌷𑍍𑌯𑌾𑌤𑍍. 𑌨𑌹𑌿𑌶𑌰𑍀𑌰𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍋𑌪𑌭𑍋𑌗𑌹𑍇𑌤𑍁𑌃, 𑌅𑌪𑌿𑌤𑍁𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑌰𑍂𑌪𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌵𑌶𑌤𑍍𑌵𑌮𑍍. 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌨𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌨𑌸𑌮𑍍𑌭𑌵𑌤𑌿. 𑌤𑌥𑌾𑌚𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 '𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿, 𑌇𑌤𑌿" (ஜீவஸ்யேவபரஸ்யாபிப்ரஹ்மணஶ்ஶரீராந்தர்வர்த்தித்வமப்யுபகதஞ்சேத்தத்வதேவஶரீர ஸம்பந்தப்ரயுக்தஸுகது:கோப போகப்ராப்திரிதிசேத். தந்ந, ஹேதுவை ஶேஷ்யாத். நஹிஶரீராந்தர்வர்த்தித்வமேவ சுகது:கோபபோகஹேது, அபிதுபுண்யபாபரூபகர்மபரவஶத்வம். தத்த்யபஹதபாப்மந:பரமாத்மநோநஸம்பவதி. ததாசஶ்ருதி: 'தயோரந்ய:பிப்பலம்ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி, இதி) இதி. ஹேதுவிசேஷமேதென்ன (இவனைப்போலேயித்யாதி) உபபாதிதப்ரவேஶஹேதுவிசேஷத்தை . லௌகிகத்ருஷ்டாந்தேந த்ருடீகரோதி (சிறைக்கூடத்திலேயித்யாதி) சாதிதேர்த்தேப்ரமாணம்தர்ஶயதி (ஸமாநம்வ்ருக்ஷமித்யாதி) "(சேதநர்க்கசித்கதமான) என்றுதொடங்கி (அநஶ்நந்நந்ய:) என்னுமளவும் - 'ஆவிசேர்' இத்யாதியான மூலவாக்யத்தால் பரிஹரித்ததின்மேலேவந்த சங்காபரிஹாரமாகையாலே, 'அப்பொருளவனையுங்கூடத்தட்டில்லை' என்றவாக்யாநந்தரோ அநுசந்தித்தால் மிகவும்சேரும்" என்றருளிச்செய்வர்.

அவற்றால் ஸ்மரிக்கப்படான் - இந்த்ரியங்களாலறியப்படான்.

(உணர்வின்மூர்த்தி) உணர்வு-ஜ்ஞாநம். மூர்த்திசப்தம்-ஸ்வரூபவாசி. உணர்விலேயானஸ்வரூபத்தையுடையவன். ஸ்வயம்ப்ரகாஶஜ்ஞாநஸ்வரூபனென்றபடி.

"ஆவிசேர்" இத்யாத்யுத்தரார்த்தாவதாரிகை (எல்லாம்செய்தாலுமித்யாதி) இவ்வாக்யத்திலே-"[illegible]",

(ருமாகதகாஷ்ட்டவத், பாதகிஸம்ஸர்க்காத்பாதகிவத்) என்ற த்ருஷ்டாந்தத்வய மநுசந்தேயம். அசித்கததோஷசங்க்ரமணத்துக்கு த்ருஷ்டாந்தம் - "ருமாகதகாஷ்டவத்" (ருமாகதகாஷ்ட்டவத்) என்றது; சேதநகததோஷம் தத்ஸம்ஸர்க்கத்தால்வருமென்றதுக்குத்ருஷ்டாந்தம் - "பாதகிஸம்ஸர்க்காத்பாதகிவத்" (பாதகிஸம்ஸர்க்காத்பாதகிவத்) என்றது. ருமர-உப்பளம். உயிரினுள் - உயிரினிடத்தில். ஆல்-அசை. அவ்யயம். பாவனை - அநுசந்தாநம். அதனை - அந்தவாத்மாவுக்கு. இது-அர்த்தசதுஷ்டயசாதாரணம். அவனையும்-அந்தபரமாத்மாவுக்கும். அர்த்தத்ரயஞ்சொல்லாநிற்க, வேறேயுமிரண்டுபொருளென்றது - பக்திப்ரபத்திகளிரண்டையுமேககோடியாகநினைத்து. பக்தியாமானபோது, "ஆவி" என்று - ஆத்மா. "உயிர்" என்று-பரமாத்மா. ஆத்மாவோடுசேர்ந்த பரமாத்மாவின்பக்கலிலே ப்ரயோஜநாந்தரங்களொன்றிலு மொருபற்றில்லாததை லதாராவதவிச்சிந்நஸ்ம்ருதிசந்தாநரூபமான, பாவனையுண்டு-பக்தி, அது அந்தவாத்மாவுக்குக்கூடி லவனையும் கிட்டலா மிதிசப்தார்த்த:. ப்ரபத்தியோஜநையில், ஆதுமோர் பற்றிலாதபாவனை-உபாயாந்தரங்களொன்றிலு மொருபற்றின்றிக்கேயிருக்கிறபாவனை. ததேகோபாயத்வாத்யவசாயவிசேஷமென்றது விசேஷம். அந்திமஸ்ம்ருதிபக்ஷத்தில், ஆவி-ப்ராணனானது, சரீரத்தைவிட்டு ஆத்மாவிலேசேருகிறவளவிலேயென்னுதல்; பரமாத்மாவின்பக்கலிலே சேருகிறவளவிலேயென்னுதல். ஆதுமோர்பற்றிலாத-வ்யதிரிக்தவிஷயங்களொன்றிலு மொருசங்கமில்லாத. பாவனை-அந்திமஸ்ம்ருதியென்றபடி. பாவனை-ப்ரதமபக்ஷத்தில், நிதித்யாசநம்; த்விதியபக்ஷத்தில், உபாயாத்யவசாயம்; த்ருதீயபக்ஷத்தில், அந்திமஸ்ம்ருதி. எம்பெருமானார் நிர்வாஹத்தில், அநுசந்தாநமிதிபேத:. "ஆதுமோர்பற்றிலாத" என்றதுக்கு - சரீரகதமானபால்யாதிதோஷங்களொன்றிலு மொருசம்பந்தமில்லாதவென்றும்; பக்திபக்ஷத்தில், ப்ரயோஜநாந்தரங்களில் பற்றில்லாதவென்றும்; ப்ரபத்திபக்ஷத்தில், உபாயாந்தரங்களில் பற்றின்றிக்கேயென்றும்; அந்திமஸ்ம்ருதிபக்ஷத்தில், வ்யதிரிக்தவிஷயங்களில் சங்கமில்லாதவென்றும் பேதம். இத்தை-கீழ்ச்சொன்னமூன்றர்த்தத்தையும். இத்தையே சொல்லிற்றுகவமையுமென்றது-சரீரகதமானபால்யாதிகள் சேதநனுக்குவாராதாப்போலே, சேதநாசேதநகததோஷமும் ஈஶ்வரனுக்குவாராதென்று முந்தறவருளிச்செய்தவர்த்தமேசொல்லிற்றுகவமையுமென்றபடி. எம்பெருமானார் நிர்வாஹமொழிந்த யோஜநாத்ரயத்திலும், அதனையென்று - பாவனைக்கு விசேஷணமாய், "அந்தபாவனை" என்று-அப்பன் ஸ்ரீகோசத்தின்படி ......................................*

# பதினொன்றாம்பாட்டு.

கூடிவண்டறையுந்தண்டார்க்கொண்டல்போல்வண்ணன்றன்னை
மாடலர்பொழிற்குருகூர்வண்சடகோபன்சொன்ன
பாடலோராயிரத்துளிவையுமொருபத்தும்வல்லார்
வீடிலபோகமெய்திவிரும்புவரமரர்மொய்த்தே.

## ஆறாயிரப்படி.

(கூடி) இத்திருவாய்மொழிவல்லார் சர்வகாலமும் பகவத்கைங்கர்யத்தைப்பெற்று*அயர்வறுமமரர்களுக்குப்பரமபோக்யராவரென்கிறூர்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக அவிச்சிந்நபகவதநுபவத்தையருளிச்செய்கிறார்.

வண்டு-வண்டுகள். கூடி-கூடி. அறையும்-மதுபாநப்ரீதியாலே சப்திக்கிற. தண்-குளிர்ந்த. தார்-திருமாலையையுடையவனாய். கொண்டல்போல்-காளமேகம்போலேயிருக்கிற. வண்ணன்றன்னை-நிறத்தையுடையனானவனை. மாடு-சுற்றும். அலர்-அலர்ந்த. பொழில்-சோலைகளையுடைத்தான. குருகூர்-திருநகரிக்கு. வண்-நிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொன்ன-அருளிச்செய்த. பாடல்-இசையோடுகூடின. ஓர்-அத்விதீயமான. ஆயிரத்துள்-ஆயிரத்துக்குள்ளும். இவையும்-அசாதாரணவிக்ரஹத்தோபாதியாக அகிலவிபூதிப்ராகாரத்வத்தை ப்ரதிபாதித்த. ஒரு-அத்விதீயமான. பத்தும்-இப்பத்தையும். வல்லார்-அப்யசிக்கவல்லவர்கள். வீடில-அவிச்சிந்நமான. போகம்-பகவதநுபவத்தை. எய்தி-பெற்று. அமரர்-நித்யசூரிகள். மொய்த்து-மொய்த்துக்கொண்டு. விரும்புவர்-விரும்பும்படியாவர்கள்.

இது - அறுசீராசிரியவிருத்தம்.......................................................*

---

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றவர்கள்நித்யகைங்கர்யத்தைப்பெற்று * அயர்வறுமமரர்களாலே விரும்பப்படுவர்களென்கிறார்.

(கூடிவண்டறையுமித்யாதி) கீழ்-பரக்கச்சொன்னவிபூதியடைய, தோளில்தோள்மாலையோபாதியவனுக்குத்தகுதியாயிருந்தபடியைச்சொல்லுகிறது. கிண்ணகத்திலேயிழிவாரைப்போலே வண்டுகளானவை திரண்டு மதுபாநம்பண்ணி த்வநியாநின்றுள்ளஸ்ரமஹரமானமாலையையும், ஸ்ரமஹரமானமேகம்போலேயிருக்கிற திருமேனியையுமுடைய சர்வேஸ்வரனையாயிற்றுக்கவிபாடிற்று. (மாடலரித்யாதி) பர்யந்தங்களிலே அலர்ந்தபொழிலையுடையதிருநகரிக்கு நிர்வாஹகராய் பரமோதாரரான ஆழ்வாரருளிச்செய்த (பாடலோராயிரம்) புஷ்பம் பரிமளத்தோடேயலருமாபோலே இசையோடுகூடின ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தையு மப்யசிக்கவல்லவர்கள். (வீடிலபோகமெய்தி) ஒருநாளும் விச்சேதசங்கையில்லாத மோக்ஷசுகத்தைப்ராபித்து. (விரும்புவரமரர்மொய்த்தே) அமரராலேமொய்த்து விரும்பப்படுவர். லீலாவிபூதியை ததீயத்வாகாரத்தாலே யநுசந்திப்பார் நித்யசூரிகளாகையாலே, "தாங்களநுபவிக்கக்கடவ அநுபவத்தை, சம்சாரத்தேயிருந்துவைத்து இப்படியிருப்பதொரு ஜ்ஞாநபாகம்பிறந்தநுசந்திப்பதே" என்று ஆழ்வார்பக்கல்பண்ணின ப்ரோமாதிசயத்தாலே; அவருடையப்ரபந்தங்களை யப்யசித்தவர்களை, சர்வேஸ்வரனைவிட்டு இவர்களைநெருங்கி யாதரியாநிற்பர்கள் நித்யசூரிகள்.

முதற்பாட்டில் - இத்திருவாய்மொழியில் பரக்கவருளிச்செய்த அர்த்தத்தை சங்க்ரஹேணவருளிச்செய்தார்; இரண்டாம்பாட்டில் - கீழ்ச்சொன்னபூதங்களினுடைய கார்யத்தை க்ரமத்திலே பேசினார்; மூன்றாம்

பாட்டில் - ஜகதாகாரனாய்நின்றநிலையோடே அசாதாரணவிக்ரஹத்தைச் சேர்த்தநுபவித்தார்; நாலாம்பாட்டில்-உஜ்ஜ்வலமானமாணிக்யாதி பதார்த்தங்களை விபூதியாகவுடையவனென்றார்; அஞ்சாம்பாட்டில் - ரசவத்பதார்த்தங்களை விபூதியாகவுடையனாயிருக்கிறபடியை யருளிச்செய்தார்; ஆறாம்பாட்டில்-வேதந்தொடக்கமான இயலுமிசையுமான சப்தராசியை விபூதியாகவுடையனென்றார்; ஏழாம்பாட்டில் - ஐஸ்வர்யாதிபுருஷார்த்தங்களை விபூதியாகவுடையனென்றார்; எட்டாம்பாட்டில் - ஜகத்தில்ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளை விபூதியாகவுடையனென்றார்; ஒன்பதாம்பாட்டில்-அவனுடையவிபூதிவிஸ்தாரங்கள் தனித்தனியே பேசமுடியாமையாலே, சேதநாசேதநங்களை விபூதியாகவுடையனென்று ப்ரயோஜகத்திலேயருளிச்செய்தார்; பத்தாம்பாட்டில் - இவற்றுக்கு மந்தராத்மாவாய் வ்யாபித்துநின்றால் தத்கததோஷைர ஸம்ஸ்ப்ருஷ்டனென்றார்; நிகமத்தில்-இதுகற்றார்க்குப்பலஞ்சொல்லித்தலைக்கட்டினார் ........................*

---

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (கூடியித்யாதி) "இவையுமொருபத்து" இத்யாதிமேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை.

இப்போதுமாலையோட்டைச்சேர்த்திசொன்னதுக்கு ப்ரயோஜநமேதென்ன (கீழ்பரக்கவித்யாதி) கிண்ணகம்-ப்ரவாஹம். கூடி-திரண்டு. அறைகை - சப்திக்கை. கீழ்பரக்கச்சொன்னவென்றவிடத்திலே - "யஸ்யாயுதாயுதாம்ஸாம்ஸே விஸ்வஸக்திரியம்ஸ்திதா" (யஸ்யாயுதாயுதாம்ஸாம்ஸேவிஸ்வஸக்திரியம்ஸ்த்திதா) "ஶேஷாரிவாணார்யஸ்யைதத்ப்ரஹ்மாண்டமகிலம்முநே" (மேரோரிவாணுர்யஸ்யைதத்ப்ரஹ்மாண்டமகிலம்முநே ) என்றதநுஸந்தேயம்.

மாடு - பர்யந்தம்.

அமரர்விரும்புகைக்கடியேதென்ன (லீலாவிபூதியையித்யாதி) அமரர்-அமரராலே. விரும்புவர் - விரும்பப்படுவர்..........................................*

---

# த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(புகழுநல்லொருவன்.)

ஸர்வைஸ்தத்த்வைஸ்ஸமஸ்தைஸ்ஸ்வநிஜவபுஷா தீப்ததீப்தைர்வேதா
ந்தை: ஸர்வ்ராஷ்டாஸ்பதாநாஸ்வப்ருதிபவஸமாஸமாவிஷ்டஸர்வ
வஸ்து: । நாநாகாரை: ஸுபூர்ணோ ஜகதிவிதிஸ்துதோநாவநாத
நாதோ த்ருஷ்டோஷைரத்ருஷ்டோ திவிஜதநுதயா ஸம்ஸ்ருதஸ்தா
வதஸ்ஷ: ॥ (உஎ)

(பூதை:) பொருவில்சீர்ப்பூமியித்யாதி-ப்ருதிவ்யாதிபஞ்சபூதங்களோடும்; (தத்கார்யபூதை:) குன்றங்களனைத்துமித்யாதி - ப்ருதிவ்யாதிகார்யங்களான பர்வதமேகநக்ஷத்ரவித்யாசப்தங்களோடும், வித்யாஸ்வரூபையான வுக்திவாயுவினாலே யபிவ்யங்க்யையாகையாலே வித்யைகளை வாயுகார்யமென்றது, "ஞானநல்லாவி" என்கிறவிடத்தில், ஆவியென்று - லக்ஷணையாலே சரீரத்தைச்சொல்லி, அத்தாலே - ஜ்ஞாநத்துக்கு சரீரமென்று ஜ்ஞாநசாதநமான சப்தத்தைச்சொன்னபடி; (ஸ்வபநிஜவபுஷா) பங்கயக்கண்ணனென்கோவித்யாதி-நிரதிசயசௌந்தர்யவிசிஷ்ட திவ்யமங்களவிக்ரஹத்தோடும்; (தீப்திமத்பி:பதார்த்தை:) சாதிமாணிக்கமித்யாதி - நிர்மலங்களான மாணிக்யகநகமுக்தாவஜ்ரதீபங்களோடும்; (பத்யாஸ்வாதோபபந்நை:) நச்சுமாமருந்தமித்யாதி - ஹிதங்களாயும் மதுரங்களாயுமிருக்கிற மஹௌஷதாம்ருதருடஷட்ரசயுதாந்நக்ருதமதுபலக்ஷீரங்களோடும்; (ஶ்ருதிமுகஸுபகாஶேஷஶப்தப்ரபஞ்சை:) நான்குவேதப்பயனித்யாதி-ஶ்ருதி ஸ்ம்ருதீதிஹாஸபுராண லௌகிககாநாதிசப்தங்களோடும்; (நாநாகாரை:புமர்த்தை:) ஊனமில்செல்வமித்யாதி - ப்ருதக்விதங்களான ஐஶ்வர்யஸ்வர்க்க மோக்ஷபுருஷார்த்தங்களோடும்; (ஜகததிபதிபி:) ஒருவனென்றேத்தநின்றவித்யாதி - லோகத்தில்ப்ரதானரான சர்வசதுர்முகர்களோடும்; (சேதநாசேதநௌகைர்ஜுஷ்டம்) யாவையும்யவரும்தானே - சேதநாசேதநசமூஹங்களோடும்கூடினவனாய்; (தோஷைரஜுஷ்டம்) அவரவர்சமயந்தோறும் தோய்விலனித்யாதி - தத்தத்தோஷை சம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கிற வெம்பெருமானை "புகழுநல்லொருவன்" என்கிறதசகத்திலே சர்வசரீரனாக ஆழ்வார்ஸ்தோத்ரம்பண்ணியருளினானென்கிறார்........................*

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

புகழொன்றுமாலெப்பொருள்களுந்தானாய்
நிகழ்கின்றநேர்காட்டிநிற்க - மகிழ்மாற
னெங்குமடிமைசெயவிச்சித்துவாசிகமா
யங்கடிமைசெய்தான்மொய்ம்பால். (௨௪)

(புகழொன்றுமால்) கீழ் - பாரித்தகைங்கர்யத்துக்கநுகுணமாக அவன்சர்வாத்மபாவத்தைக்காட்ட, அத்தைப்பேசியடிமைசெய்தபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழிவர் "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்று பாரித்தபடியே சர்வாத்மபாவத்தைக்காட்டி யடிமைகொள்வதாக வொருப்பட்ட சர்வேஶ்வரனுக்கு, உத்யோகமாத்ரத்திலே வயிறுநிறையுமவன் ப்ரக்ருதிக்கும், வாசிகத்துக்குமேற்பட்ட வடிமைசெய்யமாட்டாத தம்ப்ரக்ருதிக்கும் சேரவாசிகமான வடிமைசெய்து தலைக்கட்டுகிற * புகழுநல்லொருவனினர்த்தத்தை "புகழொன்றுமால்" என்றுதொடங்கியருளிச்செய்கிறார்.

(புகழொன்றுமால்) கீழ் * எண்ணில்தொல்புகழ்வானவரீசனாய் "புகழுநல்லொருவன்" என்று - சர்வைஸ்ஸ்துத்யனுமது சத்ருஶமாய்ச்சேரும்படியான சர்வேஶ்வரன். பொழிலேழும்காவல்பூண்டபடியாலே புகழும்பொருந்தியிருக்குமிறே. அன்றிக்கே, இவனையடிமைகொள்ளுகையால்வந்த * அந்தமில்புகழ்பொருந்தினவென்றுமாம். (எப்பொருள்களுந்தானாய்நிகழ்கின்றநேர்காட்டிநிற்க) சமஸ்

தவஸ்துக்களும் தானென்னும்படி சர்வசப்தவாச்யனாய் வர்த்திக்கிற ப்ரகாரப்ர காரிபாவத்தை ப்ரகாசிப்பித்துக்கொண்டு இவர்க்கு ஜ்ஞாநசாக்ஷாத்காரமாம்படி நிற்க. அதாவது - "பொருவில்சீர்ப்பூமியென்கோ" என்றுதொடங்கி அருளிச்செய்த பூதங்கள், "குன்றங்களனைத்துமென்கோ மேவுசீர்மாரியென்கோ" என்றதுதொடக்கமானபௌதிகங்கள், "சாதிமாணிக்கமென்கோ" இத்யாதியில் - உஜ்ஜ்வலமானமாணிக்யாதிகள், "அச்சுதன் - அச்சுவைக்கட்டியென்கோ" இத்யாதியில்-ரசவத்பதார்த்தங்கள், "நான்குவேதப்பயனென்கோ சமயநீதிநூலென்கோ நுடங்குகேள்வியிசையென்கோ" என்று - காநாதிசப்தராசிகள், "வானவராதி" இத்யாதியில் - மோக்ஷாதிபுருஷார்த்தங்கள், "ஒளிமணிவண்ணன்" இத்யாதியில் - ஜகத்ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகள், இவற்றுக்கடையகாரணமான, "யாவையும் யவரும்தானே" என்கிற - ப்ரக்ருதிபுருஷர்கள், இவற்றையுடைய விபூதியாகவுடையனாய், இவற்றிலே அந்தராத்மதயாவ்யாபித்து, "தோய்விலன்" என்று - தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கிறபடியையுமென்கை. "ஜகத்ஸர்வம் ஶரீரம் தே ஸ்தைர்யம் தே வஸுதாதலம்। அக்நி: கோப: ப்ரஸாதஸ்தே ஸோம: ஶ்ரீவத்ஸலக்ஷண" (ஜகத்ஸர்வம்ஶரீரம்தேஸ்த்தைர்யந்தேவஸுதாதலம்। அக்நி:கோப:ப்ரஸாதஸ்தேஸோமஶ்ஶ்ரீவத்ஸலக்ஷண) என்னும்படியே, இப்படி "புகழுநல்லொருவனென்கோ பொருவில்சீர்ப்பூமியென்கோ" என்றுதொடங்கி, "நான்முகக்கடவுளென்கோ" என்னுமளவும் சமஸ்தவஸ்துக்களும் "தான்" என்னும்படி ப்ரகாரமாகவர்த்திக்கிற ப்ரகாரியைக்காட்டிக்கொண்டுநிற்க. (மகிழ்மாறன்) வகுளதரரான ஆழ்வார். (எங்குமடிமைசெயவிச்சித்து) சர்வதேச சர்வகால சர்வாவஸ்த்தைகளிலும் திருவேங்கடமுடையான்திருவடிகளிலே யடிமைசெய்யவிச்சித்து. (வாசிகமாயங்கடிமைசெய்தான்) அப்படியாசைப்பட்ட அவ்விஷயத்திலே-அவ்விடத்திலேவாசிகமாகவடிமைசெய்தார் (மொய்ம்பால்) "யசூதஜாவஹா" (ய ஆத்மதாபலதா) "வலந்தரும்" "நிலைப்பெற்றென்னெஞ்சம்பெற்றதுநீடுயிரோ" என்று - அவன்தந்த ஆத்மபலத்தாலே சத்தையுண்டானாலிறே சம்ருத்யையபேக்ஷிப்பது. மொய்ம்பு-மிடுக்கு. "கண்ணாவானென்றும் மண்ணோர்விண்ணோர்க்கு" என்றும், "வானோர்க்கும்மண்ணோர்க்கும்வைப்பு" என்றும், "கண்ணாயேழுலகுக்குமுயிராயவெங்கார்வண்ணனை, விண்ணோர்தாம்பரவும்பொழில் வேங்கடவேதியனை" என்றும், "தாய்தந்தையுயிராகின்றாய் - பாகின்றதொல்புகழ்மூவுலகுக்கும் நாதனேபரமாதண்வேங்கடமேகின்றாய்" என்றும், "திருவேங்கடத்தானுக்கு - என்கட்பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கு" என்றும், "அம்பரம்" இத்யாதியாலும்-அவனுடையவுபயவிபூதி நிர்வாஹகத்வத்தையும் அந்தர்வ்யாப்தியையும் சர்வகாலவர்த்தித்வத்தையுமருளிச்செய்கையாலே, வ்யாப்த்யநுசந்தாநரூபவாசிககைங்கர்யம் * திருவேங்கடத்தென்னானை யென்னப்பனெம்பெருமானுக்கேயிறேயேற்றிருப்பது, அத்தைப்பற்றவிறே "அங்கடிமைசெய்தான்" என்றிவரருளிச்செய்தது.

மூன்றும்பத்தில் - நாலாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - உச. பாட்டு - உசுசு.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## மூன்றும்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

மொய்ம்மா - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(மொய்ம்மாம்பூம்பொழில்) ஏவம்பூதனான எம்பெருமானுடைய வாஶ்ரிதவாத்ஸல்யாதிகல்யாணகுணங்களை யநுபவித்து, அவ்வநுபவ ஜநிதமான ப்ரீத்யதிசயத்தாலே யப்ரக்ருதிங்கதராய்க்கொண்டு அக்குணங்களைச்சொல்லிப் பிதற்றி யூர்பலபுக்கும்புகாதுமுலோகர் சிரிக்கநின்றாடி யார்வம்பெருகிக்குனிக்கு மவர்களுடைய மாஹாத்ம்யத்தையும், இப்படிசெய்யாதாருடைய அவஸ்துத்வத்தையும் சொல்லுகிறார்............*

### பன்னீராயிரப்படி.

அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ்ச்சொன்ன பகவத்ப்ரகாரதயாசேஷத்வத்தில் தமக்குப்பிறந்த ரசாதிசயத்தாலே அத்யந்தஹ்ருஷ்டராய்; ப்ரதிசம்பந்தியானசேஷியினுடைய ஆபந்நிவாரகத்வத்தையும், அசுரநிரசநசாமர்த்த்யத்தையும், ஆர்த்தசம்ரக்ஷணத்தையும், அபிமதவிரோதிநிவர்த்தகத்வத்தையும், அவதாரப்ரயோஜநத்தையும், அதிசயிதபோக்யதையையும், ஆஸ்ரிதபக்ஷபாதத்தையும், அர்ச்சாவதார சௌலப்யத்தையும், உபயவிபூதிநாதத்வத்தையும், விலக்ஷணவிக்ரஹயோகத்தையுமநுசந்தித்து ப்ரீதிப்ரகர்ஷத்தாலே சம்ப்ராந்தராகாதாரைநிந்தித்தும், உகந்தாடுவதுபாடுவதாவாரை யுகந்து மிந்தசேஷத்வசாரஸ்யத்தையுபபாதிக்கிறார்........................................................................................*

---

ஈடு.

புகழுநல்லொருவனிலே - பகவதநுபவத்தைப்பண்ணி, அத்தால் வந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலேகளித்து, அதில்லாதாரைநிந்தித்து உடையாரைக்கொண்டாடிச்சொல்லுகிறது - * மொய்ம்மாம்பூம்பொழில். இவர்க்கு * முந்நீர்ஞாலத்தில் - ப்ரக்ருதிசம்பந்தத்தை யநுசந்தித்தும் இதரவிஷயப்ராவண்யத்தை யநுசந்தித்தும் சோகித்தசோகம் சிலர்க்குநிலமாகிலாயிற்று, இத்திருவாய்மொழியில் - பகவதநுபவத்தாலே ஹ்ருஷ்டரானஇவருடையஹர்ஷம் சிலர்க்குநிலமாவது. இவரும் பகவதநுபவம்பண்

ணுகிறாரகில் நாமுமவ்விஷயத்திலே கைவைத்தோமாகில், இவர்க்கிங்ஙனிருப்பானென் நமக்கிங்ஙனிராதொழிவானென்னென்னில்; நாமாகிறோம் கண்டார்க்கொளிக்கவேண்டுமவையாய், சாஸ்த்ரங்களெல்லா மொருமுகஞ்செய்து நிஷேதிக்கிறவையாய், முதல்தன்னிலேகிடையாதவையாய், கிடைத்தாலும் நிலைநில்லாதவையாய், அநந்தரம் நரகத்திலேமூட்டி அநர்த்தத்தை விளைக்கக்கடவதான இதரவிஷயங்களுடைய லாபாலாபங்களில் பிறக்கும்சோகஹர்ஷங்களிலேயாயிற்றறிவது. வீதராகராய் சாத்த்விகாக்ரேசரராயிருக்கிற இவர்க்குசாஸ்த்ரங்கள் ''ஆகாது'' என்று நிஷேதித்த சோகஹர்ஷங்கள் கூடினபடியெங்ஙனேயென்னில்; இவரது சாஸ்த்ரங்களிலே நிஷேதித்தசோகஹர்ஷங்களன்று, சமஸ்தகல்யாணகுணாத்மகனை சர்வேஸ்வரனையநுபவித்து அவ்வநுபவஜநித ப்ரீதியாயிற்று-இவர்க்கு ஹர்ஷமாகிறது; "இப்படிவகுத்தவிஷயத்தை அநாதிகாலமிழந்து இதரவிஷயப்ரவணராயநர்த்தப்படுவோமே" என்னுமதாயிற்று சோகம். ''காமமாகாது'' என்றுநிஷேதியாநிற்கச்செய்தேயும், ''நிதி்யாஸிதவ்யஃ'' (நிதித்யாஸிதவ்யஃ) என்றுகொண்டு-பகவத்காமத்தை சாஸ்த்ரங்கள் விதியாநின்றதிறே; இனிமுக்தரும் பகவதநுபவத்தாலே ''அஹமந்நமஹமந்நமஹமந்நம்'' என்றுகளியாநிற்பர்களிறே; ''ஸவஸம்ஸயநிர்முக்தோ நாரதஸ்ஸர்வதர்மவித்'' (ஸர்வஸம்ஸயநிர்முக்தோநாரதஸ்ஸர்வதர்மவித்) என்றுசொல்லப்படுகிற நாரதாதிகளும் பகவத்ஸந்நிதியிலே வந்தவாறே ஆடுவது பாடுவதாகாநிற்பர்களிறே; விரக்தரிற்றலையான திருவடியும் பிராட்டியைக்கண்டுவந்த ஹர்ஷத்தாலே முதலிகளைப்பார்த்து "நீங்கள் மதுவநத்தையழித்து புஜியுங்கோள், [அஹமாவாரயிஷ்யாமி யுஷ்மாகம் பரிபந்திநஃ]" [அஹமாவாரயிஷ்யாமியுஷ்மாகம்பரிபந்திநஃ] என்று - காத்திருந்த ததிமுகாதிகளை நான்தொட்டுத்தருகிறேனென்றானிறே; மஹாராஜர்க்கு "உம்முடையகாவற்காடழிந்தது" என்றறிவிக்க, ''நம்மோடுபண்ணிப்போன சமயமுந்தப்பி, நாந்தாம் 'தீக்ஷ்ணதண்டர்' என்றறியச்செய்தேயுமிவர்கள் காவற்காட்டை யழிக்கும்போது, [நைஷாமக்ருதக்ருத்யாநா மீத்ருஸஸ்ஸ்யாதுபக்ரமஃ] (நைஷாமக்ருதக்ருத்யாநா மீத்ருஸஸ்ஸ்யாதுபக்ரமஃ) என்று - சர்வதாபிராட்டியைத்திருவடிதொழுதார்களாக வேணுமென்று அப்போதுபிறந்தஹர்ஷம் இருந்தவிடத்திலிருக்கவொட்டாமே, வாலானது ருஸ்யமூகபர்வதத்தின் கொடிமுடியிலேசென்றறைந்ததாயிற்று; நடுவே "காவற்காடு" என்றொன்றுண்டாயிற்று ராஜபுத்ரர்களுடைய ஜீவநாத்ருஷ்டமாயிற்று, அன்றாகில் முதலிகளுடையஹர்ஷம் ராஜபுத்ரர்கள் முதுகோடேபோமாயிற்று. அல்பம் வெற்றிலைச்சாறுமிடற்றுக்குக் கீழேயிழிந்தவன் தன்னைத்தானறிகிறிலன்; "* உள்கலந்தார்க்கோரமுதமாய் * அமுதிலுமாற்றவினியனாய்

* எனக்கேதன்னைத்தந்தகற்பகமென்னமுதம்” என்று - தாமேமுற்றாட்டாக இவ்வம்ருதத்தைபுஜித்தஇவர்க்கு ஹர்ஷமுண்டாகச்சொல்லவேண்டாவிறே. இப்படிப்பட்டபகவதநுபவத்தால்வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே; முதலிலே இதிலறிவில்லாதாரையும், அறிவுண்டாய்ப்புறம்பே அந்யபரராயிருப்பாரையும், ஸிஷ்டாபிமாநங்கொண்டாடி “அநுஷ்டாநகாலங்களில் திருநாள்சேவிக்கலாகாது” என்றிருப்பாரையும், அறிவுண்டாயே புறம்பேபரபரக்கற்று “அதுக்குமிதுக்கும்வாசியென்” என்று சமாநபுத்திபண்ணியிருப்பாரையும், தங்களையாஸ்திகராக புத்திபண்ணி அவ்வாஸ்திக்யத்துக்கு “புறம்பேவிநியோகம்” என்றிருப்பாரையும், ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கநுருபமான க்ஷுத்ரபலங்களைக்கொண்டு போவாரையும், ததர்த்தமாக தாமஸதேவதைகளை யாஸ்ரயிப்பாரையுமெடுத்து, அவர்களுக்குப்புறம்பே எல்லாநன்மைகளுமுண்டேயாகிலும் பகவத்குணங்களையநுசந்தித்தாலவிக்ருதராகி லவர்களவஸ்துக்கள் என்று அவர்களைநிந்தித்து, ஒருஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களின்றிக்கேயிருக்கச்செய்தேயும் பகவத்குணாநுபவம்பண்ணி விக்ருதராமதுண்டாகில் அவர்களுக்கு நானடிமையென்று அவர்களைக்கொண்டாடி ப்ரீதராகிறார்..........................*

---

## ஜீயர் அரும்பதம்.

மொய்ம்மாப்ரவேஸ, சங்க்ரஹசங்கதி (புகழுநல்லித்யாதி)

இத்திருவாய்மொழியிலோடுகிற ஹர்ஷத்துக்கவதியேதென்ன (இவர்க்குமுந்நீரித்யாதி) (நாமாகிறோம்) இத்யாதிவாக்யாநந்தரம், இவ்வாழ்வாராகிறார் பகவத்விஷயலாபாலாபங்களில் பிறக்கும்சோகஹர்ஷங்களொழிய மற்றொன்றறியாதே “நின்னலாவிலேன்” என்னும்படியான * ஆராதகாதலையுடையராகையாலே யிவரிங்ஙனிருக்கக்கூடுமென்று வாக்யசேஷத்தை யத்யாஹரித்துக்கொள்வது. (சோகஹர்ஷங்களேயாயிற்றறிவதிதி) ஆகையாலிந்தஇதரவிஷயப்ராவண்யமே பகவத்விஷயலாபாலாபங்களில் பிறக்கும்சோகஹர்ஷங்களில்லாமைக்கடியென்று சங்கைக்குபரிஹாரம். சாஸ்த்ரங்களெல்லா மொருமுகஞ்செய்து-நிஷேதிக்கிறவையாயென்றது - “[illegible]” (தஸ்மாதேவம்விச்சாந்தோதாந்த உபரதஸ்திதிக்ஷுஸ்ஸமாஹிதோபூத்வாத்மந்யே வாத்மாநம்பஸ்யேத்) “[illegible]” (நாவிரதோதுஸ்சரிதாந்நாஸாந்தோநாஸமாஹித:। நாஸாந்தமாநஸோவாபிப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத்) “[illegible]” (அங்காரஸத்ருஸீநாரீக்ருதகும்பஸம:புமாந்। தஸ்மாந்நாரீஷுஸம்ஸர்க்கம்தூரத:பரிவர்ஜயேத்) “[illegible]” (மாத்ரா

ஸ்வஸ்ராதுஹித்ராவாநவிவிக்தாஸநோபவேத் । பலவாநிந்த்ரியக்ராமோவித்வாம் ஸமபிகர்ஷதி ) “ [illegible] ” (விஷஸ்யவிஷயாணாஞ்ச) இத்யாதியைப்பற்ற. உபரதஃ - “ சமதமங்களுண்டு ” என்னுமபிமாநமில்லாதவன். திதிக்ஷுஃ - க்ஷமாசீலஃ. “ சம்பாசலம் ” இத்யாதியைப்பற்ற (கிடைத்தாலுமித்யாதி)

சாஸ்த்ரங்களாகாதென்று நிஷேதித்தசோகஹர்ஷங்களென்றது- “ [illegible] ” (நித்யஞ்சஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு) “ [illegible] ” ( அநவஸாதாநுத்தர்ஷேப்யஃ) “ [illegible] ” (துல்யநிந்தாஸ்துதிர்மௌநீ) “ [illegible] ” ( துல்யோமித்ராரிபக்ஷயோஃ ) “ [illegible] ” ( துல்யப்ரியாப்ரியோதீரஃ ) “ [illegible] ” (ஸமதுஃகஸுகம்தீரம்ஸோம்ருதத்வாயகல்பதே ) இத்யாதியைப்பற்ற. பகவத்விஷயத்தைப்பற்றிவந்தவையானலும் சோகஹர்ஷங்கள் த்யாஜ்யமன்றேவென்ன (காமமித்யாதி) அதாவது - “ [illegible] ” ( ஶாந்தோதாந்தஃ ) இத்யாதியாலே - காமத்தைநிஷேதிக்கச்செய்தேயும், “ [illegible] ” ( நிதித்யாஸிதவ்யஃ ) என்று - விதிக்கையாலே பகவத்காமமுத்தேஶ்யமானவோபாதி, இதரவிஷயங்களைப்பற்றிவரும் சோகஹர்ஷங்கள் த்யாஜ்யமானலும் பகவத்விஷயத்தைப்பற்றிவரும் சோகஹர்ஷங்களுத்தேஶ்யமென்றபடி. பகவத்விஷயத்தில் ஹர்ஷபர்யாயமான காமம் த்யாஜ்யமன்றென்னுமதுக்கு அநுஷ்டாநங்காட்டுகிருர் ( இனிமுக்தருமித்யாதி ) ( சர்வசம்சயேத்யாதி ) பாரதே ராஜஸூயே. “ [illegible] ” ( ஆவித்யதஜிநம் ஹ்ருஷ்டோபவிஷ்யத்பூதஜல்பகஃ ) இதிபூர்வார்த்தம். “ [illegible] ” (இஷ்டம்மதுவநம்ஹ்யேதத்பக்ஷயிஷ்யதவாநராஃ । அஹமாவாரயிஷ்யாமியுஷ்மாகம்பரிபந்திநஃ) இதி சுந்தரகாண்டே. பரிபந்திநஃ - சத்ருக்களே. தொட்டு - ப்ரஹ்ரித்து. ( நைஷாமித்யாதி ) “ [illegible] ” (வநம்யதாபிபந்நாஸ்தேஸாதிதம்கர்மவாநரைஃ ) இத்யுத்தரார்த்தம். அப்போதுபிறந்த ஹர்ஷமென்றது - “ [illegible] ” ( ப்ரீதிஸ்பீதாக்ஷௌஸம்ப்ரஹ்ருஷ்டௌகுமாரௌத்ருஷ்ட்வாஸித்தார்த்தௌவாநராணாஞ்சராஜா। அங்கைஸ்ஸம்ஹ்ருஷ்டைஃகர்மஸித்திம்விதித்வாபாஹ்வோராஸந்நாம்ஸோதிமாத்ரம்நநந்த ) இத்யாதியைப்பற்ற. “ [illegible] ” (ததஸ்ஸ்ருத்வாநிநாதந்தம் கபீநாம்கபிஸத்தமஃ। ஆயதாஞ்சிதலாங்கூலஸ்ஸோபவத்த்ருஷ்டமாநஸஃ) என்றத்தைப்பற்ற (வாலானதித்யாதி) ப்ராசங்கிகம் (நடுவேயித்யாதி) பட்

பேஜாயமாநஸ்ஸ்வமூர்த்யா)"ஹ்ராஜுஹ்ஸூவதிறொகா நாஂவா௯நாஸூஂஷவீ௯ யா।ஹெநஷஹ்ஸூகூஊெவெஜெநயொநூ)ஊவஸ௲ஹு:" (ப்ராதுர்ப்பவ திலோகாநாம்பாலநார்த்தம்ஸ்வலீலயா।நைஷகர்ப்பத்வமாபேதே நயோஙயாமவ ஸத்ப்ரபு:) (பாலினீர்மையித்யாதி) திருச்சந்தவிருத்தம் நாற்பத்துநாலாம்பாட்டு. க்ருதயுகத்திலே பாலினுடைய நிறத்தைக்கொள்ளும். நீர்மை - ஸ்வபாவம். நிறமென்றபடி. த்ரேதாயுகத்தில் சிவந்தபொன்போன்ற நிறத்தைக்கொள்ளும். த்வாபரயுகத்தில் பாசியினுடையபுறத்தில் பசுமைபோலே யிருக்கிறநிறத்தைக்கொள்ளும். கலியுகத்தில் அழகுடைய தடாகங்களிலே வண்டுகள் சிறகுவிரித்துலாவாநின்றுள்ள நீலம்போன்ற நிறத்தையுடையனாயிருக்கும். பொற்பு-அழகு. நீலம்-கருநெய்தற்பூ. விள்ளல் - அலர்தல். (மானிடவரல்லரிதி) திருமொழி-மூற்றேழாந்திருமொழி- ஒன்பதாம்பாட்டு. (தேனுடைவண்டாலுமித்யாதி) ருஷபங்களேழையும் கொன்றவற்காளாகாதார் மநுஷ்யரல்லரென்றென் மநஸ்ஸிலேவைத்தேன். (எண்ணுதவிதி) இதுக்குமுன்திருமொழி ஏழாம்பாட்டு. (மண்ணுடுமித்யாதி) திருக்கண்ணமங்கைக்கு நிர்வாஹகனானவனுடைய திருவடிகளை சிரஸ்ஸிலேவஹித்து அவனைஹ்ருதயத்திலே யெண்ணுதமநுஷ்யனை யெண்ணுதபோதெல்லாம் அழகியதாயிருக்குமிறே. (பேராளனிதி) அறுபத்துநாலாந்திருமொழி - நாலாம்பாட்டு. (தேராளுமித்யாதி) சர்வாதிசனுடைய திருநாமங்களைச்சொல்லுகிற பெரியோர்களை க்ஷணகாலமும்பிரிய க்ஷமனல்லேனித்யர்த்த:. க்ரமேணான்வய:...............*

---

# ஆறாம்பாட்டு.

மனிசருமற்றுமுற்றுமாய்மாயப்பிறவிபிறந்த
தனியன்பிறப்பிலிதன்னைத்தடங்கடல்சேர்ந்தபிரானைக்
கனியைக்கரும்பினின்சாற்றைக்கட்டியைத்தேனையமுதை
முனிவின்றியேத்திக்குனிப்பார்முழுதுணர்நீர்மையினாரே.

## ஆறாயிரப்படி.

(மனிசரும்) ஸ்வேதர சமஸ்தவஸ்துவிஸஜாதீயனாய், கர்மாதீநஜநநரஹிதனாய், க்ஷீரார்ணவநிகேதநனாய், ஆஸ்ரிதபரித்ராணார்த்தமாக ஸ்வஸங்கல்பத்தினாலே ப்ராக்ருததோஷங்களொன்றும் கந்தியாமேமநுஷ்யாதி சர்வயோநிகளிலும்வந் தவதீர்ணனாய், நிரதிசயபோக்யபூதனாயிருந்தவனை யநஸூயுக்களாய்க்கொண்டேத்திக் குனிப்பார்யாவர்சிலர், அவர்கிடீர் சர்வஜ்ஞராகிறாரென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவதாரத்திலு மவதாரகந்தத்திலுமுண்டான போக்யதையை யறிந்து விக்ருதரானவர்களை சர்வஜ்ஞரென்கிறார்.

ராமக்ருஷ்ணதிருபேணவும் உபேந்த்ராதிருபேணவும் மத்ஸ்யகூர்மாதிருபேணவும், மனிசரும்-மநுஷ்யரும். மற்றும்-மற்றதேவஜாதியும். முற்றுமாய்-அல்

லாததிர்யக்ஜாதியுமெல்லாமாய்க்கொண்டு. மாயம்-ஆஸ்சர்யமான. பிறவி-அவதாரங்களை. பிறந்த-பண்ணி. தனியன் - ஸஜாதீயனுயிருக்கச்செய்தே அத்யந்தவ்யாவ்ருத்தனுனவத்விதீயனுய். பிறப்பிலிதன்னை-இந்தவ்யாவ்ருத்திக்குஹேதுவானகர்மாதீநஜந்மராஹித்யத்தையுடையனுய். இவ்வவதாரார்த்தமாக, தடம் - இடமுடைத்தான. கடல்-க்ஷீராப்தியிலே. சேர்ந்த-கண்வளர்ந்தருளும். பிரானை - உபகாரகனுய். கனியை-கண்டபோதேநுகரவேண்டுங்கனியும். இன்-கோதற்றவினிய. கரும்பின்சாற்றை-கருப்பஞ்சாறும். கட்டியை-சர்வதோமுகமான ரசத்தையுடையவதின் கட்டியும். தேனை-சர்வரசசமவாயமானதேனும். அமுதை - போக்தாவைநித்யனுக்குமம்ருதமும்போலே போக்யபூதனுனவனை. முனிவு-அவதாரத்தில் நிகர்ஷபுத்தியாகிறத்வேஷம். இன்றி-இன்றியே. ஏத்தி-அவதாரப்ரயுக்தசீலசௌலப்யாதிகளை ஸ்தோத்ரம்பண்ணி. குனிப்பார்-அந்தப்ரீதியாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணுவார். முழுது-சகலசாஸ்த்ரங்களையும். உணர்-அறிந்த. நீர்மையினர்-ஸ்வபாவத்தையுடையவர்கள்.

கனியையென்றுதொடங்கி தேனென்னுமளவும்-போஜ்யமாயும், பேயமாயும், காத்யமாயும், லேஹ்யமாயுமுள்ள சதுர்விதபோஜ்யத்தையுஞ் சொல்லிற்றுகவுமாம்..........................................................................................*

---

## ஈடு-ஆரும்பாட்டு.

ஈஸ்வரபோக்யதையை யநுசந்தித்தால் விக்ருதராவர்களாகில், அவர்களெல்லாவறிவின் பலமும் கைவந்தாரென்கிறுர்.

(மனிசரும்மற்றும்முற்றுமாய்) மநுஷ்யர், தேவர்கள், அநுக்தமான திர்யக்ஸ்த்தாவரங்களெல்லாமாய். "ஸுரநரதிரஸ்சாமவதரந்" (ஸுரநரதிரஸ்சாமவதரந்) (மாயப்பிறவிபிறந்த) ஒருஹேதுவின்றிக்கேயிருக்கச்செய்தே, ஹேதுவுடையார்க்கு மவ்வருகேபிறக்கவல்லவன். அகர்மவஸ்யனுயிருந்து, கர்மவஸ்யரும்பிறக்கமாட்டாத ஜந்மத்திலேவந்துபிறக்கை. ஆஸ்சர்யமான அநேகாவதாரங்களைப்பண்ணுமவன். (தனியன்) இப்படியவதரித்தால், போமன்றுடுத்த வொலியலோடேயாயிற்றுப் போவது. இவ்வவதாரபரம்பரைகளில் ராமாவதாரமொன்றிலும் "நாலிரண்டுபேர் கூடப்போனுர்கள்" என்றுகேட்டோமித்தனையிறே. "இவன் நமக்காகப்பிறந்தான்" என்றுநினைக்கைக்கு மொருவருமில்லாதிருக்கிறதிறே, "பிறந்தான்" என்றது தன்னையே குற்றமாக உபபாதிப்பாரேயிறேயுள்ளது. (பிறப்பிலிதன்னை) இப்படிபரார்த்தமாகஅவதரியாநின்றுல் அதுபலபர்யந்தமன்றிக்கே யொழிந்தாலும், "நாம்வருந்தச்செய்தேயு மிதுபலித்ததில்லையே" என்று கைவாங்குகையன்றிக்கே, "இவர்களுக்கொன்றுஞ்செய்யப்பெற்றிலோம்" என்று, பிறந்திலனுய்ப் பிறக்கைக்கொருப் பட்டானுயிருக்கும். (தடங்கடல்சேர்ந்தபிரானை) இன்னமும் பிறக்கைக்கு தபஸ்சர்யைபண்ணுகிறபடி. திருப்பாற்கடலிலே அநிருத்தரூபியாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிற விடமவதாரகந்தமிறே.

வெள்ளத்தரவிற்றுயிலமர்ந்தவித்திறே. இவர்கள் பிறவியென்னும்பெருங் கடலைப் போக்குகைக்கிறே அவன்கடலிலேவந்துகிடக்கிறது. (கனியை) கடல்பழுத்தபடி. பாலிலேபழுத்தபடி. அங்குச்சாய்ந்து கிடக்கிறபோ தை வடிவழகால்வந்தபோக்யதை "ஸர்வரஸ:" (ஸர்வரஸ:) என்று ஒருசொல்லாலேசொல்லமாட்டார், எல்லாம்சொல்லப்புக்கால் சொல்லி த்தலைக்கட்டமாட்டார், பலிதாம்ஸத்திலே சிலவற்றைச்சொல்லு மித்த னையாகையாலே (கனியை) என்கிறார். கண்டபோதே நுகரலாம்படி யாய், அதுதான் கோதுகழிந்த ரஸாம்ஸமாய், அதுதன்னைத் திரட்டின தாய், அதுதான் பருகலாம்படியாய், போக்யதையேயன்றிக்கே சாவாம ல் காக்குமதாயிருக்கை. கீழ்த்திருவாய்மொழியில் "நலங்கடலமுதமெ ன்கோ" என்றுதொடங்கி யநுபவித்தபோக்யதைபின்னாடினபடி. கண்ட போதே நுகரவேண்டும்கனியும், கோதற்றவினியகருப்பஞ்சாறும், சர்வ தோமுகமான ரஸத்தையுடைத்தான கட்டியும், சர்வரஸஸமவாயமான தேனும், போக்தாவைநித்யனுக்கு மம்ருதமும்போலே போக்யனானவனை (முனிவின்றியேத்திக்குனிப்பார்) முனிவின்றி - பகவத்குணங்களைக் கேட்டால் அரூயைபண்ணாதே யேத்துமவர்கள். தன்னோட்டையானொ ருவனுக்கோ ருத்கர்ஷம்சொல்லுகையன்றிக்கே, ஈஸ்வரனுக்கொரு உத் கர்ஷஞ்சொன்னால் அதுபொறாதேயிறே யிருப்பது, இம்மஹாகுணத்தி லொரு பொறாமைகொண்டாடாதே. குணங்கண்டவிடத்தே தோஷாவி ஷ்கரணம் பண்ணுவர்களநேகரிறே, [இதந்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாம்யநஸூய வே] (இதந்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே) நம்முடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளைச்சொன்ன விடத்தில் சி வீலென்றிருந்திலை, உன்றனையதிகாரிகளைக்கண்டிலோம், இன்னம் சொ ல்லிச்சொல்லாதவையும் சொல்லும்படிகிட்டுவாராயென்றானிறே. சங்க நிதிபத்மநிதிகளைக்கொண்டுவந்துகொடுத்து, கடலைச்செறுத்துப்படைவீ டுசெய்து, தங்களெதிரிகளோடே புறப்பட்டுமோரிலே யம்பேற்று, இப்ப டி ரக்ஷியாநின்றால், சோறுசுட்டவாறே "இதொருக்ருஷ்ணனும், நடுவி ல் பெருங்குடியாட்டமும், என்னன்புதுதான்" என்றுநிற்பர்கள். [தாஸ்யமைஸ்வர்யவாதேந] (தாஸ்யமைஸ்வர்யவாதேந) "ரக்ஷகத்வம்" (ரக்ஷகத்வம்) என்றொரு வ்யபதேசமாத்ரமாய் இவர்களுக்கே தாழ்வு செய்துதிரிந்தேன், நல்லதுகண்டால் "எனக்கு" என்றிராதே பகுத்தி ட்டு ஜீவித்துப்போந்தேன், இங்ஙனேயிருக்கச்செய்தே இவர்கள்பண்ணு ம் பருஷபாஷணங்களையெல்லாம் பொறுத்துப்போந்தே னென்றானிறே. ஒருமணிகெட்டு ஆரோனுங்கொண்டுபோக, க்ருஷ்ணன்றலையிலேயேறிட் டு, நம்பிமூத்தபிரானுமிதுசுட்டி தீர்த்தயாத்ரைபோக வேண்டும்படியா யிற்றிறே. அன்றிக்கே, "முனிவாகிறது - மௌநித்வமாய், அதின்றிக்கே

யொழிகையாவது - கலங்குகையாய், அடைவுகெட்டேத்திக்குளிப்பா ரென்னவுமாம் ” என்றருளிச்செய்வர். ( முழுதுணர்நீர்மையினோ ) “ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம்” ( ஏகவிஜ்ஞாநேநஸர்வவிஜ்ஞாநம் ) என்றபடி அவர்களெல்லாவற்றையு மறிந்தார்களாகிறார். அவர்கள் சர்வஜ்ஞர்களாகிறார். ஜ்ஞாநபலமான இதுண்டானபோதே அவர்களுக்கு ஜ்ஞாநாம்ஸத்தி யில்லாததில்லையிறே. அவர்கள் சரீரத்தில்பிறந்த விகாரத்தைக்கொண்டே அவர்களுடைய ஜ்ஞாநாதிக்யமறியலாம். முழுதையுமுணர்ந்த ஸ்வபாவத்தையுடையவர்களாகிறார்கள்.........................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு. ( மனிசருமித்யாதி ) “ கனியை ” இத்யாதியைப்பற்ற ( போக்யதையையென்றது ) “ முழுதுணர்நீர்மையினர் ” என்றத்தைப்பற்ற (எல்லாவறிவினித்யாதி )

தேவமநுஷ்யாதி ரூபேணவதரிக்கு மென்றதுக்குப்ரமாணம் ( சுரநரேத்யாதி ) விவரணம் ( அகர்மவஸ்யனித்யாதி ) சப்தார்த்தம் ( ஆஸ்சர்யேத்யாதி) ஒலியல் - வஸ்த்ரம். “ தனியன் ” என்கிறதென், ஒருவரும்கூடப்போன பேரில்லையோவென்ன (இவ்வவதாரோத்யாதி) போமன்றில்லையேயாகிலும் இங்கிருந்தநாளில் பரிவருண்டேயென்ன (இவன்நமக்காகவித்யாதி) பின்னையெப்படிநினைப்பர்களென்ன ( பிறந்தானித்யாதி ) “ அவஜாநந்தி ” ( அவஜாநந்தி ) இத்யாதியைப்பற்ற ( குற்றமாகவென்றது )

“ பிறந்த ” என்றுவைத்து “ பிறப்பிலி ” என்றதுக்குபாவம் ( இப்படிபரார்த்தேத்யாதி ) வருந்த-ப்ரயாசப்பட. பிறக்கைக்கொருப்பட்டானு யென்றது- “தடங்கடல்சேர்ந்த” என்றத்தைப்பற்ற. ஆக, தனியனுவது-கூடப்போவாரில்லாமையும், இங்குகப்பாரில்லாமையும். உபபாதகம் ( திருப்பாற்கடலிலேயித்யாதி ) (வெள்ளத்தரவிலிதி) திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலேகண்வளர்ந்தருளின அவதாரபீஜமானவனை யித்யர்த்தః. திருப்பாவை. “புள்ளும்சிலம்பின” இத்யாதி. தபஸ்சர்யைபண்ணுகைக்கடியேதென்ன ( இவர்களித்யாதி )

“ கடல்சேர்ந்த ” என்றவநந்தரம், “ கனியை ” என்றதுக் கிரண்டுரசோக்தி ( கடலித்யாதி ) கடல்-க்ஷீராப்தி. பலிதம் ( அங்கித்யாதி ) “ ஸர்வரஸః ” ( ஸர்வரஸః ) என்றொருசொல்லால் சொல்லாதே பிறித்துச்சொல்லுகிறதென்னென்ன (ஸர்வரஸஃஎன்றித்யாதி) பலிதாம்ஸத்திலே-தம்பக்கல் பலித்தவநுபூதாம்ஸத்திலே. “ கனியை ” இத்யாதிபஞ்சதாபி தாநபலிதமாஹ ( கண்டபோதேயித்யாதி ) பகவத்குண விச்ருதரையும் அவிக்ருதரையும் கொண்டாடியும் நிந்தித்தும் போருகிற வித்திருவாய்மொழியிலே பகவத்போக்யதையைச் சொல்லுகைக்கடியேதென்ன ( கீழிலித்யாதி ) ( பின்னுடினபடியென்று ) * புகழுநல்லொருவனுக்கு விபூதியோகம் சொல்லுகிறயோஜனையன்றிக்கே, * பெரும்புறக்கடல் நிர்வாஹக்ரமத்திலே உபமாநமுகத்தாலுண்டான யோஜனையைப்பற்ற.

முனிவு - அஸூயை. ஸஜாதீயரிடத்திலொழிய ஈஸ்வரனிடத்திலே அஸூயையபண்ணுவர்களோவென்ன ( தன்னோட்டையானித்யாதி ) உத்கர்ஷம் சொல்

ஷைகயன்றிக்கே - சொன்னஸங்ஙையை பண்ணுகையன்றிக்கே. அஸூயாஸ்வரூபம் விஶதயதி (இம்மஹாகுணேத்யாதி) மஹாகுணத்திலே பொருமைகொண்டாடுகையாவது - அவதாரஸௌலப்யமாகிற மஹாகுணத்திலே அநீஶ்வரத்வமாகிற தோஷத்தையாரோபிக்கை. அவதரித்தகுணம்சொன்னது - குணாந்தரங்களுக்கு முபலக்ஷணம். "தன்னொட்டையான்" இத்யாதிவாக்யவிவரணம் (குணம்கண்டவிடத் தேயித்யாதி) "[illegible]" (அக்ஷாந்திரீர்ஷ்யாஸூயா து தோஷாரோபோகுணேஷ்வபி) என்னக்கடவதிறே. அநஸூயுக்கள் துர்லபரென்னுமதுக்குப்ரமாணம் (இதந்துதேஇத்யாதி) கீதாஶாஸ்த்ரமே, "[illegible]" (ஜ்ஞாநம்விஜ்ஞாநஸஹிதம்யத்ஜ்ஞாத்வாமோக்ஷ்யஸேஶுபாத்) இத்யுத்தரார்த்தம். சிவீலென்றிருந்திலே - அஸூயைபண்ணியிருந்திலே. "[illegible]" (ப்ரவக்ஷ்யாமி) இத்யுபஸர்க்கார்த்தமாஹ (இன்னம்சொல்லியித்யாதி) அநுகூலரஸூயைபண்ணுவர்களோவென்ன (சங்கநீத்யாதி) செருத்து - நெருக்கி. சோறுசுட்டவாறே - அல்பநிமித்தத்திலே. பெருங்குடியாட்டம் - க்ராமண்யம், என்னன்புதுதான் - என்ன. அப்படியெல்லாம்செய்தாலு மஸூயைபண்ணுவர்களோ வென்ன (தாஸ்யமித்யாதி) ஶ்லோகார்த்தம் (ரக்ஷகத்வமித்யாதி) பகுத்திட்டு-பாகம்கொடுத்து. ஜ்ஞாதிகளுடைய வஸூயையைஸ்ய மந்தகமணிவ்ருத்தாந்த முகேநாபிதர்ஶயதி (ஒருமணியித்யாதி) ஸ்யமந்தகமணிகதையிலே, "[illegible]" (ஸிம்ஹ:ப்ரஸேநமவதீத்ஸிம்ஹோஜாம்பவதாஹத: । ஸுகுமாரகமாரோதீஸ்தவ ஹ்யேஷஸ்யமந்தக:) என்றருளிச்செய்வர். நம்பிமூத்தபிரான் - பலராம:. இதுசுட்டி - இதுநிமித்தமாக. "முனிவின்றி" என்றதுக்கர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி) முநித்வம் - ஐகாக்ர்யம்.

(ஏகவிஜ்ஞாநேநேதி) காரணபூத ப்ரஹ்மவிஜ்ஞாநேந,கார்யபூதசமஸ்தத்தையு மறியலாமித்யர்த்த:. விவரணம் (அவர்களித்யாதி) * முனிவின்றியேத்திக்குனிப்பாரெல்லார்க்கும் காரணபூத ப்ரஹ்மஜ்ஞாநாத்கார்ய ஜகத்ஜ்ஞாநமுண்டாகைக்கு அவர்கள் வேதாந்தஶ்ரவணம்பண்ணினார்களோவென்ன (ஜ்ஞாநபலமானவித்யாதி) இது - ஏத்திக்குனிக்கையாகிறவிது. ஆந்தரமான ஜ்ஞாநத்தை யறியும்படியென்னென்ன (அவர்கள்சரீரத்திலித்யாதி) சப்தார்த்தம் (முழுதையுமித்யாதி)

"[illegible]" (இயம்வை பூஹீவஸ்த்திரதகிலேச்சாவிஹ்ருதயேவிபூதீநாம்மத்யேஸூரநரதிரஶ்சாமவதரந் । ஸஜாதீயஸ்தேஷாமிதிதுவிபவாச்யாமபிபஜந்கரீஶத்வம்பூர்ணைவரகுணகணைஸ்தாந்ஸ்த்தகயஸி) இதிவரதராஜஸ்தவே. பாரதே, "[illegible]" (தாஸ்யமைஶ்வர்யவாதேந ஜ்ஞாதீநாஞ்சகரோம்யஹம் । அர்த்தபோக்தாசபோகாநாம் வாக்துருக்தாநிசக்ஷமே) க்ரமேணாந்வய:..........*

## ஏழாம்பாட்டு.

---

நீர்மையினூற்றுவர்வீயவைவர்க்கருள்செய்துநின்று
பார்மல்குசேனையவித்தபரஞ்சுடரைநினைந்தாடி
நீர்மல்குகண்ணினராகிநெஞ்சங்குழைந்துநையாதே
யூன்மல்கிமோடுபெருப்பாருத்தமர்கட்கென்செய்வாரே.

### ஆறுயிரப்படி.

(நீர்மையில்) பாண்டவர்கள்பக்கலுள்ள வாத்ஸல்யத்தாலே தத்விரோதிகளான துர்யோதநாதிகளையும் மற்றுமுள்ள ப்ரதிகூலவர்க்கத்தையுமடங்க நிரசித்தத்துவே தனக்கு நிரதிசயதேஜஸ்ஸாகவிருந்தருளினவனை நினைத்து நீர்மல்குகண்ணினராகி நெஞ்சங்குழைந்துநையாதே, கேவலம் ஶரீரபோஷகராயிருப்பார் இந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் வர்த்திக்கிற தேசத்திலே யென்செய்யவுளராறொன்கிறார்.........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதபக்ஷபாதத்துக்கிடுபடாதார் பாகவதர்க்கெதுக் குறுப்பென்கிறார்.

நீர்மை - "பந்துக்களோடேபுஜிக்கவேணும்" என்கிறநீர்மை. இல் - இல்லாத. நூற்றுவர் - துர்யோதநாதிகள்நூற்றுவரும். வீய - நசிக்கும்படி. ஐவர்க்கு - பாண்டவர்களைவர்க்கும். அருள் - நிரவதிகக்ருபையை. செய்து-பண்ணி. நின்று- "𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌬𑌲𑌾𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌨𑌾𑌥𑌾𑌶𑍍𑌚 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌃" (க்ருஷ்ணாஸ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஸ்சபாண்டவா:) என்னும்படியவர்களுக்குசர்வவிதபந்துவுமாய்நின்று. மல்கு - நிரம்பும்படிவிஞ்சின. சேனை - சேனையை. அவித்த - விளக்கவித்தாற்போலேநசிப்பித்த. பரஞ்சுடரை - நிரவதிகௌஜ்ஜ்வல்யயுக்தமான வடிவழகையுடையவனை. நினைந்து-இக்குணசௌந்தர்யவித்தராய்க்கொண்டு நினைந்து. ஆடி-ப்ரேமபரவசராயாடி. நீர்-ஆநந்தாஸ்ரு. மல்கு - பூர்ணமான. கண்ணினராகி-கண்களையுடையராய். நெஞ்சம்-நினைத்தநெஞ்சு. குழைந்து - கட்டுக்குலைந்து. நையாதே-ரோமாஞ்சாதிகளாலே சிதிலசரீரராகாதே. ஊன்மல்கி - மாம்சோத்தரமாய். மோடுபெருப்பார் - பிடரியிற்பிசல்பெருக்கும்படி யுடம்பைவளர்ப்பார். உத்தமர்கட்கு-ஜ்ஞாநாதிகராய் உத்தமரானபாகவதர்களுக்கு. என்-ஏது. செய்வார்-செய்கைக்குறுப்பாவர்.

அநுபயுக்த ஸ்வபாவரென்று கருத்து ................................................*

---

### ஈடு-ஏழாம்பாட்டு.

ஆஸ்ரிதபக்ஷபாதமாகிற மஹாகுணத்திலீடுபடாதே சரீரபோஷணபரராய்த் திரிகிறவர்கள் வைஷ்ணவர்களுக்கெதுக் குறுப்பாகப்பிறந்தார்களென்கிறார்.

( நீர்மையித்யாதி ) முற்படசஞ்சயனைப்போகவிட்டு அநந்தரமாகத்தான்போய் "இவர்களையு மவர்களையுஞ்சேரவிடலாமோ" என்று பார்த்தவிடத்து, அவர்களொருபடியாலு மிசையாதே, "எங்கள்பந்துக்கள் ஜீவிக்கில் நாங்கள் ஜீவிப்பதில்லை, அவர்களுக்கொரு குடியிருப்பும் கொடோம், நாங்கள்பலராகையாலே பூமிப்பரப்படங்க எங்களுக்கே இடம்போருமத்தனை, அவர்களுக்கு க்ருஷ்ணனும் தர்மமுமுண்டு, அதுக்கு பலமானஸ்வர்க்கத்தையநுபவிக்கக்கடவர்கள், நாங்கள்பூமியையாளுவோம்" என்றுவெட்டிதாகவார்த்தைசொல்ல, அவர்கள் நெற்றியைக்கீறிப்பார்த்தவிடத்தில் ரத்தம்புசியாமையாலே "அவர்களையழியச்செய்வோம்" என்றுபார்த்தான். பாண்டவர்களை ரக்ஷிக்கைக்குஹேது-"நாங்கள்பந்துக்களையொழிய ஜீவிப்பதில்லை" என்றது [𑌯𑍇𑌷𑌾𑌮𑌰𑍍𑌥𑍇𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌤𑌂𑌨𑍋𑌰𑌾𑌜𑍍𑌯𑌂𑌭𑍋𑌗𑌾𑌸𑍍𑌸𑍁𑌖𑌾𑌨𑌿𑌚" ( யேஷாமர்த்தேகாங்க்ஷிதந்நோராஜ்யம்போகாஸ்ஸுகாநிச ) நாட்டார் அர்த்தந்தேடுகிறதும் ராஜ்யங்கள் சம்பாதிக்கிறதுமெல்லாம் பந்துக்களும்கூட ஜீவிக்கைக்கன்றோ, ஆனபின்பு நாங்கள் பந்துவதம்பண்ணி ஜீவிக்கப்பார்க்கிலோமென்னும் நீர்மையாலேயாயிற்று, அவர்களிங்ஙனன்றிக்கே "இவர்களுக்கொருகோல் குத்துநிலமுங்கொடுப்பதில்லை, அவர்கள்ஜீவிக்கில் நாங்கள்ஜீவியோம்" என்ன, "இவர்களாசுரப்ரக்ருதிகளாயிருந்தார்கள், இவர்களை யழியச்செய்யாவிடில் விபூதியுமழியும்" என்றுபார்த்து அதுக்கிடாகவொருப்பட்டான். ஒருபடியாலுமொருநீர்மையில்லாத துர்யோதநாதிகள் முடிந்துபோம்படிக்கிடாக. ( ஐவர்க்கருள்செய்துநின்று ) தானல்லது தஞ்சமில்லாத பாண்டவர்களுக்கு. "𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌃𑌕𑍃𑌷𑍍𑌣𑌬𑌲𑌾𑌃𑌕𑍃𑌷𑍍𑌣𑌨𑌾𑌥𑌾𑌶𑍍𑌚𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌃" (க்ருஷ்ணாஸ்ரயா:க்ருஷ்ணபலா:க்ருஷ்ணநாதாஸ்சபாண்டவா:) என்றிருக்குமவர்கள். ( நின்று ) "𑌯𑌸𑍍𑌯𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍀𑌚𑌗𑍋𑌪𑍍𑌤𑌾𑌚𑌸𑍁𑌹𑍃𑌚𑍍𑌚𑍈𑌵𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃" (யஸ்யமந்த்ரீசகோப்தாசஸுஹ்ருச்சைவஜநார்த்தந:) என்று இவர்களிழந்தபரிகரமெல்லாம் தானேயாய்நின்று. (பார்மல்குசேனையவித்த) பூமிநெளியும்படிக் கிடாகமிகைத்துவந்த ஆசுரவர்க்கத்தை, விளக்கவித்தாற்போலே பிணங்காணவொண்ணாதபடி முடித்துப்போகட்ட. ( பரஞ்சுடர ) "ஆயுதமெடுக்கவொண்ணாது" என்றார்களே, அதுக்காக, 'சேநாதூளியும்முட்கோலும் சிறுவாய்க்கயிறும் தேருக்குக்கீழே நாற்றினதிருவடிகளும் சிறுசதங்கையுமாம் சாரத்யவேஷத்தோடே நின்றநிலையைச்சொல்லுகிறது. (நினைந்தாடி) அவனுடைய ஆஸ்ரிதபாரதந்த்ர்யத்தை யநுஸந்தித்து, அவ்வநுஸந்தாநம் இருந்தவிடத்தே யிருக்கவொட்டாமையாலேயாடி. (நீர்மல்குகண்ணினராகி) "𑌹𑍍𑌲𑌾𑌦𑌶𑍀𑌤𑌲𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌮𑍍𑌬𑍁𑌃" ( ஆஹ்லாதசீதநேத்ராம்பு: ) என்கிறபடியே, கண்ணநீராயிட்டு நிரம்பிக்கவேண்டும்படியான கண்ணையுடையராய். (நெஞ்சங்குழைந்து) சரீரசைதில்யமேயன்றிக்கே ஹ்ருதயசைதில்யமுமுடையராய் நைந்துபோகாதே,

(ஊன்மல்கிமோடுபெருப்பார்) மாம்ஸளமாம்படி சரீரத்தைப்பருக்கப்பண்ணி, கனத்தபிசல்களும் நெடியவலியசரீரங்களுமாயிருக்குமவர்கள். (உத்தமர்கட்கென்செய்வாரோ) பகவத்குணாநுசந்தாநத்தாலே மெலிகினசரீரத்தையுடையராயிருந்துள்ள மஹாபுருஷர்களுக்கு * போதயந்தঃபரஸ்பரம்பண்ணுகைக்கு சாத்துணையாவார்களோ. ஜந்மத்துக்கு ப்ரயோஜநம் வைஷ்ணவர்களுக்குறுப்பாமதுவேயென்கிறார். ஈஸ்வரன், தன்னையுந்தன்விபூதியையும் ததீயசேஷமாக்கியிறேவைப்பது, ஆயிரத்தளியிலே ராஜாவிருக்கச்செய்தே பெரியநம்பியையு மாழ்வானையும் நலிந்தானாய், ஆழ்வான்மடியிலே சாய்ந்துகிடக்கச்செய்தே பெரியநம்பி திருநாட்டுக்கெழுந்தருளினார்; அவ்வளவிலே "ஒருவருமில்லாதாரை ப்ரதிபத்திபண்ணக்கடவோம்" என்றுதிரிகிறார் சிலரங்கேவந்து ஆழ்வானைக்கண்டு "ஒருவனுண்டிறே" என்றுபோகப்புக, ஒருவரையு மொருகுறைசொல்லியறியாதவன், "வாரிகோள் மாணிகாள், வைஷ்ணவனுமாய் ஒருவனுமில்லாதானொருவனைத்தேடி ப்ரதிபத்திபண்ணவிருக்கிறீகளோ நீங்கள்; ஈஸ்வரனு மீஸ்வரவிபூதியும் வைஷ்ணவனுக்குக் கிஞ்சித்கரிக்கவிருக்க, வைஷ்ணவனுமாய் அறவையுமாயிருப்பானொருவனை நீங்களெங்கே தேடுவிகோள்" என்றானும்..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (நீர்மையித்யாதி) "ஐவர்க்கருள்செய்துநின்று, பரஞ்சுடரைநினைந்து - நையாதே, ஊன்மல்கிமோடுபெருப்பார்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (ஆஸ்ரிதேத்யாதி)

நிரஸநஹேது, நீர்மையில்லாமையென்றுபபாதிக்கிறார் (முற்படவித்யாதி) வெட்டிதாக - க்ரூரமாக. பாண்டவர்களை ரக்ஷிக்கைக்குஹேது அவர்கள்நீர்மையென்கிறார் (பாண்டவர்களையித்யாதி) அவர்களப்படி சொன்னார்களோவென்ன (யேஷாமித்யாதி) "தஇமேவஸ்திதாயுத்தேப்ராணாம்ஸ்த்யக்த்வாதநாநிச" (தஇமேவஸ்த்திதாயுத்தேப்ராணும்ஸ்த்யக்த்வாதநாநிச) இத்யுத்தரார்த்தம். கீதாஸப்ரதமே. ப்லோகத்துக்கர்த்தம் (நாட்டாரித்யாதி) யேஷாமர்த்தே இத்யாதிவசநம் - யுத்தபூமியிலஸ்த்தாந ஸ்நேஹகாருண்யத்தாலேசொன்ன தாகையாலே அதர்மமாகிலும், இந்நினைவெப்போது மிவர்களுக்குண்டாகையாலே மற்றைப்போது இந்நினைவுமஹாகுணமிறே யிதிபாவঃ. (நீர்மையாலேயாயிற்று) பாண்டவர்களை ரக்ஷித்ததிதிசேஷঃ. பாண்டவர்களுக்கு ப்ரதிகோடித்வேந புநஸ்ச அவர்களுடைய நீர்மையில்லாமையை யுபபாதிக்கிறார் (அவர்களித்யாதி) கோல் - அம்புகோல். சப்தார்த்தம் (ஒருபடியாலுமித்யாதி) வேறு தஞ்சமில்லாமைக்கு ப்ரமாணம் (க்ருஷ்ணாஸ்ரயாஇத்யாதி) பாரதே. "க்ருஷ்ணঃபராயணம்தேஷாம்ஜ்யோதிஷாமிவசந்த்ரமাঃ" (க்ருஷ்ணঃபராயணம்தேஷாம்ஜ்யோதிஷாமிவசந்த்ரமাঃ) என்றுமேல். நெளியும்படிக்கு - நெகிழ்ந்துகொடுக்கும்படிக்கிடாக. "அவித்த" என்றதினர்த்தம் (விளக்கித்யாதி) பூமிநிரம்பும்படிமிஞ்சினசேனையை யிதிசப்தார்த்தঃ. பரஞ்சுடரை - நிரவதிகௌஜ்ஜ்வல்ய யுக்தமானவடிவழகை யுடையவனை. இங்கு - சாரத்யம்பண்ணுகையால் வந்தபுகரைச்சொல்லுகி

றது. முட்கோல் - தாற்றுக்கோல். சிறுவாய்க்கயிறு - கடிவாளம். நாற்றின-நீட்டின. (யஸ்யமந்த்ரீசேத்யாதி) பாரதேராஜஸூயேசஞ்சயம் ப்ரதித்ருதராஷ்ட்ர:, “ ஹரிஸ்த்ரைலோக்யநாதஸ்ஸகிந்நுதஸ்யநநிர்ஜிதஃ ” (ஹரிஸ்த்ரைலோக்யநாதஸ்ஸகிந்நுதஸ்யநநிர்ஜிதம்) இத்யுத்தரார்த்தம்.

நீர்மல்குகையைநிரூபகமாகச்சொன்னதுக்குபாவம்(ஆஹ்லாதேத்யாதி)ஸ்ரீவிஷ்ணுதத்வே:“ஆஹ்லாதஶீதநேத்ராம்பு:புளகீக்ருதகாத்ரவாந்। ஸதாபரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி: ” (ஆஹ்லாதஶீதநேத்ராம்பு:புளகீக்ருதகாத்ரவாந் । ஸதாபரகுணாவிஷ்டோத்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி:) குழைந்து - சிதிலமாய். ஊன்மல்கி - மாம்ஸம்மிக்கு. மோடு - பிசல்கள். அம்ஸங்கள். பருப்பார் - பெருக்கும்படி யுடம்பைவளர்ப்பார். •

மெலிகின-ம்ருதுவான. ஸ்ருஷ்டிப்ரயோஜநமு சாத்துணையோ வென்ன (ஜந்மத்துக்கித்யாதி) “ விசித்ரா தேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும் ” (விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராயநிவேதிதும்) இத்யாதிப்படியே யீஶ்வரனுக்குறுப்பாகையன்றே ஸ்ருஷ்டிப்ரயோஜநமென்ன (ஈஶ்வரன்தன்னையுமித்யாதி) ததீயசேஷமாக்கி வைக்குமென்றதுக் கைதிஹ்யம் (ஆயிரத்தளியிலேயித்யாதி) ஆயிரத்தளி - க்ரிமிகண்டன்பட்டணம். ப்ரதிபத்தி-சம்ஸ்கார:. “ அநாதப்ரேதஸம்ஸ்காராதஶ்வமேதபலம்லபேத் ” (அநாதப்ரேதஸம்ஸ்காராதஶ்வமேதபலம்லபேத்) என்னக்கடவதிறே. இங்கே “ பரிஜநபரிபர்ஹா: ” (பரிஜநபரிபர்ஹா:) இத்யாதி, “ நதேரூபம் ” (நதேரூபம்) இத்யாத்யநுசந்தேயம். மாணி - ப்ரஹ்மசாரி. அறவை - நிரன். ஒருவருமில்லாதவ னித்யர்த்த:.

(ஜந்மத்துக்குப்ரயோஜநமிதி) அத்ர - கூரத்தாழ்வானை மாருதியாண்டான் வினவவெழுந்தருளினபோது எம்பெருமானார் சந்நிதிக்காழ்வா னருளிச்செய்த ஶ்லோகம்ப்ரஸ்துதம் [ “ த்ரேதாஷ்டகாக்யா நாஸ்த்யா விஶேஷவதாம்ந்ருணாம் । தத்ரபஶ்சிமபூர்வம்மாம்நஹ்யத்யந்தாயமத்யம: ” (த்ரேதாஷ்டகாஅயாநாக்யாதிவ்ஶேஷவதாம்ந்ருணாம்। தத்ரபஶ்சிமபூர்வம்மாம்நஹ்யத்யந்தாயமத்யம:) அஸ்யார்த்த:, அஷ்டகா:- அஷ்டாக்ஷராத்யேதார:, த்ரிவிசேஷவதாந்ந்ருணாம் - ஸ்வரூபோபாயபுருஷார்த்த ஜ்ஞாநவதாம்நராணாம், த்ரேதா ஆக்யா: - ஸ்வரூபநிஷ்ட உபாயநிஷ்ட: புருஷார்த்தநிஷ்டஶ்சேதி த்ரீணிநாமாநி, அயாந் - ப்ராப்த:, அங்கீசக்ருரித்யர்த்த: ; தத்ர - தேஷுமத்யே, மத்யம: - மத்யமபதைகதேசஷஷ்ட்யந்த மகாரவாச்யோபாயவிரோதி, பூர்வம்மாம் - ஸ்வரூபநிஷ்டம்மாம்,ஸ்வஸ்யபூர்வதேஶவாஸித்வஞ்சவ்யஜ்யதே, அந்தாய-மந்நாஶாய, நஹ்யதி-ஸபத்நாதி; ஹேபஶ்சிம-கைங்கர்யைகநிஷ்ட, பாஷ்யகாரஸ்ய பஶ்சிமதேசவாசித்வஞ்சவ்யஜ்யதே ; பஶ்சிமபூர்வப (தாப்யாமந்விதோ) மத்யம: - த்ருதீயபதாந்வித மகாரார்த்த பூதபுருஷார்த்தவிரோதீ, மாம்பாததே ; ஜாதமபிஜ்ஞாநம்பாகவதாசார்யகைங்கர்யாலாபே அகிஞ்சித்கரம்; அதோபவத்ஸேவயாமஜ்ஜீவநம்கதா ஸேத்ஸ்யதீதிபாவ: ; அயந்தாத்விகார்த்த:. வ்யாகரணரீத்யாது, அஷ்டகா: - அஷ்டாத்யாய்யத்யேதாரோ வையாகரணா: ; த்ரிவிசேஷவதாம்ந்ருணாம்-அஸ்தீதிநாஸ்தீதிதிஷ்டமிதிபுத்தி விசேஷவதாம் மநுஷ்யாணாம், த்ரேதா ஆக்யா:। - ஆஸ்திக இதிநாஸ்திகஇதிதைஷ்டிக இதிசத்ரீணிநாமாநி, அயாந் - ஜ்ஞாதவந்த: ; “ அஸ்திநாஸ்திதிஷ்டம்மதி: ” (அஸ்திநாஸ்திதிஷ்டம்மதி:) இதிஸூத்ரேணேதிபாவ:; தத்ர-ஆஸ்திகாதி

மத்யே, ஹேபஸ்சிம-தைஷ்டிச, யதிவர, பூர்வம் - ப்ரதமம், ஆஸ்திசம்மாம், மத்யமஃ - நாஸ்திசஃ க்ரிமிசண்டஃ, அந்தாய - நாஸாய, ஈஹ்யதி - நிபத்நாதி; அஹம்கிம்கரவாணி, பவத்ஸேவாகதா ஸேத்ஸ்யதீதிபாவஃ.........................................*

## எட்டாம்பாட்டு.

வார்புனலந்தண்ணருவிவடதிருவேங்கடத்தந்தை
பேர்பலசொல்லிப்பிதற்றிப்பித்தரென்றேபிறர்கூற
ஊர்பலபுக்கும்புகாதுழலோகர்சிரிக்கநின்றாடி
ஆர்வம்பெருகிக்குனிப்பாரமரர்தொழப்படுவாரே.

### ஆறாயிரப்படி.

(வார்புனல்) நிரதிசயபோக்யமான திருமலையிலேநின்றருளி யென்னையடிமைகொண்ட திருவேங்கடமுடையானுடைய திருநாமங்களைச் சொல்லிப்பிதற்றி, வைஷ்ணவர்களல்லாதார் பித்தரென்றுசொல்லும்படி மநுஷ்யர் சந்நிதாநத்தோட சந்நிதாநத்தோடு வாசியின்றிக்கே லௌகிகர்சிரிக்க, அதுவேயுத்தம்பகமாம்படி ஸஸம்ப்ரமசேஷ்டிதத்தையுடையரா யபிநிவேஸம் மிகுத்தாடுமவர்கள், * அயர்வறுமமரர்களிலும் ஸ்ரேஷ்டரென்கிறார்.........................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருமலையிலே அர்ச்சாவதாரமாய் சுலபனான சர்வேஸ்வரனுடைய நீர்மைக்கீடுபட்ட ப்ரவ்ருத்திகளையுடையவர்கள் சூரிகளாலே யாதரிக்கப்படுவார்களென்கிறார்.

வார்-வீழாநிற்கிற. புனல்-புனலையுடைத்தாய். அம்-தர்ஸநீயமாய். தண்-குளிர்ந்த. அருவி-அருவிகளையுடைய. வடக்கு-தமிழுக்குவடவெல்லையான. திருவேங்கடத்து-பெரியதிருமலையில்நிற்கிற. எந்தை-ஸ்வாமியுடைய. பேர்-ஸ்வரூபரூபகுணவிபூதிவிஷயமானதிருநாமங்களை. பல-பலவும். சொல்லி-சொல்லி. பிதற்றி-அடைவுகெடப்பிதற்றி. அத்தாலே, பிறர்-பகவத்ப்ரேமமில்லாதஅந்யர். பித்தரென்று-பித்தரென்று. கூற-சொல்லும்படியாக. பலவூர் - மநுஷ்யர்நடையாடுகிற பலவூர்களிலே. புக்கும்-புக்கும். புகாதும்-மநுஷ்யர்நடையாடாதவிடங்களிலும். உலோகர்-லௌகிகர். சிரிக்க-சிரிக்கும்படியாக. நின்று - பரவசராய்க்கொண்டுநின்று. ஆடி-நடையாடி. ஆர்வம்-அபிநிவேசம். பெருகி-விஞ்சி. குனிப்பார்-ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுவார். அமரர்-நித்யாநுபவபரரானசூரிகளாலே. தொழப்படுவார்-ஆதரிக்கப்படுவார்கள்..........................................................*

---

## ஈடு-எட்டாம்பாட்டு.

திருவேங்கடமுடையானுடைய நீர்மைக்கீடுபடுவாரைக் கொண்டாடுகைக்கு நாமார், நித்யசூரிகளன்றோ அவர்களைக்கொண்டாடுவார்களென்கிறார்.

(வார்புனலித்யாதி) ஒழுகாநின்றுள்ள புனலையுடைத்தாய், தர்ஶநீயமாய், ப்ரமஹரமாயிருந்துள்ள அருவிகளையுடைத்தான வடக்குத்திருமலையிலேவந்துநின்றனென்ஸ்வாமி. (பேரித்யாதி) அவனுடையதிருநாமம் பலவற்றையு மக்ரமமாகச்சொல்லி. தாம் *ஒழிவில்காலத்திலும்* புகழுநல்லொருவனிலுமாகச் செய்தவற்றைச்சொல்லுகிறார். (பலசொல்லி) ஸ்வரூபரூபகுணங்களுக்கு வாசகமாயும், விபூதிக்கு வாசகமாயுமுள்ளவற்றை யடையப்பேசி. (பித்தரென்றேபிறர்கூற) பகவத்குணங்களைக் கேட்டாலவிக்ருதராயிருக்குமவர்கள். "'பொருவில்சீர்ப்பூமியென்கோ' என்று, 'கண்ணனைக்கூவுமாறே' என்பது; 'குன்றங்களனைத்துமென்கோ' என்று, 'பங்கயக்கண்ணனையே' என்பது; 'ஞாலமுண்டுமிழ்ந்தமாலையெண்ணுமாறறியமாட்டேன் யாவையும்யவருந்தானே' என்பதாகாநின்றார்; இவர் ப்ராந்தரோ" என்று தம்மைப்பிறர் சொல்லுமாபோலே, இவர்கள் ப்ராந்தரோவென்றுசொல்லும்படி. "அத்தாவரியேயென்றுன்னையழைக்கப், பித்தாவென்றுபேசுகிறார்பிறரென்னை" என்றும், "பேயரோயெனக்கியாவருமியானுமோர், பேயனேயவர்க்கும்" என்றுஞ்சொல்லுகிறபடியே, அவர்கள்செய லிவர்களுக்கடைவுகேடாய்த் தோற்றுமாபோலே யிவர்கள்செயலு மவர்களுக்கடைவுகேடாய்த்தோற்றுமிறே. (பிறர்கூற) வைஷ்ணவர்களங்கீகாரம்பெறுமதிலும், அவைஷ்ணவர்கள் "இவன் நமக்குடலல்லன்" என்றுகைவிடுகைதானுத்தேஶ்யமாயிருக்குமிறே; ராவணன் "[illegible]" (த்வாந்துதிக்குலபாம்ஸநம்) என்றதுதன்னையுத்தேஶ்யமாக நினைத்திருந்தானிறே விபீஷணாழ்வான்; மிளகாழ்வான்வார்த்தை-ராஜாஅகரம் வைக்கிறானாய்அங்கேசெல்ல, "உமக்குப்பங்கில்லை" என்ன, "அதுவென், வேதபரீக்ஷைவேணுமாகி லத்தைச்செய்வது, சாஸ்த்ரபரீக்ஷைவேணுமாகி லத்தைப்பரீக்ஷிப்பது" என்ன, "உமக்கவையெல்லாம்போதும், அதுக்குமமைச்சொல்லவொண்ணாது" என்ன, "ஆனாலெனக்குக்குறையென்" என்ன, "நீர்வைஷ்ணவரன்றோ, ஆகையாலேகாண்" என்ன, புடைவையைமுடிந்தெறிட்டுக்கூத்தாடினானாயிற்று தன்னையவர்கள் கைவிட்டதுக்கு; ப்ராதிகூல்யஸ்வவர்ஜநமேயிறேவேண்டுவது. (ஊர்பலவித்யாதி) மநுஷ்யருள்ளவிடத்தோடு இல்லாதவிடத்தோடு வாசியற எங்கும்புக்கு, இவ்வாசியறியாத லௌகிகர் "இவன்செய்யும்படியென்" என்றுசிரிக்க, அதுவே தாளமாகநின்றாடி, அபிநிவேசமானது மேன்மேலனக்கரைபுரண்டு குனிக்குமவர்கள். (அமரர்தொழப்படுவாரோ) நித்யஸூரிகளாலே கொண்டாடப்படுவார். பகவத்ஸந்நிதியிலேயிருந்து "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" என்கிறபடியிலே களித்தாடுவது பாடுவதான நித்யஸூரிகளிவர்களைக்கொண்டாடுவர்களென்கிறார்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (வார்புனலித்யாதி) "திருவேங்கடத்தெந்தை" இத்யாதி, "ஆர்வம்பெருகிக்குனிப்பாரமரார்தொழப்படுவார்" என்கிறத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (திருவேங்கடமுடையானித்யாதி)

சொல்லிப்பிதற்றி - அடைவுகெடப்பிதற்றி, பலவற்றையுமென்றது- எத்தை விவக்ஷித்தென்ன (தாம்ஒழிவிலித்யாதி) அதாவது-தாம்சொன்னறைபோலே சொல்லியென்றபடி. * ஒழிவில்காலத்தில், "வானவரீசன்" "ஈசன்வானவர்க்கு" என்றது-ஸ்வரூபவாசகம்; "காரொழிலண்ணல்" "கருமாணிக்கம்" இத்யாதி-ரூபவாசகம்; "திருவேங்கடத்தந்தமில்புகழ்" என்றது-குணவாசகம்; * புகழுநல்லொருவனில், "வானவராதியென்கோ" இத்யாதி-ஸ்வரூபவாசகம்; "பங்கயக்கண்ணன்" இத்யாதி-ரூபவாசகம்; "புகழுநல்லொருவன்" இத்யாதி - குணவாசகம்; விபூதிவாசகமதிஸ்ப்புடம். உக்தமேவார்த்தம் ப்ரதிகோபாதாநபூர்வகம்விஶதயதி (பலசொல்லிஸ்வரூபேத்யாதி) "பல" என்று-சாதாரண சாதாரணநாமங்களெல்லாவற்றையும் சொல்லுகிறது. (இவர்ப்ராந்தரோவிதி) விபூதிவாசகசப்தங்களுக்கு பகவத்பர்யந்தத்வ ஜ்ஞாநமில்லாமையாலே யிவர் ப்ராந்தரோவென்று சொல்லுவர்களென்றபடி. பிறர்க்கு வைஷ்ணவர்கள்செயல் "ஹாந்தர்" (ப்ராந்தர்) என்னும்படியடைவுகேடாய்த்தோற்றுமோவென்ன (அத்தாவித்யாதி) "கறவாமடநாகு" என்கிற திருமொழியிலெட்டாம்பாட்டு. எனக்குஜநகனைவனே,விரோதிநிரசநசீலனேயென்றன்னைச்சொல்ல, பித்தனென்றென்னைப்பிறர்சொல்லாநின்றார்களித்யர்த்த꞉. (பேயரேயித்யாதி) பெருமாள்திருமொழி. எனக்குயாவரும் - பேயரே, யவர்க்கும் - யானுமோர் பேயனே இத்யந்வய꞉. ஸ்பஷ்டோர்த்த꞉. கூற - சொல்லும்படியாக. "பிறர்கூற" என்று - உத்தேஶ்யமாகச்சொல்லுகிறதென், பிறர் "பித்தர்" என்கையுத்தேஶ்யமோவென்ன (வைஷ்ணவர்களித்யாதி) அத்ர - [ நேதம் விதம் நிதம் விதா ... ] ( நேதம்விதநிதம்விதாஸமுத்திரேஶத்நஸமாபுஞ்சிதநவஸதமாதிஸ்யாத் ) இதம்வித்-ப்ராஹ்மவித்,அநிதம்விதா-அப்ராஹ்மவிதா, நஸமுத்திசேத்-நஸஹவஸேத், சமுத்தேச꞉-சஹவாச꞉. நஸமாபுஞ்சீத-தத்ஸஹபங்க்தௌ நபுஞ்சீதேத்யர்த்த꞉. நவசதமாதிஸ்யாத்-தஸ்யக்ருஹேந புஞ்சீதேத்யர்த்த꞉."[grantha] ... " (பூயாஸ்தாம்புண்டரீகாக்ஷபுண்யைரல்பைஸ்ஸுதுர்லபௌ । அந்தர்ப்பாவபஹிர்ப்பாவௌவைஷ்ணவாவைஷ்ணவேஷு꞉) [grantha] ... " (அஹந்யஹநிதர்மஸ்யயோநிஸ்ஸாதுஸமாகம꞉। மோஹஜாலஸ்யயோநிர்ஹிமூடைரேவஸமாகம꞉) " [grantha] ... " (அஸதாம்தர்ஶநாத்ஸ்பர்ஶாத்ஸம்பர்க்காச்சஸஹாஸநாத்। தர்மாசாரா꞉ப்ரணஶ்யந்தியதாஸைகதமம்பஸி) " [grantha] ... " (நஸ்த்தாதவ்யந்நகந்தவ்யம்க்வசிதப்யஸதாஸஹ। பயோபிஶௌண்டிநீஹஸ்தேவாருணீத்யபிதீயதே) சௌண்டிநீ-ம

த்யவிக்ரயணீ. "ஆவித்³ய꞉ ப்ராக்ருத꞉ ப்ரோக்தோ வைத்³யோ வைஷ்ணவ உச்யதே। ஆவித்³யேந கேநாபி வைத்³ய꞉ கிஞ்சிந்ந ஸமாசரேத்" (ஆவித்ய꞉ப்ராக்ருத꞉ப்ரோக்தோவைத்யோவைஷ்ணவஉச்யதே। ஆவித்யேநகேநாபிவைத்ய꞉கிஞ்சித்ஸமாசரேத்) "ஸம்ஸாஞ்ஜடாபரணமௌண்ட்³யவதாம் வ்ருதை²வ மோகாஶிநாமகி²லஶௌசப³ஹிஷ்க்ருதாநாம் । தோயப்ரதா³நபித்ருபிண்ட³விவர்ஜிதாநாம் ஸம்பா⁴ஷணாத³பி நரா நரகம் ப்ரயாந்தி" (பும்ஸாம்ஜடாபரணமௌண்ட்யவதாம் வ்ருதைவமோகாஶிநாமகிலஶௌசபஹிஷ்க்ருதாநாம்। தோயப்ரதாநபித்ருபிண்டவிவர்ஜிதாநாம்ஸம்பாஷணாதபிநராநரகம்ப்ரயாந்தி) இத்யாத்யநுசந்தேயம். அவைஷ்ணவபரித்யாகமுத்தேஶ்யமென்னுமதுக்குதாஹரணம் (ராவணன்த்வாந்துதிகித்யாதி) "அந்யஸ்த்வேவம்விதம் ப்³ரூயாத்³வாக்யமேதந்நிஶாசர । அஸ்மிந்முஹூர்த்தே ந ப⁴வேத்த்வாம் து தி⁴க்குலபாம்ஸநம்" (அந்யஸ்த்வேவம்விதம்ப்ரூயாத்வாக்யமேதந்நிஶாசர। அஸ்மிந்முஹூர்த்தேநபவேத்த்வாந்திக்குலபாம்ஸநம்) மீளாழ்வான்வார்த்தையென்றது-ததீயவ்ருத்தாந்தமிங்கேயநுசந்தேயமென்றபடி. பலிதம் (ப்ராதிகூல்யஸ்யேத்யாதி) ப்ராதிகூல்யவர்ஜநமாவது - ப்ரதிகூலர் தன்னைவிடும்படி தானவர்களைவிடுகையென்னுதல், ப்ரதிகூலரைவிடுகையென்னுதல். "ஊர்பலவும்புகாதும்புக்கு" என்றந்வயமாய்; லக்ஷணயா, ஊர்பலவுமென்று - மநுஷ்யருள்ளவிடமெங்குமென்ருய், புகாதுமென்று - மநுஷ்யரில்லாதவிடத்தைச்சொல்லுகிறதென்றர்த்தம் (மநுஷ்யருள்ளவிடத்தோடித்யாதி) எங்குமென்றது - அர்த்தஸித்தம் நித்யஸூரிகள் கொண்டாடுகைக்கு ஹேதுகதநமுகேநவிவரணம். (பகவத்ஸந்நிதியிலேயித்யாதி.) க்ரமேணாந்வய꞉.........*

---

# ஒன்பதாம்பாட்டு.

---

அமரர்தொழப்படுவானையனைத்துலகுக்கும்பிரானை
அமரமனத்தினுள்யோகுபுணர்ந்தவன்றன்னோடொன்ருக
அமரத்துணியவல்லார்களொழியவல்லாதவரெல்லா
மமரநினைந்தெழுந்தாடியலற்றுவதேகருமமே.

## ஆருயிரப்படி.

(அமரர்) * அயர்வறு மமரர்களதிபதியாய் சர்வலோகேஶ்வரனுயிருந்தவெம்பெருமானை கைவல்யார்த்தமாக வாஶ்ரயிக்கு மந்தக்ஷேத்ரரானவர்களொழிய வல்லாதாரெல்லாமிப்படி யெம்பெருமானை யநுசந்தித்து அப்ராக்ருதிங்கதராம்படியாக வவனையாஶ்ரயியுங்க ளென்கிருர்...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உபயவிபூதிநாதனுனவன் விஷயத்தில் யோகஜநிதபக்தி விகாரயுக்தரானவர்களன்றியே யதில்லாதஅல்லாதார்க்கு மவர்களைக்கணிசித்து மவர்கள் வ்யாபாரங்களைப்பண்ணுகை கர்த்தவ்யமென்கிருர்.

அமரர் - நித்யஸூரிகளுக்கு. தொழப்படுவானை - நிரதிசயபோக்யபூதனுய். அனைத்துலகுக்கும் - சமஸ்தலோகத்துக்கும். பிரானை - ஶேஷியானசர்வேஶ்வர

னே. அமர - ஸ்த்திரமாம்படி. மனத்தினுள் - மநஸ்ஸிலே. யோகு - யோகமுகத்தாலே. புணர்ந்து - செறிந்து. அவன்றன்னோடொன்றாக - பரமசாம்யாபத்திபெறும்படி. அமர - நிலைநின்ற. துணியவல்லார்கள் - அத்யவசாயத்தைப்பண்ணவல்லபக்திநிக்ஷர்கள். ஒழிய - அன்றியே. அல்லாதவரெல்லாம் - இந்தயோகஜந்யபக்திகைவாரதவர்களெல்லாரும். அமர - இதிலேயமரவேணுமென்று. நினைந்து-நினைத்து. எழுந்து - உத்யுக்தராய். ஆடியலற்றுவதே - அவர்களைப்போலேயாடுவது அலற்றுவதாகையே. கருமம் - கர்த்தவ்யம்.

பக்திபாகம்பிறவாதார்க்கும் நிஷ்பந்நபக்திக ப்ரவ்ருத்தியை யநுவிதாநம்பண்ணுகை ப்ராப்தமென்றுகருத்து.......................................................*

---

## ஈடு-ஒன்பதாம்பாட்டு.

கைவல்யபுருஷார்த்தத்தையெடுத்து, சீலாதிகுண விசிஷ்டமான வஸ்துவைப்பற்றாதே மின்மினிபோலேயிருக்கிற ஆத்மாநுபவமாத்ரத்திலே நிற்பதேயென்று அவர்களைநிந்தித்து ; அவர்களையொழிந்தாரையெல்லாம், பகவத்வ்யதிரிக்த லாபங்களை "புருஷார்த்தம்" என்றிராதே, பகவத்குணங்களை யநுசந்தித்து விக்ருதராய் ஆடுவது பாடுவதாகுங்கோள், இதுவேகர்த்தவ்யமென்கிறார்.

(அமரர்தொழப்படுவானை) ப்ரஹ்மருத்ராதிகளுக்கு மவ்வருகான நித்யசூரிகளாலே தொழப்படுகிறவனை. (அனைத்துலகுக்கும்பிரானை) சர்வலோகேஸ்வரனை. (அமரமனத்தினுள் யோகுபுணர்ந்து) நெஞ்சிலேயூன்றி யிருக்கும்படி யோகாப்யாசத்தைக் கனக்கப்பண்ணி. (அவன்றன்னோடொன்றாகவமரத்துணியவல்லார்களொழிய) சரமதசையிலே வந்தவாறே, அவனோடே இவ்வாத்மவஸ்து சமானமென்று புத்திபண்ணவல்ல ஹேயரையொழிய. ஒன்றாக என்னுங்காட்டில் - சமாநமாக என்னுமிவ்வர்த்தத்தைக்காட்டுமோவென்னில் ; "ஸவ்ஹூ-ஏதஹூிதம்யொகாம ஹஜஙெத்வெகக்ஷ்வகாஹூிதஃ" (ஸர்வபூதஸ்த்திதம்யோமாம்பஜத்யேகத்வமாஸ்த்திதஃ) என்று-ஏகத்வத்தைச்சொல்லி, அதுதன்னை யநுபாஷிக்கிறவிடத்திலே "யொயஂயொமக்ஷயாவெ்ராகூஸாெ்நயெ-ஸஹுந" (யோயம்யோகஸ்த்வயாப்ரோக்தஸ்ஸாம்யேநமதுஸூதந) என்றுசாம்யத்தைச் சொல்லிற்றிறே. சரமதிசையிலிவ்வஸ்து அவனோடொத்த சுத்தியையுடைத்தாக அத்யவசிக்கவல்ல சாஹஸிகரையொழிய. இவ்விடத்தில் - விலக்ஷணாதிகாரிகளைச் சொல்லிற்றாக்கி, அல்லாதவரெல்லாம் என்கிறவிடம் - யாத்ருஶதாத்ருஶரானவர்க ளெல்லாமவனை யநுசந்தித்துப்பாடுவ தாடுவதாகுங்கோளென்று தானுனாலோவென்னில் ; அதுசெய்யவொண்ணாது ; கீழே - "ஓதியுணர்ந்தவர்முன்னா" என்று - பகவத்குணங்களைக்கேட்டா லவிக்ருதராயிருப்பர்களாகில் அவர்கள் ஜந்மவ்ருத்தாதிகளாலே யெத்தனையேனும் நன்மையுடையராகிலு மவர்களவஸ்துக்

களென்றுஞ்சொல்லி, ஜங்மவ்ருத்தாதிகளால் தண்ணியரோயாகிலும் பகவத்குணாநுசந்தாநம்பண்ணி விக்ருதராம் ஸ்வபாவராகிலவர்கள் முழுதுணர் நீர்மையினரென்றுஞ்சொல்லி, இவர்களைக்கொண்டாடியும், அவர்களை "என்சவிப்பார்மனிசரே" என்று-சிந்தித்தும்வருகிற ப்ரகரணமாகையாலே, இங்குசர்வேஶ்வரனை யாஶ்ரயித்து க்ஷுத்ரப்ரயோஜநங்களைக்கொண் டகலப்போகிறவர்களவஸ்துக்களென்றதேயாகவேணும். ( அல்லாதவரெல்லாம் ) கேவலாத்மாநு சந்தாநத்தைப்பண்ணி, சீலாதிகுணவிசிஷ்டமான வஸ்துவிலே நெஞ்சுபோகாதபடி நெஞ்சையிறுகப்பிடிக்கவல்ல ஹேயனையொழிய நீக்கியுள்ளாரெல்லாம். ( அமரவிணைந்தெழுந்தாடி ) அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அவனைநெஞ்சிலே பொருந்தவநுசந்தித்து, அவ்வநுசந்தாநத்தாலே வந்தஹர்ஷம்கொண்டுகிளர, அக்கிளர்த்தியோடேயாடி அக்ரமமாக வேத்துமிதுவே கர்த்தவ்யம்.......*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு ( அமரரித்யாதி ) உத்தரார்த்தத்தைக்கடாக்ஷித் தவதாரிகை ( கைவல்யேத்யாதி ) சீலாதிகுணவிசிஷ்டமானவென்றது - கீழ்ப்பாட்டிலே "வேங்கடத்தெந்தை" என்றத்தைப்பற்ற. பற்றுதே-ப்ராப்யமாகப்பற்றுதே. (அவர்களையொழிந்தாரையிதி) " நாம் முமுக்ஷுக்களன்றோ " என்கிறதுரபிமாநம் கேவலர்க்கிருக்கையாலே யவர்களிடத்தி லுபதேசம் கார்யகரமாகாதென்று கருத்து.

பிரானைக்குறித்து - யோகுபுணர்ந்தித்யர்த்தஃ. " மனத்துள் - அமர " இத்யந்வயஃ. அமர-பொருந்த. ஸ்வயம் ப்ரகாசமான வாத்மஸ்வரூபம் நெஞ்சிலே விசதமாம்படி யித்யர்த்தஃ. சரமதசை-முக்திதசை. அவன்றன்னோடொன்றாக-அவனோடு சமாநமாக. அதாவது-ஆத்மவஸ்து அவனோடொத்த சுத்தியையுடைத்தாக. அமரத்துணியவல்லார்களொழிய - நன்றாகவத்யவசிக்க வல்லார்களொழிய. " அவனோடொன்றாகையை - சாம்யத்தை, அமர - பெறும்படி, துணியவல்லார்களொழிய - நிலைநின்ற வ்யவசாயத்தைப்பண்ணின வர்களையொழிய " என்றுரையிலர்த்தம். "ஒன்றாக" என்றால்-ஐக்யத்தைச்சொல்லுமதொழிய, சாம்யத்தைச்சொல்லும்படி யெங்ஙனேயென்று சங்கித்துபரிஹரிக்கிறார் ( ஒன்றாகவென்னுமித்யாதி ) கீதாஸுஷஷ்டே, " 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌭𑌜𑌤𑍍𑌯𑍇𑌕𑌤𑍍𑌵𑌮𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌃। 𑌸𑌰𑍍𑌵𑌥𑌾 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑍋𑌽𑌪𑌿 𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌮𑌯𑌿 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇॥ 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚॥ 𑌯𑍋𑌽𑌯𑌂 𑌯𑍋𑌗𑌸𑍍𑌤𑍍𑌵𑌯𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇𑌨 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨। 𑌏𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌚𑌞𑍍𑌚𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾𑌮𑍍॥. " ( ஸர்வபூதஸ்த்திதம்யோமாம்பஜத்யேகத்வமாஸ்த்திதஃ।ஸர்வதாவர்த்தமாநோபிஸயோகீமயிவர்த்ததே॥அர்ஜுநஉவாச॥யோயம்யோகஸ்த்வயாப்ரோக்தஸ்ஸாம்யேநமதுஸூதந ।ஏதஸ்யாஹந்நபஶ்யாமிசஞ்சலத்வாத்ஸ்த்திதிம்ஸ்த்திராம்.) "சரமதசையிலே" இத்யாதிவாக்யவிவரணம் (சரமதசையிலிவ்வஸ்துவித்யாதி ) சுத்தியை - அபஹதபாப்மத்வாதிகளை. விலக்ஷணாதிகாரிகள்-உபவாசகர். யாத்ருஶதாத்ருஶர்-பக்த்யநதிகாரிகள். ( க்ஷுத்ரப்ரயோஜநங்களை ) என்றபஹுவசநத்தாலே - ஐஶ்வர்யகாமனையும் நினைக்கிறது.

"அலற்றுவதே" என்றதினர்த்தம் (அக்ரமமாகவென்றது) கருமமென்றது - க்ரியத இதிகர்மமென்று - கார்யமாய், கர்த்தவ்யமென்றபடி.

க்ரமேணுர்வட8.......................................................*

# பத்தாம்பாட்டு.

கருமமுங்கருமபலனுமாகியகாரணன்றன்னைத்
திருமணிவண்ணனைச்செங்கண்மாலினைத்தேவபிரானை
யொருமைமனத்தினுள்வைத்துள்ளங்குழைந்தெழுந்தாடிப்
பெருமையுநாணுந்தவிர்ந்துபிதற்றுமின்பேதைமைதீர்ந்தே.

## ஆருயிரப்படி.

(கருமமும்) புண்யபாபகர்மங்களுக்கும் கர்மபலங்களுக்கும் நியந்தாவாய், சர்வஜகத்காரணமாய், நிரதிசயௌஜ்ஜ்வல்ய நீலரத்நஸத்ருஸதிவ்யரூபனாய், பத்மபத்ரேக்ஷணனாய், சேஷசேஷாசநாத்ய பரிமிதபரமஸூரிபிஸ்ஸேவ்யமானனாயிருந்த வெம்பெருமானை யநந்யப்ரயோஜநமநஸ்கராய், நிரதிசயபக்தியுக்தராய் நிரஸ்தாஹங்காராதிதோஷராய், பகவத்வ்யதிரிக்தவிஷய ஸங்கரஹிதராய்க்கொண் டேத்துங்களென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கீழ்-விலக்ஷணவிக்ரஹவிசிஷ்டனானவன் விஷயத்தி லுபாசகருடைய பக்திபாரவஸ்யத்தை அதிலநவயமில்லாதாரு மநுவிதாநம்பண்ண ப்ராப்தமென்றார்; இதில்-அநந்யசாதநரான அநந்யப்ரயோஜநரும் பகவத்ப்ராவண்யபாரவஸ்யத்தாலே விக்ருதராய்வர்த்தியுங்கோளென்கிறார்.

கருமமும்-சாதநரூபமானகர்மங்களும். கருமபலனும்-தத்சாத்யமானபலங்களும். ஆகிய-தானிட்டவழக்காம்படி. காரணன்றன்னை - சமஸ்தகாரணபூதனாய். திரு-தன்னையேயுபாயமாகவுமுபேயமாகவும் பற்றுவார்க்குதர்ஸநீயமான. மணி-மாணிக்கம்போன்ற. வண்ணனை-சுபாஸ்ரயமானவடிவையுடையனாய். அவர்களை பூர்ணகடாக்ஷம்பண்ணும், செம்-சிவந்த. கண்-கண்களையும். மாலினை-வாத்ஸல்யத்தையுமுடையனாய். தேவபிரானை-சூரிகளுக்குப்போலே யவர்களுக்கநுபாவ்யனானவனை. ஒருமை-உபாயோபேயங்களில் பேதம்பிறவாதபடியொருமைப்பட்ட. மனத்தினுள்-நெஞ்சிலே. வைத்து-வைத்து. உள்ளங்குழைந்து- இவ்வாகாரத்வயத்துக்கீடுபட்டு நெகிழ்ந்தநெஞ்சையுடையராய். எழுந்து-கிளர்ந்து. ஆடி - ஆடி. பெருமையும்-தர்மாநகார்யமானபெருமையையும். அதடியான, நாணும் - "மனிசர்முன்னேயாடும்படியென்" என்கிறலஜ்ஜையையும். தவிர்ந்து-தவிர்ந்து. பேதைமை-இப்பாரவஸ்யம் நிகர்ஷமாகநினைக்குமறிவுகேட்டையும். தீர்ந்து - தவிர்ந்து. பிதற்றுமின்-அவனுடையகுணகணங்களை யக்ரமமாகப்பிதற்றுங்கோள்.

அநந்யஸாதநர்க்கும் சேஷத்வஸாரஸ்யகாரிதமான பாரவஸ்யமுத்தேஸ்யமென்றுகருத்து...........................................................*

## ஈடு-பத்தாம்பாட்டு.

ஓழ்ே-கேவலனாநிந்தித்தார்; இதில்-அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அவன் குணங்களையநுஸந்தித்து விக்ருதராகுங்கோள், உங்களுக்கிதுவே புருஷார்த்தமென்கிறார்.

(கருமமித்யாதி) புண்யபாபரூபமான கர்மங்களுக்கும் கர்மபலங்களுக்கும் நியாமகனாய். கர்மங்களுண்டானாலும் கர்மாநுஷ்டாதாவாயிருப்பானொருவன்வேணுமே, கர்மாநுஷ்டாதாவுமாய். அநுஷ்டாத்ருத்வாராகர்மநிர்வாஹகனென்றபடி. (கருமபலனுமாகிய) கர்மங்களையநுஷ்டித்தாலு மவற்றுக்கொருவன் பலப்ரதாநம்பண்ணுதபோது அவைபழுதையோபாதியாய்க்கிடக்குமித்தனையிறே, அவையசேதநக்ரியையாகையாலே; அவற்றுக்குப் பலப்ரதாதாவுமாய். (காரணன்றன்னை) புண்யங்களிலே ப்ரவர்த்திப்பிக்கவும்பாபங்களைப்போக்கவு மவற்றுக்குப்பலங்கொடுக்கவு மொருகர்த்தாவேணும்,அவற்றுக்குக் காரணபூதனுயுமுள்ளவனை. (திருமணிவண்ணனை) உபாசகனுக்கு விக்ரஹத்தை சுபாஶ்ரயமாகச்சொல்லாநின்றதிறே, இவனுக்குத்யேயமாயிருந்துள்ள விக்ரஹத்தையுடையவனை. திருவென்று - காந்தி. காந்திமிக்கிருந்துள்ள நீலமணிபோலேஶ்ரமஹரமானவடிவையுடையவனை. (செங்கண்மாலினை) அகவாயில் வாத்ஸல்யத்துக்கு ப்ரகாசகமான திருக்கண்களையுடையவனை. காரணவஸ்துவுக்கு லக்ஷணமாகப் புண்டரீகாக்ஷத்வத்தை விதியாநின்றதிறே. (தேவபிரானை) அவ்வடிவழகையும் கண்ணழகையும் நித்யசூரிகளை யநுபவிப்பிக்குமாபோலே யென்னையநுபவிப்பித்து, எனக்குபகாரகனானவனை. (ஒருமைமனத்தினுள்வைத்து) ஒருப்ரயோஜநத்துக்காகவன்றிக்கே, நெஞ்சிலேயிருக்கைதானே ப்ரயோஜநமாக நெஞ்சிலேவைத்து. இத்தால்-கீழ்ப்பாட்டிலே ப்ரயோஜநாந்தரபரானை நிந்தித்தாரொன்னுமிடம் தோற்றுகிறதிறே. இப்படி யநந்யப்ரயோஜநராய்க்கொண்டு நெஞ்சிலேவைத்தவாறே, அகவாய் சிதிலமாய் அந்தசைதில்யத்தோடே யிருந்தவிடத்திலிராதேயாடி, "பகவத்குணங்களைக்கேட்டார் விக்ருதராகை நமக்குப்போருமோ" என்கிற அபிமாநகார்யமான மேன்மையையும், "நாம்பிறரறிய விக்ருதராம்படியெங்ஙனே" என்றிருக்கிறலஜ்ஜையையும், "எல்லாவளவிலும் நம்மகவா யொருவர்க்கும் தெரியாதபடி திரஸ்கரித்துக்கொண்டிருக்கவேண்டாவோ" என்றிருக்கிற அறிவுகேட்டையும், இவற்றையடையப்பொகட்டு அடைவுகெடவேத்துங்கோள். இதுவேயுங்களுக்குப் புருஷார்த்தமென்கிறார். ..........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (கருமமித்யாதி) உத்தரார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (கீழேகேவலனாயித்யாதி)

சாஸ்த்ரசித்தமான கர்மங்களுக்குநியாமகனுகையாவதேதென்ன (கர்மங்களுண்டானுலுமித்யாதி) உண்டானுலும் - சாஸ்த்ரசித்தமானுலும். அநுஷ்ட்டாதாவுமாய் - அநுஷ்ட்டாதாவுக்கந்தர்யாமியாய் நின்று கர்மநிர்வாஹகனுய். கர்மந்தானே பலப்ரதமாகாதோவென்ன (கர்மங்களையித்யாதி) பலப்ரதாதாவுமாய்-பலப்ரதாதாவுக்கந்தர்யாமியுமாய். ஆக கர்மத்துக்கு நிர்வாஹகனுகையாவது-கர்மாநுஷ்ட்டாதாக்களுக் கந்தர்யாமியாய்க்கொண்டநுஷ்ட்டிப்பித்து நிர்வஹிக்கை. கர்மபலத்துக்கு நிர்வாஹகனுகையாவது-பலப்ரதாதாக்களுக்கந்தர்யாமியாய் நிர்வஹிக்கையென்றபடி.

"காரணன்றன்னை" என்று - மூலக்தார்த்தத்தையநுவதித்து, எல்லாவற்றுக்கும் காரணபூதனென்கிறதென்கிருர் (புண்யங்களிலேயித்யாதி) "கருமமும் கருமபலனுமாகிய" என்றது-முமுக்ஷுக்களுடைய கர்மகர்மபலநிர்வாஹகத்வத்துக்குமுபலக்ஷணம். காரணன்றன்னையென்றதும் - முமுக்ஷுக்களுடைய கர்மகர்மபலங்களுக்குக்காரணமென்னுமதுக்கு முபலக்ஷணம். (உபாசகனுக்கு விக்ரஹத்தை சுபாஶ்ரயமாகச்சொல்லாநின்றதிறே) என்றிருக்கையாலே.

உபாஸகனுக்கு - முமுக்ஷுவுக்கு. "மால்" என்று-வ்யாமோஹமாய், அதாவது-வாத்ஸல்யமென்கிருர் (அகவாயிலித்யாதி) அர்த்தாந்தரம் (காரணவஸ்துவுக்கித்யாதி) " காரணன்றன்னை-செங்கண்மாலினை " என்றுசேர்ப்பது. இந்தவாக்யத்தில், "காரணன்றன்னை" என்றது - ஜகத்காரணத்வத்துக்கு முபலக்ஷணம். சிவந்தகண்ணையுடைய வத்ஸலனையென்று முந்தினவர்த்தம். மாலினை - சர்வாதிகனையென்று த்விதீயார்த்தம். விதியாநின்றதிறேயென்றது-" யஸ்த்வதேவோமயாத்ருஷ்டஃ புராபத்மாயதேக்ஷணஃ " (யஸ்துதேவோமயாத்ருஷ்டஃபுராபத்மாயதேக்ஷணஃ) " தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ " (தஸ்யதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ) இத்யாதியைப்பற்ற. தேவபிரானை - நித்யசூரிகளுக்குப்போலே யெனக்குபகாரகனுனவனையென்று விவக்ஷித்தர்த்தம் (அவ்வடிவழகையுமித்யாதி)

ஒருமைமனத்தினுள்வைத்து - ஒருபடிப்பட நெஞ்சிலேவைத்து. அநந்யப்ரயோஜநனுய்க்கொண்டு நெஞ்சிலேவைத்தென்றபடி. இங்கு - " க்வநாகப்ருஷ்டகமநம்புநராவ்ருத்திலக்ஷணம் । க்வஜபோவாஸுதேவேதிமுக்திபீஜமநுத்தமம் " (க்வநாகப்ருஷ்ட்டகமநம்புநராவ்ருத்திலக்ஷணம் । க்வஜபோவாஸுதேவேதிமுக்திபீஜமநுத்தமம்) என்றதநுசந்தேயம். பலிதம் ( இத்தாலித்யாதி ) அதிகாரிவிசேஷாநிர்த்தாரணேநாநந்யப்ரயோஜநத்வஸ்யைவவிதாநாதித்யர்த்தஃ. ப்ரயோஜநாந்தரபரரை - கேவலரை. குழைந்து-சிதிலமாய். எழுந்து-இருந்தவிடத்திலிராதே. பெருமை-மேன்மை. நாண்-லஜ்ஜை. பேதைமை-அறிவுகேடு.

அடிதொடங்கி, நாணும்சவிர்ந்து-பேதைமைதீர்ந்து-பிதற்றுமினித்யந்வயஃ...*

# பதினொன்றாம்பாட்டு.

தீர்ந்தவடியவர்தம்மைத்திருத்திப்பணிகொள்ளவல்ல
ஆர்ந்தபுகழச்சுதனையமரர்பிரானையெம்மானை
வாய்ந்தவளவயல்சூழ்தண்வளங்குருகூர்ச்சடகோபன்
நேர்ந்தவோராயிரத்திப்பத்தருவினைநீறுசெய்யுமே.

## ஆறாயிரப்படி.

(தீர்ந்த) தன்றிருவடிகளே ப்ராப்யமும்ப்ராபகமு மென்றத்யவ சித்திருக்குமாஸ்ரிதரை நிரஸ்தப்ரதிபந்தகராக்கி யடிமைசெய் வித்துக் கொள்ளவல்ல வார்ந்தபுகழையுடையனாய், * அயர்வறு மமரர்களோடே சம்ஸ்லேஷிக்குமாபோலே யாஸ்ரிதரோடு சம்ஸ்லேஷிக்கும் ஸ்வபாவனாய், எனக்கு ஸ்வாமியாயிருந்த வெம்பெருமானைச்சொன்ன வித்திருவாய்மொழி பகவத்பக்தி விரோதிகளைப்போக்கு மென்கிறார்................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக வநுபவவிரோதி நிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

தீர்ந்த - ஈஸ்வரனுடைய வுபாயோபேயத்வங்களில் வ்யவசிதராயிருக்கும், அடியவர்தம்மை - அடியவர்களை. திருத்தி-ப்ரதிபந்தக நிவ்ருத்திபூர்வகமாகபரபக்தி பரஜ்ஞாநாதிகளைக்கொடுத்துத்திருத்தி. பணி-நித்யகைங்கர்யத்தை. கொள்ளவல்ல-கொள்ளவல்ல. ஆர்ந்த-ஸர்வஶக்தியுக்தனுகையாலேபரிபூர்ணமான. புகழ்-குணகணங்களையுடையனாய். அச்சுதனை-ஆஸ்ரிதரைநழுவவிடாதவனாய். அமரர்பிரானை-நித்யஸூரிகளோடொக்கவடிமைகொள்ளும். அம்மானை-ஸர்வேஶ்வரனை. வாய்ந்த-நன்றான. வளம்-வளப்பத்தையுடைய. வயல்-வயல். சூழ்-சூழ்ந்த. தண்-ப்ரமஹரமாய். வளம்-ஸர்வஸம்பத்ஸம்ருத்தமான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். நேர்ந்த-பக்திபரவசருடைய உத்கர்ஷத்தையுமல்லாதாருடைய நிந்தையையும்நேர்ந்தருளிச்செய்த. ஓர்-அத்விதீயமான. ஆயிரத்து-ஆயிரத்திலும்வைத்துக்கொண்டு. இ-இந்த. பத்து-பத்தும். அருவினை-பகவத்குணாநுசந்தாநத்தில் விக்ருதராகாதபடிபண்ணும்மஹாபாபங்களை. நீறுசெய்யும்-பஸ்மஸாத்தாம்படிபண்ணும்.

வளங்குருகூர்-வாய்ந்த-சடகோபனென்றாகவுமாம்.

இது-அறுசீராசிரியவிருத்தம்..........................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றார் பகவத்குணாநு சந்தாநம் பண்ணினா லவிக்ருதராயிருக்கைக் கடியானமஹாபாபத்தை யிதுதானே நிஸ்ஶேஷமாகப் போக்குமென்கிறார்.

(தீர்ந்தவடியவர்தம்மை) "ப்ராப்யப்ராபகங்களவனே" என்றிருக்குமவர்களாயிற்று - தீர்ந்தவடியவராகிறார். அவர்களைத்திருத்திப் பணிகொள்ளுகையாகிறது-அவர்களுடையப்ராப்யப்ராபகவிரோதிகளைப்போ

க்கியடிமைகொள்கை. " ஸஹம்ஸவ-ஹ்ம்கரிஷ்யாமி " ( அஹம்ஸர்வம்கரிஷ்யாமி ) என்றிருந்தாலும், " க்ரியதாமிதிமாம்வத " ( க்ரியதாமிதிமாம்வத ) என்றடிமைகொள்ளவேணுமே. ( ஆர்ந்தபுகழச்சுதனை ) குறைவற்ற கல்யாணகுணங்களை யுடையனாய், " தன்னையாஸ்ரயித்தாரை நழுவவிட்டான் " என்னும் வார்த்தையையொருநாளுங் கேட்டறியாதவனை. ( அமரர்பிரானையெம்மானை ) அஸ்ப்ருஷ்ட சம்ஸாரகந்தரான நித்யசூரிகளைக்கொள்ளுமடிமையைத் தன்பக்கலாசா லேசமின்றிக்கே யிருக்கிறவென்னைக்கொண்டவனை. அச்யுதத்வம்கேட்டார் வாய்க்கேட்டன்றிக்கே, தம்பக்கலிலே யநுஷ்டாநபர்யந்தமாகக் கண்டுசொல்லுகிறார். ( வாய்ந்த ) பகவத்குணங்களை யநுசந்திக்கையு மவ்வநுசந்தாநத்தை யொழியச் செல்லாமையுமாகிற விவ்வளவன்றிக்கே, பகவத்குணங்களைக்கேட்டா லவிக்ருதரா யிருப்பாரைநிந்தித்தும் விக்ருதராயிருப்பாரைக் கொண்டாடியும் போரும்படி யவ்விஷயத்திலே யவகாஹித்துச்சொன்ன. வாய்கை - கிட்டுகை. ( வளவயலித்யாதி ) வயலுக்குச்சொல்லுகிற சிறப்பையுமுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த. தண் - குளிர்த்தி. நேர்ந்த- சொன்னவென்றபடி. பகவத்குணாநுசந்தாநத்தாலே விக்ருதராய்க்கொண்டு சொன்னஆயிரத்திலும் வைத்துக்கொண்டிப்பத்து ( அருவினைநீறுசெய்யும் ) பகவத்குணங்களைக்கேட்டால் விக்ருதராகாதே திண்ணியராயிருக்கைக் கடியான மஹாபாபங்களை பஸ்மஸாத்தாக்கும்..... ...................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (தீர்ந்தவித்யாதி) "அருவினைநீறுசெய்யும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியிலித்யாதி)

விரோதியைப்போக்கினால் தானேயடிமைசெய்யானோ, பணிகொள்ளவேணுமோவென்ன ( அஹம்ஸர்வமித்யாதி ) யத்வா, அர்த்தாந்தரமாதல். அதாவது, தீர்ந்திருக்கையாவது - " ஸஹம்ஸவ-ஹ்ம்கரிஷ்யாமி " (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்றிருக்கை; திருத்தி-ஏவி. ப்ராப்யவிரோதி - விஷயாந்தரங்கள். ப்ராபகவிரோதி-உபாயாந்தரங்கள். நவித்யதேச்யுதோ யஸ்மாத்ஸ: - அச்யுதஇதிவிவக்ஷிதம். அடிமை-வாசிககைங்கர்யம். பலிதம் (அச்யுதத்வமித்யாதி)

"வாய்ந்த" என்றது - * சடகோபனுக்குவிசேஷணம். அவகாஹிக்கையைச் சொல்லுகிறது - இத்திருவாய்மொழியினர்த்தாநுகுணமாக.

* அருவினைக்சர்த்தம் (பகவத்குணங்களித்யாதி)

தீர்ந்தவடியவர்தொடங்கி, எம்மானை - வளவயல்சூழ்தண்வளம் குருகூர்ச் சடகோபன்-ஆயிரத்திலும்வைத்துக்கொண்டு-வாய்ந்து-நேர்ந்த - இப்பத்தருவினைநீறுசெய்யும் என்றந்வயம். எம்மானை-வாய்ந்த-சடகோபனென்றுமாம். ஸம்ருத்தியுடையவயல்சூழ்ந்து ஸ்ரமஹரமாய் ஸர்வஸம்பத்ஸம்ருத்தமான திருநகரிக்குநிர்வாஹகரான வாழ்வாரித்யர்த்த:... ..........................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(மொய்ம்மாம்பூம்பொழில்.)

க்ராஹக்ரஸ்தேபமோக்ஷே ஸுரரிபுதமநே கோகுலத்ராணகா
ர்யே கோதார்த்தோக்ஷாவமர்த்தே ஸகலஹிதமதௌ ஸிந்துபர்யங்கயோ
கே । க்ஷோணீபாரவ்யபோஹே க்ஷிதிதரவஸதௌ நிர்ஜராராத்யதா
யாம் விஶ்வாரம்பே ச ஹ்ருஷ்டம் ஹரிமநுபவதிஷோ நூதகக்ஷும்ஜஹாதி ॥ ௨அ

(க்ராஹக்ரஸ்தேபமோக்ஷே) முதலைச்சிறைபட்டுநின்ற கைம்மாவுக்கருள்செய்த - க்ராஹத்தாலே க்ரஹிக்கப்பட்ட கஜேந்த்ரனை விடுவித்தருளினதிலும்; (ஸுரரிபுதமநே) திண்சழற்காலசுரர்க்குத்தீங்கிழைக்கும் - ஆஶ்ரிதவிரோதிகளான வசுரர்களுடைய நிரஸநத்திலும்; (கோகுலத்ராணகார்யே) மலையையெடுத்துக் கன்மாரிகாத்துப் பசுநிரைதன்னைத்தொலைவுதவிர்த்த-கோவர்த்தநத்தையெடுத்துக் கோகுலத்தை ரக்ஷித்தருளினதிலும்; (கோதார்த்தோக்ஷாவமர்த்தே) வம்பவிழ் கோதைபொருட்டா மால்விடையேழுமடர்த்த - நப்பின்னைப்பிராட்டிக்காகப்பண்ணின வ்ருஷபகணமர்த்தநத்திலும்; (ஸகலஹிதமதநே) சாதுசனத்தைநலியுமித்யாதி-அப்ராக்ருததிவ்யமங்களவிக்ரஹத்தோடே க்ருஷ்ணனுயவதரித்தருளி சாதுக்களான தேவகீ வசுதேவர்களை பாதித்தகம்ஸனை சம்ஹரித்தருளினதிலும்; (ஸிந்துபர்யங்கயோகே) தடம்கடல்சேர்ந்தபிரானை - ஆஶ்ரிதரக்ஷணத்திலே யவஹிதனாய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினதிலும்; (க்ஷோணீபாரவ்யபோஹே) ஐவர்க்கருள்செய்துநின்று பார்மல்குசேனையவித்த - பாண்டவர்களுக்காக யுத்தத்திலேநின்று பூபாரத்தைப்போக்கியருளினதிலும்; (க்ஷிதிதரவஸதௌ) வார்புனலந்தண்ணருவிவடதிருவேங்கடத்தெந்தை - அவதாரத்தில் பிற்பட்டாருமிழவாதே யநுபவிக்கும்படியாக தர்ஶநீயமாய் ஶ்ரமஹரமான திருமலையிலேநின்றருளினதிலும்; (நிர்ஜராராத்யதாயாம்) அமரர்தொழப்படுவானை - * அயர்வறுமமரர்களாலே யநவரதமாராத்யனாயிருக்கையிலும்; (விஶ்வாரம்பேச) காரணன்றன்னை-லோகங்களையெல்லாம் ஸ்ருஷ்டித்தருளினதிலு மொருப்பட்டநுசந்திப்பாரை எம்பெருமான் தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹகாந்தியாலே பிச்சேற்றி யக்ரமமான ஹர்ஷசேஷ்டிதங்களை யுடையராகப்பண்ணுமென்று "மொய்ம்மாம்பூம்பொழில்" என்கிறதசகத்திலே ஆழ்வாரருளிச்செய்தாரென்கிறார்............(௨அ)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

மொய்ம்பாருமாலுக்கு முன்னடிமைசெய்துவப்பா
லன்பாலாட்செய்பவரையாதரித்து - மன்பிலா
மூடரைநிந்தித்து மொழிந்தருளுமாறன்பால்
தேடரியபத்திநெஞ்சேசெய். (௨கூ)

(மொய்ம்பாரும்) அடிமைசெய்வாரைஸ்துதித்தும் செய்யாதாரைநிந்தித்துமபோருகிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார், எங்ஙனேயென்னில்; இப்ப

டிவாசிகமாக அடிமைசெய்யப்பெற்ற ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, இவ்வடிமையைக் காற்கடைக்கொண்டுடம்பைப்பார்த்துக்கொண்டு திரியும் கழனியிண்டரைப்பொடிந்தும் பகவத்குணாநுபவத்தாலேவந்த களிப்புக்குப்போக்குவிட்டு ஆடுவது பாடுவதாயடிமைசெய்யும் ஸ்ரீவைஷ்ணவர்களைக்கொண்டாடியும் ஹ்ருஷ்டராய்ச்செல்லுகிற * மொய்ம்மாம்பூம்பொழிலினர்த்தத்தை யருளிச்செய்கிறார் "மொய்ம்பாருமாலுக்கு" இத்யாதியாலே.

(மொய்ம்பாருமாலுக்கு) சமஸ்தஜகதாகாரதயாசக்தியால் ஸம்ருத்தஞன சர்வேஶ்வரனுக்கு. சர்வஜ்ஞத்வ சர்வஶக்தித்வங்களாலேயிறே பொய்கைமுதலைச் சிறைவிடுவித்துக் கைம்மாவுக்கருள்செய்தடிமைகொண்டதும். (முன்னடிமைசெய்துவப்பால்) முன் - * புகழுநல்லொருவனிலே வாசிகமாக வடிமைசெய்த ஹர்ஷத்தாலே. (அன்பாலாட்செய்பவரையாதரித்தும்) பக்தியாலே கைங்கர்யம்பண்ணுமவர்களை யாதரித்தும். அதாவது - "ஓதியுணர்ந்தவர்" என்றும், "முனிவின்றியேத்திக்குனிப்பார் முழுதுணர்நீர்மையினர்" என்றும், "ஆர்வம்பெருகிக்குனிப்பாரமரர்தொழப்படுவார்" என்றுமாதரித்தது. "ஞாயந்திகேஸிதுப்ரணமந்திகேஸிந்ருத்யந்திகேஸித்" (காயந்திகேசித்ப்ரணமந்திகேசிந்ருத்யந்திகேசித்) என்றதிறே. (அன்பிலாமூடரைநிந்தித்தும் மொழிந்தருளும்) * பத்தியிலாதபாவிகளானவஞ்சரை யநாதரித்துநிந்தித்தும். அதாவது - "எழுந்தும்பறந்துந்துள்ளாதார் தம்மால்கருமமென்" என்றும், "மண்கொளுலகிற்பிறப்பார்வல்வினைமோதமலைந்து" என்றும், "அலைகொணரகத்தழுந்திக்கிடந்துழைக்கின்றவம்பர்" என்றும், "தம்பிறப்பால்பயனென்னே சாதுசனங்களிடையே" என்றும், "என்சவிப்பார்மனிசரே" என்றும், "உத்தமர்கட்கென்செய்வார்" என்றுமருளிச்செய்தது. "மார்கம்ப்ரதர்ஶய" (மார்கம்ப்ரதர்ஶய) என்னும்படியிறே அதிலுட்புகாதாரையநாதரித்தபடி. (மாறன்பாலித்யாதி) இப்படி அஜ்ஞானவர்களை நிந்தித்து அவர்களை அஸத்கர்மங்களினின்றும் நிவர்த்திப்பிக்கப்பார்த்த ஆழ்வார்விஷயத்திலே பெறுதற்கரிதானபக்தியை மநஸ்ஸேஸபண்ணு.......................................................(உரு)

மூன்றும்பத்தில் - அஞ்சாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - உரு. பாட்டு - உளஎ.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## மூன்றும்பத்து.

## ஆறுந்திருவாய்மொழி.

### செய்யதாமரை - ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

(செய்யதாமரைக்கண்ணன்) "பிதற்றுமின்பேதைமைதீர்ந்து" என்றுகொண்டு-எம்பெருமானை ஆஶ்ரயியுங்களென்று முன்புசொல்லப்பட்டவர்களைக் குறித்தெம்பெருமானுடைய ஸௌலபத்வகாஷ்டையை யருளிச்செய்கிறார்........................................................*

### பன்னீராயிரப்படி.

ஆறுந்திருவாய்மொழியில், கீழ் - சேஷத்வ ஸாரஸ்யத்தால்பிறந்த ப்ரீதிவிகாரமுத்தேஶ்யமென் றருளிச்செய்தவர், அந்தவினிமை யில்லாமையாலே யவிக்ருதரான ஸம்ஸாரிகளுக்கும் பகவச்சேஷத்வத்தை யுபதேசிப்பதாக ஶேஷியினுடைய அர்ச்சாவதாரபர்யந்தமான ஸௌலப்யத்தை யுபபாதிப்பதாகநினைத்து; அந்த ஸௌலப்யத்துக்கூற்றான ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வத்தையும்,ஸ்ருஷ்டமானஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமான அவதாரகந்தத்வத்தையும், அவதீர்ணனுடைய வதிசயிதசேஷ்டிதத்வத்தையும், ஈஶ்வராபிமானிகளுக்கு மாஶ்ரயணீயனான சீலாதிசயத்தையும், அவதாரதசையிலு மகிலவிபூதித்வந் தோற்றும்படியான ஆதிக்யத்தையும், ஆஶ்ரிதவிஷயத்தி லதிசயிதவாத்ஸல்யத்தையும், நிரவதிகபோக்யதையையும், பற்றினாரைநழுவவிடாத பக்ஷபாதத்தையும், ஸர்வவிதபந்துவுமாய்க்கொண்டு ஆஶ்ரிதரிட்ட வழக்கான அர்ச்சாவதார பாரதந்த்ர்யத்தையும், ஆஶ்ரிதபரதந்த்ரனான வவன்பக்கல் தமக்குப்பிறந்த அபிநிவேசத்தையு மருளிச்செய்து, பகவச்சேஷத்வத்தை ப்ரதிபாதித்தருளுகிறார்...................................................*

---

### ஈடு.

சர்வேஶ்வரன் திருவடிகளில் கைங்கர்யருசியுடையார்க் கத்தைக் கொடுக்கக்கடவனுமாய் அவ்வடிமைதா னவன்றனக்கினியதாயிருக்கக்கடவதுமாய் அவ்வழியாலே இச்சேதநனுக்குத்தேஶ்யமாகக்கடவதுமாயிருக்க, அத்தையிழக்கையாலே சிலரைநிந்திக்கவேண்டும்படியிறே-கீழ்த்திருவாய்மொழியில் நின்றது; இவ்வடிமையிலே யந்வயித்தாரைக்கூட்டிக்கொண்டு அதில்லாதாரையுபேக்ஷித்தாராய் நின்றார்; இனி, தாமேவிழுவாரைத்தடிகொண்டடிக்குமோபாதியென்று பார்த்து-இவர்கள்பண்டேயறிவுகேட்டாலே வழிதப்பிப்போயநர்த்தப்படாநின்றார்கள், நாமிவர்களைக்கைவிடவொண்ணாது, ஹிதத்தைச்சொல்லுவோமென்றுபார்த்து ஹித

த்தை யருளிச்செய்கிறார். ராவணன்பிராட்டிபக்கல் "ஜநகி" என்னும் ப்ரதிபத்தியின்றிக்கே திருமுன்பே சிலவற்றை ஜல்பிக்கப்புக்கவாறே, "ஐயோ! இவன் நினைவிருந்தபடியென், இவனுக்கொருநல்வார்த்தை சொல்லுவாரின்றிக்கேயொழிவதே" என்று வெறுத்து, அவன்றனக்கே "மித்ரமௌபயிகம்கர்த்தும்" (மித்ரமௌபயிகம்கர்த்தும்) என்றுபிராட்டி ஹிதமருளிச்செய்தாற்போலே. "த்வந்நீசஸஸவத்"(த்வந்நீசஸஸவத்) என்றுவைத்துப்பின்னையுமவன்றனக்கேஹிதமருளிச்செய்தாற்போலேயிருப்பதொன்றிறே, இவரும்கீழ்த்திருவாய்மொழியில்-அவர்களைநிந்தித்துவைத்து, இங்கு-ஹிதஞ்சொல்லுகிறவிடமும். [மித்ரமௌபயிகம்கர்த்தும்ராமः] (மித்ரமௌபயிகம்கர்த்தும்ராமः) "பெருமாளைநீசரணம்புகு" என்றால் அப்பையல் அதுதனக்கெளிவரவாகநினைத்திருக்குமே, அதுக்காகத்தோழமைகொள் என்கிறார். தங்களைச்சரணம்புக்காரை, தங்களிற்காட்டில் குறையநினைத்திருப்பதில்லையேயிவர்கள்; "மித்ரபாவேந" (மித்ரபாவேந) என்றும், "மித்ரமௌபயிகம்கர்த்தும்" (மித்ரமௌபயிகம்கர்த்தும்) என்றுமிறே இருவர்படியும். [ஸ்தாநம்பரீப்ஸதா] (ஸ்த்தாநம்பரீப்ஸதா) வழியடிப்பார்க்கும் தறையிலேகால்பாவிநின்று வழியடிக்கவேணுமே, உனக்கோரிருப்பிடம் வேண்டியிருந்ததாகிலு மவனைப்பற்றவேணுங்காண். எளிமையாக எதிரிகாலிலேகுனிந்திவ் விருப்பிருப்பதில் பட்டுப்போகவமையு மென்றிருந்தாயோ [வதஞ்சாநிச்சதாகோரம்] (வதஞ்சாநிச்சதாகோரம்) அப்படியுன்னை நற்கொலேப்படவிடுவரோ!, உன்னை வைத்து உன்முன்னேயுன் சந்தாநஜாதனை ஹிம்சித்துப் பின்னையுன்னை சித்ரவதம்பண்ணுகையாகிற வ்வதத்தை யிச்சித்திலேயேயாகிலு மவனைப்பற்றவேணுங்காண், [த்வயா] (த்வயா) உன்னிலே யிருந்தபடியால் விசேஷித்துனக் கவனைப்பற்றவேணும். [அஸௌ] (அஸௌ) உருவெளிப்பாட்டாலே முன்னிலேயாயிருக்குமிறே யிவனுக்கு; அவனுக்குந்தானே மாயாம்ருகத்தின் பின்னேபோகிறபோது கண்டகாட்சியாலே அச்சத்தாலே எப்போதும் முன்னிலேயாயிருப்பனிறே. [புருஷர்ஷபः] (புருஷர்ஷபः) "நான்பண்ணின அபகாரத்துக்கென்னை யவர் கைக்கொள்ளுவரோ" என்றிருக்கவேண்டா, இவற்றையொன்றாக நினைத்திரார்காண், அவர்புருஷோத்தமர்காண். அஸௌ-புருஷர்ஷபः-ராமः-த்வயா-மித்ரம்-கர்த்தும்-ஔபயிகம். இப்படி பிராட்டிராவணனுக்கு ஹிதமருளிச் செய்தாற்போலே யிவருமிவர்களுக்கு ஹிதமருளிச்செய்கிறார்.

"இவர்கள்தான் வழிதப்பிப்போய நர்த்தப்படுகிற முகமேதோ! ப்ராப்திபொருத்திருக்க" என்றுபார்த்தார், பகவத்குண ஜ்ஞாநமில்லாமையு மவனுடையஸௌலப்ய ஜ்ஞாநமில்லாமையுமாயிருந்தது. "ஈஶ்வரனாகிறான் பெரியானொருவனன்றோ, அவன்விசைக்கொம்பு, நமக்கவனை யெட்டப்போகாதொன்றா யிருந்தது" என்று ஸம்ஸாரிகள்கைவாங்க, "அ

(எழுமைக்குமெனதாவிக்கின்னமுதத்தினை) காலதத்வமுள்ள தனையும்,தன்சுவடறியாதே இதரவிஷயப்ரவணமான வென்னெஞ்சுக்குப் பரமபோக்யனானவனை. பெரியவற்றை - ஏழேழாகச் சொல்லக்கடவதிறே. காலமெல்லாமென்றபடி. (எனதாருயிரித்யாதி) அநாதியாக ஸம்ஸரித்துப்போந்த வென்னாத்மாவோடேகலந்து அத்தாலேயுஜ்ஜ்வலனானவனை. தாம்கிட்டுகை யத்தலைக்கு நிறக்கேடென்றிருந்தாரிவர், அதுமற்றைப்படியாய்த் தம்மைச்செறியச்செறிய தீப்தனாயிருந்தான். (மணிவண்ணனையித்யாதி) இத்தலையிலிசைவுபாராதே யூகப்படுத்திக்கொள்ளுகைக்கு ஹேதுக்களிருக்கிறபடி. வடிவழகையும் மநோஹாரிசேஷ்டிதங்களையு முடையவனை. வண்ணம்-நிறம். நீலமணிபோலே முடிந்தாளலாம்படி யிருக்கிறவனென்றுமாம். ஆக்கரானதேவர்களன்றிக்கே சீரியரான * வைகுந்தத்தமரர்க்கும் முனிவர்க்கும் கன்னல்போலவும் கனிபோலவும் நிரதிசயபோக்யனானவனை. " ஸர்வகந்தஸ்ஸர்வரஸ: " (ஸர்கந்தஸ்ஸர்வரஸ:) என்னக்கடவதிறே. (கன்னற்கனியினைத்தொழுமின்) "மாங்கனி" என்னுமாபோலே, கன்னல்பழுத்த பழங்காணுமிது. இதுவன்றோ நானுங்களுக்கிடுகிற வேப்பங்குடிநீர், பால்குடிக்கக் கால்பிடிக்கிறேனன்றோ, (தூயமனத்தராய்) " கிட்டவரியனோ! எளியனோ, அறியவரியனோ! எளியனோ,இவனைப்பற்றுவோமோ! அன்றிக்கே ப்ரயோஜநத்தைக் கொண்டகலுவோமோ " என்றிங்ஙனே ஸம்ஶயா க்ராந்தராய்ப்போகாதே,இவன்றன்னையே ப்ரயோஜநமாக ஆஶ்ரயியுங்கோள். (இறையுநில்லாதுயரங்களே) இப்படிஸம்ஶயிக்கைக்கடியான மஹாபாபங்கள் வாஸனையோடே பறிந்துபோம். ஸாம்ஸாரிகமான துஃகங்கள் நிஶ்ஶேஷமாகப் போமென்றுமாம்.................................................................*

---

## ஜீயர் அரும்பதம்

ஏழாம்பாட்டு. (எழுமைக்குமித்யாதி) " குடக்கூத்தனை, தூயமனத்தராய்-தொழுமின்-இறையுநில்லாதுயரங்கள் " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்படியித்யாதி) இப்படிஸுலபனானவனென்றது - கீழ்ப்பாட்டில் நரஸிம்ஹாவதாரத்தை. காலதத்வமுள்ள தனையும்-(போக்யனானவனை) இத்யந்வய:.

" எழுமைக்கும் " என்றால் - காலதத்வமுள்ள தனையுமென்று காட்டுமோவென்ன (பெரியவற்றையித்யாதி) (சொல்லக்கடவதிறே) ஆகையாலே இத்யத்யாஹார்யம். " எனது " என்றதுக்கும், " கதிர்ச்சோதி " என்றதுக்கும் ஸமுதாயேநபாவம் (தாம்கிட்டுகையித்யாதி) செறியச்செறிய - நெருங்கநெருங்க. கெழுமுகை - சேருகையாய், கலந்தவென்றபடி. என்னாத்மாவோடே கலந்தத்தால் ப்ரகாசிதமான தேஜஸ்ஸையுடையவனை யிதிஶப்தார்த்த:.

" மணிவண்ணனை " இத்யாரப்ய, " கன்னல்கனியினை " என்னுமளவுக்கு பாவம் (இத்தலையிலித்யாதி) " ஹேதுக்கள் " என்றத்தைவிவரிக்கிறார் (வடிவழகையுமித்யாதி) வண்ணம்-நிறமாதல், ஸௌலப்யஸ்வபாவமாதல். ஆக்கரான-ஸ

ருஷ்டரான. விழுமிய-ஸ்லாக்யரான. விழுங்கும்-புஜிக்கும். இது-எல்லாவற்றுக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம்பற்றி, அதுக்குப்ரமாணம் (ஸர்வகந்தஇத்யாதி) கன்னலினுடையபழமென்று ரஸாதிசயத்திலே யர்த்தாந்தரம் (மாங்கனியித்யாதி) முந்தினது-த்வந்த்வம். இரண்டாவது-ஷஷ்டீ தத்புருஷன்.

"கன்னற்கனியினைத்தொழுமின்" என்கிறவருடைய ஹார்த்தபாவம் (இதுவன்றோ வித்யாதிவாக்யத்வயே) கிட்டவரியனேவென்கிற ஸம்ஶயத்துக்கு - "எனதாருயிர்கெழுமிய" இத்யாதிநிவர்த்தகம். "எனதாவிக்கின்னமுதத்தினை" என்றத்தைக்கடாக்ஷித்து (அறியவரியனேவித்யாதி) ஜ்ஞாநமுண்டாய் புஜிக்க வேண்டுமே. "விழுமியவமரர்" இத்யாதி (இவனைப்பற்றுவோமோ) இத்யாதி ஸம்ஶயத்துக்குநிவர்த்தகம். தூயமனத்தராய்-பரிசுத்தமான நெஞ்சையுடையராய். சுத்தியாவது-ஸம்ஶயராஹித்யம்.

முந்தினநிர்வாஹத்திலே, "துயரங்கள்" என்கிறவிது - து꞉கஹேதுபாபபரம். இரண்டாம்நிர்வாஹத்திலே, துயரம்-து꞉கம். இறையும்-அத்யல்பமும்.

க்ரமேணாந்வய꞉......................................................................*

# எட்டாம்பாட்டு.

துயரமேதரு துன்பவின்பவினைகளாயவையல்லனா
யுயரநின்றதோர்சோதியாயுலகேழுமுண்டுமிழ்ந்தான்றன்னை
யயரவாங்குநமன்றமர்க்கருநஞ்சினையச்சுதன்றன்னைத்
தயரதற்குமகன்றன்னையன்றிமற்றிலேன்றஞ்சமாகவே.

## ஆறாயிரப்படி.

(துயரமேதரு) ஸ்வாதீந புண்யபாபஸ்வரூபனாய், அகர்மவஶ்யனாய், நிரவதிக தேஜோவிசிஷ்டனாய், ஸர்வலோகரக்ஷகனாய், ஸ்வாஶ்ரிதஜநங்களை யமகிங்கரர்பாதியாதபடி யவர்களைரக்ஷித்தருளும் ஸ்வபாவனாய், அவர்களோடாத்மாந்தமாக ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனாயிருந்ததயரதற்கு மகன்றன்னை யன்றிமற்றிலேன் தஞ்சமாக; நீங்களுமாஶ்ரயியுங்க ளென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம்,ஆஶ்ரிதரைநழுவவிடாத சக்ரவர்த்திதிருமகனையொழிய வேறுதஞ்சமில்லையென்கிறார்.

துயரமே-நிஷ்க்ருஷ்டபரிதாபத்தையே. தரு-தரக்கடவதான. துன்பம்-து꞉கத்துக்கும். இன்பம் - து꞉கஸாத்யத்வது꞉கமிஶ்ரத்வது꞉கோதர்க்கத்வ விசிஷ்டமாகையாலே நிஷ்க்ருஷ்டபரிதாபகரமான சுகத்துக்கும்ஹேதுவான. வினைகளாய் பாபரூபமாயும்புண்யரூபமாயுமுள்ள. கர்மங்களுக்குநிர்வாஹகனாய், அவை-அவற்றுக்கு. அல்லனாய்-தான்வஶ்யனல்லனாய். உயர - "விஶ்வத꞉ப்ருஷ்டேஷு ஸர்வத꞉ ப்ருஷ்டேஷு" (விஶ்வத꞉ப்ருஷ்டேஷு ஸர்வத꞉ப்ருஷ்டேஷு) என்கிறவு

யர்த்தியையுடைத்தாய். மின்றது-நித்யமாய். ஓர்-அத்விதீயமான. சோதியாய்-தேஜோமயதிவ்யதேஹத்தையுடையனாய். உலகேழும்-கர்மவஶ்யமான ஸகலலோகங்களுக்கும்ப்ரளயாபத்துவந்தால். உண்டு-உண்டு. உமிழ்ந்தான்றன்னை - உமிழ்ந்துரக்ஷிக்குமவனாய். அயர-மோஹிக்கும்படி. வாங்கும்-ப்ராணபஹாரம்பண்ணும். நமன்றமர்க்கு - யமபடர்க்கு. அரு - மீட்கவரிய. நஞ்சினை - நஞ்சாய்க்கொண்டு. அச்சுதன்றன்னை-ஆஶ்ரிதனைநழுவவிடாதஸ்வபாவனான. தயரதற்குமகன்றன்னை-சக்ரவர்த்திதிருமகனை. அன்றி-ஒழிய. மற்று-மற்றொருபகவத்வ்யக்தியுமகப்பட. தஞ்சமாக-தஞ்சமாக. இலேன்-உடையேனல்லேன்.

தஞ்சம்-ஆபத்துக்குறுதுணை.....................................................................*

---

## ௬-எட்டாம்பாட்டு.

சம்ஸாரிகளுக்கும்ருசிபிறக்கைக்காக, நான்சக்ரவர்த்திதிருமகனையல்லது ஆபத்தநமாகப்பற்றி யிரேனென்றுஸ்வஸித்தாந்தத்தை யருளிச்செய்கிறார்.

( துயரமித்யாதி ) துஃகத்தையே தரக்கடவதான புண்யபாபரூபமான கர்மங்களுக்கு நியாமகனாய், துன்பவினையோடு இன்பவினையோடு வாசியற இரண்டும்துஃகத்தையே பண்ணித்தருமென்று யிற்றிருக்கிறாரிவர், பகவச்சேஷத்வ விரோதியாய்க்கொண்டு பந்தகமாகை யிரண்டுக்கு மொக்குமிறே; “ புண்யபாபேவிதூய ” ( புண்யபாபேவிதூய ) என்னக்கடவதிறே. ( அவையல்லனாய் ) அகர்மவஶ்யனாய். “ அநஶ்நந்நந்ய: ” ( அநஶ்நந்நந்ய: ) என்கிறபடியே,தானிவற்றால் வஶ்யனல்லாமையன்றிக்கே நியாமகத்வத்தால்வந்த புகரையுடையனாயிருக்கை. ( உயரவித்யாதி ) “ க்ஷயந்தமஸ்யரஜஸ:பராகே ” ( க்ஷயந்தமஸ்யரஜஸ:பராகே ) என்றும், “ தமஸ:பரஸ்தாத் ” ( தமஸ:பரஸ்தாத் ) என்றுஞ்சொல்லுகிறபடியே,இங்குள்ளாரால்சென்று கிட்டவொண்ணாதாயிருக்கிற தமஸ:பரஸ்தாத்வர்த்தமாநதேசத்திலே நிரவதிகதேஜோரூபமான திவ்யவிக்ரஹத்தையுடையனாயிருக்கிறவிருப்பைச்சொல்லுகிறது. “ விஶ்வத:ப்ருஷ்டேஷு ஸர்வத:ப்ருஷ்டேஷு ” ( விஶ்வத:ப்ருஷ்டேஷுஸர்வத:ப்ருஷ்டேஷு ) என்கிறவுயர்த்தியை யுடைத்தாய் நித்யமாயத்விதீயமான தேஜோமயதிவ்யதேசத்தையுடையவனா யென்றுமாம். ( உலகித்யாதி ) இப்படிபுஷ்கலனாயிருந்தானே யாகிலும், விபூத்யேகதேசமான சம்ஸாரத்தைப்ர்ளயங்கொண்டதென்றால் இங்கேவந்துவயிற்றிலே எடுத்துவைத்துநோக்கி, “ இத்தனைபோதுங்காணப்பெறாமையாலே இவையென்படுகிறனவோ ” என்று உமிழ்ந்துபார்க்குமவனை ; வழிபறிக்கும் நிலத்திற்போவார் சிறியதநங்களைவிழுங்கி, பின்னையமர்ந்தநிலத்திலே புக்கால்புறப்படவிட்டுப் பார்க்குமாபோலே. ( அயர ) தன்திருவடிகளை யாஶ்ரயித்தாரை யறிவுகலங்கும்படிக்கீடாக ப்ராணவியோகத்தைப் பண்ணக்

டவராயிருந்துள்ள யமபடர்க்குக்காற்றவொண்ணாத நஞ்சாயுள்ளவனை (அச்சுதன்றன்னை) தன்னையாஸ்ரயித்தாரை யமவஸ்யராக விட்டுக்கொடாதவனை. * உயிர்கொண்டுடலொழிய வோடும்போதோடியயர்வென்று தீர்க்குமவனிறே. எங்ஙனேகண்டோமென்ன (தயரதற்குமகன்றன்னை) தான்ராஜ்யம்பண்ணாநிற்கச்செய்தே ஒருப்ராஹ்மணகுமாரனுக்கு அகாலம்ருதியுண்டாக, அவனைவாளாலேமீட்டும்; ராவணவதம்பண்ணிப் படைக்குறிகாணா நிற்கிறவளவிலே முதலிகளிலே சிலரைக்காணாதொழிய, இந்த்ரனையழைத்துப்போகவிட்டு வரங்கேட்கிறவ்யாஜத்தாலே அவனையிடுவித்து, அவர்களையுங்கூட்டிக்கொண்டு போனசக்ரவர்த்தி திருமகனை; ஒருருஷிபுத்ரனுக்கு அகாலம்ருதிவர, அம்பாலேமீட்டுக்கொடுத்துஞ்செய்தவை. தயரதன்மகன் என்னாதே, தயரதற்குமகன்றன்னை என்கிறது-ஒருகால் வெற்றிலைச்செருக்கிலே "ராஜ்யத்தைத்தந்தேன்" என்ன, புரிந்து ஸ்ரீப்ரதந்த்ரனாய் "நான்தந்திலேன், நீகாடேறப்போ" என்ன, இப்படிசொல்லலாம்படி அவனுக்கிஷ்டவிநியோகார்ஹனான புத்ரனை. (அன்றிமற்றிலேன் தஞ்சமாகவே) இவ்விடத்தை பட்டரருளிச்செய்யாநிற்க, ஜீயர் "இவர்புக்கவிடமெங்கு மிப்படியேசொல்லுவர், இவர்க்கிதுபணியிறே" என்ன, "இவர்மற்றோரிடத்தில் தலைநீட்டுவது பாவநத்வத்தைப்பற்ற, இவர்தஞ்சமாக நினைத்திருப்பது சக்ரவர்த்திதிருமகனையே" என்றருளிச்செய்தார்; "'பாவநஸ்ஸர்வலோகாநாம்த்வமேவ' (பாவநஸ்ஸர்வலோகாநாம்த்வமேவ) என்கிறதில்லையோ இவரையும்" என்னில் "அவனுமிவரோடொத்தானொருத்தனிறே, இவர் 'போக்யவஸ்துவேறில்லை' என்றிருக்குமோபாதி, அவன் 'பாவநத்வத்துக்கு மிவரொழியவேறில்லை' என்றிருப்பானொருவனாயிற்று" பட்டர்ராமாவதாரத்தில் பக்ஷபாதத்தாலே யருளிச்செய்யுமது கேட்கைக்காக, சிறியாத்தான் "பெருமாளுக்கெல்லாவேற்றங்களு மருளிச்செய்ததேயாகிலும், பாண்டவர்களுக்காகக்கழுத்திலே ஓலைகட்டித்தூதுபோன க்ருஷ்ணனுடையநீர்மையில்லையே சக்ரவர்த்திதிருமகனுக்கு" என்ன, "அதுவோ, பெருமாள் தூதுபோகாமையன்றுகாண், இக்ஷ்வாகுவம்ஸ்யரைத்தூதுபோகவிடுவாரில்லாமைகாண்" என்றருளிச்செய்தார். "அவ்வவதாரத்திலிழவுதீருகைக்காகவிறே க்ருஷ்ணனாயவதரித்துத் தூதுபோயிற்று, * அவனேபின்னோர் தூதாதிமன்னர்க்காகிப் பெருநிலத்தாரின்னார் தூதனென்னநின்றானிறே; பாரதந்த்ர்ய ரஸமநுபவிக்கைக்காகப்போந்தபின் 'இதிலொன்றுகுறைந்ததாகிறது' என்றிருக்குமே." எம்பெருமானார் திருவாராதநம் பண்ணிப்போருவதொருபிள்ளையிறே; இங்ஙனேயிருக்கச்செய்தே ஒருநாளொரு ஸ்ரீவைஷ்ணவர் சக்ரவர்த்திதிருமகனை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்துகொடுத்தாராய், அவரைப்பார்த்து "இந்த 'மாமேகம்ஸரணம்வ்ரஜ' (மாமேகம்ஸரணம்வ்ரஜ) என்றுதேவையிடாதா ரெழுந்த

ருளினார் ” என்றாராம். ஆபிமுக்யத்தாலே பெறலாமென்றால், அவ்வாபி முக்யந்தானும் பரமபக்தியோபாதி யரியதாயிருக்குமிறே இச்சேதநனைப் பார்த்தால். “ இத்தலையிலாபிமுக்யத்துக்குமேற்படவேண்டா ” என்று சொல்லுகிறவையெல்லாம்-சரண்யனுடைய நீர்மையைப்பற்றச்சொல்லு கிறது ; இவனுக்குவேண்டுவது சொல்லப்புக்கால் “ ஊஹாவிஸ்வாஸபூ ர்வகம் ” ( மஹாவிஸ்வாஸபூர்வகம் ) என்னவேண்டும்படி யாயிருக்குமி றே. “ ஒருசிறுமையைவிஸ்வசித்து ஆறுமாசத்துக்குவேண்டும் சோறும் த ண்ணீருமேற்றிக்கொண்டு கடலிலேயிழியாநின்றான், அவ்வோபாதி விஸ் வாஸமாகிலும்வேண்டாவோ பகவத்விஷயத்தைப் பற்றுவார்களுக்கு ” என்றருளிச்செய்வர்..............................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( துயரமேயித்யாதி ) ஆறும்பாட்டிற்போலே பரோபதே சப்ரகரணத்திலே ஸ்வஸித்தாந்தமருளிச்செய்கைக் கின்னமொருப்ரயோஜந ம ருளிச்செய்யாநின்றுகொண்டு, “ தயரதற்கு ” இத்யாதிநாலாம்பாதத்தைக் கடா க்ஷித்தவதாரிகை ( சம்ஸாரிகளுக்குமித்யாதி ) ருசிபிறக்கைக்காக - ( அருளிச்செ ய்கிறார் ) இத்யந்வயஃ.

இன்பவினையும் துக்கத்தைத்தருமோவென்ன ( துன்பவினையோடித்யாதி ) இவரிப்படியிருக்கைக்கடியேதென்ன ( பகவச்சேஷத்வேத்யாதி ) பந்தகத்வோப பாதநம் ( புண்யபாபேவிதூயஎன்று ) இல்லையாகில் விதூநநம் பண்ணவேண்டா விறே. அகர்மவஸ்யனென்னுமதுக்குப்ரமாணம் ( அநஸ்நந்நந்யஇத்யாதி ) இந்த ஸ்ருதியில் “ அபிசாகஸீதி ” ( அபிசாகஸீதி ) என்கிறபதத்துக்கர்த்தம் ( தா னிவற்றுலித்யாதி ) அவையல்லனாய்-அவற்றுக்குத்தான் வஸ்யனல்லனாய்.

இதினுடையஔஜ்ஜ்வல்யத்துக்கு சரமாவதியை ப்ரமாணமுகேந தர்ஸிப்பியா நின்றுகொண்டு, சப்தார்த்தம் ( க்ஷயந்தமித்யாதி ) மூலப்ரக்ருதி, ரஜஸ்தமஸ்ஸு க்களோடேகூடியிருக்கையாலே, “ ரஜஸஃ ” ( ரஜஸஃ ) என்றும், “ தமஸஃ ” ( தமஸஃ ) என்றும் - மூலப்ரக்ருதியைச்சொல்லி, இதினுடைய, பராகே - உபரி பாகத்திலே, க்ஷயந்தம்- “ க்ஷய நிவாஸே ” ( க்ஷயநிவாஸே ) என்கிறதுக்குதா துவாகையாலே, வஸிக்குமவனை யென்றபடி. “ உயர ” என்கிறவிடத்திலே - “ ஸமஸ்தம்கார்யகாரணஜாதம் ” ( ஸமஸ்தம்கார்யகாரணஜாதம் ) இத்யாதி கத்யவாக்யமநுஸந்தேயம். “ சோதி ” என்றதுக்கர்த்தாந்தரம் ( விஸ்வதஇத்யா தி ) சோதி-திவ்யமங்கள விக்ரஹமாதல், திவ்யதேசமாதல்.

கீழ்ப்பதத்தைத்தளமாகக்கொண்டு, “ உலகேழும் ” இத்யாதிக்கர்த்தம் (இ ப்படியித்யாதி ) உமிழ்ந்துபார்க்குமவனையென்றதுக்கு த்ருஷ்டாந்தம் ( வழிபறி க்குமித்யாதி ) சீரிய-ஸ்ரேஷ்டமான.

வாங்கு-ப்ராணனையிதிஸேஷஃ. அயர- ( அறிவுகலங்கும்படி ) மோஹிக்கு ம்படி ப்ராணனைவாங்குகிற யமபடர்க்கு மீட்கவரிய நஞ்சானவனை யிதிசப்தார் த்தஃ. காற்றவொண்ணாத-பரிஹரிக்கப்போகாத. யமவஸ்யராகவிட்டுக்கொடாமை க்கு ப்ரமாணம் ( உயிர்கொண்டித்யாதி ) நான்முகன்திருவந்தாதி - எண்பத்தெட்

டாம்பாட்டு. ஆத்மாசரீரத்தைப்பொகட்டு ப்ராணனைக்கொண்டு யமபடனாலே ப் ரேரிதனுய்ப்போம்போது தானே விரைந்துசென்று அவர்கள் தர்மநத்தால்வந்தவறி வுகேடுமுதலான துரிதமென்றுபேர்பெற்றவை யெல்லாம்போக்கும் ஸ்வபாவனிதி பாசுரார்த்தம். அயர்வென்று-அஜ்ஞாநமென்று, பேர்பெற்றவையெல்லாம். முழுச் சொல்லு. அவனைவாளாலே மீட்டுமென்றது-சம்பூகனைவாளாலேகொன்று அவனை மீட்டுமென்றபடி. படைக்குறி-ஸோதாசோதநம். அம்பாலேமீட்டுக்கொடுத்துமென் றது - தர்ம்மைக்யத்தாலே. க்ருஷ்ணவதாரத்தில் ஸாந்தீபநிபுத்ராநயநத்தை. ஹரி வம்ஸே ஷட்த்ரிம்ஸச்சததமே, "விஜித்ய யமம் ஸங்க்யே ஸர்வாந் ஸந்தபர்வபி: । அதைந்த்ரஸேநி ராநீத: க்ருஷ்ணேநாத்புதகர்மணா" (விஜித்யசயமம்ஸங்க்யேஸர்வாஸ்ஸந்தபர்வபி: । அதைந்த்ரஸேநிராநீத:க்ருஷ்ணேநாத்பு தகர்மணா) என்னக்கடவதிறே. "தயரதற்கு" என்கிறதாதர்த்யே சதுர்த்திக்கு பாவம் (தயரதன்மகனித்யாதி) "தயரதற்கு" என்கிறத்தை-சேஷஷஷ்ட்டி யாகவும் சிலவரும்பதங்களிலே வ்யாக்யாநம்பண்ணி யிருக்கிறது. புரிந்து - தி ரும்பி.

ப்ராஸங்கிகம் (இவ்விடத்தையித்யாதி) இவர்-ஆழ்வார். இப்படியேசொ ல்லுவவொன்றதுக்கு - "ஞானப்பிரானையல்லாலில்லை" "வானவரோற்றையேயன் றி" "கண்ணனல்லாலில்லைகண்டீர்" இத்யாதியிலேநோக்கு. தஞ்சமாக-போக் யமாக. "தஞ்சமாக" என்றதுக்கு-அவதாரிகையிலே ரக்ஷகத்வபரமாக வருளிச் செய்தாலும், பட்டருக்கபிப்ராயம் போக்யதையிலே, ஆபத்தநத்துக்கு, தஞ்சமா னவாகாரமேயன்றிக்கே போக்யமானவாகாரமு முண்டாகையைப்பற்ற. ரக்ஷகத் வகதநமேமூலத்துக்குச்சேரும். அவனும்-அகஸ்த்யபகவானும். விவரணம் (இவர் போக்யவஸ்துவித்யாதி)

"போக்யவஸ்துசக்ரவர்த்திதிருமகனையொழிய வேறேருவருமில்லை" எ ன்னுமது-பக்ஷபாதத்தாலே சொன்னொன்றுசித்தவத்கரித்து, இந்தப்ரஸங்கத்தி லே வேறொருகதையை யருளிச்செய்கிறர் (பட்டரித்யாதி) ஏதானாலும் தூது போகாத குறையுண்டேயென்ன (அவ்வவதாரத்திலிழவித்யாதி) அப்படிவந்தவதரி த்தானேவென்ன (அவனேயித்யாதி) திருமொழி-பன்னிரண்டாந்திருமொழி-மூ ன்றும்பாட்டு. "முன்னோர்தூது" இத்யாதி. அரக்கனூரைமுனிந்தவனே, பின்பு-த்வாபராந்தத்திலே ராஜ்யத்துக்கு ப்ரதாநரானபாண்டவர்களுக்குத் தூதாகிமஹா ப்ருதிவியிலுள்ளார், இன்னார்தூதனென-பாண்டவதூதனெனத் தன்பேரிட்டழைக் கும்படி நின்றவனென்றுபாசுரார்த்தம். "அவ்வவதாரத்திலிதொன்றுகுறைந்தது" என்றதுக்காக வவதரிக்கவேணுமோவென்ன (பாரதந்த்ர்யரஸமித்யாதி)

அவதாராந்தரத்திலே யீடுபட்டிருப்பாரும் ராமாவதாரத்திலே ப்ரவணரா யிருப்பாரொன்னுமதுக்கைதிஹ்யம் (எம்பெருமானரித்யாதி) பிள்ளை-வெண்ணெய்க் காடும்பிள்ளை. க்ருஷ்ணனென்றபடி. (தேவையிடாதார்) விதியாதே "மித்ரபாவேந" (மித்ரபாவேந) என்றவர். "மாமேகம் ஸரணம் வ்ரஜ" (மாமேகம்ஸரணம்வ்ரஜ) என்றது - அப்ரதிஷேதமன்றே, இதுதேவையோவென்ன (ஆபிமுக்ய த்தாலேயித்யாதி) ஆனல் ஆபிமுக்யமும்வேண்டாவோவென்ன (இத்தலையிலித்யா தி) யத்வா, ஆபிமுக்யமாத்ரம்போருமோவென்ன (இத்தலையிலித்யாதி) என்னுத ல். அப்படி மஹாவிஸ்வாசம் வேணுமோவென்ன; கிம்புநர்ந்யாயத்தாலே பலிப்பிக் கிறர் (ஒருசிறுமையித்யாதி) சிறுய் - சம்பான். ஓடமித்யர்த்த:.

இந்தப்பாட்டிலே, இந்த்ரனையழைத்துப்போகவிட்டு தந்முகேநம்ருதரான வானரமுதலிகளையெழுப்பி யவர்களைக்கூட்டிக்கொண்டுபோனதாகச்சொன்ன விது ஸ்ரீராமாயணத்திலில்லை யானாலும், புராணாந்தரத்திலுமிருக்கிறதாகக்கண்டுகொள்வது. "𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑍇 𑌵𑌿𑌧𑍂𑌯" (புண்யபாபேவிதூய) இத்யாதிஶ்ருதி:, முண்டகோபநிஷத். "𑌕𑍍𑌷𑌯𑌨𑍍𑌤𑌮𑌸𑍍𑌯" (க்ஷயந்தமஸ்ய) இத்யாதியஜுஸ்ஸம்ஹிதாயாம். "𑌪𑌾𑌵𑌨𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂" (பாவநஸ்ஸர்வலோகாநாம்) இத்யாதி "பாவநாசனே" இத்யத்ராவலிகிதம். தஞ்சம்-ஆபத்துக்குறுதுணை. க்ரமேணாந்வய:.

## ஒன்பதாம்பாட்டு.

தஞ்சமாகியதந்தைதாயொடுதானுமாயவையல்லனா
யெஞ்சலிலமரர்குலமுதல்மூவர்தம்முள்ளுமாதியை
யஞ்சிநீருலகத்துள்ளீர்களவனிவனென்றுகூழேன்மின்
நெஞ்சினால்நினைப்பான்யவனவனாகுநீள்கடல்வண்ணனே.

### ஆறாயிரப்படி.

( தஞ்சமாகிய ) எம்பெருமான் திருவவதாரம்பண்ணி சர்வசுலபனாய் வர்த்தித்தருளுகிறகாலத்திலுதவப்பெற்றிலோம், ஸ்ரீவைகுண்டத்திலே யெழுந்தருளியிருக்கு மிருப்புநமக்குக்கோசரமன்று, ஆனபின் பெங்ஙனேயவனை யாஶ்ரயிக்கும்படியென்னில், ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்கும்த்யேயனாய், காரணபூதனுமாய், * அயர்வறுமமரர்களதிபதியாய் ஆஶ்ரிதர்க்கு சர்வாவஸ்த்தைகளிலும் ரக்ஷகனாய்பிதாவுமாய் மாதாவுமாய்தானுமாய் மற்றுமெல்லாமாயிருந்த வெம்பெருமானையுகந்தருளப்பண்ணியாஶ்ரயிப்பது; நாமவனுக்கொருரூபத்தை ஸங்கல்பித்தால் அது அவனுக்குரூபமோ; ஸ்ரீவைகுண்டத்தில் யாதொருரூபத்தையுடையனாய்க் கொண்டெழுந்தருளியிருக்கும், அதுவன்றே அவனுக்குரூபமென்னில்; அஞ்சிநீருலகத்துள்ளீர்க ளிப்படிசம்ஶயிக்கவேண்டா, யாதொன்றையவனுக்குரூபமாகநினைத்திர்கோள், அத்தையேயவன் திவ்யரூபமாகக்கொண்டருளுமென்கிறார்.......................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸூக்ஷ்மமான பரத்வமுமவதாரங்களு மஸ்மதாதிகளுக்கு நிலமன்றென்றிராதே, பிற்பட்டார்க்கு மாஶ்ரயிக்கலாம்படி சுலபமுமாய் ஸர்வவிதபந்துவுமான அர்ச்சாவதாரத்தை சம்ஶயரஹிதராய்க் கொண்டாஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

தஞ்சமாகிய-ஓரவஸ்த்தையிலேபொகட்டுப்போம்தாயுந்தந்தையுமன்றியே, இவன்விடுமளவிலுந்தான்விடாததஞ்சமாய். தந்தைதாயொடு-ஹிதபரத்வத்தாலும் ப்ரியபரத்வத்தாலும்தந்தையுந்தாயுமாய், அவர்களோடுகூட. தானுமாய்-தனக்கு

விநாசகரனன்றித்தஞ்சமாய், தனக்குநன்மையைப்பார்க்குந்தானுமாய். அவையல்லனாய்-அவ்வளவல்லாத சர்வவிதபந்துவுமாய். எஞ்சலில் - அநுபவஸங்கோசரஹிதரான. அமரர்குலம்-நித்யஸூரிஸமூஹத்துக்கு. முதல்-சத்தாதிஹேதுபூதனாய். மூவர்தம்முள்ளும்-ப்ரஹ்மாதிமூர்த்தித்ரயத்திலும்வைத்துக்கொண்டு. ஆதியை-ப்ரதாநனானவனைப்பற்ற. உலகத்துள்ளீர்கள்-லௌகிகரான. நீர்-நீங்கள். அஞ்சி-மேன்மையைக்கண்டுகலங்கி. அவன்-அபரிச்சிந்நமஹிமனானவனவன். இவன்-நாம்நினைத்தவடிவானவனிவன். என்று-என்கிறஉத்கர்ஷாபகர்ஷபுத்தியாலே.கூழேன்மின்-இவனாஶ்ரயணீயனாகக்கூடுமோ கூடாதோவென்று சம்ஶயியாதே. நெஞ்சினால்-நெஞ்சாலே, நினைப்பான்-நினைத்துஉகந்தருளுவிக்கப்பட்டவன். யவன்-யாவனொருவன். அவன்-அவன். கடல்-கடல்போலே. நீள்-அளவிறந்த. வண்ணன்-ஸ்வபாவத்தையுடையஸர்வேஶ்வரன். ஆகும்-ஆகும்.

“தாஉவ-ூயெசு” (தாமர்ச்சயேத்) என்கிறகணக்கிலே ஆஶ்ரயணீயமான விந்தவிக்ரஹத்துக்குள்ளே “தாமெவஹ்ரஹ-ஷவிணீ” (தாமேவப்ரஹ்மரூபிணீம்) என்றுப்ராப்யவிக்ரஹமு மந்தர்ப்பூதமென்றுகருத்து. கூழ்ப்பு - சம்ஶயம்,.................................................................*

---

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

பரத்வமேதொடங்கி அவதாரசௌலப்யத்தளவும்வர வுபதேசித்து, “ஆஶ்ரயியுங்கோள்” என்றுநின்றீர்; பரத்வமவாங்மநஸகோசரம், அவதாரத்துக்குப்பிற்பாடரானோம், நாங்களெங்கேயாரையாஶ்ரயிப்பதென்ன; நீங்களுகந்தபடியே யுகந்தருளப்பண்ண, அத்திருமேனியையே அப்ராக்ருத திவ்யஸம்ஸ்த்தாநத்தோடொக்கவிரும்பு மர்ச்சாவதாரத்தையாஶ்ரயியுங்கோளென்கிறார். இத்திருவாய்மொழிக்கு நிதாநமிப்பாட்டு.

(தஞ்சமாகியதந்தைதாயொடுதானுமாய்) புறம்புள்ளார், “தாய், தமப்பன்” என்றொருபேராய், இவனுக்கோரிடர்வந்தவாறே போகட்டுப்போவர்கள்; இவனுக்கேதேனுமொரு இடர்வந்தாலும் அப்போது முகங்காட்டி ரக்ஷிப்பானிவனொருவனு மேயாயிற்று. மாதாபிதாக்கள் “இவன்பிறந்தமுஹூர்த்தம்பொல்லாதது” என்றுநாற்சந்தியிலேவைத்துப்போவாரும், ஆபத்காலத்திலேயறவிட்டு ஜீவிப்பாருமாயிருக்கும்; அவர்களைப்போலன்றிக்கே, தங்களையழியமாறியும் நோக்கும்தாயும்தந்தையுமாய். இவர்களோடுண்டான பந்தந்தான் கர்மமடியாகவந்ததாகையாலே அக்கர்மம்க்ஷயிக்க க்ஷயிக்கும்; இங்கங்ஙனன்றிக்கே, “ஹூதாநாம் யொவ்யய்பிதா” (பூதாநாம்யோர்வ்யயஃபிதா) “ஸவெஷாமெவலொகாநாம்பிதாமாதாவஃ” (ஸர்வேஷாமேவலோகாநாம்பிதாமாதாசமாதவஃ) என்கிறபடியே-சத்தாயோகி சகலபதார்த்தங்களுக்கும் பிதாவாயிருக்கும், அதுதன்னிலு மிழவுக்குக்கண்ணநீர் பாயவேண்டாத பிதாவாயிருக்கும். (தானுமாய்) தந்தையானவன் தாயாகமாட்

டான், தாயானவள் தந்தையாகமாட்டாள், இவர்களிருவரும் இவன்ரு ஞகமாட்டார்கள், இவன்ருனிவர்க ளிருவருமாகமாட்டான் ; இவையெ ல்லாமாய். ( தானுமாய் ) மாதாபிதாக்கள் பொகட்டுப்போனவன்றும் “ நான்ஜீவிக்கவேணும், எனக்குநன்மையுண்டாகவேணும் ” என்றிறே தானிருப்பது, இப்படிதனக்கு நன்மைபார்க்கும்தானுமாய், தஞ்சமாகிய-தந்தை, தஞ்சமாகிய-தாய், தஞ்சமாகிய-தான் என்றெல்லாவிடத்திலும் தஞ்சம்வரக்கடவது. தாயும்தமப்பனும் வேணுமாகில் தஞ்சமன்றிக்கே யொழிகிருர்கள், தான்தனக்குத் தஞ்சமன்ருேவென்னில் ; அன்று, “ விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும் ” ( விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும் ) என்கிறபடியே சர்வேஸ்வரனிவனுக்குக்கரசரணுத்யவயவங்களைக் கொடுத்துவிட்டால், “ அந்நாள்நீதந்தவாக்கையின் வழியுழல்வேன் ” என்கிறபடியே அபதேப்ரவ்ருத்தனுமவனிறே ; ஆகையாலேதனக்குத்தான்தஞ்சமல்லன், ( அவையல்லனுய் ) தந்தை, தாய், தானென்னுமிவ்வளவன்றிக்கே, “ மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயண: ” ( மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயண: ) என்றும், “ பித்ருமாத்ருஸுதப்ராத்ருதாரமித்ராதயோபிவா । ஏகைகபலலாபாய ஸர்வலாபாயகேஶவ: ” ( பித்ருமாத்ருஸுதப்ராத்ருதாரமித்ராதயோபிவா । ஏகைகபலலாபாய ஸர்வலாபாயகேஶவ: ) என்றுஞ்சொல்லுகிறபடியே, சர்வோபகாரகனும் சர்வவிதபந்துவு மவனேயிறே. ( எஞ்சலிலமரரித்யாதி ) இப்படியிருக்கிறவனுரென்னில் ; நித்யசூரிகளுக்கு ஜீவநஹேதுவானவனென்கிருர். எஞ்சல்-சுருங்கல். இல்-இல்லாமை. பகவதநுபவத்தில் சங்கோசமில்லாத நித்யசூரிகள் குலமுண்டு-திரள், அதுக்குநிர்வாஹகனே, ( மூவர்தம்முள்ளுமாதியை ) மூவர்தாமுள்ளுகிறவாதியை - த்யேயவஸ்துவை. “ காரணந்துத்யேய: ” ( காரணந்துத்யேய: ) இறே. ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்கு மந்தர்யாமியாய் நிர்வாஹகனுமானவனேயென்றுமாம் ; மூவரிலும்வைத்துக்கொண்டு ப்ரதாநனுன்வனேயென்றுமாம். அப்போது. இந்த்ரனேயொழியக்கடவது. மூவரென்கிறவிது-கணையாய்’ மூவரிலும்வைத்துக்கொண்டு காரணபூதனென்றபடி. ( அஞ்சி ) கீழ்ச்சொன்னவையெல்லாம் அச்சத்துக்குடலிறே. ஜகத்துக்குசர்வவித பந்துவுமாயிருக்கிறவனே நம்மாலேகிட்டப்போமோ, நித்யசூரிகளுக்கு ஸத்தாஹேதுவாயிருக்கிறவனே நம்மாலேகிட்டப்போமோ, ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனுயிருக்கிறவனே நம்மாலேகிட்டப்போமோ என்றிங்ஙனேயஞ்சி. ( நீருலகத்துள்ளீர்கள் ) வெளகிகரானநீங்கள். ( அவனிவனென்றுகூழேன்மின் ) அவனுகிருன்-தேசகாலவஸ்துக்களா லபரிச்சிந்நனுய் அஸாதாரணவிக்ரஹத்தோடே நித்யசூரிகளுக்கநுபாவ்யனுய்க் கொண்டிருக்கிருனெருவன் ; இவனுகிருன்-தேசகாலவஸ்துக்களால்பிற்பட்டு, நாமுகந்

ததொருத்ரவ்யத்தைத்தனக்குத்திருமேனியாகக்கொண்டு இவ்வழியாலே நம்புத்யதிநனு ஷிருப்பானொருவன். ஆனபின்பு, அவனபரிச்சிந்நன், இவ ன்பரிச்சிந்நனென்றிங்ஙனே சம்ஶயாக்ராந்தராகாதேகொள்ளுங்கோள். (சூழ்ப்பு-சம்ஶயம்) (நெஞ்சினால்நினைப்பான்யவன்) மநஸ்ஸாலேயாதொ ன்றைத் திருமேனியாகக்கோலினிகோள். (அவனாகும்நீள்கடல்வண்ண னே) அபரிச்சேத்யமஹிமனான சர்வேஶ்வரன் அத்தையேதனக்கஸாதா ரண விக்ரஹமாகக்கொண்டு விரும்பும். "ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்" (ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்) என்றுருஷிகளைப்போலே தம்வாயாற்சொ ல்லமாட்டாமையாலே (அவனிவனென்கிறார்) "அங்குத்தைக்குகந்த ருளின விடத்தைவிபூதியாகநினையாதே, இங்குத்தைக்கவ்விடத்தை விபூ தியாகநினையுங்கோள்" என்றுபணிக்குமாண்டான்; "யேயதாமாம்ப்ரப த்யந்தே" (யேயதாமாம்ப்ரபத்யந்தே) என்றும், "மநஸாபிக்லுப்த꞉" (மநஸாபிக்லப்த꞉) என்றும், "ஸ்ம்ருதம்ஸங்கல்பநாமயம்" (ஸ்ம்ருதம்ஸங் கல்பநாமயம்) என்றும், "ஸுவர்ணரஜதாதிபி꞉" (ஸுவர்ணரஜதாதி பி꞉) என்றுஞ்சொல்லுகிறபடியே. அஸாதாரணவிக்ரஹத்தை நாமாதரிக் கிறதும் "அவன்பரிக்ரஹித்தது" என்றிறே, அவ்வோபாதியிதுவுமவ ன் பரிக்ரஹித்தானாகில் ஆதரிக்கத்தட்டில்லையிறே. முதல்தன்னிலேயவ ன் திருமேனியைப்பரிக்ரஹித்ததும், "பக்தாநாம்" (பக்தாநாம்) எ ன்கிறபடியே-ஆஶ்ரிதார்த்தமாகவிறே, அதுகார்யகரமாமிடத்திலேயிறே மிகவுமுறைக்கவிருப்பது; ஆகையாலேநீள்கடல் வண்ணனவனாகும்.....*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (தஞ்சமாகியவித்யாதி) பரத்வாதிகளைச்சொன்ன வநந் தரம் அர்ச்சாவதாரத்தைச்சொல்லுகையாலே - "பரத்வாதிகளுக்காளாகமாட் டோம்" என்ற சங்கித்தசம்சாரிகளுக்கு "ஆஶ்ரயணீயத்வேஸுலபமர்ச்சாவதா ரம்" என்னுமிடம் தோற்றவருளிச்செய்கிறார் (பரத்வமேதொடங்கியித்யாதி) அத்ர - "ஸ்ரீமத்வ்யோமநஸீமவாங்மநஸயோஸ்ஸர்வேவதாராஃக்வசித்காலேவிஶ்வஜநீநம்" (ஸ்ரீமத்வ்யோமநஸீமவாங்மநஸயோஸ்ஸர்வேவதாராஃக்வசித்கா லேவிஶ்வஜநீநம்) இத்யாதிஶ்லோகோநுஸந்தேய꞉. "நெஞ்சினால்நினைப்பான்யவ னவனாகும்" என்றத்தைப்பற்ற (நீங்களுகந்தபடியேயித்யாதி) நீங்களுகந்தபடியே யுகந்தருளப்பண்ண-உங்களுக்கபிமதமானவிக்ரஹத்தையே யவனுமுகக்கும்படி ப் ப்ரார்த்தித்தேறியருளப்பண்ண.

"தந்தைதாய்" என்னாதே, "தஞ்சமாகிய" என்றுவிசேஷித்ததுக்குதாத்ப ர்யத்வயம். அதாவது - மாதாபிதாக்கள் ஸ்வார்த்தபரராகையாலே தஞ்சமல்லொ ன்னுதல்; கர்மநிபந்தநமான சம்பந்தமுடையராகையாலே அநித்யர், ஆகையாலே தஞ்சமல்லொன்னுதல். அதில், ஸ்வார்த்தபரதையைத்ரோதாதர்ஶிப்பிக்கிறார் (புற ம்புள்ளாரித்யாதி)இடர்வந்தவாறேபொகட்டது-காகத்தினிடத்திலும், நாற்சந்தியி லேபொகட்டது-ஜராஸந்தனிடத்திலும், அறவிட்டுஜீவித்தது-விஶ்வாமித்ரன் மரு

மகன் ஸுபாலோபனிடத்திலும்கண்டுகொள்வது, அறவிட்டு-விக்ரயித்து-த்விதியார்த்தம் (இவர்களோடித்யாதி) கர்மம் க்ஷயித்தால் ம்ருதராவர்களென்றபடி. பாரதே, "வவித்ராணாம்வவித்ரம்யொஜஹஊநாஞுஜஹஉ । டைெவதம்டெவதாநாஹுஹூதாநாம்யொவ்யயஃவிதா" (பவித்ராணாம்பவித்ரம்யோமங்களாநாஞ்சமங்களம் । தைவதம்தேவதாநாஞ்சபூதாநாம்யோவ்யயஃபிதா) தத்ரைவமார்க்கண்டேயே, "ஸவெஷாமெவலொகாநாம்விதாமாதாஹாயவஃ। ஶுஹுறவஶரணம்ஶரண்யம்புருஷஷஹா" (ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவஃ । கச்சத்வமேநம்ஶரணம்ஶரண்யம்புருஷர்ஷபாஃ.) "ஹுதாநாம்" (பூதாநாம்) "ஸவெஷாம்" (ஸர்வேஷாம்) என்றதுக்கர்த்தம் (ஸத்தாயோகித்யாதி) "அவ்யயஃவிதா" அவ்யயஃபிதா என்றதுக்கர்த்தம் (அதுன்னிலுமித்யாதி)

"தானும்" என்றசப்தம்-உக்தஸமுச்சயபரமென்கிறார் (தந்தையானவனித்யாதி) "தஞ்சமாகிய" என்றத்தை "தானுமாய்" என்றதிலும்கூட்டியர்த்தம் (மாதாபிதாக்களித்யாதி) ஸ்வார்த்தபரதாதிகளாலே தஞ்சமன்றிக்கேயிருக்கிற மாதாபிதாக்களைப்போலன்றிக்கே, எப்போதும் தனக்குநன்மையேபார்க்குமவனாகையாலே தான் தனக்குத்தஞ்சமன்றோவென்ன; விஷயப்ராவண்யாதிகளாலே தான் தனக்கு நாசகனாகையாலே தான் தனக்குத்தஞ்சமல்லன், அவற்றில் ப்ரவணனாகாதபடி தன்னைநோக்குகையாலே யீஶ்வரனே தஞ்சமென்று தன்னைப்பற்ற வீஶ்வரனுக்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்கைக்காக வதிஷ்டிகையிடுகிறார் (தஞ்சமாகியதந்தையித்யாதி) அந்தவ்யாவ்ருத்தியை சங்காபரிஹாரமுகேநவருளிச்செய்கிறார் (தாயும்தமப்பனுமித்யாதி)

அவையல்லனாய்-அவ்வளவல்லாத ஸர்வவிதபந்துவுமாய். "விவித்ராடெஹஸம்வத்திரீஶ்வராயநிவெதிதம் । பூவமெவக்ருதாப்ரஹ்மஹஸ்தபாதாதிஸம்யுதா" (விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராயநிவேதிதும்। பூர்வமேவக்ருதாப்ரஹ்மஹஸ்தபாதாதிஸம்யுதா) இதி ஸ்ரீவிஷ்ணுதத்வே. "மாதாவிதாஹ்ராதா" (மாதாபிதாப்ராதா) இத்யாதி; "ஸவலொகாயகேஶவஃ" (ஸர்வலாபாயகேஶவஃ) இத்யந்தம். ஸுபாலோபநிஷதி. "ஸவலொகாய" (ஸர்வலாபாய) என்றத்தைப்பற்ற (ஸர்வோபகாரகனுமென்றது) "மாதாவிதா" (மாதாபிதா) இத்யாதியைப்பற்ற (ஸர்வவிதபந்துவுமென்றது)

"மூவர்தம்முள்ளுமாதியை" என்றதுக்கர்த்தத்ரயம், முந்தினது (மூவர்தாமித்யாதி) அதாவது-ப்ரஹ்மருத்ரேந்த்ரர்கள் த்யாநம்பண்ணுகிறகாரணபூதனையித்யர்த்தஃ. இரண்டாமர்த்தம் (ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்கித்யாதி) "உள்ளும்-ஆய்" (அந்தர்யாமியாய்) த்ருதீயார்த்தம் (மூவரிலுமித்யாதி) இவ்வர்த்தத்தில், "மூவர்தம்முள்ளும்" என்று-முழுச்சொல்லாய், த்ரயாணாம்மத்யேயென்றபடி. "மூவர்தம்முள்ளும்" என்றால்-மூவரிலும்வைத்துக்கொண்டென்று நிர்த்தாரணமாகவர்த்தம்சொல்லும் க்ரமமெப்படியென்ன (மூவரொன்கிறவித்யாதி) ஸ்ருஷ்டிஸ்த்திதிஸம்ஹார ரூபமானகார்யங்கள் மூன்றுக்கும்மூன்றுபேரைக் காரணமாகக் கணைபண்ணினவித்தனை, அவர்களுக்கும்கடவனிவனாகையாலே யவர்களுக்குள்ளே காரணபூதனிவனேயென்றபடி.

அச்சத்துக்கு ப்ரஸக்தியேதென்ன (கீழ்ச்சொன்னவித்யாதி) இத்தையுபபாதிக்கிறார் (ஜகத்துக்கித்யாதி) சர்வவிதபந்துவுமா யிருக்கிறவனையென்றது -

ஸாதாரணபந்துவன்றோ, நம்மால்கிட்டப்போமோ வென்றச்சத்துக்கு ஹேதுவென்றபடி "உலகத்துள்ளீர்கள்-நீர்" இத்யந்வய:; லௌகிகரானநீங்கள். (சூழேன்மின்) சூழ்ப்பு-ஸம்ஶயம். ஸம்ஶயப்படாதே கொள்ளுங்கோள்.

"நெஞ்சினால்நினைப்பான்யவன் - நீள்கடல்வண்ணன் - அவனாகும்" என்றந்வயித்தர்த்தம் (மநஸ்ஸாலேயித்யாதி) அத்தையே - நீங்கள்கோலினவிக்ரஹத்தையே. அர்ச்சாவதாரவிக்ரஹத்தைச்சொல்லுகிறாராகில், நெஞ்சினால் நினைப்பதுயாதொன்றென்னுதொழிவானென்னென்ன (ப்ரதிமாஸ்வித்யாதி) "𑌅𑌗𑍍𑌨𑍌 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 । 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾𑌂" (அக்நௌதிஷ்டதிவிப்ராணாம்ஹ்ருதிதிஷ்டதியோகிநாம்।ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்ஸர்வத்ரஸமதர்ஶிநாம்.) இதுக்காகரம் கண்டுகொள்வது. நெஞ்சினால்நினைப்பான்யவன் - அவனே - "நீள்கடல்வண்ணனாகும்" என்றந்வயித்தர்த்தம் (அங்குத்தைக்கித்யாதி) இந்தயோஜநையில் - அர்ச்சாவதாரத்துக்கு ப்ராதாந்யம்; முந்தினயோஜநையில் - பரமபதநாதனுக்கு ப்ராதாந்யம். அங்குத்தைக்கு - பரமபதநாதனுக்கு. உகந்தருளினவிடத்தை - அர்ச்சாவதாரத்தை. விபூதியாக-சேஷமாக. இங்குத்தைக்கு - அர்ச்சாவதாரத்துக்கு. ஆண்டான்நிர்வாஹத்தில் - குணாதிக்யத்தாலே வஸ்துவுக்கு ப்ராதாந்யமாகையாலே குணாதிக்யமுள்ளவர்ச்சாவதாரமே ப்ரதாநமென்றுகருத்து. நெஞ்சினால் நினைப்பான் யவன் - மநஸ்ஸாலே திருமேனியாகநினைத்தேறியருளுவிக்கப்பட்டதுயாதொன்று. அவனாகும்- அத்தையேதிருமேனியாகவுடையனாம். "கடல் - நீள் - வண்ணன்" இத்யந்வய:; கடல்போலேநீண்ட அபரிச்சேத்யமான ஸ்வபாவத்தையுடைய ஸர்வேஶ்வரனித்யர்த்த:. வண்ணம்-ஸ்வபாவம். நீள் - நீண்ட. அபரிச்சேத்யமானவென்றபடி. முந்தினயோஜநைக்குப்ரமாணம் (யேயதேத்யாதி) சிதாஸு, பூர்வமேவலிகிதம். (ஸங்கல்பநாமயமிதிச) பஞ்சமேம்ஶே, பூர்வமேவலிகிதம். "𑌹𑍃𑌦𑌾 𑌮𑌨𑍀𑌷𑌾 𑌮𑌨𑌸𑌾𑌭𑌿𑌕𑍢𑌪𑍍𑌤𑍋 𑌯 𑌏𑌨𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑌮𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿" (ஹ்ருதாமநீஷாமநஸாபிக்லப்தோய ஏநம்விதுரம்ருதாஸ்தேபவந்தி) இதிஸ்ரீமதி நாராயணே. ஸ்ரீவிஷ்ணுதர்மே ஶௌநக:, "𑌸𑍁𑌰𑍂𑌪𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌵𑌦𑌨𑍇𑌕𑍍𑌷𑌣𑌾𑌂 । 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌕𑌰𑍀𑌂 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌰𑌜𑌤𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 । 𑌤𑌾𑌮𑌰𑍍𑌚𑌯𑍇𑌤𑍍" (ஸுரூபாம்ப்ரதிமாம்விஷ்ணோ:ப்ரஸந்நவதநேக்ஷணாம் । க்ருத்வாத்மந:ப்ரீதிகரீம்ஸுவர்ணரஜதாதிபி:।தாமர்ச்சயேத்) இத்யாதி. அப்ராக்ருதவிக்ரஹத்தில்பண்ணக்கடவவாதரத்தை அர்ச்சாவதாரத்திலே பண்ணக்கூடுமோவென்ன; கூடுமென்னுமத்தை ஸஹேதுகமாகக்காட்டுகிறார் (அஸாதாரணவிக்ரஹத்தையித்யாதி) ஈஶ்வரன் அஸாதாரணவிக்ரஹத்திற்போலே அர்ச்சாவதார விக்ரஹத்திலே யாதரத்தைப்பண்ணிக்கொண்டு வர்த்திக்கக்கூடுமோவென்ன; அதிலும் மிகவுமாதரித்து வர்த்திக்குமென்கிறார் (முதல்தன்னிலேயித்யாதி) உறைக்கவிருப்பது-பூர்ணதயாதிஷ்டாநம்.

உலகத்துள்ளீர்கள் - நீர் - தஞ்சமாகியவித்யாரப்ய, ஆதியைப்பற்ற-அஞ்சி-அவனிவனென்றுகூழேன்மினித்யாரப்யாந்வய:. "𑌹𑍃𑌦𑌾 𑌮𑌨𑍀𑌷𑌾" (ஹ்ருதாமநீஷா) இத்யாதேரயமர்த்த:, ஹ்ருதா - பக்த்யா. மநீஷா - மநீஷயா, த்ருத்யா. "𑌸𑍁𑌪𑌾𑌂 𑌸𑍁𑌲𑍁𑌕𑍍" (ஸுபாம்ஸுலுக்) இதித்ருதீயாயாலோப:; த்ருதி: - ஈப்ஸிதார்த்தேமநஸோநிஶ்சஞ்சலாவஸ்த்தாநம். பக்த்யாத்ருத்யாச விஶிஷ்டேநமநஸா, அபிக்லப்த:-கல்பித:, நிர்மிதஇத்யர்த்த:; யே, ஏநம், இத்தம் நிர்மிதம்விது:,

தேஅம்ருதாபவந்தித்யர்த்த:, "ஸுஹ்ருத்: - ஸுஹ்ருந்நிஷ்ப்ரயோஜநோவேஸு. யத்ஸ்வரூபோ யத்ரூபோ யத்குணோ யத்விபூதிகோ யத்ப்ரமாணகோ யத்த்ரவ்யோ அயம் ஸர்வேஸ்வர: கல்ப்யதே, ஸ ததா பவதி இதி பாவ:. ததாச ஸ்வயமேவ கீதவாந், 'யே யதா மாம் ப்ரபத்யந்தே' இதி" (அபிக்லப்த: - அபிநிஷ்பாத்யோபவேத். யத்ஸ்வரூபோயத்ரூபோ யத்குணோயத்விபூதிகோ யத்ப்ரமாணகோயத்த்ரவ்யோயம் ஸர்வேஸ்வர:கல்ப்யதே, ஸததாபவேதிதிபாவ:. ததாசஸ்வயமேவகீதவாந், 'யேயதாமாம்ப்ரபத்யந்தே' இதி ) ஏவம்நாராயணயதிநாவ்யாக்யாதம்.......................................................................*

## பத்தாம்பாட்டு.

கடல்வண்ணன்கண்ணன்விண்ணவர்கருமாணிக்கமெனதாருயிர்
படவரவினணைக்கிடந்தபரஞ்சுடர்பண்ணுநூற்றுவ
ரடவரும்படைமங்கவைவர்கட்காகிவெஞ்சமத்தன்றுதேர்
கடவியபெருமான்கனைகழல்காண்பதென்றுகொல்கண்களே.

### ஆறுயிரப்படி.

( கடல்வண்ணன் ) அபரிச்சேத்யமாஹாத்ம்யனாய் * அயர்வறுமமரர்களுக்கு போக்யமாய் நாகபர்யங்கசாயியாயிருந்துவைத்து வஸுதேவக்ருஹேவதீர்ணனாயெனக்கு ப்ராணனாய், துர்யோதநாதிகள் ஸஸைந்யமாக நசிக்கும்படி பாண்டவர்களுக்காக சாரத்யேஸ்த்திதனாயிருந்த வெம்பெருமானுடைய திருவடிகளையன்றோ வென்னுடையகரணங்கள் காண்பதென்கிறார்.......................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படியாஸ்ரித பாரதீநதைக்குச் சிரமஞ்செய்தக்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையநுஸந்தித்து உபதேசாநந்தரம் தாமநுபவிக்க வாசைப்படுகிறார்.

விண்ணவர்-பரமபதவாசிகளுக்கு. கருமாணிக்கம்-நீலரத்நம்போலேயவிகாராகாரனாய்க்கொண்டுபோக்யனாய் லீலாவிபூதிநிர்வஹணார்த்தமாக. படம்-ஸ்வஸ்பர்ஸத்தாலேவிகஸிதபணங்களையுடையனாய். அரவின்-ஜாதிப்ரயுக்தமான மென்மைகுளிர்த்திநாற்றங்களையுடைய அநந்தனாகிற. அணைக்கிடந்த-அணையின்மேலே. பரஞ்சுடர்-பரபாகத்தால்வந்ததேஜஸ்ஸாலே சர்வாதிகனென்றுதோன்றும்படியானபேரொளியையுடையனாய், அபரிச்சிந்நமாஹாத்ம்யத்தையுடையனாய். கடல்வண்ணன்-கடல்போலேயளவிறந்தகுணங்களையுடையனாய், ஸ்ரமஹரமானவடிவையுடைய. கண்ணன்-க்ருஷ்ணன். எனது - எனக்கு. ஆர்-தன்னையொழியச்செல்லாதபடி. உயிர்-தாரகனாய்க்கொண்டு. பண்டு-முற்காலத்திலே. நூற்றுவர்-துர்யோதநாதிகள்நூற்றுவராய். அட-தன்பக்கலிலேநிற்குமினைத்து. வரும்-வருகிற. படை-படையானது. மங்க-நசிக்கும்படியாக. ஐவர்கட்கு-பாண்டவர்களைவர்க்கும். ஆகி-சர்வப்ரகாரரக்ஷகனாய். வெம்-வெவ்விதான. சமத்து-சமரத்திலே. அன்று-சத்ருக்கள்

மேலிட்டுவந்தவன்று. தேர்-தேரை. கடவிய-சாரதியாய்நின்றுநடத்தின. பெருமான்-ஸ்ரீலாதிகனுடைய, கனை-சுஸ்வரமான, வெற்றிவீரக்கழல் செறிந்த-கழல். திருவடிகளை. கண்கள் கண்கள். காண்பது-தம்மாசைதீரக்காண்பது. என்றுகொல்-என்றோ.

---

## ஈடு_பத்தாம்பாட்டு.

தாமுபதேசிக்கத்தொடங்கின சௌலப்யத்தை அர்ச்சாவதாரபர்யந்தமாக வருளிச்செய்து, அநந்தரம், தந்துறையான க்ருஷ்ணாவதாரத்திலேபோய், நான்கண்ணாலே கண்டநுபவிக்கப் பெறுவதென்றோவென்னு மநவாப்தியோடே தலைக்கட்டுகிறார். அருமையுமெளிமையும் பாரார்களிறே ஓரோவிஷயங்களிலே ப்ரவணராயிருப்பார்; பரத்வத்துக்குத்கர்ஷமுண்டாய், போவாரும்பலருண்டா யிருக்கச்செய்தேயும் "ஸாவொ நா ந்யத்ர க³ச்ச²தி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்றானிறேதிருவடி; அப்படி, க்ருஷ்ணாவதாரத்திற்காட்டி லர்ச்சாவதாரத்துக்கு நீர்மைமிக்கிருந்ததேயாகிலும், இவர் "எத்திறம்" என்றுழங்காற்பட்டது க்ருஷ்ணாவதாரத்திலேயாயிற்று. "தயரதற்குமகன்றன்னை யன்றிமற்றிலேன்" என்றதுசெய்வதென்னென்னில்; இவ்வருகில் நீர்மைகாணுமளவுமிறே யிதுசொல்லுகிறது. ஆனால், அதில்நீர்மைமிக்கவிடமன்றோ அர்ச்சாவதாரமென்னில்; அதுக்குமுன்பே பரிஹாரஞ்சொல்லிற்றிறே.

(கடல்வண்ணனித்யாதி) (விண்ணவர்கருமாணிக்கம்) நித்யஸூரிகளுக் கநுபாவ்யமான விக்ரஹத்தையுடையவன். (படவரவினணைக்கிடந்தபரஞ்சுடர்) அங்குநின்றும்பேர்ந்து, ப்ரஹ்மாதிகள் கூக்குரல்கேட்கைக்காகத் திருப்பாற்கடலிலே யணித்தாகவந்து கண்வளர்ந்தருளினவன். (கடல்வண்ணன்கண்ணன்) அங்குநின்றும்பேர்ந்து, எல்லார்க்கு மநுபவிக்கலாம்படி க்ருஷ்ணனாய்வந்தவதரித்தவன். நித்யஸூரிகளுக்குபோக்யனானவன், * கலங்காப்பெருநகரத்தைவிட்டு, ப்ரஹ்மாதிகளுக் காஸ்ரயணீயனாகைக்காக ஸ்வஸ்பர்ஸத்தாலே விகஸிதபணனான திருவநந்தாழ்வான்மேலே க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி; அவனோட்டைஸ்பர்ஸத்தாலே, தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே மிக்கவழகையுடையனாய் "சர்வாதிகன்" என்றுதோற்றும்படியாய்; ஸ்ரமஹரமான வடிவையுடையனாய் அபரிச்சேத்யமஹிமனானக்ருஷ்ணன். (எனதாருயிர்) எனக்குதாரகாதிகளெல்லாம் தானேயானவன். (படவரவித்யாதி) தன்னோட்டைஸ்பர்ஸசுகத்தாலே விகஸிதமானபணங்களை யுடையனாயிருக்குமிவன்; இவனோட்டைஸ்பர்ஸம் தனக்காகர்ஷகமா யிருக்கும்படிசொல்லுகிறது - அரவென்கையாலே; நாற்றக்குளிர்த்திமென்மைகள் ப்ரக்ருதியாயிருக்குமிறே ஸர்ப்பஜாதிக்காக. (பரஞ்சுடர்) இவன்மேலேசாய்ந்தாலாயிற்று "இவன்சர்வாதிகன்" என்றுதோற்றுவது. (பண்டு) முன்பொருநாளிலே. (நூற்றுவரித்யாதி) தூர்வர்க்கமுடையக் குடிகொண்ட

றே துர்யோதநாதிகளோடே. (அடவரும்படைமங்க) "ஸாரயீஸாரயீ" (ஸாரதிஸாரதி) என்றுவாய்பாறிக்கொண்டிறே பையல்கள்வருவது. கொல்லவருகிறபடை நசிக்கும்படியாக. "ஆஸாநுஹநை" (அஸ்மாந்ஹந்தும்) என்கிறபடியே, தம்மைமுடிக்கவந்தாற்போலே யிருக்கிறதாயிற்று அங்கேநலிய வருகிறவிது. (ஐவர்கட்காகி) "க்ருஷ்ணாஸ்ரயாஃ" (க்ருஷ்ணாஸ்ரயா:) என்கிறபடியாலே தானல்லதுதஞ்சமில்லாத ஐவர்கட்காகி. (வெஞ்சமத்து) யுத்தத்திலே. "நம்முடைய ஆஸ்ரிதபாரதந்த்ர்யத்தை லோகமாகக்காணவேணும்" என்றுபார்த்து "பார்த்தம்ரதிநமாத்மாநஞ்சஸாரதிம்ஸர்வலோகஸாக்ஷிகஞ்சகார" (பார்த்தம்ரதிநமாத்மாநஞ்சஸாரதிம்ஸர்வலோகஸாக்ஷிகஞ்சகார) என்கிறபடியேயெல்லார்கண்ணுக்கு மிலக்காக்கினன். (அன்று) உகவாதாருங்கண்டு வாழ்ந்தநாளிலே இழந்தநானினிப்பெறுகை யென்றுண்டோவென்று வெறுக்கிறாரிழவுக்கு. (தேரித்யாதி) சேநாதூளியும் உழவுகோலும் சிறுவாய்க்கயிறும் தேருக்குக்கீழே நாற்றினதிருவடிகளும் அதிலேசாத்தின சிறுச்சதங்கையுமாய் சாரத்யவேஷத்தோடே நின்றபோதைத்திருவடிகளில் ஆபரணத்வநிசெவிப்படவும் அவ்வடிவைக்காணவும். "காணுமாசை" கனைகழல்) செறிந்தவென்னுதல், த்வநிக்கிறவென்னுதல். (காண்பதித்யாதி) இக்கண்களடிப்படுவதெப்போதோ. இவைமுடியப்பட்டினிவிட்டேபோந்தவை இப்பட்டினிவிடக்கடவதென்றோ. "அவ்வடிவைக்காணவேணும்" என்றுவிடாய்த்தகண்கள் காணப்பெறுவதென்றோ...*

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (கடல்வண்ணனித்யாதி) கீழே-அர்ச்சாவதாரசௌலப்யத்தை யருளிச்செய்ததுக்கும், இப்பாட்டிலே-க்ருஷ்ணன்திருவடிகளைக் காண்பதென்றோ வென்கைக்கும்சங்கதி (தாமுபதேசிக்கவித்யாதி) சுலபமான வர்ச்சாவதாரத்தைவிட்டு அதீதமானவவதாரத்திலே போவானென்னென்ன (அருமையுமித்யாதி) இப்படிப்ராவண்யத்தாலே அருமையுமெளிமையும் பாராதிருந்தபேருண்டோவென்ன (பரத்வத்துக்கித்யாதி) உத்தர ஸ்ரீராமாயணே ஹநுமாந், "ஸ்நேஹோமேபரமோராஜந்த்வயிநித்யம்ப்ரதிஷ்டித:। பக்திஸ்சநியதாவீரபாவோநாந்யத்ரகச்சதி" (ஸ்நேஹோமேபரமோராமத்வயிநித்யம்ப்ரதிஷ்டித:। பக்திஸ்சநியதாவீரபாவோநாந்யத்ரகச்சதி) அருமையுமெளிமையுமென்றது - வைலக்ஷண்யா வைலக்ஷண்யங்களை. இதுவ்யாக்யாநத்திலேவிசதம். இவ்வருகில்நீர்மை-க்ருஷ்ணாவதாரத்தில்நீர்மை. முன்பேபரிஹாரம்சொல்லிற்றிறே- "அருமையுமெளிமையும்" இத்யாதியாலேசொல்லிற்றிறே.

"விண்ணவர்கருமாணிக்கம்-படவரவினணைக்கிடந்தபரஞ்சுடர்-கடல்வண்ணன்கண்ணன்-எனதாருயிர்" என்றந்வயித்தர்த்தம் (நித்யசூரிகளுக்கநுபாவ்யமானவித்யாதி) கூக்குரல்-கூப்பீடு. அணித்தாக-சமீபமாக. உக்தத்தையெல்லாம் கூட்டியருளிச்செய்கிறார் (நித்யஸூரிகளுக்கு போக்யனானவித்யாதி) "பரஞ்சு

டர்'' என்றதுக்கர்த்தத்வயம்-பரபாகத்தால்வந்த வழகென்னுதல், அநந்த சாயித்வ த்தால்வந்த மேன்மையாதல். இரண்டையும் தந்த்ரேணவருளிச்செய்கிறார் ( அவ னோட்டைஸ்பர்ஶத்தாலேயித்யாதி)''கடல்வண்ணன்'' என்றவண்ணம்-வர்ணமாத ல், ஸ்வபாவமாதல். உபயத்தையும் தந்த்ரேணவருளிச்செய்கிறார் (ஶ்ரமஹரமான வித்யாதி)''படவரவு-பரஞ்சுடர்'' என்றபதத்வயத்துக்கு மடைவேபாவம்(தன்னோ ட்டைஸ்பர்ஶேத்யாதி) அன்றிக்கே மூன்றுமர்த்தமாதல். அதாவது-தன்னோட்டை ஸ்பர்ஶஸுகத்தாலேயவன் விகஸிதபணனுயிருக்க, அத்தாலேதன் வடிவிற்பிறந்த புகரென்றபடி.கீழே''சர்வாதிகன்''என்றத்தைவிவரிக்கிறார்(இவன்மேலேயித்யாதி)

பாண்டவர்களுக்கும்சேனையுண்டாயிருக்க, அத்தைச்சொல்லாதேதுர்யோ தநாதிகளுடைய சேனையென்று விஶேஷித்ததுக்குபாவம் ( துர்வர்க்கமித்யாதி ) "அடவரும்" இத்யஸ்யகர்மாகாங்க்ஷாயாமாஹ ( ஸாரதீயித்யாதி ) வாய்பாறு கை-அலற்றுகை. சப்தார்த்தம் ( கொல்லவருகிறவித்யாதி ) "நூற்றுவரதாய்க் கொல்லவருகிறபடை நசிக்கும்படியாக" என்றுரை. "அடவரும்" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் ( அஸ்மாகித்யாதி ) யத்வா. சாமாந்யோக்திக்குபாவமாதல். யுத்தகாண்டே விபீஷணகமாம்த்ருஷ்ட்வா ஹநூமத்ப்ரமுகாந் ப்ரதிஸுக்ரீவ:, "ஏஷ ஸர்வாயுதோபேதஶ்சதுர்பிஸ்ஸஹ ராக்ஷஸை: । ராக்ஷஸோ(அ)ப்யேதி பஶ்யத்வமஸ்மாந் ஹந்தும் ந ஸம்ஶய:." (ஏஷஸர்வாயுதோபேதஶ்சதுர்பி ஸ்ஸஹராக்ஷஸை:। ராக்ஷஸோப்யேதிபஶ்யத்வமஸ்மாந்ஹந்தும்நஸம்ஶய: ) மஹா பாரதே, "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா: । க்ருஷ்ண: பராயணம் தேஷாம் ஜ்யோதிஷாமிவ சந்த்ரமா:." (க்ருஷ்ணஶ்ரயா:க்ருஷ்ண பலா:க்ருஷ்ணநாதாஶ்சபாண்டவா: । க்ருஷ்ண:பராயணம்தேஷாம்ஜ்யோதிஷா மிவசந்த்ரமா: ) "வெஞ்சமத்து" என்றுவிசேஷித்ததுக்குபாவம் ( நம்முடைய வித்யாதி ) ( பார்த்தம்ரதிநமித்யாதி ) கீதாபாஷ்யே. "பண்டு" என்றுசொல் லியிருக்க, மீளவும் "அன்று" என்றுவிசேஷிக்கிறதுக்குபாவம் ( உகவாதாருமி த்யாதி ) பதப்ரயோகத்துக்குபாவம் ( சேநாதூளியித்யாதி ) செறிந்த-அழகுசெ றிந்தவென்னுதல், பரஸ்பரஸத்ருஶமானவென்னுதல். "கனைகழல்" என்றத்தா லே-ஆபரணத்வநிஶ்ரவணபிநிவேஶம்ஸூசிதம். அடிப்படுவது-திருவடிகளிலேபடு வது. விவரணம் ( அவ்வடிவையித்யாதி )

"செறிந்த" என்கிறவர்த்தத்தில், "கனை" என்கிறனைகாரம்-அவ்யயம். கனகழலென்றபடி. கனம்-காம். விண்ணவர்கருமாணிக்கம்-படவரவினணைக்கிடந் தபரஞ்சுடர்-கடல்வண்ணன்கண்ணன்-எனதாருயிர்-பண்டுநூற்றுவரித்யாரப்யாந் வய:. நூற்றுவரோடேமுடிக்கவந்த சேனைநசிக்கும்படியென்று சப்தார்த்தம்....*

# பதினொன்றாம்பாட்டு.

கண்கள்காண்டற்கரியனாய்க்கருத்துக்குநன்றுமெளியனாய்
மண்கொள்ஞாலத்துயிர்க்கெல்லாமருள்செய்யும்வானவரீசனைப்
பண்கொள்சோலைவழுதிநாடன் குருகைக்கோன்சடகோபன்சொல்
பண்கொளாயிரத்திப்பத்தாற்பத்தராகக்கூடும்பயிலுமினே.

## ஆறாயிரப்படி.

( கண்கள் ) * அயர்வறுமமரர்களுக் கருள்செய்யுமாபோலே ஸ்வாஶ்ரிதரான மநுஷ்யாதிகளுக்கு மருள்செய்யும் ஸ்வபாவனாயிருந்து வைத்து என்னுடையகருத்துக்கு நன்றுமெளியனாய், என்கண்கள் காண்டற்கரியனாயிருந்த வெம்பெருமான்விஷயமான வித்திருவாய்மொழியை வல்லார்வைஷ்ணவராவர் ; இத்தைச்சொல்லுங்க ளென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவத்பக்திலாபத்தை யருளிச்செய்கிறார்.

கண்கள்-கண்கள். காண்டற்கு-அபரோக்ஷிக்கைக்கு. அரியனாய்-அரியனாய். கருத்துக்கு-நெஞ்சுக்கு. நன்றுமெளியனாய்-விஶதாநுபவவிஷயபூதனாய். மண்கொள்-ப்ருதிவீப்ரதாநமான. ஞாலத்து-லோகத்தில். உயிர்க்கெல்லாம்-ப்ராணிகளுக்கெல்லாம். அருள்செய்யும்-அர்ச்சாவதாரமுகத்தாலேயுபகரித்துக்கொண்டு. வானவரீசனை - சூரிகளுக்குக்கொடுக்குமநுபவத்தைப்பண்ணுவிக்கும் ஸ்வாமியானவனை. பண்கொள்-வண்டுகளொலியாலேபண்விஞ்சின. சோலை-சோலையையுடைத்தான. வழுதிநாடன்-திருவழுதிநாட்டுக்குநிர்வாஹகராய். குருகை-திருநகரிக்கு. கோன்-ஸ்வாமியான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்த. பண்-பண்ணோடு. கொள்-கூடின. ஆயிரத்து-ஆயிரத்தில். இ-அர்ச்சாவதாரஸௌலப்யப்ரகாஶகமான. பத்தால்-இப்பத்தாலே. பத்தர் - " ஸமஹாத்மா ஸுதுர்லப: " ( ஸமஹாத்மாஸு துர்லப: ) என்னும்படிபெறுதற்கரியபக்தியுடையர். ஆகக்கூடும்-ஆகைஸித்திக்கும். பயிலுமின்-இத்திருவாய்மொழியையப்யஸியுங்கோள்..............................*

---

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழி யப்யசிக்கவே பகவத்ப்ரேமமுண்டாம், இத்தையப்யசியுங்கோளென்கிறார்.

( கண்கள்காண்டற்கரியனாய்க்கருத்துக்குநன்றுமெளியனாய் ) காணப்பெறாத வின்னாப்போடேசொல்லுகிறார். கண்ணாற்காணவரியனாய், " காணவொண்ணாது " என்றுமறந்து பிழைக்கவொண்ணாதபடிநெஞ்சுக்கு முன்னிலையாய்மிகவும். இவர்க்குவிஶ்லேஷமாவது-பாஹ்யசம்ஶ்லேஷாபேக்ஷையாலே மாநஸாநுபவத்துக்கு வருங்கலக்கம். சம்ஶ்லேஷமாவது - ப்ரத்யக்ஷசமாநாகாரமான ஜ்ஞாநசாக்ஷாத்காரம். ( மண்கொளித்யாதி ) நித்யசூரிகளுக் கநுபாவ்யனானாற்போலே, " சம்ஸாரிகள் " என்றுவாசிவையாதே அர்ச்சாவதாரமுகத்தாலேவந்து சுலபனானவனை ( பண்கொள்சோலை ) வண்டுகளின்மிடற்றோசையாலே பண்மிக்கிருந்துள்ளசோலை. முக்கோட்டைபோலே காணும்சோலையிருப்பது. ( வழுதிநாடன் ) திருவழுதிநாட்டுக்கும் திருநகரிக்கும் நிர்வாஹகரான வாழ்வா

ரருளிச்செய்த. (பண்கொளாயிரம்) வண்டுகளின்னிணைவின்றிக்கே அவற்றின்மிடற்றோசை பண்ணானற்போலே, பகவத்குணாநுபவம் வழிந்த பேச்சுக்கள் விழுக்காட்டாலே பண்ணானபடி. (பத்தராகக்கூடும்பயிலுமினே) எல்லாம்கிடைக்கிலும் கிடையாததாயிற்று சேதநர்க்குபகவத்பக்தி, அதுவுங்கிடைக்கு மித்திருவாய்மொழியையப்யஸிக்க. பரத்வஜ்ஞாநத்துக்கடியான சுக்ருதமாதல், சாஸ்த்ரஜ்ஞாநமாதல், சதாசார்யோபதேசமாதல், நிர்ஹேதுகபகவத்கடாக்ஷமாதல், இவையனைத்து மில்லாதார்க்கும் அர்ச்சாவதாரசௌலப்யத்தை யநுசந்திக்கவேபகவத்பக்தியுண்டாகக்கூடும்; அவாப்தசமஸ்தகாமனன சர்வேஸ்வரன் ஆஸ்ரிதவாத்ஸல்யத்தாலே இவனுகந்ததொன்றைத் திருமேனியாகவிரும்பி, இவனமுதுசெய்வித்தத்தை யமுதுசெய்து, அகங்கள்தோறும் புக்குவிடமாட்டாதேயிருந்தால், "இவன்நம்மைவிடமாட்டாதே யிருந்தபின்பு நாமுமிவனுக்கு ஸ்நேஹித்தாலாகாதோ" என்னக்கூடுமிறே. "நிதியிங்கேயுண்டு" என்றுசொல்லக்கல்லுவர்களிறே; அப்படியே, "பக்தியுண்டு" என்ன, அப்யஸிப்பர்களென்றருளிச்செய்கிறார்............................*

---

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (கண்களித்யாதி) "பத்தராகக்கூடும்பயிலுமின்" என்றத்தைப்பற்றவவதாரிகை.

"தேர்கடவியபெருமான்" என்று-சுலபனென்று சொல்லிவைத்து, "காண்டற்கரியன்" என்கிறதென்னென்ன (காணப்பெறுதவித்யாதி) "கருத்துக்குநன்றுமெளியன்" என்றதுக்குபாவம் (காணவொண்ணுதென்றித்யாதி) திருவாய்மொழியிலெங்கும் சம்ஶ்லேஷவிஶ்லேஷங்களுக்குநியாமகம்-இப்பதமென்று விவக்ஷித்து, அவற்றுக்கு லக்ஷணமருளிச்செய்கிறார் (இவர்க்குசம்ஶ்லேஷமாவதித்யாதி) "கண்களாற்காணவரியனாய்" என்கையாலே-இங்கேவிஶ்லேஷம்தோன்றுகிறதென்றுபாவம். அர்ச்சாவதாரமுகேந முகங்கொடுக்குமென்கிறவிடத்திலே "வானவரீசன்" என்றது த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் (நித்யசூரிகளுக்கித்யாதி) மண்ணைக்கொண்டிருக்கிற பூமியிலேப்ராணிகளுக்செல்லா மர்ச்சாவதாரமுகத்தாலே க்ருபைபண்ணும், நித்யசூரிகளுக்கு ஸ்வாமியானவனே யென்றுசப்தார்த்தம்.

வண்டுகளின் மிடற்றோசையெல்லாம் பண்மிக்கிருக்கைக்கு ஹேதுவேதென்ன (முக்கோட்டையித்யாதி) வண்டுகளுடைய பண்ணுக்கடியான முக்கோட்டையென்றபடி. யத்வா, ஆழ்வார்கவி பாடுகைக்கடியான சோலையென்னுதல். முக்கோட்டை-மூகாம்பிகை, தர்க்கி. விநாயகாலயோவா. "இவற்றைநிணைத்தவர்களுக்கும் பார்த்தவர்களுக்கும் கவித்வமுண்டாம்" என்றுசொல்லுவர்.

"பண்கொள்சோலை, பண்கொளாயிரம்" என்றபதச்சேர்த்திக்குபாவம் (வண்டுகளின் நினைவித்யாதி) விழுக்காட்டாலே-ஸ்வபாவதஃ.

"கூடும்" என்கைக்கப்படி துர்லபமோவென்ன (எல்லாம்கிடைக்கிலுமித்யாதி) "கூடும்" என்கையாலே - தௌர்லப்யம்தோன்றுகிறதென்றபடி. கூடும்ப்ரகாரத்தைக்காட்டுகிறார் (பரத்வஜ்ஞாநத்துக்கித்யாதி) விவரணம் (அவாப்தே

த்யாதி) இருந்தால்-இருக்குமென்றுசொன்னால். "பயிலுமின்" என்றுலப்யசிப்பர் களோவென்ன (நிதியிங்கேயித்யாதி) பத்தராகக்கூடும் - பக்தியையுடையராகை சித்திக்கும். பயிலுமின் - இத்திருவாய்மொழியை யப்யஸியுங்கோள்.

க்ரமேணார்வய:.........................................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(செய்யதாமரைக்கண்ணனாய்.)

பத்மாக்ஷீம் பாபஹந்த்ரீம் மணிருசிமமராதீசசிந்த்யாங்க்ரிபத்மாம் தத்தா
த்ருக்குந்தளஸ்ரீஸுகடிதமகுடாம் பாவுகப்ராப்யபாதாம் । ஶுத்தாஸ்வா
த்யஸ்வபாவாம் யமபடமதநீம் பக்தஹ்ருத்திவ்யாம் நீசோச்சாபீஷ்டவ்ருத்திம் ஹரி
தநுமவதந்நிர்த்வந்த்வமாநாநஸத்த: (உக)

(பத்மாக்ஷீம்) செய்யதாமரைக்கண்ணனாய்-அப்போதலர்ந்த செவ்வித்தா மரைப்பூப்போலே யிருக்கிறதிருக்கண்களை யுடையதுமாய்; (பாபஹந்த்ரீம்) பாவநாசனை-பாபங்களையெல்லாம் போக்கவற்றாய்; (மணிருசிம்) மணிவண்ணனை-நிகரில்லாதநீலரத்நத்தினுடைய நிறத்தையுடையதுமாய்; (அமராதீசசிந்த்யாங்க்ரிபத்மாம்) வானவர்தம்மை யாளுமவனுமித்யாதி-தேவாதிபதிகளான ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களாலே சிந்திக்கப்படுகிற திருவடிகளையுடையதுமாய்; (தத்தாத்ருக்குந்தள ஸ்ரீசுகடிதமகுடாம்) சுரியும்பல்கரும் குஞ்சியெங்கள் சுடர்முடியண்ணல் - அழகியதிருக்குழலின் சோபையோடேசேர்ந்ததிருவபிஷேகத்தை யுடையதுமாய்; (பாவுகப்ராப்யபாதாம்) சீற்றத்தோடருள் பெற்றவனடிக்கீழ்ப்புக நின்றசெங்கண்மால்-ஹிரண்யன்பக்கல் சீற்றம்செல்லாநிற்கச்செய்தே பக்தரானப்ரஹ்லாதர்வந்து கிட்டலாம்படியான திருவடிகளையுடையதுமாய்; (சுத்தாஸ்வாத்யஸ்வபாவாம்) விழுமியவமரர் முனிவர்விழுங்குங்கன்னற்கனியினை- * வைகுந்தத்தமரராலும் முனிவராலும் கன்னல்போலும்கனிபோலு மநுபவிக்கப்படுவதுமாய்; (யமபடமதநீம்) அயரவாங்குநமன்றமர்க்கருநஞ்சினை-அறிவுகெடும்படி யத்யந்தபாதையைப்பண்ணும் யமபடர்கள் கிட்டவஞ்சும்படி யவர்களுக்குநஞ்சுமாய்; (பக்தஹ்ருத்திபவ்யாம்) நெஞ்சினால்நினைப்பான் யவனவனாகும்-ஆஸ்ரிதர்மநஸ்ஸிலே பாவித்தபடியேபவ்யமுமாய்; (நீசோச்சாபீஷ்டவ்ருத்திம்) கடல்வண்ணனித்யாதி-நித்யசூரிகளுக்கு போக்யமாய்த்திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளியும், துர்யோதநாதிகள் நூறுபேரும்தங்கள் சேனையோடேநசிக்கும்படி பாண்டவர்களுக்குத் தேரைநடத்தியருளியும், இப்படிநிம்நோந்நதமான யதேஷ்டவ்யாபாரத்தை யுடையதுமாயிருக்கிற திருமேனியையுடையவனாக அர்ச்சாவதாரசுலபனான எம்பெருமானை "செய்யதாமரைக்கண்ணன்" என்கிறதசகத்திலே ஆழ்வார் தெளியவருளிச்செய்தாரென்கிறார்.........................................................*

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

செய்யபரத்துவமாய்ச்சீரார்வியூகமாய்த்
துய்யவிபவமுமாய்த்தோன்றிவற்றுள்-எய்துமவர்க்
கிந்நிலத்திலர்ச்சாவதாரமெளிதென்றான்
பன்னுதமிழ்மாறன்பயின்று. (உகூ)

(செய்யபரத்துவமாய்) இதில்-அர்ச்சாவதாரபர்யந்தமான ஸௌலப்யத்தை சம்சாரிகளைக்குறித்துபதேசிக்கிற பாசுரத்தையநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; "தாமேவிழுவாரைத் தடிகொண்டடிக்கையன்றே நாமும்கைவிடுகை" என்றுமுன்புதம்மாலே பொடியப்பட்டநாட்டாரிழவுபொறுக்கமாட்டாத க்ருபாதிசயத்தாலேமீண்டுமவர்களுக்கவன்சௌலப்யத்தையுபதேசிக்கைக்காக பரவ்யூஹவிபவங்களையடைவே யருளிச்செய்துகொண்டுசென்று. நீங்களுகந்தபடியேயுகந்தருளப்பண்ண, அத்தையப்ராக்ருத திவ்யசம்ஸ்த்தானத்தோடொக்கவிரும்பும்சீலாதிசயத்தாலே யுங்களோடேபுரையறக்கலந்து சர்வாபேக்ஷிதங்களையும் குறைவறவுபகரிக்கு மர்ச்சாவதாரத்திலே யாஶ்ரயியுங்கோளென்கிற* செய்யதாமரைக்கண்ணனின் தாத்பர்யத்தையருளிச்செய்கிறார் "செய்யபரத்துவமாய்" இத்யாதியாலேயென்கை.

(செய்யபரத்துவமாய்) "பரஃபராணாம்பரமஃ" (என்றிதரவிலக்ஷணமான வழகியபரத்வமாய். (சீரார்வியூகமாய்) "ஏஷநாராயணஃஶ்ரீமாந்க்ஷீரார்ணவநிகேதநஃ" (ஏஷநாராயணஶ்ஶ்ரீமாந்க்ஷீரார்ணவநிகேதநஃ) என்னும்படியிறே வ்யூஹமிருப்பது. சீர்-குணமாதல், ஐஶ்வர்யமாதல். (துய்யவிபவமாய்) ப்ரத்யக்ஷாநுபவயோக்யமான தூய்மையையுடையவிபவமாய். "செய்யதாமரைக்கண்ணன்" "அமரர்குலமுதல்" என்றும், "தடங்கடற்கிடந்தான்" "அரவமேறியலைகடலமரும் துயில்கொண்டவண்ணல்" என்றும். "தென்னிலங்கையெரியெழச்செற்றவில்லி" "தயரதற்குமகன்றன்னை" "குரவைகோத்தகுழகனை மணிவண்ணனைக்குடக்கூத்தனை" என்றுமிறேபரத்வாதிகளை யருளிச்செய்தது. (தோன்றிவற்றுள்) இப்படிதேசகாலாதிகாரி நியமங்களையுடைத்தாய், ப்ரமாணங்களாலே ப்ரத்யக்ஷிக்கலாம்படி யிருக்கிறவிவற்றில் வைத்துக்கொண்டு. (எய்துமவர்க்கிந்நிலத்தில்) இவ்விபூதியிலேகிட்டி யாஶ்ரயிக்குமவர்களுக்கு. (அர்ச்சாவதாரமெளிதென்றான்) சௌலப்யத்தாலே அர்ச்சாவதாரம் சமாஶ்ரயணத்துக்கு, சக்ஷுர்விஷயமுமாய், நித்யசந்நிதியுமுண்டாகையாலே அதிசுலபமென்கிறார். "நெஞ்சினால்நினைப்பான்யவனவனாகும் நீள்கடல்வண்ணன்" என்றத்தை நினைக்கிறது. "எளிவரும் இணைவனும் என்றவைபரத்வமாம்படி அவனுகும் சௌலப்யகாஷ்டையைக்காட்டி" என்றாரிறே. "ஶ்ரீமத்யாயதநே விஷ்ணோஃ ஶிஶ்யே நரவராத்மஜஃ" (ஶ்ரீமத்யாயதநேவிஷ்ணோஶ்ஶிஶ்யேநரவராத்மஜஃ) என்றும், "நாராயணமுபாகமத்" (நாராயணமுபாகமத்) என்றும்-விபவத்தாலே அர்ச்யமானவேற்றமுண்டாயிறேயிருப்பது. இப்படியர்ச்சாவதாரவைபவத்தை யருளிச்செய்தவர் தாமின்னாரென்கிறார்(பன்னுதமிழ்மாறன்பயின்றென்று) அதாவது-சேதநரோடேசெறிந்து ஆராயப்படுவதான த்ராவிடத்தையே நிருபகமாக வுடையரான ஆழ்வார், "பண்ணியதமிழ்" என்னும்படிப்ரமாணசரமத்தை வெளியிட்டாற்போலே, ப்ரமேயசரமமான அர்ச்சாவதாரமெளிதென்று வெளியிட்டருளினாரென்கை.......................................................... (உகூ)

மூன்றாம்பத்தில் - ஆறாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - உகூ. பாட்டு - உஅஅ.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## மூன்றும்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### பயிலும் - ப்ரவேசங்கள்.

### ஆறாயிரப்படி.

(பயிலுஞ்சுடரொளி) இப்படியெம்பெருமானுடைய நிரவதிக ஸுலபத்வரூபமஹாகுணாநுபவஜநித நிரவதிகப்ரீதியாலே பகவச்சேஷத்வ காஷ்ட்டாரூப பாகவதசேஷதைகபோகராய், அந்தபாகவதசேஷத்வம் தமக்கு ப்ராப்யமென்கிறார். ..........................................*

### பன்னீராயிரப்படி.

ஏழாந்திருவாய்மொழியில், கீழ்-சேஷத்வ ப்ரதிசம்பந்தியினுடையசேஷித்வ மர்ச்சாவதாரபர்யந்த மென்றருளிச்செய்தாராய், அந்தசேஷத்வ ப்ரீத்யபிவ்ருத்தியாலேசேஷத்வம் தத்விஷயமாத்ரத்திலே நில்லாதே ததீயபர்யந்தமாக அபிவ்ருத்தியாக; அவர்களுடைய ஜந்மவ்ருத்தாதிநிரபேக்ஷமான பகவத்சம்பந்தோத்கர்ஷத்தையேபற்றி, அந்த உத்கர்ஷத்துக்கடியான; சர்வேஶ்வரனுடைய க்ஷீரார்ணவசாயித்வத்தால்வந்த பாரம்யத்தையும், அவதாரவிக்ரஹ வைலக்ஷண்யத்தையும், அந்நிலையிலே விபூதித்வயத்துக்கு மநுபாவ்யமானபோக்யதையையும், போக்யதாவர்த்தகமான ஆபரணசோபையையும்,ஆஶ்ரிதாபேக்ஷிதார்த்த ப்ரதத்வத்தையும், அநந்யப்ரயோஜநர்க்குத் தன்னைக்கொடுக்கு முபகாரகத்வத்தையும், கொடுக்குமிடத்தில் ஸ்வரூபாவிர்ப்பாவத்தைப்பிறப்பித்து அடிமைகொள்ளும்படியையும், அடிமைக்குவிஷயமான ஸ்ரீயஃபதித்வத்தையும், ஆஶ்ரிததோஷ நிவர்த்தகமான பாவநத்வத்தையும், ஆபத்ஸகத்வத்தையு மநுசந்தித்து, இந்தகுணங்களிலே யீடுபட்ட பாகவதருடைய சம்பந்திபரம்பரா பர்யந்தசேஷத்வத்தை யநுபவிக்கிறார்........*

### ஈடு.

ஏழாந்திருவாய்மொழியில் ''அர்ச்சாவதாரசௌலப்யத்தை யருளிச்செய்யச்செய்தேயும்நெஞ்சில்நெகிழ்ச்சியின்றிக்கே விஷயப்ரவணராயிருக்கிறசம்சாரிகள் ஸ்வபாவத்தையநுசந்தித்தார் ; "தேர்கடவியபெருமான் கனைகழல்காண்பதென்றுகொல்கண்கள்" என்றவிவர்க்கு, * நிழலுமடிதாறுமாயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக் காட்டிக்கொடுக்க, உபதேசநிரபேக்ஷமாகவே "பகவத்விஷயம்" என்றால் நெஞ்சுபள்ளமடையாயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டார்; அவர்கள்பக்கலிலே தந்திரு

வுள்ளஞ்சென்று, “ இவர்களுஞ்சிலரோ ” என்று அவர்களைக்கொண்டா
டி; நான்சர்வேஶ்வரனுக் கடிமையென்று, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கடிமை,
அதுதன்னிலும்நேர்கொடுநேர் இவர்களுக்கடிமையாகவேணுமோ, இவ
ர்களோடு சம்பந்திசம்பந்திகளமையாதோவென்றிங்ஙனே பாகவதசே
ஷத்வமுத்தேஶ்யமாய் அவர்களையாதரிக்கிறார்.*எம்மாவீட்டிலே, ப்ராப்ய
நிஷ்கர்ஷம்பண்ணினார் - “ தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே ” என்று;
௧. இங்கே-பாகவதசேஷத்வ முத்தேஶ்யமென்னாநின்றார்; ப்ராப்யமிரண்டா
யிருக்கிறதோ பின்னையென்னில்; அன்று, “ தனக்கேயாகவெனைக்கொ
ள்ளுமீதே ” என்கிற அதினுள்ளேயா யிருக்கிறதிதுவும்; பகவச்சேஷத்
வத்தி னெல்லையாகிறது பாகவதசேஷத்வத்தளவும் வருகையிறே. நம
க்கு ஜ்ஞாதவ்யமானஅர்த்தங்களில் திருமந்த்ரத்திற்சொல்லாத தொன்றி
ல்லையிறே, அத்தையறியும் திருமங்கையாழ்வாரும் இத்தை அதுக்கர்த்த
மாக அருளிச்செய்தாரிறே - “ நின்திருவெட்டெழுத்தும்கற்றுநான்-உற்
றதுமுன்னடியார்க்கடிமை ” என்றாரிறே; திருமந்த்ரத்துக்கர்த்தம் - இவ
னுடைய அநந்யார்ஹசேஷத்வஞ்சொல்லுகையிறே, அதாவது-ததீயர்க்கு
க்ரயவிக்ரயார்ஹமாம்படியாகையிறே; “ தத்பக்திநிக்நமநஸாம்க்ரயவிக்ரயா
ர்ஹா: ” ( தத்பக்திநிக்நமநஸாம்க்ரயவிக்ரயார்ஹா: ) “ எந்தம்மைவிற்க
வும் பெறுவார்களிறே ” பிதாவுக்கொருக்ஷேத்ரம் ஸ்வம்மானால் அதுபு
த்ரனுக்கும் க்ரயவிக்ரயார்ஹமாயிருக்கும், அப்படியிராதவன்று பிதாவி
னுடையஸ்வத்திலே கொத்தையாமிறே. “ தத்பக்தைர்வாஸமாகம: ”
( தத்பக்தைர்வாஸமாகம: ) என்கிறவிடத்தில், “வா” என்றத்தை-அவ
தாரணத்திலேயாக்கி, “ உத்தேஶ்யந்தானே யிங்கேசித்திக்குங்காண் ”
என்றெம்பெருமானா ரருளிச்செய்தவார்த்தை. ப்ராப்யத்தில்ப்ரதமாவதி-
பகவச்சேஷத்வத்தளவிலேநிற்கை ; சரமாவதி-பாகவதசேஷத்வத்தளவி
லேவருகை. [ மவூதா ] ( கச்சதா ) இதுக்கெம்பெருமானார் “ * பயி
லும்சுடரொளியிலும் * நெடுமாற்கடிமையிலும்சொல்லுகிறஅர்த்தத்தை
ஸ்ரீசத்ருக்நாழ்வானநுஷ்டித்துக்காட்டினான் ” என்றருளிச்செய்வர்; இவ்
வர்த்தத்துக்கடி திருமந்த்ரமாயிற்றிறே, அதுமூலமாக அநுஷ்டிக்கவே
இதிற்சொன்னத்தைச்செய்ததாமிறே. ஆசாரப்ரதாநமான அவதாரமாய்,
அதில்பெருமாள், “ பிதாசொல்லிற்று புத்ரன்செய்யக்கடவன் ” என்
கிறமர்யாதைகுலையாதே அத்தைநிலைநிறுத்துகைக்காக பித்ருவசநபரிபா
லநாதிரூபமான சாமாந்யதர்மத்தையநுஷ்டித்தார்; “இதுதான் ப்ராப்த
விஷயத்திலேசெய்யக்கடவது” என்னுமிடத்தை யநுஷ்டித்துக்காட்டி
னா ரிளையபெருமாள்; “ அதுசெய்யுமிடத்தில் அவனுகந்தவடிமை செ
ய்யக்கடவது” என்னுமிடத்தை ஸ்ரீபரதாழ்வானநுஷ்டித்துக்காட்டினா
ன் ; “ அதுதான்பாகவதசேஷத்வ பர்யந்தமாயிருக்கும் ” என்னுமிடத்
தை ஸ்ரீசத்ருக்நாழ்வானநுஷ்டித்துக்காட்டினான். பெருமாள்,பிதாசொ

ல்லிற்றுச்செய்யக்கடவது என்னுமிடத்தைநுஷ்டித்தார்; அதுதன்னி
லும் நேரேபிதாவையநுவர்த்திக்கக் கடவதென்னுமிடத்தை இளையபெரு
மாளநுஷ்டித்தார்; அதுதன்னிலும் "ஶுஶ்ரூஷ" (குருஷ்வ) என்
று நிர்ப்பந்திக்கக்கடவரல்லர், "ராஜ்யத்திலேயிரும்" என்னில் அதின்று
தாகிலும் அதிலிருந்தடிமைசெய்யக்கடவதென்னுமிடத்தை யநுஷ்டித்
தான் ஸ்ரீபரதாழ்வான்; அதினெல்லையையநுஷ்டித்தான் ஸ்ரீசத்ருக்நாழ்
வான், அவன்படிசொல்லுகிறதிஸ்லோகம் [ மாதுலகுலம்ஹதாஹா
தெநநீதஃ ] (மாதுலகுலம்கச்சதாபரதேநநீதஃ) மாதுலகுலமுத்தே
ஶ்ய மாய்ப்போனனவன் ; அவன்றனுத்தேஶ்யமாய்ப் போனனிவ
ன் ; யுதாஜித்தழைத்தது ஸ்ரீபரதாழ்வானையிறே. [ ஹஹதா ] (கச்ச
தா) இவ்வர்த்தமாக நிர்த்தேசத்தால் - பூர்வக்ஷணத்திலும் தன்னெஞ்சி
லுமில்லை, பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்தமையு மில்லை, சக்ரவர்
த்தியைக் கேள்விகொண்டமையுமில்லையென்கை. [ ஹாதெந ] (பர
தேந) பெருமாளும் பொகட்டுப்போய், இளையபெருமாளு மவரை ய
நுவர்த்தித்துப்போய், சக்ரவர்த்தியும்துஞ்சி, ஸ்ரீசத்ருக்நாழ்வானும் த
ன்னையல்லதறியாதேயிருக்க, பெருமாளதான ராஜ்யத்தைபரித்துக்கொ
ண்டிருக்கையாலே-பரதனென்கிறது; "ஹாதஜதிராஜ்யஸ்யஹாணாக்ஷ"
(பரதஇதிராஜ்யஸ்யபரணாத்) [ தஷா ] (ததா) தானும்ராஜபுத்ரனாய்நா
ளும் வேறுபட்டிருந்தால்,பிறித்நுத்தனக்குப்பொருந்தும் முஹூர்த்தத்தி
லேபோக ப்ராப்தமிறே ; அதுசெய்யாதே யவன்புறப்பட்டதேதனக்கு
முஹூர்த்தமாகப்போனான். [ அநவஃ ] (அநகஃ) அபாபஃ. அப்படை
வீட்டில், அல்லாதாரதெல்லாம் பாபமிஶ்ரஜீவநம்போலேகாணும். அதா
வது-ராமபக்திகலந்திருக்குமே. அத்தைப்பாபமென்னலாமோ வென்னி
ல் ; பாபத்திற்காட்டில் புண்யமுத்தேஶ்யமா யிருக்கச்செய்தேயும் இர
ண்டும் த்யாஜ்யமாகாநின்றதிறே, மோக்ஷவிரோதித்வாத்; இங்குமுத்தே
ஶ்ய விரோதியாகையாலே சொல்லலாமிறே. இதுபின்னையுத்தேஶ்ய வி
ரோதியோவென்னில்; ப்ரதமாவதியில் நிலைவிரோதியிறே சரமாவதியை
ப்பற்ற. [ ஶத்ருக்நஃ ] (ஶத்ருக்நஃ) பிறந்தபோதே "எதிரிகள்மண்
ணுண்ணும்படிவளரும்" என்றுதோற்றியிருக்கையாலே இப்படிதிருநா
மஞ்சாற்றினன் வசிஷ்டன். [ நித்யஶத்ருக்நஃ ] (நித்யஶத்ருக்நஃ) பாஹ்
யசத்ருக்களை வெல்லுகையன்றிக்கே ஆந்தரசத்ருக்களான இந்த்ரியங்க
ளை வென்றிருக்கும். அதாவது - "பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்"
(பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறவிஷயத்தில் கண்வையா
மை. அங்கும் "இவனுக்கினிது" என்றிவ்வழியாலே புகுமித்தனை.
[ அநவஃ ] (அநகஃ) என்கிறவிதுக்கும், "நித்யஶத்ருக்நஃ ] (நித்யச
த்ருக்நः) என்கிறவிதுக்கும் வாசியென்னென்னில் ; பாவநத்வத்தில் ஸ்ரீ

பரதாழ்வானையொவ்வார் பெருமாளென்கிறது-அநசஃ என்கிறவித்தால் ; நித்யசத்ருக்நஃ என்கிறவித்தால்-போக்யதைக்கு ஸ்ரீபரதாழ்வானையொவ்வார் பெருமாளென்கிறது. [ நீதஃ ] ( நீதஃ ) ஒருகுற்றுடைவாள், சாயையுள்ளிட்டவையோ பாதியாய்ப்போனன்.த்ரவ்யத்துக்குத்ரவ்யாந்தர சம்யோக முபயநிஷ்டமாயிறேயிருப்பது; த்ரவ்யமாயிருக்கச்செய்தேயும் ஜாதிகுணங்களோபாதி பாதந்த்ரனைப்போனன். [ ப்ரீதிபுரஸ்க்ருதஃ ] ( ப்ரீதிபுரஸ்க்ருதஃ ) " தமயன்பின்னே தம்பிபோகக்கடவன் " என்னும் முறையாலேதேவைபோலே யிருக்குமோவென்னில்; அங்ஙனன்று, "படைவீட்டிலேயிருந்தால் ஒருவன்சோற்றைப் பகுந்துண்ணுமாபோலே படைவீடாகப் பெருமாளுக்கடிமைசெய்வர்கள்,ஏகாந்தஸ்த்தலத்திலே நமக்கெல்லா வடிமையும்செய்யலாம் " என்று - " அஹம்ஸர்வம்கரிஷ்யாமி " ( அஹம்ஸர்வம்கரிஷ்யாமி ) என்றிளையபெருமாள் காட்டேறப்போனற்போலே, இவனும் " நமக்கெல்லாவடிமையும்செய்யலாம் " என்கிறப்ரீதிபிடரி தள்ளத்தள்ளப்போனன். எம்பெருமானரிஶ்ஶ்லோகத்துக்கு வாக்யார்த்தமாக, " ஸ்ரீசத்ருக்நாழ்வான் பெருமாளுக்குநல்லனானபடி-பெருமாளைக்காற்கடைக்கொண்டு, பெருமாளுக்குநல்லனான ஸ்ரீபரதாழ்வானை யல்லதறியாதபடியானன் " என்றருளிச்செய்தார். இதுப்ரயோஜகமானபின்பு, சொன்னமிகையெல்லாம் பொறுக்குமிறே, அல்லது, ஒருசேதநனுக்கொருசேதநனுத்தேஶ்யனாகையாவது ஓட்டையோடத்தோடொழுகலோடமிறே ; " அநந்யாஃ " ( அநந்யாஃ ) என்கிறநிலை இவர்களுக்குண்டானல், இவர்களையநுவர்த்திக்குமது அவனையநுவர்த்தித்ததாமிறே.

ப்ராஹ்மணஜாதி யொன்றாயிருக்கச்செய்தே குலசரணகோத்ராதிகளாலேபிரித்து சம்பந்திக்குமாபோலே, வைஷ்ணவர்களுக்கு நிரூபகம்-அவனுடையகுணசேஷ்டிதாதிகளிறே; அவ்வழியாலே, அவனுடைய வடிவழகிலே துவக்குண்டிருக்குமவர்கள், குணங்களிலே துவக்குண்டிருக்குமவர்கள், சேஷ்டிதங்களிலே துவக்குண்டிருக்குமவர்கள், என்றிவ்வழியாலே அவர்களைப்பிரித்து, அவர்களெல்லாரோடும் தமக்கொருசம்பந்தத்தை யாசைப்பட்டு, அவர்களெல்லாருமெனக்கு ஸ்வாமிகளென்கிறார்.......................................................................*

## ஜீயர் அரும்பதம்

பயிலும்சுடரொளிப்ரவேஶே, சங்கதிமாஹ ( அர்ச்சாவதாரோத்யாதி ) ( அநுசந்தித்தார் ) என்றவநந்தரம், அத்தைவிட்டென்று கூட்டுவது. அதவா, இப்படி ஏகவாக்யமன்றிக்கே பிந்நவாக்யமாய், சம்சாரிகள் ஸ்வபாவத்தையநுசந்திக்கையாலும் * கனைகழல் காணப்பெருமையாலு முண்டானதுஃகத்வயத்தையும் பரிஹரித்தானென்கிறர் ( நிழலுமடிதாறும் ) என்னுதல். இந்தபக்ஷத்திலே, ( சம்சாரிகள் ஸ்வபாவத்தையநுசந்தித்தார் ) அத்தாலுமென்றும், ( தேர்கடவியபெருமான்

கழைகழல்காண்பதென்று சொல்கண்களென்ற ) கழைகழல் காணப்பெருமையாலும் துஃகிதரான ( இவர்க்கு ) என்றுமத்யாஹரித்துக்கொண்டு, ( நிழலுமடிதாறுமாயிருக்கிற ) இத்யாதிவாக்யமநுசந்திப்பது. இந்தபிந்நவாக்யபக்ஷத்திலே-துஃகத்வயமும், முந்தின ஏகவாக்யபக்ஷத்திலே - கழைகழல்காணப்பெறாத துஃகமொன்றுமேயும்விவக்ஷிதம். சம்ஸாரிகள் திருந்தாததுஃகத்தைப் பரிஹரித்ததுக்குசூசகம் ( உபதேசநிரபேக்ஷமாகவே யித்யாதிவாக்யம் ) அடிதாறு-பாதரேகையாதல்; தாறென்று-அளவாய், அத்தால்-பாதுகையென்னுதல். “ இன்றுதாறும்திரிகின்றது ” என்னக்கடவதிறே. “ எம்மையாளும்பரமரே ” என்ற ஏவகாரத்தைப்பற்ற ( சர்வேஶ்வரனுக்கடிமையன்றித்யாதி ) “ அடியாரடியார் ” இத்யாதியைப்பற்ற ( இவர்களோடு சம்பந்திசம்பந்திகளித்யாதி ) ( ஆதரிக்கிறார் ) இத்திருவாய்மொழியிலென்றபடி. ஆக, சம்சாரிகளுடைய ஸ்வபாவாநுசந்தாநத்தாலும், கழைகழலைக்காணப்பெருமையாலும் துஃகிதரானவிவர்க்கந்த துஃகத்வயமும்போம்படி பாதரேகைபோலேயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக்காட்டிக் கொடுக்கக்கண்டு அவர்களையநுபவிக்கிறாரென்று-சங்கதிக்ரந்தார்த்தஃ.

தடஸ்த்தசங்கை ( எம்மாவீட்டிலேயித்யாதி ) ப்ராப்யமிரண்டாயிருக்கிறதோ ) * நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வமாகையாலே * பயிலும்சுடரொளியிற் சொன்னசேஷத்வமும்கைங்கர்ய பர்யந்தமாகவிவக்ஷித்து,கைங்கர்யத்வயமுத்தேஶ்யமாயிருக்கிறதோவென்றபடி. பரிஹரிக்கிறார் ( அன்றித்யாதி ) அதினுள்ளேயாயிருக்கிறது-அதுக்குள்ளேயந்தர்ப்பூதம்.அதெப்படியென்ன (பகவச்சேஷத்வத்தினித்யாதி ) பாகவதசேஷத்வமே யுத்தேஶ்யமென்னுமதுக்கு ப்ரமாணமுண்டோவென்ன ( நமக்கித்யாதி ) இத்தை-பாகவதசேஷத்வத்தை. அதுக்கு-திருமந்த்ரத்துக்கு. ( நின்திருவெட்டெழுத்துமித்யாதி ) திருமொழி - எண்பதாந்திருமொழி. மூன்றாம்பாட்டு. “ மற்றுமோர் ” இத்யாதி. நீசொன்னமுதல்வார்த்தையான திருமந்த்ரத்தைக்கற்று நானறுதியிட்டிருக்குமர்த்தமும் உன்னடியார்க்கு சேஷமென்னுமதித்யர்த்தஃ. திருமந்த்ரத்திலே பகவச்சேஷத்வமொழிய பாகவதசேஷத்வம் சொல்லும்படியென்னென்ன (திருமந்த்ரத்துக்கித்யாதி) அதாவது-அநந்யார்ஹத்வமாவது. ததீயர்க்குக்ரயவிக்ரயார்ஹ மென்கைக்குப்ரமாணம் ( தத்பக்தீத்யாதி ) “ 𑌸𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌮𑌤𑌿𑌵𑍇𑌲𑌮𑌬𑍁𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑍋𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌸𑌹𑌾𑌯𑌗𑍁𑌣𑌮𑌙𑍍𑌗𑌳𑌪𑌙𑍍𑌕𑌲𑌙𑍍𑌕𑌃 । 𑌤𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌨𑌿𑌘𑍍𑌨𑌮𑌨𑌸𑌾𑌂 𑌕𑍍𑌰𑌯𑌵𑌿𑌕𑍍𑌰𑌯𑌾𑌰𑍍𑌹𑌾 𑌵𑌾𑌰𑍀𑌪𑍍𑌰𑌦𑌾𑌰𑌿𑌤 𑌇𑌵 𑌤𑍍𑌵𑌰𑌿𑌤𑍋𑌪𑌬𑌭𑍂𑌵. ” ( ஸஸ்வப்ரபாவமதிவேலமபுத்யமாநோலக்ஷ்மீஸஹாயகுணமங்களபங்கலங்கஃ । தத்பக்திநிக்நமநஸாம்க்ரயவிக்ரயார்ஹாவாரீப்ரதாரிதஇவத்வரிதோபபூவ ) ( எந்தம்மையித்யாதி ) பெரியாழ்வார்திருமொழி-முப்பத்துநாலாந்திருமொழி - பத்தாம்பாட்டு. “ காசின்வாய் ” இத்யாதி. ( பேசுவாரடியார்களெந்தம்மையித்யாதி ) “ கேசவாபுருடோத்தமா ” இத்யாதியானவவன் ஸ்வபாவத்தைப்பேசுமவர்களுக் கடிமையாயிருக்குமவர்கள் தங்களுக்கு சேஷமாகையே புருஷார்த்தமென்றிருக்கிற வென்னை விற்றுக்கொள்ளவு முரியரித்யர்த்தஃ. கீழேப்ரமாணங்காட்டி, உபபத்திகாட்டுகிறார் ( பிதாவுக்கித்யாதி ) பிதாவுக்கு ஸ்வம்மானல் புத்ரனுக்கும் க்ரயவிக்ரயார்ஹமாக வேணுமோவென்ன ( அப்படியித்யாதி ) பாகவதசேஷத்வத்துக்கு ப்ரமாணாந்தரம் ( தத்பக்தைரித்யாதி ) “ 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑌿𑌷𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌦𑍍𑌵𑍇 𑌫𑌲𑍇 𑌹𑍍𑌯𑌮𑍃𑌤𑍋𑌪𑌮𑍇 । 𑌕𑌦𑌾𑌚𑌿𑌤𑍍𑌕𑍇𑌶𑌵𑍇 𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍈𑌰𑍍𑌵𑌾 𑌸𑌮𑌾𑌗𑌮𑌃 ” ( ஸம்ஸாரவிஷவ்ருக்ஷஸ்யத்வேப

லேஹ்யம்ருதோபமே । சதாசித்கேஸவேபக்திஸ்தத்பக்தைர்வாஸமாகம: ) தத்பக்தைர்வா-தத்பக்தைரோவவென்றபடி. வாஸப்த:-அவதாரணே; “ ஸ்யுரேவம் துபுநர்வைவேத்யவதாரணவாசகா: ” ( ஸ்யுரேவந்துபுநர்வைவேத்யவதாரணவாசகா: ) என்னக்கடவதிறே. உத்தேஸ்யந்தானே-பாகவதசேஷத்வமாகிற வுத்தேஸ்யந்தானே. “ கதாசித் கேஸவே பக்தி: ” ( கதாசித்கேஸவேபக்தி: ) என்றது உத்தேஸ்யமன்றோவென்ன ( ப்ராப்யத்திலித்யாதி )

கீழேப்ரமாணோபபத்திகள்காட்டி, அநுஷ்டாநமும்காட்டுகிறார் (கச்சதேத்யாதி ) அயோத்யாகாண்டே ப்ரதமே, “ கச்சதா மாதுலகுலம் பரதேந ததாநக: । ஸத்ருக்நோ நித்யஸத்ருக்நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத: ”
( கச்சதாமாதுலகுலம்பரதேநததாநக: । ஸத்ருக்நோநித்யஸத்ருக்நோநீத:ப்ரீதிபுரஸ்க்ருத: ) ஸ்வாபிப்ரேதார்த்தஸ்ய சம்மதித்வேநாஹ ( இதுக்கெம்பெருமானுரித்யாதி ) * பயிலும்சுடரொளி * நெடுமாற்கடிமைகள் பஸ்சாத்பாவிகளன்றோ, இதிற்சொல்லுகிறவர்த்தத்தை யநுஷ்டிக்கக்கூடுமோவென்ன (இவ்வர்த்தத்துக்கித்யாதி ) இவ்வர்த்தத்துக்கு - * பயிலும்சுடரொளி * நெடுமாற்கடிமைகளிற்சொல்லுகிறவர்த்தத்துக்கு. இத்தால்-சத்ருக்நாழ்வானநுஷ்டிக்கைக்கடி திருமந்த்ரமாகையாலே, ஆழ்வாரருளிச்செய்ததும் திருமந்த்ரார்த்தமாகையாலேயும், இவரருளிச்செய்தவர்த்தத்தை யநுஷ்டித்தானென்னக் குறையில்லையென்றபடி. இதில் சொன்னத்தை-இத்திருவாய்மொழியிற்சொன்னத்தை. ஸ்லோகாவதாரிகை ( ஆசாரேத்யாதி) இவர்தாமிப்படி யநுஷ்டித்தது அவதாரம்தர்மசம்ஸ்த்தாபநார்த்தமாகையாலேயென்றபடி. (ப்ராப்தவிஷயத்திலேயிதி) “ பிதா சமமராகவ: ”
( பிதாசமமராகவ: ) என்று-இவரேப்ராப்தரான பிதாவென்றாரிறேயென்றபடி. அவனுகந்தவடிமை-படைவீட்டிலிருக்குமது. விவரணம் ( பெருமாளித்யாதி ) “ கர்த்துரீப்ஸிததமம் கர்ம ” (கர்த்துரீப்ஸிததமம்கர்ம) என்றசூத்ரத்தைப்பற்ற ( மாதுலகுலமுத்தேஸ்யமாயென்றது ) “கர்த்து: க்ரியயா ஆப்தும் இஷ்டதமம் தத்காரகம் கர்மஸம்ஜ்ஞம் பவதி ” ( கர்த்து:க்ரியயாயதாப்துமிஷ்டதமம்தத்காரகம்கர்மஸம்ஜ்ஞம்பவதி) என்றுவ்ருத்தி. இவனும் மாதுலகுலமுத்தேஸ்யமாய்ப்போனானென்னவொண்ணாதோவென்ன ( யுதாஜித்தித்யாதி ) உக்தார்த்தத்துக்கு சப்தநிர்வாஹம் ( பரதஇதித்யாதி ) நாளும்வேறுபட்டிருந்தாலென்றது - “ புஷ்யே ஜாதஸ்து பரத: ஸார்ப்பே ஜாதௌ து ஸௌமித்ரீ ” ( புஷ்யேஜாதஸ்துபரத:ஸார்ப்பேஜாதௌதுஸௌமித்ரீ ) என்றத்தைப்பற்ற. நாள்-நக்ஷத்ரம். “கச்சதா”
( கச்சதா ) என்றதிலேயர்த்தசித்தமன்றோ, ‘ ததா ’ ( ததா ) என்றதென்னென்னில்; அங்கு-மமதாநிவ்ருத்தியைச்சொல்லிற்று, இங்கு-அதுக்காஸ்ரயமான வஹங்காரநிவ்ருத்தியைச்சொல்லுகிறது ; ஆகையாலேபுநருக்திதோஷமில்லை. சேஷத்வவிரோதியிறேயிரண்டும் ” என்றுகண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யாநத்திலேயிருக்கிறது. “ நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந் ” ( நாஹம்ஸ்வபிமிஜாகர்மிதமேவார்யம்விசிந்தயந்) என்றில்லையோவென்ன ( அங்குமிவனுக்கித்யாதி)
“ இத்யேவமப்ரவீத் ப்ராதா ஸத்ருக்நோ பரதப்ரிய: ” ( இத்யேவமப்ரவீத்ப்ராதாஸத்ருக்நோபரதப்ரிய: ) என்றுத்தரார்த்தம். “ அநக:, நித்யஸத்ருக்ந: ” ( அநக:, நித்யஸத்ருக்ந: ) என்றபதத்வயத்துக்கும், கீழே-ராமபக்திகலசாதவரொன்றும் ராமசௌந்தர்யத்தில் கண்வையாதவரொன்று மருளிச்செய்து, இங்கேயர்த்தாந்தரம் (பாவநத்வத்திலித்யாதி) இவ்வர்த்தத்வயமும் கண்ணிநுண்சிறு

த்ராம்பு வ்யாக்யாநமீட்டிலேவ்யக்தம். முந்தினவர்த்தத்தில் போக்யதைசொல்லுகிறது, இரண்டாமர்த்தத்தில் பாவநத்வபோக்யத்வங்களிரண்டும் சொல்லுகிறது. பெருமாளைக்காட்டிலும் ஸ்ரீபரதாழ்வானிடத்தில் பாவநத்வாதிசயமுண்டாகையாலே "பெருமாள்பாவநர்" என்று அவரிடத்தில் நெஞ்சைவையாரென்கிறது — "ஶுநவஃ" (அநகஃ) என்கிறவித்தால்; பெருமாளைப்பற்றவும் ஸ்ரீபரதாழ்வானிடத்தில் போக்யதாதிசயமுண்டாகையாலே "பெருமாள்போக்யர்" என்று மவரிடத்தில் நெஞ்சைவையாரென்கிறது - "நிதுஶத்ருவும்ஃ" (நித்யஶத்ருக்நஃ) என்கிறவித்தாலென்றபடி. பரதேநஸஹகதஃ என்னுதே, "நீதஃ" (நீதஃ) என்றதுக்கர்த்தம் (ஒருகுற்றுடைவாளித்யாதி) பலிதம் (த்ரவ்யத்துக்கித்யாதி (யத்வா, தடஸ்த்தசங்கை (த்ரவ்யத்துக்கித்யாதி) ஆதல்; (உபயநிஷ்ட்டமாயிரேயிருப்பது) ஆனபின்பு, "சாயையுள்ளிட்டவையோபாதிபோனுன்" என்னக்கூடுமோவென்று சங்கையைப்பூரித்துக்கொள்வது. பரிஹாரம் (த்ரவ்யமாயிருக்கச்செய்தேயுமித்யாதி) த்ரவ்யமாயிருக்கச்செய்தேயும் ப்ரபாப்ரபாவான்களுக்கு ப்ரதாநாப்ரதாநபாவம் கண்டோமாகையாலே, ஜாதிகுணங்களோபாதிபோனுனென்றுதாதபர்யம். உபயநிஷ்ட்டம்-உபயப்ரதாநம். (ப்ரீதிபிடரிதள்ள) ப்ரீத்யாபுரஸ்க்ருதஃ என்றபடி. இப்படி ஸ்ரீபரதாழ்வானையேபற்றினுல் "ஶத்ருஞ்நவவீரெண" (ஶத்ருக்நேநசவீரேண) "ஶத்ருஞ்ஞாவிஶாநத" (ஶத்ருக்நஞ்சாபிமாநத) என்னும்படிசத்ருக்நாழ்வான் ப்ரீதிவிஷயமானபடியென்னென்ன (எம்பெருமானுரித்யாதி) ஆனுல் "ஶுநவஃ, நிதுஶத்ருவும்ஃ" (அநகஃ, நித்யஶத்ருக்நஃ) என்கிறபதங்களுக் கத்யுக்தியாகவர்த்தம் சொலலுவானென்னென்ன (இது ப்ரயோஜகமித்யாதி) இது-பகவதீயத்வம். மிகை-ஏற்றம். ஓட்டையோடம்- அதிச்சித்ரமானவோடம். ஒழுகலோடம்-அல்பசித்ரமானவோடம். ஆனுல்பின்னையவனையே யநுவர்த்திக்கவொண்ணுதோவென்ன (அநந்யா இதி) கீதாஶாஸநவமே, "ஶுநநுாஶ்ஹிஞயஞொஶாம்யெஜநாஃவாநுவாஸதெ । தெஷாம்நிதுாஹியுக்தாநாம்யொமக்ஷெமம்வஹாம்ஹம்" (அநந்யாஶ்சிந்தயந்தோமாம்யேஜநாஃபர்யுபாஸதே । தேஷாம்நித்யாபியுக்தாநாம்யோகக்ஷேமம்வஹாம்யஹம்.)

இத்திருவாய்மொழியில் பாகவதர்களை யநுபவிக்கவிழிந்தவர், பாட்டுக்களில் பூர்வார்த்தங்களாலே - பகவத்குணசேஷ்டிதாதிகளை வர்ணிப்பானென்னென்ன (ப்ராஹ்மணஜாதியித்யாதி) ............................................................*

---

## ஏழாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

பயிலுஞ்சுடரொளிமூர்த்தியைப்பங்கயக்கண்ணனைப்
பயிலவினியநம்பாற்கடற்சேர்ந்தபரமனைப்
பயிலுந்திருவுடையார்யவரேனுமவர்கண்டீர்
பயிலும்பிறப்பிடைதோறெம்மையாளும்பரமரே.

### ஆறுயிரப்படி.

பிராட்டியுடைய ஜன்மபூமியாகையாலே திருப்பாற்கடலைத்தனக்கு ப்ரியமானதாமமாகவுடையனாய், சர்வதாநுபூதனானுலுமபூர்வவத்போ

க்யபூதனாய், நிரதிசயதீப்தியுக்தனாய், திவ்யரூபனாய், பங்கயக்கண்ணனாயிருந்த வெம்பெருமானுடைய வநுபவசம்பூத ப்ரீதிகாரிததாஸத்வ சம்பத்தையுடையாராரோனுமாகிலு மவர்கிடீர்நமக்கு ஸ்வாமிகளென்கிறார்.....*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், விலக்ஷணவிக்ரஹ குணவிசிஷ்டனாய்க்கொண்டு க்ஷீரார்ணவசாயியான சர்வாதிகனை சம்ஶ்லேஷிக்கும் சம்பத்தையுடையபாகவதர்கள் ஜந்மவ்ருத்தாதிகளில் தாழநின்றாரோயாகிலுமெனக்கு சேஷிகளென்கிறார்.

பயிலும்-செறிந்த. சுடர்-சௌந்தர்யலாவண்யாதிகளாகிறசுடரையுடைத்தான. ஒளிமூர்த்தியை - தேஜோமயதிவ்யவிக்ரஹத்தையுடையனாய். பங்கயக்கண்ணனை-சர்வஸ்மாத்பரத்வசூசகமானபுண்டரீகாக்ஷத்வத்தையுடையனாய். பயில-இவ்வடிவழகிலேசெறிந்தார்க்கு. இனிய-நிரதிசயபோக்யனாய்க்கொண்டு. நம்-ஆஶ்ரிதார்த்தமாக. பாற்கடல்-திருப்பாற்கடலிலே. சேர்ந்த-கண்வளர்ந்தருளின. பரமனை-விக்ரஹகுணபோக்யதாபாரம்யத்தையுடையவனை. பயிலும்-நிரந்தரானுபவம்பண்ணிச்செறிகையாகிற. திரு-சம்பத்தை. உடையார்-உடையவர்கள். யவரோலும்-அபிஜநவித்யாவ்ருத்தங்களாலெத்தனையேனுங்குறையநின்றாராகிலும். அவர் - அந்நிலையிலே. பயிலும்-ஈங்களுக்குமேன்மேலனச்செறிந்துவருகிற. பிறப்பிடைதோறு - ஜந்மாவகாசங்கள்தோறும். எம்மை-எங்களை. ஆளும்-அடிமையாகக்கொள்ளும். பரமர்கண்டீர்-பரமசேஷிகள்கிடீர்.

அவனுடைய பாரம்யானுபவ மிவர்களுடைய பாரம்யத்துக் கடியென்று கருத்து..............................................................................*

## ஈடு-முதற்பாட்டு.

முதற்பாட்டில் - வடிவழகிலும்குணங்களிலும் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களெனக்கு ஸ்வாமிகளென்று இத்திருவாய்மொழியி னர்த்தத்தை சங்க்ரஹேணவருளிச்செய்கிறார்.

(பயிலும்) பயிலுகை-செறிகை. அதில்வர்த்தமாநத்தாலே-இதரவிஷயங்களி லொளிகர்மநிபந்தநமாக வளருகையாலே, வளருமாபோலே குறைந்துவருமிறே; இதங்ஙனன்றிக்கே, என்றுமொக்கப்புகர் விஞ்சிவாராநிற்குமென்கை. (சுடரொளிமூர்த்தியை) நிரதிசயமானதேஜஸ்ஸையே வடிவாகவுடையவனை. (பயிலுஞ்சுடர்) அன்றிக்கே, நித்யத்வமாவது-சர்வகாலவர்த்தித்வமாகையாலே, நித்யத்வத்தைச் சொல்லிற்றாகவுமாம். (சுடரொளிமூர்த்தியை) சுடரொன்றும், ஒளியென்றும்-தேஜஸ்ஸாய், மிக்கதேஜஸ்ஸென்கை. அன்றியே, ஒளியென்று-அழகுக்குப்பேராயிற்று. சுத்தசத்வமயமாய் ஸ்வரூபப்ரகாசகமான விக்ரஹத்தையுடையனென்கை. நிஷ்க்ருஷ்டசத்வமேயாய், "𑌤𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌮𑍍" (தத்ரஸத்த்வம் நிர்மலத்வாத்ப்ரகாஶகம்) என்றும், "𑌤𑍇𑌜𑌸𑌾𑌂 𑌰𑌾𑌶𑌿𑌮𑍂𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍" (தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) என்றும், "𑌦𑌿𑌵𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑍍𑌯" (திவிஸூர்யஸஹஸ்ரஸ்ய) என்றுஞ்சொ

ல்லுகிறபடியே நிரவதிகதேஜோரூபமாய், "ஷாடு-ண்ய விக்ரஹம்" ( ஷாட்குண்யவிக்ரஹம் ) என்றுப்ரமிப்பார்க்கும் ப்ரமிக்கலாம்படியாய், ஜ்ஞாநாதிகுணங்களுக்கும் ஸ்வரூபத்துக்கும் ப்ரகாசகமானவிக்ரஹமிறே. ( பங்கயக்கண்ணனை ) வடிவழகெல்லாம்பாதியும், கண்ணழகுபாதியுமாயிருக்கும். "ராமஃகமலபத்ராக்ஷஃ" ( ராமஃகமலபத்ராக்ஷஃ ) என்னுமாபோலே, வடிவிலே துவக்குண்பாரை வளைத்துக்கொள்வது கண்ணழகாயிற்று. ஒருசுடர்க்கடல்போலேயாயிற்றுவடிவு, அதுபரப்புமாறத் தாமரைபூத்தாற்போலே யாயிற்றுக்கண்ணழகு. வடிவுதானே ஆகர்ஷிக்கவற்று, அதுக்குமேலேஅகவாயில் வாத்ஸல்யாதிகுணங்களுக்கும் ப்ரகாசகமா யிருக்குமிறேகண். ( பயிலுமித்யாதி ) நித்யமாய் நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தையும், அதிலுமாகர்ஷகமான கண்ணழகையுமுடையவனை. ( பயிலவினிய ) இப்படிவடிவழகும் கண்ணழகும் கண்ணழிவற்றிருக்கையாலே இனியதாயிருக்குமிறே. இதரவிஷயங்கள் கிட்டுந்தனையுமொன்றுபோலேயாய், கிட்டினவாறேஅகலவழிதேடும்படியாயிருக்கும்; அவற்றினுடைய ஹேயதையறிகைக்குமங்கே செறியவமையும், பகவத்விஷயத்தினுடைய நித்யப்ராப்யதை யறிகைக்குமங்கே நெருங்கவமையும். ஆகையாலேயிறே இவ்வஸ்து நித்யப்ராப்யமாகிறது. இவ்விஷயத்திலநுபூதமானவழகைப்பற்றஅநுபாவ்யமானவழகு, "நோபஜநம்ஸ்மரந்" ( நோபஜநம்ஸ்மரந் ) என்று - முக்தன்சம்சாரயாத்ரையை மறக்குமாபோலே, அநுபூதாம்ஸத்தை நினைக்கவொண்ணாதபடியிறே யிருப்பது, [ பண்டிவரையித்யாதி ] முதல்நாள்கண்டால், ஸ்வாபாவிகசேஷித்வத்தாலும் முகத்திற்றண்ணளியாலுமாக, காணாதுகண்டவனுக்கும் "பண்டு கண்டுவிட்டமுகமோ" என்றுதோற்றியிருக்கும், சிலநாள்பரிசீலித்தால், "பண்டிவரைநாம்கண்டறியோமீ" என்றுதோற்றியிருக்கும். இரண்டுக்கும் சப்தமொத்திருக்க இவ்வர்த்தத்தைக்காட்டும்படி யெங்ஙனேயென்றுநான்கேட்டேன் ; "பயில்கின்றருளால்' என்று-ப்ரதமதசையோடு சரமதசையோடு வாசியறவார்த்தையிதுவேயாயிருந்ததுகண்டீரோ" என்றருளிச்செய்தார். ( நம்மித்யாதி ) வடிவழகுகுறையற்று, குணத்தில்கொத்தையாலே கிட்டவொண்ணாதபடி யிருக்குமோவென்னில் ; * கலங்காப் பெருநகரத்தை யிருப்பிடமாகவுடையவன் திருப்பாற்கடலிலேவந்து ஆஸ்ரிதர்க்கு முகங்கொடுக்கைக் கொருப்புட்டிருக்கும். ( நம் ) ஆஸ்ரிதார்த்தமாகவென்றபடி. அல்லாதார் வடிவுபடைத்தால் "வடிவில்வீறுடையோம்" என்று, அணையநசைபண்ணினலருமைப்படுத்திப் புறப்படத்தள்ளுவர்கள் ; இப்படி அழகுடையவன், தானேஆஸ்ரிதரை யநுபவிப்பிக்கைக்காக அணித்தாகவந்து சாய்ந்தபடி. ( பாமனை ) வடிவழகாலும் குணங்களாலு மல்லாதாரைக்கழித்திங்கே யோரேற்றஞ்சொன்னீர், மேன்மைக்கிவனுக் கவ்வருகேதானொரு விஷயமுண்டோவென்னில் ; மேன்

மைக்கு மிவனுக்கவ்வருகொரு விஷயமில்லை. ( பரமனைப்பயிலுந் திருவுடையார் ) " நல்லவாய்ப்பாயிருந்தது " என்று முகங்காட்டுவித்துக்கொண்டு ப்ரயோஜநத்துக்கு மடியேற்கையன்றிக்கே, அவன்றன்னையே ப்ரயோஜநமாகப்பற்றிநெருங்கும் சம்பத்துடையார். ஒருப்ரயோஜநத்துக்குப் பற்றினவர்கள் அதுபெற்றவாறே யவனைவிட்டுப்போவர்களிறே,அவன்றன்னையேபற்றினவர்கள்பின்னையங்கேநெருங்குமத்தனையிறே ( திரு ) அவன்சேஷித்வத்துக்கெல்லையாய் முடிகவித்தாற்போலே, இவர்கள் சேஷத்வத்துக்கெல்லையாய் முடிகவித்திருப்பர்கள் ; " அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமாந் ," ( அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமாந் ) " ஸதுநாகவரஸ்ஸ்ரீமாந் " (ஸதுநாகவரஸ்ஸ்ரீமாந்) "லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:" ( லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந: ) இத்யாதிகளிற்படியே. " அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமாந் " ( அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமாந்) லங்கையைவிட்டுப் பெருமாள்திருவடிகளிலே வரவென்றோடியிட்டபோதே, ராவணசம்பந்தத்தாலேவந்த அஸ்ரீபோய் ஸ்வரூபாநுரூபமான ஸ்ரீகுடிபுகுந்ததிறே. " ஸதுநாகவரஸ்ஸ்ரீமாந் " ( ஸதுநாகவரஸ்ஸ்ரீமாந் ) சர்வேஸ்வரனனைகுலையத் தலைகுலையவந்து விழவேண்டும்படியான ஆர்த்திதன்னை ஒருசம்பத்தாகச்சொல்லிற்றிறே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு. " ஸர்வாத்மநாபர்யநுநீயமாந: " ( ஸர்வாத்மநாபர்யநுநீயமாந: ) என்று இளையபெருமாளை " நீர்யௌவராஜ்யத்திலே முடிசூடாவிடில்நாம்முடிசூடோம் " என்றுபெருமாளருளிச் செய்யச்செய்தேயும் முடிவைக்கவிசையாத விளையபெருமாளையிறே " லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந: " ( லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந: ) என்றது. ஸ்ரீபரதாழ்வானை " பிள்ளாய் உன்னுள்வெதுப்பாறுவதெப்போதோ " என்று கேட்க, "யாவந்நசரணௌப்ராது:பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ|ஸிரஸாதாரயிஷ்யாமி " (யாவந்நசரணௌப்ராது:பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ|ஸிரஸாதாரயிஷ்யாமி )என்று பெருமாளும்தமக்கு வகுத்தமுடிசூடி, நானுமெனக்குவகுத்த முடிசூடினவன்று ஆறுமெனருனிறே. * அரசமர்ந்தானடிசூடுமரசிறே. அடியிலேதலையாகவாழ அடியிடுகிறுரிறே. ( உடையார் ) " வைஸ்ரவணநு " ( வைஸ்ரவணன் ) என்னுமாபோலே, பாரதந்த்ர்யமாகிற சம்பத்தையுடையவர்கள். இஸ்ஸம்பத்தை யுடையாராகிறுர்கள், மற்றென்ன வேற்றமுண்டாகவேணுமிவர்களை யாதரிக்கைக்கென்னில் ( யவரேனும் ) ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களேதேனு மாகவுமாம், இதுண்டாம்த்தனையேவேண்டுவது. ( அவர்கண்டீர் ) ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களால் வருமபிமாநம் பகவச்சேஷத்வத்துக்கு விரோதியாகையாலே அதில்லாதாருத்தேஸ்யரென்கிறுர், " ததீயர் " என்றேதங்களை நிரூபிக்கவேண்டும்படியாய், வைஷ்ணவத்வவிரோதியான ஜந்மாதிகளால்வருமபிமாநமில்லாதார் நமக்குத்தேட்டமென்கிறுர். அவர்களெத்தனை நாளைக்குத்

தேஶ்யமொன்ன ( பயிலும்பிறப்பிடைதோறு ) மேன்மேலன நெருங்கிவ ருகிறஜந்மங்களி லவகாசங்கள்தோறும். “ நின்பன்மாமாயப்பல் பிறவியி ற்படிகின்றயான் ” என்றுத்யாஜ்யமாகச்சொன்ன ஜந்மந்தன்னையே விரு ம்புகிறுரிறேயிப்போது, பாகவதசேஷத்வத்துக் குறுப்பாகையாலே. மே ன்மேலனஜந்மங்களுண்டாகவுமமையும் ஒருபாகவதன் ஸ்ரீபாதத்திலேவ ர்த்திக்கப் பெறிலென்கிறுர் ( எம்மையாளும்பரமர் ) என்னையடிமைகொ ள்ளக்கடவ ஸ்வாமிகள். முன்பவனை- “ பரமன் ” என்றீர், இங்கேயிவர் களை- “ பரமர் ” என்னநின்றீர், இதிருக்கும்படியென்னென்னில் ; அநு பாவ்யகுணாதிக்யத்தாலேசொல்லிற்று-அங்கு, இங்கு-அக்குணத்துக்குத் தோற்றவர்களைச்சொல்லுகிறது ; தத்ஸம்பந்தமொழியச்சொல்லின் பக வத்ஸம்பந்த மற்றதாம்.........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (பயிலுமித்யாதி) பூர்வார்த்தத்தையும், “பயிலும்திருவுடையார், எம்மையாளும்பரமர்” என்றத்தையும்கடாக்ஷித்தவதாரிகை(வடிவழகிலுமித்யாதி)

“ பயிலும் ” என்றத்தை * சுடரொளிக்கு விசேஷணமாக்கியர்த்தம் ( ப யிலுகைசெறிகையித்யாதி ) “ பயிலும் ” என்றத்தை * மூர்த்திக்கு விசேஷணமா க்கி யர்த்தாந்தரம் (அன்றிக்கேநித்யத்வமித்யாதி) இந்தப்பக்ஷத்தில், பயிலுகை - காலத்தோடேசெறிகையாய், அதில்வர்த்தமாநத்தாலே-சர்வகாலத்தோடும் செறி கையைச்சொல்லுகிறது. விக்ரஹவிசேஷணமென்னுமது, மேலேயித்தை யநுவ திக்கிற “நித்யமாய்நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தையும்” என்கிறவாக்யத் திலேவ்யக்தம். செறிகை-சேருகையும், நெருங்குகையும். “சுடரொளி” என்று-மீ மிசையென்னுதல், தேஜஸ்ஸையுமழகையுஞ்சொல்லுதல். மிக்கதேஜஸ்ஸென்கிற மூ ந்தினவர்த்தத்தில்பலிதம் ( சுத்தசத்வமயமித்யாதி ) சுத்தசத்வமயமாகையாலே ஸ்வரூபப்ரகாசகமென்றபடி. சத்வம்ப்ரகாசகமென்னுமதுக்கு ப்ரமாணகதநபூர்வ கமாக, விக்ரஹம் நிரவதிகதேஜோரூப மென்னுமதுக்கும் ப்ரமாணம்காட்டுகிறுர் (நிஷ்க்ருஷ்டசத்வேத்யாதி)நிஷ்க்ருஷ்டசத்த்வமேயாய்-தேஜோரூபமாய்-ப்ரகா சகமான விக்ரஹமென்றந்வயம். கீதாஸாசதுர்த்தமே, “ தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாஶகமநாமயம் । ஸுகஸங்கேந பத்நாதி ஜ்ஞாநஸங்கேந சாநக.”

( தத்ரஸத்த்வந்நிர்மலத்வாத்ப்ரகாஶகமநாமயம் । ஸுகஸங்கேபத்நாதிஜ்ஞாநஸ ங்கேசாநக ) ஏகாதசமே, “ திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா । யதி பாஸ்ஸத்ருஶீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந: ” ( திவிஸூர்யஸ ஹஸ்ரஸ்யபவேத்யுகபதுத்திதா । யதிபாஸ்ஸத்ருஶீஸாஸ்யாத்பாஸஸ்தஸ்யமஹாத் மந: ) ஸ்ரீவிஷ்ணுபுராணே, “ தம் த்ருஷ்ட்வா தேததா தேவா: ஶங்கசக்ரகதாதரம் । அபூர்வரூபஸம்ஸ்தாநம் தேஜஸாம் ராஶிமூர்ஜிதம். ” ( தம்த்ரு ஷ்ட்வாதேததாதேவாஶ்ஶங்கசக்ரகதாதரம் । அபூர்வரூபஸம்ஸ்த்தாநம்தேஜஸாம் ராஶிமூர்ஜிதம். )

வடிவழகைச்சொன்ன வநந்தரம் ஏகாவயவத்தைச் சொன்னதுக்குபாவம் ( வடிவழகெல்லாமித்யாதி ) “ பயிலும்சுடரொளிமூர்த்தியை, பங்கயக்கண்ணனை” என்றபதத்வயத்துக்கும் ப்ரமாணம் ( ராமஇத்யாதி ) சுந்தரகாண்டே சீதாம்ப்ர திமாருதி:, “ ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர: । ரூபதாக்ஷி

ண )ஸம்வந்:ஸ்ரஸூதொஜநகாத்மஜே." ( ராமஃகமலபத்ராக்ஷஸ்ஸர்வஸத்வமநோஹரஃ । ரூபதாக்ஷிண்யஸம்பந்நஃப்ரஸூதோஜநகாத்மஜே ) "ரமயதீதிராமஃ" ( ரமயதீதி-ராமஃ ) என்கிறவிது-வடிவழகாலேயென்றுகருத்து. வடிவழகைச்சொல்லி, கண்ணழகைச்சொன்ன விக்ரமத்துக்குபாவம் ( வடிவிலேயித்யாதி ) வளைத்துக்கொள்ளுகை-அவயவாந்தரங்களிற் போகவொட்டாமலிருக்கை. பதத்வயத்துக்கும் சமுதாயதாத்பர்யம் (ஒருசுடர்க்கடலித்யாதி) "பங்கயக்கண்ணனை" என்றதுக்குத்தாத்பர்யாந்தரம் (வடிவுதானேயித்யாதி) வடிவென்று-அழகாய், திருக்கண்களினழகுதானே யாகர்ஷிக்கவற்றென்றபடி. இத்தால்-அழகாலும்குணப்ரகாசகத்வத்தாலும்கண்ணழகைச்சொல்லுகிறதென்று தாத்பர்யபேதம். "பயிலும்" என்றதினிரண்டாமர்த்தத்தையுட்கொண்டு, இரண்டுபதத்தாலும் சொன்னவர்த்தத்தை நிகமிக்கிறார் ( நித்யமாயித்யாதி )

* பயிலவினியனுகைக்கு ஹேதுகீழ்ச்சொன்னவை யென்னுமிடந்தோன்றவருளிச்செய்கிறார் ( இப்படியித்யாதி ) "பயிலவினிய" என்கையாலே-இதரவிஷயத்தைப்பற்ற விவ்விஷயம் வ்யாவ்ருத்தமாயிருக்கு மென்றுவிவக்ஷித்து, இதரவிஷயத்துக்குள் ளவாகாரத்தையு மருளிச்செய்கிறார் (இதரவிஷயங்களித்யாதி) அத்தையுபபாதிக்கிறார் ( அவற்றினுடையவித்யாதி ) அங்கேசெறியவமையும்-இதரவிஷயங்களிலே செறியவமையும், செறிய-கிட்ட. அங்கேநெருங்க-பகவத்விஷயத்திலேநெருங்க. "மாற்பான்மனஞ்சுழிப்ப" "ஸாத்ஸநியோக்ஷ:" ( பரமாத்மநியோரக்தஃ ) என்னக்கடவதிறே. "பயிலவினிய" என்றவிடத்திலே - "ஸதாமயம்ஸாரஸ்ருதாம்நிஸர்க்கோயதர்த்தவாணீஸ்ருதிசேதஸாமபி । ப்ரதிக்ஷணம்நவ்யவதச்யுதஸ்யயத்ஸ்த்ரியோவிடாநாமிவஸாதுவார்த்தா" ( ஸதாமயம்ஸாரப்ருதாம்நிஸர்க்கோயதர்த்தவாணீஸ்ருதிசேதஸாமபி। ப்ரதிக்ஷணம்நவ்யவதச்யுதஸ்யயத்ஸ்த்ரியோவிடாநாமிவஸாதுவார்த்தா ) என்றருளிச்செய்வர். "பயிலவினிய" என்றதின்சரமாவதி ( இவ்விஷயத்திலித்யாதி ) நித்யப்ராப்யதையின் சரமாவதியாதல். நித்யப்ராப்யமென்றதுக்குப்ரமாணம் ( பண்டிவனையித்யாதி ) திருமொழி. எழுபத்தோராந்திருமொழி-ஒன்பதாம்பாட்டு. "வண்டமரும்" இத்யாதி. "பண்டிவனை-யாம்-எவ்வூரில்-கண்டறிவது-என்றேபயில்கின்றாள்" இத்யந்வயஃ. பயிலுகை-சொல்லுகை. "எவ்வூரில்" என்றால்-எங்கேயோ கண்டாற்போலேயிருக்கிறதென்றும், எங்கேகண்டறிவோம்-ஓரிடத்திலும்கண்டறியோமென்றும் தோற்றுகையாலே யுபயத்தையு மருளிச்செய்கிறார் ( முதலுளித்யாதி ) இவ்வர்த்தத்வயமும் - "எவ்வூரில்கண்டறிவது" என்கிறஸ்வரத்தாலே காட்டப்படுகிறது. இரண்டுக்கும் சப்தமொத்திருக்க-கண்டறிவோம், கண்டறியோமென்கிறவிரண்டுக்கும் - "எவ்வூரில்" என்கிறசப்தமொத்திருக்க. இவ்வர்த்தத்தை-ப்ரதமதர்ஸநத்திலே கண்டறிவோமென்றும், அநந்தரதர்ஸநத்திலே கண்டறியோமென்றும் சொல்லுகிறவிவ்வர்த்தத்தை. பரிஹாரவாக்யத்துக்கு-நித்யாநுபவம்பண்ணுநிற்க, "பண்டிவனைக்கண்டறிவதெவ்வூரில்" என்னும்போது, தசாபேதேந அர்த்தம்கொள்ளவேணும்; அல்லாதபோது, லௌகிகவிஷயவிலக்ஷணமான நித்யப்ராப்யதை யிவ்வஸ்துவுக்கு சித்தியாதென்றுதாத்பர்யம். யத்வா, சப்தமொத்திருக்க-சப்தமேகமாயிருக்க. சப்தமேகமானாலும் அஸக்ருதாவ்ருத்தமாகையாலே தசாபேதேநார்த்தபோதகத்வம் அர்த்தௌசித்யத்துக்குக்கூடுமென்று - பரிஹாரவாக்யத்துக்குத் தாத்பர்யமாதல். பண்டு-முன்பு.

"பரமன்-நம்பாற்கடல்சேர்ந்தவன்" என்றந்வயித்தர்த்தம் (கலங்காப் பெருவித்யாதி) "நம்" என்றபஹுவசநதாத்பர்யம் (ஆஶ்ரிதார்த்தமாகவித்யாதி) "கலங்காப்பெருநகரம்" இத்யாதிவாக்யத்திற் சொன்னவர்த்தத்தை லௌகிகவ்யாவ்ருத்தி கதநமுகேந விசதீகரிக்கிறார் (அல்லாதாரித்யாதிவாக்யத்வயேந) "பாற்கடல்சேர்ந்த" என்றத்தாலே (குணங்களாலுமென்றது) பரோமாஸ்மாதிதி-பரம꞉.

"பயிலும்" என்றவர்த்தமாநார்த்தத்தை யுட்கொண்டருளிச்செய்கிறார் (நல்லவாய்ப்பாயித்யாதி) மடியேற்கை-யாசிக்கை. விவரணம் (ஒருப்ரயோஜநேத்யாதி) இத்தைசம்பத்தாகச்சொன்ன விடமுண்டோவென்ன (அந்தரிக்ஷேத்யாதி) இந்தப்ரமாணங்களில் த்ருஷ்டைஶ்வர்யங்களைச் சொல்லுகிறதென்றுலோவென்ன (லங்கையையித்யாதி) ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ஆர்த்தியை - "சம்பத்து" என்றபோதே, ததநந்தரபாவியான பகவத்சம்பந்தம் - "சம்பத்து" என்னுமது கிம்புநர்ந்யாய சித்தமென்றபடி. "சேஷத்வத்துக்கெல்லையாக முடிகவித்திருப்பர்கள்" என்றதுக்கு, "லக்ஷ்மிஸம்பந்ந꞉ இத்யாதிகளிற்படியே" என்றவிடத்தில் ஆதிசப்தவிவக்ஷிதமாக ப்ரமாணாந்தரம் (ஸ்ரீபரதாழ்வானையித்யாதி) "வாயிலுவவுஜ்ஞநாதிதளா" (பார்த்திவவ்யஞ்சநார்விதௌ) என்றத்தாலே - (பெருமாளும்தமக்குவகுத்தமுடிசூடியென்றது) "ஶிரஸாயாரயிஷ்யாமி" (ஶிரஸாதாரயிஷ்யாமி) என்றத்தாலே - "நானுமெனக்குவகுத்தமுடிசூடினவென்றது" "வாயிலுவவுஜ்ஞநழ" (பார்த்திவவ்யஞ்சநம்) என்று-திருவடிகளில் த்வஜாரவிந்தாதி ரேகாதிகளென்று, திருவபிஷேகம்கொண்டருளினவநந்தரம் திருவடிகளுக்கசாதாரணமாகச் சாத்துமலங்காரங்கள். திருவடிகளில் சாத்தினவந்தவலங்காரங்கள்தான் அவர்க்கும் பார்த்திவத்வவ்யஞ்சநமாய், தன்றலையிலே திருவடிகள் வரும்போதுதனக்கும் பார்த்திவத்வவ்யஞ்சநமா யிருக்குமென்றபடி. "ஶிரஸாயாரயிஷ்யாமி" (ஶிரஸாதாரயிஷ்யாமி) என்றால்-எனக்குவகுத்த முடிசூடியென்றாகவேணுமோவென்ன (அரசமர்ந்தானித்யாதி) ¦பெருமாள்திருமொழி-பத்தாந்திருமொழி-ஏழாம்பாட்டு. "குணகடல்" இத்யாதி. திருச்சித்திரகூடத்தில் ராஜ்யம்பண்ணியிருக்கிற வன்திருவடிகளை சிரசாவஹிக்கையாகிற ராஜ்யமுடையவனிதி பாசுரார்த்த꞉. எடுத்தசந்தைக்குசாடேக்தி (அடியிலேயித்யாதி) திருவடிகளிலே தலையைவைத்துக்கொண்டு வாழவென்றுஸ்வபாவார்த்தம். முன்னேநன்றாக வாழவென்றுசாடு. பயிலுகைதிருவென்றும், சேஷத்வம்திருவென்றும், பாரதந்த்ர்யம்திருவென்றும் சொன்னவற்றுக்கு-பிந்நார்த்தங்களாக நிர்வஹிக்குமதில்லை. "உடையார்" என்றமதுப்பு-பூமாவிலே. மற்றென்னவேற்றமுண்டாகவேணுமென்றது - ஆபிஜாத்யாதிகளுண்டாகவேணுமோவென்றபடி. இதுண்டாமத்தனையே-ததீயத்வமுண்டாமத்தனையே.

"யவரேலும்" என்னவமைந்திருக்க, "அவர்கண்டீர்" என்றதுக்குக்கருத்தேதென்ன (ஜந்மவ்ருத்தங்களாலித்யாதி) விவரணம் (ததீயரென்றேயித்யாதி) பிறப்பிடை-பிறப்புக்கு மிறப்புக்குமநடு. த்யாஜ்யமாகச்சொன்ன ஜந்மத்தை விரும்புகிறதென்னென்ன (நின்பன்மாவித்யாதி) தாத்பர்யம் (மேன்மேலனவித்யாதி) அநுபாவ்யகுணதிக்யத்தாலே - பாகவதர்களுக் கநுபாவ்யமான குணாதிக்யத்தாலே. இத்தால்-பகவச்சேஷத்வம் குணக்ருதம், பாகவதசேஷத்வம் ஸ்வருபப்ரயுக்தமென்றுகருத்து. ஆனால், "பயிலும்திருவுடையார்" என்றுவிசேஷிக்க

வேணுமோ, "யவரோலும்" என்றுலமையாதோவென்ன (தத்சம்பந்தமொழிய வித்யாதி)

"𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌗𑌤𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍𑌭𑍍𑌰𑌾𑌤𑌾𑌵𑍈𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌧𑌿𑌪𑌃" (அந்தரிக்ஷகதஶ்ஶ்ரீமாந்ப்ராதாவைராக்ஷஸாதிபம்) இதியுத்தகாண்டே, லிகிதம்பூர்வமேவ. ஸ்ரீவிஷ்ணுதர்மே, "𑌪𑌰𑌮𑌾𑌪𑌦𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑍋𑌮𑌨𑌸𑌾𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌤𑍍𑌤𑌦𑌾 । 𑌸𑌤𑍁𑌨𑌾𑌗𑌵𑌰𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌪𑌰𑌾𑌯𑌣𑌃" (பரமாபதமாபந்நோமநஸாசிந்தயத் தரிம்।ஸதுநாகவரஶ்ஶ்ரீமாந்நாராயணபராயண꞉) பாலகாண்டே, "𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌿𑌯𑌕𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌰𑌾𑌮𑌸𑍍𑌯𑌾𑌪𑌿𑌶𑌰𑍀𑌰𑌤𑌃 । 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍋𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌿𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑍋𑌬𑌹𑌿𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑌇𑌵𑌾𑌪𑌰𑌃" (ஸர்வப்ரியகரஸ்தஸ்யராமஸ்யாபிசரீரத꞉। லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்நோபஹி꞉ப்ராணஇவாபர꞉) யுத்தகாண்டே சரமஸர்க்கேலக்ஷ்மணம்ப்ரதிராம꞉,"𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌪𑌰𑍍𑌯𑌨𑍁𑌨𑍀𑌯𑌮𑌾𑌨𑍋𑌯𑌦𑌾𑌨𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌰𑍁𑌪𑍈𑌤𑌿𑌯𑍋𑌗𑌮𑍍 । 𑌨𑌿𑌯𑍁𑌜𑍍𑌯𑌮𑌾𑌨𑍋𑌽𑌪𑌿𑌚𑌯𑍌𑌵𑌰𑌾𑌜𑍍𑌯𑍇𑌤𑌤𑍋𑌽𑌭𑍍𑌯𑌷𑌿𑌞𑍍𑌚𑌦𑍍𑌭𑌰𑌤𑌂𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾" (ஸர்வாத்மநாபர்யநுநீயமாநோயதாநஸௌமித்ரிருபைதியோகம்। நியுஜ்யமாநோபிசயௌவராஜ்யேததோப்யஷிஞ்சத்பரதம்மஹாத்மா) அயோத்யாகாண்டேபரத꞉, "𑌯𑌾𑌵𑌨𑍍𑌨𑌚𑌰𑌣𑍌𑌭𑍍𑌰𑌾𑌤𑍁𑌃" (யாவந்நசரணௌப்ராத꞉) இத்யாதி, பூர்வமேவலிகிதம். க்ரமேணுந்வய꞉.......................................*

# இரண்டாம்பாட்டு.

ஆளும்பரமனைக்கண்ணனையாழிப்பிரான்றன்னைத்
தோளுமோர்நான்குடைத்தூமணிவண்ணனெம்மான்றன்னைத்
தாளுந்தடக்கையுங்கூப்பிப்பணியுமவர்கண்டீர்
நாளும்பிறப்பிடைதோறெம்மையாளுடைநாதரே.

## ஆறுயிரப்படி.

(ஆளும்) திருப்பாற்கடலில்நின்று மாஸ்ரிதபரித்ராணார்த்தமாக சதுர்ப்புஜத்வசங்கசக்ரகதாசார்ங்காதிதிவ்யாயுதஸ்வாசாதாரணாகார விசிஷ்டனாய்க்கொண்டு வசுதேவக்ருஹேவதீர்ணனாய், சமஸ்தஹேய ப்ரத்யநீகனாயிருந்த எம்பெருமானைத் தாளுந்தடக்கையும் கூப்பிப்பணியுமவர் கண்டீர் நமக்கென்றைக்கும் ஸ்வாமிகளென்கிறார்..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவதாரவிக்ரஹ வைலக்ஷண்யத்துக் கீடுபட்டிறைஞ்சும்பாகவதரெனக்கு நாதபூதரென்கிறார்.

ஆளும்-ஆஸ்ரிதரையடிமைகொள்ளுகைக்கடியான. பரமனை - சீலாதிபாரம்யத்தையுடையனாய். கண்ணனை-அதுக்குப்ரகாசகமான அவதாரசௌலப்யத்தையுடையனாய். ஆழிப்பிரான்றன்னை-ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக அவதாரதசையிலும்கையுந்திருவாழியுமாயிருக்குமவனாய். அதுக்குமேலே ஆஸ்ரிதர்க்கொதுங்க நிழலாய்

ஓர்-அத்விதீயமான. நான்கு-நாலு. தோளுமுடை-திருத்தோளையுடையனாய். ஆ - அவர்களுக்கநுபாவ்யமாய். மணி-முடிந்தாளலாம்படிநீலரத்நம்போலேவிலக்ஷணமான. வண்ணன்-வடிவையுடையனாய். எம்மான்றன்னை - அவ்வடிவைக்காட்டியென்னையடிமைகொண்டஸ்வாமியை. தடம்-தங்களோடெக்கத்தோன்றும்படி. தாளும். காலையும்-கையும்-கையையும். கூப்பி-கூட்டி. பணியுமவர்கண்டீர் - ப்ரணாமம்பண்ணுமவர்கள்கிடீர். நாடோறும்-என்றும். பிறப்பிடைதோறும்-ஜந்மாவகாசந்தோறும். எம்மை-எம்மை. ஆள்-அடிமையாக. உடை-உடைய. நாதர்-நாதபூதர்.......*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

அவனுடைய அவயவ சோபைக்குத்தோற்றிருக்கு மவர்களெனக்கு நாதரென்கிறார்.

( ஆளும்பரமனை ) நாமுகந்தத்தை யுகக்கிறோம், இவ்வஸ்துவையாளுமிடத்தில் இங்ஙனவன்றன்னை யாளவல்லாரில்லை. “ அடியார்க்கென்னையாட்படுத்த விமலன் ” என்னக்கடவதிறே, இவ்வுகப்புக்கடியவனென்கிறார் ; ததீயரைவிரும்புகிற தவனடியாகவிறே. ( கண்ணனை ) ஆள்செய்தாட்கொள்ள வல்லாரவன்றன்னையில்லை, தான்தூத்ய சாரத்யங்களைப்பண்ணியிறே யாட்கொள்வது. “ அஞ்சேலென்றடியேனையாட்கொள்ளவல்லானை ” என்றும், “ ஆட்கொள்ளத்தோன்றிய வாயர்தங்கோவினை ” என்றுஞ்சொல்லுகிறபடியே - * எதிர்சூழல்புக்கு ஒருஜந்மத்திலேயிவனையடிமைகொள்ளுகைக்காகத் தானநேகஜந்மங்களைப்பிறந்து திரியுமாயிற்று. ( ஆழிப்பிரான்றன்னை ) தான்தாழநின்றாட்கொள்ளுமிடத்து, பகலையிரவாக்குகைக்கும், “ ஆயுதமெடேன் ” என்றாயுதமெடுக்கைக்கும் பெருநிலைநிற்கும் பரிகரத்தையுடையவனை. [ஸுதர்ஶநம் சிந்திதமாத்ரமாஸுதஸ்யாக்ரஹஸ்தம் ஸ்வயமாருரோஹ] ( ஸுதர்ஶநம்சிந்திதமாத்ரமாஸுதஸ்யாக்ரஹஸ்தம்ஸ்வயமாருரோஹ ) என்று ஒருகையிலேயே விரோதிகளையழியச்செய்யுமே. நினைவறிந்துகார்யஞ்செய்யுமவனிறே. கையுந்திருவாழியுமானவழகை யாஶ்ரிதர்க்காக்கி, அத்தைக்கொண்டு விரோதியைப்போக்குவார்க்கு விரோதியைப்போக்கி, அதுதன்னைக்கைகண்டநுபவிப்பார்க்கநுபவிப்பிக்கு முபகாரகனை. ( தோளுமித்யாதி ) விரோதிபோக்குகைக்கு மழகுக்கும் வேறொன்றுவேண்டாதே, தோள்தானே யமைந்திருக்கை. [ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச-கிமர்த்தம்] ( ஆயதாஶ்சஸுவ்ருத்தாஶ்ச-கிமர்த்தம் ) கோவினகாரியத்தளவல்ல இப்பாரிப்பு. ( நான்கு ) பட்டர்திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருக்கச்செய்தே அநந்தாழ்வான்கண்டு, “பரமபதத்தில்சர்வேஶ்வரன் சதுர்ப்புஜனோ? த்விபுஜனோ வெழுந்தருளியிருப்பது” என்ன, “ஏகாயநர் ‘த்விபுஜன்’ என்னாநின்றார்கள், நம்முடையவர்கள் ‘சதுர்ப்புஜன்’ என்னாநின்றார்கள்” என்ன, “ இரண்டிலும்வழியேது ” என்ன, “ த்விபுஜனாயிருந்தானாகில் பெரியபெருமாளைப்போலேயிருக்கிறது, ‘சதுர்ப்புஜன்’ என்றுதோற்றிற்று

தில் பெருமாளைப்போலே யிருக்கிறது" என்றருளிச்செய்தார்; நம்மள வன்றியே தெரியக்கண்டவர்கள் "கையினார்சுரிசங்கனலாழியர்" என் னூர்களிறே பெரியபெருமாளை; இடைப்பெண்களுக்கு நாலாய்த்தோற்றி உகவாதகம்ஸாதிகளுக் கிரண்டாய்த்தோற்றுமாபோலே ; * ஆதியஞ்சோ தியுருவை யங்குவைத்திங்குப்பிறந்தவிடத்துசதுர்ப்புஜனாயிறேவந்தவத ரித்தது, "உவஸம்ஹர" (உபஸம்ஹர) என்னச்செய்ததிறே மற்றை யது. நிலாத்துக்குறிபகவர், பட்டரை, "ஸ்ரீவைகுண்டத்திலேசதுர்ப்புஜ னாயிருக்கு மென்னுமிடத்துக்கு ப்ரமாணமுண்டோ" என்ன, "தமஸ: பரமோதாதாஸங்கசக்ரகதாதர:" (தமஸ:பரமோதாதாஸங்கச க்ரகதாதர:) என்றுண்டாயிருந்ததே' என்ன, உத்தரமில்லாமையாலே விக்ருதனாக, "ப்ரமாணகதியிதுவாயிருந்தது பொறுக்கலாகாதோ" என் றருளிச்செய்தார். கல்பகதருபணைத்தாற்போலே அத்விதீயமானநான்கு தோள்களையுடைய. (தூமணியித்யாதி) சிலையகப்படுத்துகைக்குத் தோள்தானும் மிகையாம்படியாயிற்று வடிவழகிருப்பது. பழிப்பற்ற நீ லமணிபோலேயிருக்கிற வடிவழகைக்காட்டியென்னை யநந்யார்ஹனாக்கி னவனை. ததீயர்பக்கலிலே அபஹ்ருதராய்ப்போவாரை நடுவேவழிபறிக் கும் வடிவழகையுடையவனை. ததீயரைவிரும்பும்படிபண்ணிற்று மிவ்வ டிவழகாலேயிறே. (தாளுந்தடக்கையுங்கூப்பி) இவ்வழகை யநுபவித் துத்தொழவென்றால் தாளும்தோளும் பணைத்துக்கொடுக்கு மவர்கள். தாள்கூப்புகையாவது-அநந்யகதியாகை. கைகூப்புகையாவது - அகிஞ்சந னாகை. ஆக, இரண்டிலுமொக்க வேறினப்ரயோஜநம் பக்நாபிமானனாகை யிறே. [நிப்ருத:] (நிப்ருத:) ஒரு அவயவத்திலே யெல்லாவவயவ ங்களு மொடுங்கும்படியாகை. [ப்ரணத:] (ப்ரணத:) வேறேசிலரொ டுக்கவேண்டும்படி சிதிலனாய்விழுந்துகிடக்கை. [ப்ரஹ்வ:] (ப்ரஹ்வ:) "இப்படிகிடந்தோம்" என்னுமதுநெஞ்சில் நடையாடாதிருக்கை. (நா ளும்பிறப்பிடைதோறு) ஜந்மங்களிலவகாசங்கள்தோறும், அதுதன்னி ல் நாள்தோறும். (எம்மையாளுடைநாதரே) வடிவழகாலேயாதல், குண ங்களாலேயாதல், ஏதேனுமொருஹேதுவாலே யடிமைகொள்ளவேண்டு வ தீஸ்வரனுக்காயிற்று; நிர்ஹேதுகமாக அடிமைகொள்வாரிவர்கள். அ வனதானால், இவர்களுக்கடிமையாமிடத்தி லீஸ்வரனநுமதியும்வேண்டா, இவன்நினைவும்வேண்டா, இவ்வளவும் வந்தேயிருக்கும். "எந்தம்மைவி ற்கவும் பெறுவார்களே.......................................................*

## ஜீயர் அரும்பதம்

இரண்டாம்பாட்டு: (ஆளுமித்யாதி) "தோளுமோர்நான்குடை" என்ற த்தைப்பற்றவவதாரிகை (அவனுடையவித்யாதி)

ரேமே, ததீயரை - " ஆளும்பரமர் " என்றுவைத்து, இங்கே, ஈஶ்வரனை - " ஆளும்பரமன் " என்கிறதென்னென்ன ( நாமுகந்தத்தையித்யாதி ) அதாவது - நாம்தன்னைவிட்டு பாகவதர்களையே யுகந்தோமாகிலும், இவ்வஸ்துவையாளுமிடத்தில் நம்முடையநினைவின்படியே பாகவதர்களுக்குசேஷமாக்கி, " அவர்களேபரமப்ராப்யப்ராபகர் " என்னும்நினைவைப்பிறப்பித் தடிமைகொள்வானவனையொழிய வில்லையென்றபடி. பரோமாஸ்மாதிதி - பரமஃ என்றுவிவக்ஷிதம். இத்தால்-கீழ்ச்சொன்னசங்கைக்கு பரிஹாரம். பாகவதவிஷயத்தைவிரும்புகிறதும் அவனுடைய க்ருஷியாலே வந்ததாகையாலே யீஶ்வரனை - " ஆளும்பரமன் " என்கிறுரென்றபடி. அப்படிததீயசேஷமாக்கி யாளுமோவென்ன ( அடியார்க்கித்யாதி ) அமலனுதிப்பிரான். தன்பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருக்கு மவர்களுக்குதன்னிடையாட்டமறியாதவென்னை சேஷபூதனுக்கின சுத்தனிதிபாசுரார்த்தஃ. பாசுரத்துக்குபாவம் ( இவ்வுகப்புக்கித்யாதி ) " முடிந்தநிலமீஶ்வரன்பக்கல்க்ருதஜ்ஞதை " என்னக்கடவதிறே. இவ்வுகப்புக்கடி-பாகவதர்களே யுத்தேஶ்யமென்று நினைத்திருக்கிற வுகப்புக்கடி. அப்படிததீயரைவிரும்புகைக்குஹேது ஈஶ்வரனு யிருக்குமோவென்ன ( ததீயரையித்யாதி )

இப்படியடிமைகொள்ளுமிடத்தில் ( உஹ, வவ " ( தஹ, பச ) என்றல்லவடிமைகொள்வது, தான்பாரதந்த்ரனாய் நின்றடிமைகொள்ளு மென்கிறவிது - " கண்ணன் " என்கிறபதத்தாலே சித்திக்கிறதென்கிறுர் ( ஆட்செய்தித்யாதி ) அப்படியாட்செய்தானேவென்ன ( தான்தூத்யேத்யாதி ) ஆட்கொள்ளுமதுக்கு ப்ரமாணம் ( அஞ்சேலென்றித்யாதி ) நானுண்டே, நீயஞ்சாதே கொள்ளென்றடியேனை யடிமைகொள்ளவல்லவனை யென்றபடி. திருமொழி - எழுபத்தொன்பதாந் திருமொழி-ஆரும்பாட்டு. " எஞ்சாவெந்நரகத்து " இத்யாதி. ( ஆட்கொள்ளவித்யாதி ) சர்வரையு மடிமைகொள்ளுகைக்காக வந்தாவிர்ப்பவித்த கோபநிர்வாஹகனவனை யென்றபடி. பெரியாழ்வார்திருமொழி-ஏழாந்திருமொழி-சாற்றுப்பாட்டு. " ஆட்கொள்ளத்தோன்றிய " என்றதுக்குபாவம் ( எதிர்சூழலித்யாதி ) எதிர்சூழல்புக்கு-திருவவதரித்து.

" கண்ணன் " என்றத்தைத்தளமாக்கிக்கொண்டு, " ஆழிப்பிரான் " என்றதுக்குசங்கதி ( தான்தாழநின்றித்யாதி ) பெருநிலைநிற்கை-செய்தல்லதுபோகாதேநிற்கை. பெருநிலை-பக்ஷபாதமும், சாக்ஷியும், செய்தல்லதுபோகாமையும். இப்படி பெருநிலைநிற்குமோவென்ன ( சுதர்ஶநமித்யாதி ) " ஐதீஃ ... " ( இதிதமுக்த்வாஸமஹாநுபாவஸ்ஸ்மாரசக்ரம்நிஶிதம்புராணம் ) இதிபூர்வார்த்தம். இதம் பீஷ்மபர்வணி. " ... " ( அக்ரஹஸ்தம்ஸ்வயமாருரோஹ ) என்றதுக்கர்த்தம் ( ஒருகையிலேயித்யாதி ) ஒருகையிலேயென்றது-ரஸோக்தி. கையிலே-யுத்தத்திலே. சிந்திதமாத்ர மென்றதுக்கர்த்தம் ( நினைவறிந்தித்யாதி ) " பிரான் ", என்றதுக்குபாவம் ( கையுமித்யாதி ) அத்தை-திருவாழியை. அதுதன்னை-திருவாழியை.

"ஓர்" என்றதுக்குபாவம் (விரோதியித்யாதி) விரோதியைப்போக்கு கைக்கு மழகுக்கும்தோளே யமைந்திருக்குமென்றதுக்குப்ரமாணம் (ஆயதாஸ்சேத்யாதி) "வரிவொவஜாஃ" (பரிகோபமாஃ) என்றுவிரோதிநிரஸநம். கோலினகாரியத்தளவல்லபாரிப்பென்றது-யத்நித்தகார்யத்தோடே நிற்குமதல்ல மநோரதமென்றபடி. கோலின-யத்நித்த. அளவு-பரிச்சேதம். முடிவென்றபடி. பாரிப்பு-மநோரதம். கோலினகார்யமாவது-வடிவழகு முதலானவைகளாலே சேதநனைவசீகரிக்கை. அது ஆபரணச்சேர்த்தியாலும் கூடும், அப்படியன்றிக்கே கேவலம்வடிவழகாலே யாகவேணுமோவென்றபடி. திருவடிக்குபாவம். சேதநரிலே அந்யதமனுனவென்னை வசீகரிக்கைக்கு அலங்கரித்தாலும்போராதோ, அலங்கரியாதே வைத்ததென்னென்று. "கிஐூஃ" (நிமர்த்தம்) என்றதுக்கு-ஸ்த்தலாந்தரங்களிலே யின்னமோரர்த்தமுண்டு. அதாவது-தோளழகுக்குக்கண்ணெச்சில் வாராமைக்கு ஆபரணங்களையிட்டு மறையாதேவைத்ததென்னென்று மங்களாசாஸநமாக. "வாஹவஃ" (பாஹவஃ) என்றபஹுவசநம்-இளையபெருமாளையும்கூட்டியாதல்; ப்ரேமயுக்தனுன திருவடிக்கு நாலாகவும்தோற்றுமிறே,அத்தைப்பற்றவாதல். கிஷ்கிந்தாகாண்டே ஹநூமத்வசநம், "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச பாஹவ: பரிகோபமா:। ஸர்வபூஷணபூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா:" (ஆயதாஸ்சஸுவ்ருத்தாஸ்சபாஹவஃபரிகோபமாஃ|ஸர்வபூஷணபூஷார்ஹாஃகிமர்த்தம்நவிபூஷிதாஃ) "நான்கு" என்றப்ரசங்கத்திலே ஐதிஹ்யம் (பட்டரித்யாதி) ஏகாயநரித்யாதிவாக்யம்-பட்டர்வாக்யம். அன்றிக்கே (இரண்டிலும்வழியேதென்ன) என்னுமளவும்-அநந்தாழ்வான் வார்த்தையாதல். அப்போது, என்னவென்றது-அவ்யயம். இரண்டிலும்வழியேதென்ன-அந்யதரநிர்த்தாரணத்துக்கு ப்ரமாணமேதென்ன. த்விபுஜனுயிருந்தானுகில் பெரியபெருமாளைப்போலே யிருக்கிறதென்றது-பெரியபெருமாள் சதுர்ப்புஜராயிருக்கச்செய்தே அஜ்ஞர்க்கு "த்விபுஜர்" என்றுதோற்றுகிறவோபாதி, பரமபதநாதனும் சதுர்ப்புஜனுயிருக்கச்செய்தே அஜ்ஞர்க்கு "த்விபுஜன்" என்றுதோற்றுமென்றுகருத்து. முக்தகண்டமாக பரிஹரியாதே, த்விபுஜனு யிருந்தானுகிலென்றது-அநந்தாழ்வான்தமக்கு கௌரவ்யராகையாலே தாமறிந்ததாகவவர்முன்னே சொல்லவொண்ணுதென்கைக்காக. பெரியபெருமாள் அஜ்ஞர்க்கு த்விபுஜராய்த்தோற்றச்செய்தே, ஜ்ஞாநாதிகர்க்கு சதுர்ப்புஜராய்த்தோற்றின விடமுண்டோவென்ன (நம்மளவன்றியேயித்யாதி) (கையினுரித்யாதி) அமலனுதிப்பிரான். திருக்கையிலே யழகுநிறைந்து சுரியையுடையசங்கையும், ப்ரதிபக்ஷத்தின்மேலே நெருப்பையுமிழாநின்றுள்ள திருவாழியையுமுடையவரித்யர்த்தஃ. ஆனுல் அஸ்மதாதிகளுக்குத் தோன்றுதிருப்பானென்னென்ன (இடைப்பெண்களுக்கித்யாதி) நாலாய்த்தோற்றுகைக்கவன் சதுர்ப்புஜனுயவதரித்தானேவென்ன (ஆதியஞ்சோதியித்யாதி) இப்படிபிறக்கை விபவார்ச்சாஸாதாரண மென்றுகருத்து. அங்குண்டான * ஆதியஞ்சோதி யுருவைவைத்துக்கொண்டிங்கே பிறந்தவித்யர்த்தஃ. ஆனுலவதரித்தபடியே சதுர்ப்புஜனு யிராதொழிவானென்னென்ன (உபசம்ஹரேத்யாதி) பஞ்சமேம்ஸே த்ருதீயேவசுதேவஃ, "ஜாதோऽஸி தேவதேவேஶ ஶங்கசக்ரகதாதர। திவ்யம் ரூபமிதம் தேவ ப்ரஸாதேநோபஸம்ஹர॥ தேவகீ, உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதச்சதுர்புஜம்। ஜாநாது மாவதாரம் தே கம்ஸோऽயம் திதிஜந்மஜ:." (ஜாதோஸிதேவதே

வேஸஸங்கசக்ரகதாதர । திவ்யரூபமிதம்தேவப்ரஸாதேநோபஸம்ஹர ॥ தேவகீ, உபஸம்ஹரஸர்வாத்மந்ரூபமேதச்சதுர்ப்புஜம் । ஜாநாதுமாவதாரந்தேகம்ஸோயம் திதிஜந்மஜ: ) "நான்கு" என்றப்ரசங்கத்திலே ஐதிஹ்யாந்தரம் ( நிலாத்துக்குறி யித்யாதி ) "அநாதிமத்ய நிதநோமஹத:பரமோமஹாந் । தமஸ:பரமோதாதா" ( அநாதிமத்யநிதநோமஹத:பரமோமஹாந் । தமஸ:பரமோதாதா) இத்யாதி, யுத்தகாண்டே மண்டோதரீப்ரலாபே. விக்ருதனாக-குபிதனாக.

தாத்பர்யம் (சிலரையித்யாதி) சப்தார்த்தம் ( பழிப்பற்றவித்யாதி ) ததீய ர்பக்கலிலே ப்ரவணராய்ப்போருகிறவர் "எம்மான்" என்பானென்னென்ன (ததீயர்பக்கலித்யாதி ) அதாவது-குணக்ருதமென்றபடி. பரிஹாராந்தரம் ( ததீயரை யித்யாதி ) அதாவது-பாகவதசேஷத்வமளவாகவர நிறுத்தினதுவடிவழகாகையா லே யதுக்குத்தோற்று "எம்மான்" என்கிறானென்றபடி.

"தடம்" என்றத்தைத்தாளிலும் கையிலும்கூட்டி யருளிச்செய்கிறார் ( இவ்வழகையித்யாதி ) அநந்யகதித்வம் - ரக்ஷகாந்தர சூந்யத்வம். ஆகிஞ்சந்யம்-உபாயாந்தரசூந்யத்வம். பக்நாபிமாந னாகவேணுமென்றதுக்குசம்வாதம் ( நிப்ருத இத்யாதி ) யுத்தகாண்டே ஷோடசசததமே ஹநூமதஸ்ஸீதாபி வந்தநம், "வ்ருக்ஷமூலே நிராநந்தாம் ராக்ஷஸீபிஸ்ஸமாவ்ருதாம் । நிப்ருத:ப்ரணத:ப்ரஹ்வ:ஸோபிகம்யாபிவாத்ய ச" ( வ்ருக்ஷமூலேநிராநந்தாம் ராக்ஷஸீபிஸ்ஸமாவ்ருதாம் ! நிப்ருத:ப்ரணத:ப்ரஹ்வ:ஸோபிகம்யாபிவாத்யச ) பதத்ரயத்துக்கு மர்த்தபேதம் காட்டுகிறார் ( ஓரவயவத்திலேயித்யாதி ) ப்ரணத:-ப்ரகர்ஷேணநத:. "ப்ரஹ்வ:" (ப்ரஹ்வ:) இத்யத்ராபி-ப்ரகர்ஷேணஹ்வ: ; "ஹ்வாஞ் த்யாகே" ( ஓஹாஞ்த்யாகே ) இதிஹிதாது:. இத்தால்-மாநஸத்யாகமென்றர்த்தம்.

ஒருஹேதுவைச்சொல்லாதே, சாமாந்யேந "எம்மையாளுடைநாதர்" என்றதுக்குபாவம் ( வடிவழகாலேயித்யாதி ) அவதாரணார்த்தம் ( அவனதாளுலித்யாதி ) யத்வா, ஹேதுவில்லையென்கிறதென், பகவதநுமத்யாதிகள் வேண்டாவோவென்ன ( அவனதாளுலித்யாதி ) என்னுதல். இதுக்குப்ரமாணம் ( எந்தம்மையித்யாதி ) இதுக்கர்த்தம் கீழேசொல்லிற்று.

க்ரமேணாந்வய:.......................................................................*

---

# மூன்றாம்பாட்டு.

நாதனைஞாலமும்வானமுமேத்துநறுந்துழாய்ப்
போதனைப்பொன்னெடுஞ்சக்கரத்தெந்தைபிரான்றன்னைப்
பாதம்பணியவல்லாரைப்பணியுமவர்கண்டீ
ரோதும்பிறப்பிடைதோறெம்மையாளுடையார்களே.

## ஆறாயிரப்படி.

( நாதனை ) சர்வஸ்வாமியாய், தேவமநுஷ்யாத்யாஸ்ரிதருடைய வுத்கர்ஷாபகர்ஷம்பாராதே யவர்களெல்லார்க்கு மோக்ஷத்தன்னைக்கொடு

த்தருளும் ஸ்வபாவனுய், திருவாழியாழ்வானுலே யலங்க்ருதனுயிருந்த எம்பெருமானைப் பாதம்பணியவல்லாரைப் பணியுமவர்கண்டீர் நமக்கென்றைக்கும் ஸ்வாமிகளென்கிறுர்............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உபயவிபூதியும் மேல்விழுந்தநுபவிக்கும் போக்யதையிலே யீடுபட்டபாகவதர்க்கு சேஷபூதரானவர்க ளெம்மையடிமைகொள்ளும் ஸ்வாமிகளென்கிறுர்.

நாதனை-நிருபாதிகஸ்வாமியாய். ஞாலமும்'- அவிசேஷஜ்ஞானசம்சாரிகளோடு. வானமும்-விசேஷஜ்ஞானநித்யசூரிகளோடுவாசியற. ஏத்தும்-கொண்டாடும்படி. நறும்-பரிமளப்ரசுரமான. துழாய்ப்போதனை - திருத்துழாய்த்தாராலேயலங்க்ருதனுய். பொன்-தர்ஶநீயமாய்.நெடும்-போக்யதையால்விஞ்சியிருக்கிற. சக்கரத்து-திருவாழியுங்கையுமானவழகாலே. எந்தைபிரான்றன்னை-எனக்குநிரவதிகஸ்வாமியானவனை. பாதம்-திருவடிகளிலே. பணிய-தாழ. வல்லாரை - வல்லாரை. பணியுமவர் கண்டீர்-தாழ்ந்தநுவர்த்திக்குமவர்கிடீர். ஓதும்-சாஸ்த்ரங்களிலேயோதப்பட்ட. பிறப்பு-பிறப்பினுடைய. இடைதோறு-அவகாசந்தோறும். எம்மை-எங்களை. ஆளுடையார்கள்-அடிமையாகவுடையவர்கள்.................................*

## ஈடு-மூன்ரும்பாட்டு.

தோளும்தோள் மாலையுமானவழகிலே தோற்றிருக்குமவர்களுக்கு சேஷபூதரானவர்களெனக்கு ஸ்வாமிகளென்கிறுர்.

( நாதனை ) நிருபாதிகசேஷியாயுள்ளவனை. ( ஞாலமித்யாதி ) தோளும்தோள் மாலையுமானவழகைக்கண்டால் திருத்திரையெடுத்த வநந்தரம்போலே நித்யசூரிகளோடு நித்யசம்சாரிகளோடு வாசியறப் புகழாநிற்பர்கள். [ ஸ்ரீவாலவ்ருத்தநாரீ ] ( ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம் ) " தந்தாம்கற்பழியும்வார்த்தைசொன்னல் " என்றிருக்கும் ஸ்த்ரீகள், முதலிலேவார்த்தைசொல்ல வறியாதபாலர்கள், வாய்விட்டொன்றுஞ்சொல்லாத யுவாக்கள், கரணபாடவமில்லாத வ்ருத்தர்கள், இவர்களித்தனையரும் வாய்விட்டேத்தும்படியாயிற்றுப்பெருமாளழகு. ( நறுந்துழாய்ப்போதனை ) திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே நறுநாற்றத்தை யுடைத்தாய்ச் செவ்விபெற்றிருக்கிற திருத்துழாய்ப் பூவையுடையவனை. (பொன்னித்யாதி) பொன்போலே ஸ்ப்ருஹணீயமாய், அழகுக்கு மாபரணத்துக்கும் மிடுக்குக்கும் தனக்கவ்வருகின்றிக்கே யிருப்பதாய், போக்யதையளவிறந்திருப்பதான திருவாழியையுடையனுய் அவ்வழியாலேயென்னை யெழுதிக்கொண்ட வுபகாரகனை. போக்தாக்களுக்குப்பிடிதோறும் நெய்வேண்டுமாபோலே,அடிக்கடி, கையுந்திருவாழியுமான சேர்த்தியையநுபவிக்கிறுர். " ஆழிப்பிரான் " என்பது, " பொன்னெடும்சக்கரத்தெந்தைபிரான் " என்பதாய். ( பாதமித்யாதி ) இவ்வழகைக்கண்டு இதிலே யகப்பைபண்ணுதே, இதிலேதோற்றுத் திருவடிகளிலேவிழவல்லவர்களை.

விஷயத்தைப் பாராதேயிறே அருளையபண்ணுகிறது, சர்வேஸ்வரனும் " கூநஸூயவெ " ( அநஸூயவே ) என்றும், " நமாஂயொஹவஸூயதி " ( நசமாம்யோப்யஸூயதி ) என்றுமருளிச்செய்தானிறே. முன்புள்ளாரநுஷ்ட்டிக்கையாலே நமக்கெளிதான வித்தனையல்லது, புறம்புள்ளார்பக்கலிலேயிறே யிதினருமைதெரிவது. ( வல்லாரைப்பணியுமவர்கண்டீர் ) ஈஸ்வரன்பக்கலுட்பட அருளையபண்ணுகின்ருல் ததீயர்பக்கல் சொல்லவேணுமோ. ஈஸ்வரத்வப்பிடாராலே வணங்கவுமாம், அன்றிக்கே " நநமெயழ " ( நநமேயம் ) என்றிருக்கவுமா மவன்பக்கல்; அந்நபாநாதிகளாலே தரிக்கிறவிவர்கள்பக்கல் பணியக்கூடாதிறே. தோற்றுகிறவாகாரத்தைப்பொகட்டுத்ததீயத்வாகாரத்தையே பார்த்துவிரும்பும்போது அதுக்குத்தக்கவளவுடைய னுகவேணுமிறே. சௌலப்யந்தானே நறுகுமுறுகென்று முடிந்துபோகைக் குடலாயிற்றிறே சிசுபாலாதிகளுக்கு. " பிள்ளையாத்தான் என்று போரநல்லனுயிருப்பானொருவன், ஜீயர்ஸ்ரீபாதத்திலேவந்து 'எனக்கோருரு திருவாய்மொழி யருளிச்செய்யவேணும்' என்ன, 'உனக்குவிசதமாவது பிள்ளையோடேகேட்டாலாயிற்று, அங்கேகேள்' என்ன, 'அவரைத்தெண்டனிடவேணுமே' என்ன, 'அதொன்றுண்டோ, வேணுமாகிற்செய்கிருய்' என்றென்னையழைத்து, 'இவனுக்குப்பாங்கானபடி ஒருருதிருவாய்மொழிசொல்லும்' என்ன, இவ்வளவும்வரக்கேட்டவாறே யென்னைமிகவு மநுவர்த்திக்கப்புக, நானொட்டாதொழிய, ஜீயர்பாடேசென்று 'இவ்வர்த்தத்தினுடைய சீர்மையறியாமையாலே முன்பப்படிசொன்னேன், இனிநானநுவர்த்தித்ததுக் கிசையும்படியருளிச்செய்யவேணும்' என்றுஜீயரையிட்டு நிர்ப்பந்தித்தநுவர்த்தித்தான் " என்றருளிச்செய்வர். ( ஓதுமித்யாதி ) " பிறந்தான், செத்தான் " என்கிற வ்யபதேசமாத்ரமான ஜந்மமுமமையுமிது பெறிலென்னுதல் ; அன்றிக்கே, சாஸ்த்ரங்களிலே நிஷித்ததயாவோதிப் போருகிறஜந்மங்களிலவகாசந்தோறுமென்னவுமாம். ( எம்மையாளுடையார்களே ) " அடியார்கள்குழாங்கள் " என்றும், " அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை" என்றும்-ஒருதேசவிசேஷத்திலே அடிமைசெய்வதிவர்களுக்கிறே; அத்தையிங்கேகொள்ளக்கடவர்க ளிவர்கள். ( எம்மை ) " தெவாநாஂ ஊநவாநாஂவ " ( தேவாநாம்தாநவாநாஞ்ச ) என்றுபொதுவானசேஷித்வமிறே யவனது, * மயர்வறமதிநலமருளி விசேஷகடாக்ஷம்பெற்ற என்போல்வார்க்குசேஷிகளிவர்களிறே. இவ்வருகுள்ளவை பார்க்கவொண்ணுதபடியிறே பகவத்ப்ரபாவத்தைப் பார்த்தாலிருப்பது, [ ஊராசாரொவி ] ( துராசாரோபி ) ஏதேனும் தண்மையுண்டானாலும், அவனையாஸ்ரயித்தானுகில் இவனை நிர்த்தோஷனுக ப்ரதிபத்தி பண்ணவேணும். தோஷங்கிடக்கச்செய்தே,நிர்த்தோஷனுக நினைக்கவேண்டுகிற தென்னெ

ன்னில் [ ப்ரபாவாத்பரமாத்மந: ] (ப்ரபாவாத்பரமாத்மந:) பின்பிவ ஃனக்குறைய நினைக்கையாவது - " இவனைசுத்தனுக்குகைக்கிடான சக்தி யவனுக்கில்லை " என்றுபகவத்ப்ரபாவத்தைக் குறையநினைக்கையாமிறே. வீரப்பிள்ளையும், பாலிகைவாளிப் பிள்ளையுமென்றிருவர் ஜீயர் ஸ்ரீபாதத் துக்கேகாந்தராய், தங்களிலேசெறிந்து போந்தார்களாய் தேசாந்தரம் போனவிடத்தே வெறுப்புண்டாய்த் தங்களில்வார்த்தை சொல்லாதேயி ருக்க, இவர்களைப்பார்த்து "பிள்ளைகாள் அர்த்தகாமங்கள்த்யாஜ்யமல்லா மையோ பகவத்விஷயமராட்டுப்பிராட்டாயோ ! ஒருஸ்ரீவைஷ்ணவனும் ஸ்ரீவைஷ்ணவனும் தங்களிலே வார்த்தைசொல்லாதே வெறுத்திருக்கிற து" என்ன, இருவருமெழுந்திருந்துதெண்டனிட்டுசங்கதராய்ப்போனார்கள்.

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (நாதனையித்யாதி) " நறுந்துழாய்ப்போதனை, பாதம் ப ணியவல்லாரைப் பணியுமவர், எம்மையாளுடையார்கள் " என்கிறபதங்களைக் க டாக்ஷித்தவதாரிகை (தோளுமித்யாதி)

எடுத்த-நீக்கின. சர்வரும் புகழுமதுக்குப்ரமாணம் (ஸ்த்ரீபாலேத்யாதி) யுத்தகாண்டே த்ரிம்ஸச்சததமே பௌரஜந:, " ததோஹர்ஷஸமுத்பூதோ நிஸ்வநோதிவமஸ்ப்ருஸத் । ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம் ராமோயமிதிகீர்த்திதே " (ததோஹர்ஷஸமுத்பூதோநிஸ்வநோதிவமஸ்ப்ருஸத் । ஸ்த்ரீபாலயுவவ் ருத்தாநாம் ராமோயமிதிகீர்த்திதே) சாமாந்யேந மநுஷ்யாணும் என்னுதே, " ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம் " (ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம்) என்று விசேஷி த்ததுக்கு பாவத்தைதர்ஸிப்பியா நின்றுகொண்டு, அவர்கள்ஸ்தோத்ரம்பண்ணுகை க்கு ஹேதுவையும் தர்ஸிப்பிக்கிறுர் (தந்தாமித்யாதி) கற்பு-ஸ்த்ரீத்வம்-அடக்கம். உத்ததராகையாலே வாய்விட்டொன்றும் சொல்லமாட்டாரென்றபடி, நறுநாற்ற ம்-ஶ்லாக்யபரிமளம். (செவ்விபெற்று) "தழைக்கும்துழாய்" என்னக்கடவதிறே.

" நெடும் " என்று-சர்வப்ரகாரத்தாலுமுண்டான நெடுமையாதல், போக் யதையால்வந்த நெடுமையாதல். இரண்டையும் தந்த்ரேணவருளிச்செய்கிறுர் (அ ழகுக்குமித்யாதியாலே) பலகால்திருவாழியைச் சொல்லுவா னென்னென்ன (போக்தாக்களுக்கித்யாதி)

" வல்லாரை " என்றத்தாலே-பகவத்சமாஸ்ரயண மஶக்யமென்றுதோன் றுகிறதென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறுர் (இவ்வழகையித்யாதி) பகவ த்விஷயத்திலே யருயைபண்ணுவர்களோவென்ன (விஷயத்தையித்யாதி) அரு யைபண்ணுவர்க ளென்னுமதுக்கு பகவதுக்தியையும் காட்டுகிறுர் (சர்வேஶ்வர னுமித்யாதி) கீதாஸப்தமே, " இதந்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே " (இதந்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே) அஷ்டாதஶே, " நசாஶுஶ்ரூஷவேவாச்யம்நசமாம்யோப்யஸூயதி " (நசாஶுஶ் ரூஷவேவாச்யம்நசமாம்யோப்யஸூயதி) பூர்வமேவலிகிதம். ஏதானுலும் பகவத்

விஷயத்தி லநுகூலவாயிருக்கிற தருமையோவென்ன ( முன்புள்ளாரித்யாதி ) முன்புள்ளார்-நம்மாசார்யர்கள். இதினருமை-அருமையபண்ணுதொழிகையிலுண்டான வருமை. "கண்டீர்" என்றதுக்கு-கிம்புநர்ந்யாயத்தாலே பணிகையிலுண்டான வருமையைசாதிக்கிறார் ( ஈஸ்வரன்பக்கலித்யாதி ) உபபாதநம் ( ஈஸ்வரத்வேத்யாதி ) பிடார்-பெருமை. கூடாதென்கிறதென், கூடினவிடமில்லையோவென்ன (தோற்றுகிறவித்யாதி) அளவு-ஜ்ஞாநாதிக்யம். *பெருமக்களுள்ளவராய்வைத்து, "𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍𑌭𑌾𑌵𑍈𑌸𑍍𑌸𑍁𑌰𑌨𑌰𑌸𑌮𑍈𑌃" ( ப்ராதுர்ப்பாவைஸ்ஸுரநரஸம: ) இத்யாதிப்படியேயவதரித்து சுலபரானவர்களை, தோற்றினவாகாரத்தையிட்ட நாதரிக்கக்கூடுமோவென்ன ( சௌலப்யந்தானேயித்யாதி ) பாகவதவிஷயத்தில் கிம்புந: என்றபடி. நறுகுமுறுகு-பொருமை. சப்தாநுகாரம். பாகவதசேஷத்வம் துர்லபமென்கைக்கைதிஹ்யம் ( பிள்ளையாத்தானித்யாதி ) பாங்கானபடி-இவனையுந்நதஸ்த்தாநத்திலே வைத்தாகிலும். அருளிச்செய்வர்-நம்பிள்ளையென்றபடி.

பிறந்தான் செத்தான் என்கிற வ்யபதேசமாவது-பிறந்தவனுடனே செத்தானென்கிற பேர்மாத்ரமொழிய, "ஜீவித்தான்" என்கைக்கவகாச மில்லையென்றபடி. ஓதிப்போருகிற-சொல்லிப்போருகிற. ஓதும்பிறப்பிடைதோறு-பிறந்தான் செத்தானென்கிற வ்யபதேசமாத்ரமான ஜந்மலயங்களி லவகாசங்கள்தோறுமென்று முந்தினவர்த்தம். ஒருதேசவிசேஷத்திலே சர்வேஸ்வரன் றிருவடிகளிற்பண்ணும் கைங்கர்யமன்றேப்ராப்யம், இவர்களை "எம்மையாளுடையார்கள்" என்கிறதென்னென்ன ( அடியார்களித்யாதி ) "𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌦𑌾𑌨𑌵𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌮𑍍" (தேவாநாம்தாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதம்) இதிஜிதந்தாயாம். குழாங்கள்-கூட்டங்கள். அந்தமின்றிக்கே-அபரிச்சிந்நமான வாநந்தத்தையுடையரான வடியரோடேகூடி யிருந்தப்ரகாரத்தை யித்யர்த்த:.

பகவதீயத்வமேபோருமோ, ஜந்மவ்ருத்தாதிகளும் பார்க்கவேண்டாவோவென்ன ( இவ்வருகுள்ளவையித்யாதி ) பகவத்ப்ரபாவத்தைப் பார்த்தாலிவ்வருகுள்ளவை பார்க்கவொண்ணுதென்னுமதுக்கு ப்ரமாணம் ( துராசாரோபீத்யாதி ) மஹாபாரதேஸாத்வதேச, "𑌦𑍁𑌰𑌾𑌚𑌾𑌰𑍋𑌽𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍀 𑌕𑍃𑌤𑌘𑍍𑌨𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌃 𑌪𑍁𑌰𑌾 । 𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌦𑌾𑌦𑌿𑌦𑍇𑌵𑌂 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌶𑌰𑌣𑌂 𑌯𑌦𑌿 । 𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑌂 𑌜𑌨𑍍𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌾𑌤𑍍𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃." ( துராசாரோபிஸர்வாஶீக்ருதக்நோநாஸ்திக: புரா। ஸமாஶ்ரயேதாதிதேவம்ஶ்ரத்தயாஶரணம்யதி। நிர்த்தோஷம்வித்திதம்ஜந்தும்ப்ரபாவாத்பரமாத்மந: ) பாகவதசேஷத்வம் துர்லபமென்னுமதுக்குப் பின்னையுமோரைதிஹ்யம் ( வீரப்பிள்ளையுமித்யாதி ) செறிந்து-கூடி. வெறுப்பு-மனக்குறை. அராட்டுப்பிராட்டு-போரும்போராதது. ஆல்பமென்றபடி.

க்ரமேணாந்வய:..................................................................*

## நான்காம்பாட்டு.

உடையார்ந்தவாடையன்கண்டிகையனுடைநாணினன்
புடையார்பொன்னூலினன்பொன்முடியன்மற்றும்பல்கலன்
நடையாவுடைத்திருநாரணன்றொண்டர்தொண்டர்கண்டீ
ரிடையார்பிறப்பிடைதோறெமக்கெம்பெருமக்களே.

## ஆறாயிரப்படி.

(உடையார்ந்த) நிரதிசயசுகந்தமாய், நிரதிசயசுகஸ்பர்ஶமாய், நிரதிசயௌஜ்ஜ்வல்யமாய், நித்யசித்தமாய், அஸங்க்யேயமான திவ்யபூஷணங்களாலே பூஷிதனாயிருந்த எம்பெருமானுடைய வழகுக்குத்தோற்றடிமையாயிருப்பார்க் கடிமையாயிருப்பார்கிடீர் இடையார் பிறப்பிடைதோறெமக்கெம் பெருமக்களென்கிறார்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய வாபரணசோபையிலீடுபட் டடிமைபுக்கவர்களுடைய அடியாரொங்களுக்குப் பெரியசேஷிகளென்கிறார்.

உடை-உடையோடு. ஆர்ந்த-பொருந்தின. ஆடையன்-திருப்பரிவட்டத்தையுடையனாய். கண்டிகையன்-கண்டாபரணத்தையுடையனாய். உடை-பரிவட்டத்தின்மேலேசாத்தின. நாணினன்-கோவைநாணையுடையனாய். புடை - ஒருபக்கலிலே. ஆர்-சேர்ந்த. பொன்னூலினன்-பொற்பூணூலையுடையனாய். பொன் - ஸ்ப்ருஹணீயமான. முடியன்-அபிஷேகத்தையுடையனாய். மற்றும்-மற்றும். பல்-பலவகைப்பட்ட. கலன்-ஆபரணங்களையும். நடையா - ஸ்வாபாவிகமாக. உடை - உடையனாய். திரு-ஸ்ரீமானான. நாரணன்-நாராயணனுக்கு. தொண்டர்-சேஷபூதரானவர்களுக்கு. தொண்டர்கண்டீர்-சேஷபூதரானவர்கள்கிடீர். இடையார்-நிரந்தரமான. பிறப்பு-பிறப்பினுடைய. இடைதோறு-அவகாசந்தோறும். எமக்கு - எங்களுக்கு. எம்பெருமக்கள்-அசாதாரணபரமசேஷிகள்.

இந்நாலுபாட்டாலும் - பாகவதருடைய சேஷித்வஞ்சொல்லிற்று.........*

## ஈடு-நான்காம்பாட்டு.

அவனுடைய ஆபரணசோபையிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சேஷபூதரானவர்களெனக்கு ஸ்வாமிகளென்கிறார்.

(உடையார்ந்தவாடையன்) திருவரைபூத்தாற்போலேயிருக்கை. “கௌஶேயவஸ்த்ரபுஷ்பிதகடீதடீ” (கௌஶேயபுஷ்பிதகடீதடம்) “பீதாம்பரதர:” (பீதாம்பரதர:) [தாஸாமாவிரபூச்சௌரி:] (தாஸாமாவிரபூத்) ஸ்ரீப்ருந்தாவநத்திலே யுலாவாநிற்கச்செய்தே, அவர்கள் படுமலமாப்புக்காண்கைக்காக மறையநின்றான்; “இனியிவர்கள் தரிக்கமாட்டார்கள்” என்றுதோற்றினவாறேவந்து தோற்றினான் [தாஸாம்] (தாஸாம்) கமர்பிளந்தவிடத்தே ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலேயிருக்கை. [ஸ்மயமாநமுகாம்புஜ:] (ஸ்மயமாநமுகாம்புஜ:) தன்னையொழியச்செல்லாமை யுண்டானால் பின்பவன் முகமிருக்கும்படியிதுபோலேகாணும். [பீதாம்பரதர:] (பீதாம்பரதர:) இவன்பக்கலிடைப்பெண்கள் நெஞ்சிற்பிறந்த ப்ரணயரோஷத்தாலுள்ள மறமெல்

லாமாறும்படியாயிற்றுடை வாய்ப்பிருப்பது. நெஞ்சுகளிற்பிறந்த புண்ணெல்லாந்தீர்ந்து இத்தோடேபணிபோரும்படி யாயிற்றிருப்பது. "படிச்சோதியாடை யொடும்பல்கலனாய் நின்பைம்பொற் கடிச்சோதிகலந்ததுவோ" என்றிதுவே பணிபோந்திருக்குமிறே. [ஸாக்ஷாந்மந்மதமந்மத:] (ஸாக்ஷாந்மந்மதமந்மத:) "பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறபடியே. (கண்டிகையன்) கூறையுடையழகுமேலே யெழவிசிப்போகநிற்க, நடுவே வழிபறித்துக்கொள்ளும் திருக்கழுத்திலாபரணம். இவ்வளமடிபிடித்துக்கொண்டுபோய்க் கழுத்தளவுசௌந்தர்யத்திலே நிறுத்திற்று. மடியென்பது-புடைவை. கண்டிகை-ஆரம். கண்டத்திலேசாத்துமவை. (உடைநாணினன்) அரைநூல்வடம். கழுத்தேகட்டளையாக அநுபவியாநிற்க, கண்டகதமான சௌந்தர்யதரங்கங்கள் கீழேபோரவீச நடுவேநின்றநுபவிக்கிறார். (புடையார்பொன்னூலினன்) தான்கிடந்த பக்கத்துக்குவேறொரு ஆபரணம்வேண்டாதே, காளமேகத்திலே மின்னினாற்போலேயிருக்கிற திருயஜ்ஞோபவீதத்தை யுடையவன். இந்தசௌந்தர்யசாகரத்தின்நடுவே அலையப்புக்கவாறே, தமக்காலம்பநமாக ஒருநூலைப்பற்றினார்காணும். (பொன்முடியன்) "தேர்கடவியபெருமான்" என்கிறபடியே, ஆஶ்ரிதர்க்காட்செய்கைக்கு முடிகவித்திருக்கிறவன். ஒருநூலைப்பற்றி நின்றவர்களை அதுதானே யொருதலைசேர்த்துவிடுகை நிஶ்சிதமிறே. பொன்முடி-ஸ்ப்ருஹணீயமானமுடி. (மற்றும்பல்கலன் நடையாவுடை) வேறுமெண்ணிறந்த திருவாபரணங்களை ஸ்வாபாவிகமாகவுடையவன். ஒருதலைசேர்ந்தால் பின்னையெல்லாம் வேண்டினபடியநுபவிக்கலாமிறே. (மற்றும்பல்கலன்) மின்மினிபறவாநின்றதுகாணும். அபரிமிதமாகையாலே முடியச்சொல்லமாட்டார், ஆசையாலே சொல்லாதொழியமாட்டார். இதிறேபடுகிறபாடு. (திருநாரணன்) அவ்வாபரணங்களோபாதிகாணும் லக்ஷ்மீசம்பந்தமு மங்குத்தைக்கு. "மார்வத்துமாலை" என்னக்கடவதிறே. திருவாபரணாழ்வார்களாகிறார் நித்யசித்தபுருஷர்களாகையாலே யிவர்களையுடையவன் திருநாரணனென்கையாலே - இம்மிதுநமேஜகத்துக்கு சேஷியென்கிறார். (தொண்டர்தொண்டர்கண்டீர்) சேஷித்வத்துக்கெல்லை யம்மிதுநமாயிருக்கிறாப்போலே, சேஷத்வத்தினு மெல்லையாயிருக்கிறவர்கள். (இடையாரித்யாதி) உச்சிவீடும்விடாதே நடுநெருங்கிவருகிறஜந்மங்களிலவகாசந்தோறும், ஒரொப்பனையாலன்றிக்கே வெறும்புறத்திலே நமக்குசேஷிகள். ஸ்ரீமானான நாராயணனுக் கடிமைபுக்கிருப்பார்க்கு, "இச்சேர்த்தியறிந்திவர்களாஶ்ரயிப்பதே" என்றிவர்களுக் கடிமைபுக்கார்க்கடியேனென்கிறார். அவர்கள் தங்களையெண்ணாதே யிருந்தபோதும் நமக்கு ஸ்வாமிகளென்கிறார். எங்களுக்கஸாதாரண சேஷிகள்.........*

## ஜீயர் அரும்பதம்·

நாலாம்பாட்டு. ( உடையார்ந்தவித்யாதி ) “ மற்றும்பல்கலன் ” இத்யாரப்ய, “ தொண்டர்தொண்டர்கண்டீர், எம்பெருமக்கள் ” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( அவனுடையவித்யாதி )

உடை-திருவரை. ஆர்ந்த-பொருந்தின. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணங்கள் ( கௌஶேயேத்யாதி ) இஶ்ஶ்லோகம்சாணுதை. ஸ்ரீபாகவதே தசமே கோபிகாகீதாநந்தரே, “ 𑌤𑌾𑌸𑌾𑌮𑌾𑌵𑌿𑌰𑌭𑍂𑌚𑍍𑌛𑍌𑌰𑌿𑌃 𑌸𑍍𑌮𑌯𑌮𑌾𑌨𑌮𑍁𑌖𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌃 । 𑌪𑍀𑌤𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑌃 𑌸𑍍𑌰𑌗𑍍𑌵𑍀 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌮𑌨𑍍𑌮𑌥𑌮𑌨𑍍𑌮𑌥𑌃. ( தாஸாமாவிரபூச்சௌரிஸ்ஸ்மயமாநமுகாம்புஜ: । பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீஸாக்ஷாந்மந்மதமந்மத: ) இங்கே - “ 𑌅𑌞𑍍𑌚𑌿𑌤𑌕𑌟𑌕𑌸𑌂𑌵𑌾𑌦𑌿𑌕𑍌𑌶𑍇𑌯𑌕𑌮𑍍 ” ( அஞ்சிதகடகஸம்வாதிகௌஶேயகம் ) என்றதநுசந்தேயம்.

ப்ரஸ்துதஶ்லோக வ்யாக்யாநார்த்தம் பதோபாதாந பூர்வகமாக வவதாரிகை ( தாஸாமாவிரபூத் ஸ்ரீப்ருந்தாவநத்திலேயித்யாதி ) தாஸாம்-க்ருஷ்ணவிரஹாஸஹிஷ்ணுதயாப்ராணாந்தர்த்துமஶக்தாநாம். அமுமர்த்தமாஹ ( கமர்பிளந்தவிடத்தேயித்யாதி ) இதுபோலே-ஸ்மய்மாநமாயிருக்குமாபோலே. “𑌤𑌾𑌸𑌾𑌃” ( தாஸ: ) என்றதுக்கர்த்தம் ( இவன்பக்கலித்யாதி ) மறமென்று-ரோஷகார்யங்களைச் சொல்லுகிறது. அவையாவன - * மின்னிடைமடவாரிற்சொன்னவைகள். விவரணம் ( நெஞ்சுகளிலித்யாதி ) பணிபோருகை-தத்விஷயவிசாரமேயாய்ச்செல்லுகை. அத்தையுபபாதிக்கிறார் ( படிச்சோதியித்யாதி ) இதுவேபணிபோந்திருக்குமிறே-இதுவேகார்யமாய்ப் போந்திருக்குமிறே. அதாவது-திருமேனிகாந்தி திருவாபரணமாய்க்கலந்ததுவோ, திருவாபரணங்கள் திருமேனிகாந்தியாய்க் கலந்ததுவோ; ஆடைகடிச்சோதியாய்க் கலந்ததுவோ, கடிச்சோதியாடையாய்க் கலந்ததுவோ என்றிந்த ஸம்ஶயத்துக்கே காலம்போருமித்தனைபோக்கி, சீற்றத்துக்கவகாச மில்லையென்றபடி. ஸ்த்ரீகளுக்கோ இப்படியாகர்ஷகமாவதென்ன ( ஸாக்ஷாந்மந்மதமந்மத: இத்யாதி )

பீதாம்பரத்தைவிட்ட வயவாந்தரத்திலேபோகிறது-முடிய வநுபவித்தோவென்ன ( கூறையுடையித்யாதி ) சாடு ( இவரையித்யாதி ) ஆரம்-பதக்கம். “ கண்டிகை ” என்றதுக்கர்த்தாந்தரம் ( கண்டத்திலேசாத்துமவையென்று ) “ கண்டிகாகண்டபூஷணம் ” என்று திருக்கழுத்து நிறையச்சாத்துமா பரணங்களென்றபடி.

சாடு ( கழுத்தேகட்டளையாகவித்யாதி )

புடை-பார்ஶ்வம். ஆர்-பொருந்தின. ரூபகசமாதியாலேயருளிச்செய்கிறார் ( இந்தஸௌந்தர்யேத்யாதி ) நூல்-திருயஜ்ஞோபவீதமும், சாஸ்த்ரமும். நூலென்றது-சமுத்ரயாநம்பண்ணுகிறவர்கள் கடலிலேசம்பான்மேலேமேல் தட்டிலேயிருந்து படிக்கிற நக்ஷத்ரசாஸ்த்ரம்.

ஒருதலைசேர்த்துவிடுகை-ஒருகரைசேர்த்துவிடுகை.

நடை-ஸ்வபாவம். சாடு ( ஒருதலையித்யாதி ) அந்தசமுத்ரத்துக்குள்ளே ஓடத்திலேயிருக்கிறவன் ஒருசாஸ்த்ரத்தைக்கொண்டு கரையேறினால், அநந்தரம்வே

ண்டினபடி மௌக்திகாதிகளை யநுபவிக்கலாமிறே யென்றபடி. தனித்தனியேசொல்லாதே, "மற்றும்" என்று-சமுதாயேந சொல்லுவானென்னென்ன (மின்மினியித்யாதி) மின்மினிபறக்கை-வெறியோடுகை. அதாவது-கண்வெறித்துப்போகை. அத்தாலே சொல்லுகிறானென்றபடி. பரிஹாராந்தரம் (அபரிமிதேத்யாதி)

ஆபரணப்ரகரணத்திலே பிராட்டியைச்சொன்னதுக்குபாவம் (அவ்வாபரணங்களோபாதியித்யாதி) அதாவது - அக்ர்யப்ராயந்யாயத்தாலே யிவளையுமாபரணமாகச் சொல்லுகிறதென்றபடி. அக்ர்யப்ராயந்யாயமாவது-அக்ர்யமத்யகதனுக்கும் அக்ர்யத்வம்வருகை. லக்ஷ்மீசம்பந்தஸ்யாப்யாபரணத்வே ப்ரமாணம் (மார்வத்தித்யாதி) "திரு" என்றதுக்கு-கீழிற்பதங்களிலே நோக்காக வாபரணகோடியிலே சேர்த்தருளிச்செய்து, "நாரணன்" என்றபதத்தோடேகூட்டி சேஷித்வத்திலே நோக்காக தாத்பர்யாந்தரம் (திருவாபரணுழ்வார்களித்யாதி) அன்றிக்கே, கீழெல்லாவற்றுலும் பலிதமாகவுமாம்,

"தொண்டர்தொண்டர்" என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்கிறார். (சேஷித்வத்துக்கித்யாதி) "திரு" என்றதினர்த்தத்வயாநுகுணமாக, "தொண்டர்" என்று-ஒப்பனையழகிலே தோற்றவர்களென்னுதல், சேர்த்தியழகிலே தோற்றவர்களென்னுதல்.

முந்தினவர்த்தம் (உச்சிவீடுமித்யாதி) "இடை" என்று-நடுவாய், ஆர்தல்-நெருங்குதலாய், நடுவே உச்சிவீடும்விடாதே நெருங்கிவருகிற வென்றபடி. ஒரொப்பனையாலன்றிக்கே-ஒரொப்பனையழகைக்காட்டித்தோற்பித்து சேஷியன்றிக்கே. த்விதியார்த்தம் (ஸ்ரீமானுனவித்யாதி) எம்பெருமக்கள்-எம்பெருமான்கள். ஸ்வாமிகளென்றபடி. "எமக்கு" என்று-என்னினைவாலே ஸ்வாமிகளென்கிறார் (அவர்கள்தங்களையித்யாதி) யத்வா, "பெருமக்களே" என்ற ஏவகாரார்த்தமாதல், அவர்கள் தங்களையெண்ணுதே யிருந்தபோதுமென்றது-தொண்டர்க்குத்தொண்டரானவர்கள் தங்களைசேஷிகளாகத் தங்கள்நினைவாலே யெண்ணுதிருந்தபோதுமென்னுதல் ; அன்றிக்கே, அவர்கள் தங்களையென்றது - அம்மிதுநத்தையென்றபடியாய், நாரணன் தொண்டரானவர்கள் ஒருகால் மிதுநத்தையாஶ்ரயித்துப் பின்பவர்களை யெண்ணுதிருந்தபோது மென்னுதல்.

அயோத்யாகாண்டே தசரதவாக்யம், "𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌕𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑌨𑌂 𑌰𑌾𑌮𑌮𑌤𑍀𑌵 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 । 𑌰𑍂𑌪𑍌𑌦𑌾𑌰𑍍𑌯𑌗𑍁𑌣𑍈𑌃 𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌪𑌹𑌾𑌰𑌿𑌣𑌂" (சந்த்ரகாந்தாநநம்ராமமதீவப்ரியதர்ஶநம்। ரூபௌதார்யகுணை:பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) க்ரமேணுந்வய:......................................*

# ஐந்தாம்பாட்டு.

பெருமக்களுள்ளவர்தம்பெருமானையமரர்கட்
கருமையொழியவன்றூரமுதூட்டியவப்பனைப்
பெருமைபிதற்றவல்லாரைப்பிதற்றுமவர்கண்டீர்
வருமையுமிம்மையுநம்மையளிக்கும்பிராக்களே.

## ஆருயிரப்படி.

(பெருமக்கள்) ப்ரஹ்மேஶாநாதி சர்வதேவர்களுக்கு மீஶ்வரனுய், அம்ருதப்ரதாநாதிகளாலே யவர்களுக்கு ரக்ஷகனுயிருந்தவவனுடைய விப்பெருமையைப் பிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர் சர்வகாலமு ம்நமக்கு ரக்ஷகரான ஸ்வாமிகளென்கிருர்...............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதர் ப்ரயோஜநாந்தரத்தை யபேக்ஷிக்கிலு மவர்களருமைப்படாமற் கொடுக்குமவனுடைய வுபகாரகத்வாதிசயத்தை ஸ்துதிப்பாரைஸ்துதிக்குமவர்கள் உபயவிபூதியிலுந்தமக் குபகாரகரென்கிருர்.

உள்ளவர்-பரமசாம்யாபத்திலேவரும். பெரு-பெருமையையுடைய. மக்கள்-நித்யசூரிகளுக்கு. தம்-அசாதாரணனை. பெருமானை-அதிபதியாய். அமரர்கட்கு-சாவாமைவேண்டியிருக்கும்தேவர்களுக்கு. அருமை-அருமை. ஒழிய-படாதபடி. அன்று-துர்வாஸஶ்ஶாபோபஹதரானவன்று. ஆர்-பூர்ணமாக. அமுது. அம்ருதத்தை. ஊட்டிய-புஜிப்பித்து. அப்பனை-சத்தையைநோக்கினவனையுத்தேசித்து. பெருமை-அவனுபகாரகத்வமஹத்தையை. பிதற்றவல்லாரை-ப்ரீதிபாரவஶ்யத்தாலே அக்ரமமாகப்பிதற்றவல்லாரை. பிதற்றுமவர்கண்டீர்-தாங்களும்ப்ரீதிபரவசராய்ப் பிதற்றுமவர்கிடீர். வருமையுமிம்மையும்-ஐஹிகாமுஷ்மிகங்களில். நம்மை-நம்மை. அளிக்கும்-உஜ்ஜீவிப்பிக்கும். பிராக்கள்-உபகாரகர்.................................*

## ஈடு-ஐந்தாம்பாட்டு.

ப்ரயோஜநாந்தரபரர்க்கு மபேக்ஷிதசம்விதாநம் பண்ணுமவனௌதார்யத்திலே தோற்றவர்கள் ஸ்வபாவத்துக்குத் தோற்றவர்களெனக்கு ஸ்வாமிகளென்கிருர்.

(பெருமக்கள்) நித்யசூரிகள். பெரியோரென்றபடி. "பேராளன் பேரோதும்பெரியோர்" என்னக்கடவதிறே. "மஹாத்மாநஸ்து" (மஹாத்மாநஸ்து) என்றும், "ஸமஹாத்மாஸுதுர்லபः" (ஸமஹாத்மாஸுதுர்லபः) என்றும், "ஏதேவைஸமஹாத்மாநः" (ஏதேவைஸமஹாத்மாநः) என்றுமிறே சேஷிவார்த்தையும். சம்சாரத்திலே முமுக்ஷுவா யாபிமுக்யம்பண்ணின மாத்ரத்திலே சொல்லுகிறபடி யிதுவானல், நித்யசூரிகளை யிப்படிசொல்லக்கேட்க வேண்டாவிறே. (உள்ளவர்) "அஸந்நேவ" (அஸந்நேவ) என்பது, ஒருநாள்வரையிலே "ஸந்தமேநம்" (ஸந்தமேநம்) என்பதாகாதே, என்றுமொக்கவுள்ளவர்கள். அதாவது-ஸ்வரூபமானசேஷத்வமழியாமையாலே. நிரூபகமில்லையானல் நிரூப்யமில்லையாமிறே. சேஷத்வ ப்ரதிபத்திக்கொருநாளும் குறைதல் வாராதவர்கள். (தம்பெருமானை) அவர்களுக்குசத்தாஹேதுவாய் அந்தவுண்மையைக் கடத்திக்கொடுக்குமவனை. (அமரர்கட்கு) நம்பிற்காட்டி.

ல் நாலுநாள்சாவாதேயிருக்கிறத்தையிட்டு அவர்கள்பேரைச்சுமந்துகொண்டிருக்கிற இந்த்ராதிகளுக்கு. (அருமையொழிய) அசுரர்கள்கையிலே படுமெளிவரவு திரும்படியாகக் கடலைக்கடைந்து அவர்கள்பலத்திலே யந்வயிக்கும்படி பண்ணினவனிறே. கடலைக்கடையும் வருத்தத்தைத் தன் பக்கலிலேயாக்கி, இவர்களுக்கம்ருதபோகத்திலே யந்வயமாம்படிபண்ணினபடி. ( அன்று ) துர்வாஸஸ்ஸாபோப ஹதரானதசையிலே. ( ஊட்டியவப்பனை ) * வானவரைப்பெண்ணாகி யமுதூட்டும் பெருமானாரிறே. அப்பன்-உபகாரகன். ப்ரஜைக்குத் தாய்பண்ணுமுபகாரமாவது- அதின்முகம்வாடாமே வளர்க்கையிறே. (பெருமையித்யாதி) “ உதாரா: ” ( உதாரா: ) என்கிறபடியே, தன்னையே ப்ரயோஜநமாகப் பற்றினார்க்குப் போலே, ஐஸ்வர்யாதிகளை யுகந்தார்க்கும் “ இத்தையாகிலும் நம்பக்கலிலே கொள்ளப்பெற்றோமே, இவர்கள்நமக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணுகிறார்களன்றோ ” என்றிருக்கும்பெருமை. நாட்டார்படியல்ல இவனது. நாட்டில்கொடுப்பாரு தாரராயிருப்பர்-இங்குக்கொள்வாருதாரராயிருப்பர். ஏதேனுமாகக் குறைதீர்ப்பாரு தாரராமித்தனையிறே. ( பிதற்றவல்லாரை ) “ அறவனை ” என்கிறபடியே “ ப்ரயோஜநாந்தர பரராளவிலுமிப்படியிருப்பதே ” என்றித்தை நெஞ்சிலேயநுசந்தித்து அடைவுகெடக் கூப்பிட்டேத்து மவர்களை. ( பிதற்றுமவர்கண்டீர் ) “ இந்நீர்மையிவர்களுக்கு நிலமாவதே ” என்று அவர்களவன்பக்கலிருக்குமிருப்பை அவர்கள்பக்கலிலே யிருக்குமவர்கிடீர். இவர்களுத்தேஸ்யராவ தெத்தனை நாளைக்கென்ன ( வருமையுமிம்மையும் ) “ அத்ர பரத்ர சாபி ” ( அத்ரபரத்ரசாபி ) இஹலோகபரலோகங்க ளிரண்டிலும். இஹலோகத்தில் * நாட்டாரோடியல்வொழித்து, பரலோகத்தில் * நாரணனைநண்ணுவித்து * அடியார்கள்குழாங்களிலே யுடன்கூட்டுமுபகாரகர். ( நம்மையளிக்கும்பிராக்கள் ) நம்மையுஜ்ஜீவிப்பிக்கும்ஸ்வாமிகள். சர்வேஸ்வரன் ஒருநாள்வரையிலே யுபசம்ஹரித்திட்டுவைத்து, ஒருநாள்வரையிலே சம்சாரத்திலே * தருதுயரந்தடாதே வைக்குமிறே ; ஸ்ரீவைஷ்ணவர்களோடே சஹவாசம்பண்ணப்பெறில், ‘‘ சம்சாரந்தானேநன்று ’’ என்னும்படியிறே யவர்கள்படி. “நலமாவிரைநாண்மலரடிக் கீழ்ப்புகுதலுறுமோ” என்றாரிறே...................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( பெருமக்களித்யாதி ) “ அமரர்கட்கருமை ” என்றுதொடங்கி, “ அளிக்கும்பிராக்கள் ” என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( ப்ரயோஜநாந்தரோத்யாதி )

இஸ்ஸப்தம்-நித்யஸூரிகளை யெப்படிசொல்லுமென்ன ( பெரியோரித்யாதி ) முமுக்ஷுவிஷயத்தில்-மஹச்சப்த ப்ரயோகம்காண்கையாலே, தந்யாயோரு

ரிகளையும் சொல்லுமென்கிருர் (பேராளனித்யாதி) திருமொழி. இதுக்கர்த்தம்-முன்பே யெழுதிற்று. கீதாசுநவமே, “𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌦𑍈𑌵𑍀𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 । 𑌭𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍.” (மஹாத்மாநஸ்துமாம்பார்த்ததைவீம்ப்ரக்ருதிமாஸ்ரிதா꞉। பஜந்த்யநந்யமநஸோஜ்ஞாத்வாபூதாதிமவ்யயம்.) ஸப்தமே “𑌬𑌹𑍂𑌨𑌾𑌂 𑌜𑌨𑍍𑌮𑌨𑌾𑌮𑌨𑍍𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌸 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌃” (பஹூநாம்ஜந்மநாமந்தேஜ்ஞாநவாந்மாம்ப்ரபத்யதே। வாஸுதேவஸ்ஸர்வமிதிஸமஹாத்மாஸுதுர்லப꞉) இந்தப்ரமாணங்களெல்லாம்-சூரிகள் விஷயமன்றே, முமுக்ஷுக்கள் விஷயங்களன்றோவென்ன (சம்சாரத்திலேயித்யாதி) உண்மை சர்வசாதாரணமன்றோ, இவர்களை - “உள்ளவர்” என்றுவிசேஷிக்கிறதென்னென்ன (அஸங்கேவேத்யாதி) சேஷத்வஜ்ஞாநாபாவத்தில் ஸ்வரூபம்போமோவென்ன (நிருபகமித்யாதி) பலிதம் (சேஷத்வேத்யாதி) சேஷத்வமழியாமையாலே-சேஷத்வஜ்ஞாந மழியாமையாலே. “சத்தாஹேதுவாய்” என்றதின்விவரணம் (அந்தவுண்மையையித்யாதி)

ஆவதழிவதாகிறவர்களை - “அமரர்” என்கிறதெத்தாலேயென்ன (நம்மிலித்யாதி) அருமையொழிய-ஆயாசம் தீரும்படியாக; அசுரர்களால் வந்தக்லேசம் போம்படியாகவென்று முந்தினவர்த்தம். (அசுரர்களிதி) எளிவரவு-க்லேசம். கடைகையிலுள்ள வாயாசமவர்களுக்கொழிய வென்றர்த்தாந்தரம் (கடலையித்யாதி) உக்தார்த்தே ப்ரமாணம் (வானவனாயித்யாதி) திருமொழி. “நண்ணுத” இத்யாதி. தேவர்களை ஸ்த்ரீவேஷத்தையுடையனாய்க்கொண்டு அம்ருதத்தைபுஜிப்பிக்கும் ஸ்வாமியானவரித்யர்த்த꞉. ப்ரயோஜநாந்தரத்தைக்கொடுக்கை யுபகாரமோவென்ன (ப்ரஜைக்கித்யாதி)

இதிலவனுக்குப் பெருமையேதென்ன (உதாராஇத்யாதி) கீதாஸுஸப்தமே, “𑌉𑌦𑌾𑌰𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵𑍈𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 𑌮𑍇 𑌮𑌤𑌮𑍍 । 𑌆𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌸 𑌹𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌾𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍.” (உதாராஸ்ஸர்வஏவைதேஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்। ஆஸ்த்திதஸ்ஸஹியுக்தாத்மாமாமேவாநுத்தமாம்கதிம்) கொள்வாருதாரராம்படியென்னென்ன (நாட்டாரித்யாதி) அவர்களிடத்திலௌதார்யமேதென்ன (ஏதேனுமித்யாதி) அறவனை-தார்மிகனை. நிலமாவதேயென்று - (அவர்கள்பக்கலிலே யிருக்குமவர்கிடீர்) என்றந்வயிப்பது. அவர்களவன்பக்கலிலே யிருக்குமிருப்பாவது - “ப்ரயோஜநாந்தர பரர்க்கத்தைக் கொடுத்துவிடுவதே, இதென்னநீர்மை” என்றநுசந்தித்துப் பிதற்றுகை.

“வருமையுமிம்மையும்” என்கிறது-காலவாசியாசிலும், ததுபலக்ஷிததேசங்களைக்காட்டுகிறது. (அத்ரபாத்ரசாபிஇதி) ஸ்தோத்ரரத்நே, “𑌤𑌸𑍍𑌮𑍈 𑌨𑌮𑍋 𑌮𑌧𑍁𑌜𑌿𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿” (தஸ்மைநமோமதுஜிதங்க்ரி) இத்யாதி. அளிக்கும் ப்ரகாரமேதென்ன (இஹலோகத்திலித்யாதி) பிராக்கள்-உபகாரகர். “பிராக்கள்” என்றதுக்கு-ஸ்வாமிகளென்றர்த்தாந்தரம் (நம்மையித்யாதி) ஏகாரத்துக்குபாவம் (சர்வேஸ்வரனித்யாதி) உபசம்ஹரித்திட்டுவைத்து - மோக்ஷத்தைக்கொடுத்துவைத்து. (தருதுயரம்தடாதே) நீயேதருகிறது꞉கத்தை நீயேபோக்காதேயித்யர்த்த꞉. பெருமாள்திருமொழி. உக்தத்துக்குப்ரமாணம் (நலமாவிளாயித்யாதி) ஸ்ரீ

வாமநனுடைய, மிக்கபரிமளத்தையும் ஶ்லாக்யமான மதுவையுமுடைத்தான செவ்விப்பூப்போலேயிருக்கிற திருவடிகளின்கீழே புகுதல்சீரியதோ வித்யர்த்தஃ.

அப்பனையுத்தேசித்து, அவனுபகார மஹத்தையைப் பேதற்றவல்லாரை யிதி சப்தார்த்தஃ. க்ரமேணாந்வயஃ..................................................*

# ஆறாம்பாட்டு.

அளிக்கும்பரமனைக்கண்ணனையாழிப்பிரான்றன்னைத்
துளிக்குநறுங்கண்ணித்தூமணிவண்ணனெம்மான்றன்னை
யொளிக்கொண்டசோதியையுள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர்
சலிப்பின்றியாண்டெம்மைச்சன்மசன்மாந்தரங்காப்பரே.

## ஆறாயிரப்படி.

( அளிக்கும் ) தேவமநுஷ்யாதி ரூபேணாவதீர்ணனாய், சர்வஜகத்ரக்ஷகனாய், சங்கசக்ராதி திவ்யாயுததரனாய், திவ்யமால்யோப சோபிதனாய், ஹேயப்ரத்யநீகனாய், நிரதிசயதேஜோவிசிஷ்டனாயிருந்தவெம்பெருமானையுள்ளத்துக்கொள்ளு மவர்கண்டீர் ஒருசலநமில்லாதபடி யாண்டெம்மைச் சன்மசன்மாந்தரங் காப்பாரென்கிறார்........... ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநந்யப்ரயோஜநர்க்குத் தன்வடிவழகையநுபவிப்பிக்கு முஜ்ஜ்வலஸ்வபாவனை யநுபவிப்பார் நமக்குரக்ஷகரென்கிறார்.

பரமனை-உபகரிக்குமிடத்தில்மேலில்லாதபடியாக. அளிக்கும் - தன்னைஉபகரிப்பானாய். கண்ணனை-அவர்களிட்டவழக்காம்படி பவ்யனாய். ஆழி-கையுந்திருவாழியுமானவழகையும். துளிக்கும்-மதுஸ்யந்தியாய். நறும்-பரிமளோத்தரமான. கண்ணி-மாலையழகையும். தூ-அழுக்கற்ற. மணி-மாணிக்கம்போன்ற. வண்ணம்-வடிவையும். பிரான்றன்னை-உபகரித்து. எம்மான்றன்னை-என்னையெழுதிக்கொண்டஸ்வாமியாய்.ஒளிக்கொண்ட-அத்தாலேமிகவும்நிறம்பெற்ற.சோதியை - தேஜஸ்ஸையுடையனானவனை. உள்ளத்து-நெஞ்சாலே. கொள்ளுமவர்கண்டீர்-அநுபவிக்குமவர்கள்கிடீர். எம்மை-எம்மை. சலிப்பின்றி-ப்ரயோஜநாந்தரங்களிற்போகாமல்நிஶ்சலமாக. ஆண்டு-அடிமைகொண்டு. சன்மம் - இஜ்ஜந்மத்தோடு. சன்மாந்தரம்-ஜந்மாந்தரங்களோடுவாசியற. காப்பர்-ரக்ஷிக்குமவர்கள்..............................*

## ஈடு - ஆறாம்பாட்டு.

கீழ்ச்சொன்ன சௌந்தர்யாதிகளைத் திரளவநுபவிக்கு மவர்களெனக்கு ரக்ஷகரென்கிறார்.

( அளிக்கும்பரமனை ) இவ்வாத்மாக்களை ரக்ஷிக்குமிடத்தில் தனக்கவ்வருகில்லாதவனை. ( அன்றிக்கே, உபகரிக்குமிடத்தில் மேலில்லாத

வனென்னுதல். அளிக்கை-ரக்ஷிக்கையும், கொடுக்கையும்.) (கண்ணனை) அளிப்பதுதன்னையிறே. "எனக்கேதன்னைத்தந்தகற்பகம்" (ஆழிப்பிரான்றன்னை) "நாயுதாநி" (நாயுதாநி) என்கிறபடியே, தன்னோடு ஆயுதத்தோடுவாசியற "ஹஸ்தாநாம்" (பக்தாநாம்) என்றிருக்குமவனை. "ஆளும்பரமனை" என்கிறபாட்டைநினைக்கிறது. (துளிக்குமித்யாதி) அவ்வளவிலகப்படாதாரை யகப்படுத்துகைக்கீடான கண்ணியிருக்கிறபடி. (துளிக்கும்நறுங்கண்ணி) திருமேனியில் ஸ்பர்ஶத்தாலே செவ்வி பெற்று மதுஸ்யந்தியாநிற்பதாய், நறுநாற்றத்தையுடைய திருத்துழாய் மாலையையு முடையனாய். "நறுந்துழாய்ப்போதனை" என்கிறத்தைநினைக்கிறது. (தூமணிவண்ணனெம்மான்றன்னை) பழிப்பற்றநீலமணிபோலேயிருக்கிற திருநிறத்தைக்காட்டி யென்னையநந்யார்ஹ மாக்கினவனை. "மணியைவானவர்கண்ணனை" என்கிறபடியே-நித்யஸூரிகளை யெழுதிக்கொண்டபடியே காணுமிவரையு மெழுதிக்கொண்டது. "படிகண்டறிதியே" என்னக்கடவதிறே. "தோளுமோர்நான்குடைத் தூமணிவண்ணன்" என்றத்தைநினைக்கிறது. (ஒளிக்கொண்டசோதியை) நிரவதிக தேஜோரூபமான விக்ரஹத்தையுடையவனை. "பயிலுஞ்சுடரொளி" என்றத்தைநினைக்கிறது. (உள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர்) குணங்களையநுசந்தித்து வித்தராய்வாய்விடமாட்டாதே யிருக்குமவர்கள்கிடீர். (சலிப்பின்றியாண்டெம்மை) பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணினால் ப்ரஹ்மாத்யைஶ்வர்யங்களைக்கொண்டு மீளவுமாம், ததீயசேஷத்வ பர்யந்தமானலாயிற்று மீளாதொழிவது. மீண்டார்களாகிலும் * திரிதந்தாகிலுந்தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக்காணுமித்தனையிறே. "தெரிவைமாருருவமேமருவி" என்கிறபடியே, பலவுருச்சொல்லிப் போகவேண்டாதே இவ்வோருருவிலும் போரும்படியிறே யவர்கள்சொல்லுவது. (சன்மசன்மாந்தரங்காப்பரே) ஜந்மபரம்பரைகள் புகாதபடிரக்ஷிப்பார்கள். கீழ்ப்பாட்டுக்களிலே-ஜந்மத்தையாதரித்தார் ஸ்ரீவைஷ்ணவர்கள்பக்கலாதரத்தாலே; இங்கு-அவர்கள்செய்யும்படி. சொல்லுகிறார்..........*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (அளிக்குமித்யாதி) பாட்டெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (கீழ்ச்சொன்னவித்யாதி) கீழ்ச்சொன்ன - * பயிலும்சுடரொளி தொடங்கிச்சொன்ன. திரள-சங்க்ரஹமாக.

அளிக்கையென்றதுக்கு - ரக்ஷிக்கையென்று கீழேசொல்லி, கொடுக்கையென்றர்த்தாந்தரம் (அளிப்பதுதன்னையிறேயென்று) "அளிக்கும்" என்றதின்த்விதீயார்த்தத்துக்குச் சேரபாவம் (நாயுதாநீத்யாதி) ஜிதந்தாயாம் பூர்வமேவவிவக்ஷிதம். "கீழ்ச்சொன்னசௌந்தர்யாதிகளைத் திரளவநுபவிக்குமவர்கள்" என்று

அவதாரிகையிற் சொன்னவர்த்தத்தை தத்தத்பதங்களாலே காட்டுகிறார் ( ஆளும் பரமனையித்யாதியாலும், நறுந்துழாயித்யாதியாலும், தோளுமோர்நான்குடையித்யாதியாலும், பயிலுஞ்சுடரொளியித்யாதியாலும் )

கீழ்ப்பதத்தையும்கூட்டி மேலுக்குரஸோக்தியாகஸங்கதி (அவ்வளவிலித்யாதி) ஒரும்ருகத்தைவளைத்தா லதுக்குத்தப்பினல் கண்ணியிட்டுப்பிடிப்பார் களிறேயென்றுரஸோக்தி. கண்ணி - குளச்சிட்டகயிறும்; மாலையும். நறுநாற்றம் - மிக்கபரிமளம்.

பழிப்பு - மாலிந்யம். படியே-விக்ரஹமே. படியென்று-விக்ரஹத்தைச்சொல்லுமோவென்ன ( படிகண்டித்யாதி ) முதற்றிருவந்தாதி. " மணியைவானவர்கண்ணனை " என்றவிடத்திலே, " மணி " என்று-சௌலப்யபரமாகக்கீழ் வ்யாக்யாதமானாலும், இவ்விடத்திலிப்படியருளிச்செய்கையாலே, வடிவழகுமோரர்த்தமாகக்கண்டுகொள்வது.

ஏத்துமவனென்னாதே, " உள்ளத்துக்கொள்ளுமவர் " என்றதுக்குபாவம் ( குணங்களையித்யாதி )

" சலிப்பின்றி " என்றுவிசேஷித்ததுக்குபாவம் ( பகவத்ஸமாஸ்ரயணமித்யாதி ) சலிப்பு-சலநம். அதாவது-ப்ரயோஜநாந்தரபரதை. ததீயசேஷத்வபர்யந்தம்போனாலும் மீளுகிறபேரில்லையோவென்ன ( மீண்டார்களாகிலுமித்யாதி ) ( திரிதந்தாகிலுமித்யாதி ) மீண்டார்களாகிலும் தேவபிரானுடைய கறுத்தவழகிய திருமேனியைக் காணுமத்தனையித்யர்த்தஃ. " திருவுரு " என்றவேகவசநத்துக்குபாவம் ( தெரிவைமாரித்யாதி ) ரஸோக்தி. திருமொழி-முதற்றிருமொழி-மூன்றாம்பாட்டு. " சேமமேவேண்டி " இத்யாதி. ஸ்த்ரீகளுடைய தேஹத்தையே ஆதரித்தித்யர்த்தஃ. பலவுருச்சொல்லுகை வாய்க்காயாசமென்று த்வந்யர்த்தம். அவர்கள்-பாகவதர்கள். சன்மசன்மாந்தரம்காப்பர்-இந்தஜந்மநிமித்தமாகவும் ஜந்மாந்தரநிமித்தமாகவும் காப்பரென்றபடி. முதற்பாட்டுத்தொடங்கி யிவ்வளவாக-ஜந்மத்தையாதரித்து, இப்பாட்டிலே - த்யாஜ்யமாகச்சொல்லுவானென்னென்ன (கீழ்ற்பாட்டுக்களிலேயித்யாதி )

க்ரமேணாந்வயஃ. ..................................................................*

---

# ஏ ழா ம் பா ட் டு.

---

சன்மசன்மாந்தரங்காத்தடியார்களைக்கொண்டுபோய்த்
தன்மைபெறுத்தித்தன்றாளிணைக்கீழ்க்கொள்ளுமப்பனைத்
தொன்மைபிதற்றவல்லாரைப்பிதற்றுமவர்கண்டீர்
நன்மைபெறுத்தெம்மைநாளுய்யக்கொள்கின்றநம்பரே.

## ஆறாயிரப்படி.

( சன்மசன்மாந்தரம் ) ஜந்மங்கடோறு மிந்தலோகத்திலே தானும்வந்துபிறந்தருளி யாஸ்ரிதரைரக்ஷித்து, பின்னையவர்களைக்கொண்டுபோய் அசங்குசித ஜ்ஞாநராக்கித்தன் தாளிணைக்கீழ்க்கொள்ளு மப்பனு

டைய விந்தஸ்வாபாவிகமான குணத்தைப்பிதற்றவல்லாரைப் பிதற்றும வர்கண்டீர் ஸ்வசேஷதைக ரதித்வசம்பத்தை நமக்குத்தந்து அத்தைநித் யசித்தமாக்குவ ரென்கிறார்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்வாநுபவம்பண்ணுவாரை ஸ்வரூபாவிர்ப்பாவத்தைப் பிறப்பித் தநுபவிப்பிக்குமவனைப் புகழுமவரைப் புகழுமவர்கள் நமக்கு நித்யபுருஷார்த்த ப்ரதரென்கிறார்.

சன்மசன்மாந்தரம் - ஜந்மபரம்பரைகள். காத்து - வாராதபடிபரிஹரித்து. அடியார்களை-சேஷத்வஜ்ஞாநமுடையவர்களை. கொண்டுபோய்-ஒருதேசவிசேஷத் திலேகொண்டுபோய். தன்மை-ஸ்வரூபாவிர்ப்பாவத்தை. பெறுத்தி-பிறப்பித்து. தன்-தன். தாளிணைக்கீழ்-திருவடிகளின்கீழே. கொள்ளும்-அடிமைகொண்டருளும். அப் பனை-ஸ்வாமியானவனை. தொன்மை-ஸ்வாபாவிகோபகாரகத்வத்தை. பிதற்றவல் லாரை-சொல்லிஅக்ரமமாகப்புகழவல்லாரை. பிதற்றுமவர்கண்டீர்-தாங்களும்ப்ரே மவித்தராய்ப்புகழுமவர்கள்கிடீர். எம்மை-நம்மை. நன்மை - * அந்தமில்பேரின்ப த்தடியரோடிருக்கும்நன்மையை. பெறுத்து-பெறும்படிபண்ணி. நாள்-யாவதாத்ம பாவி. உய்யக்கொள்கின்ற-உஜ்ஜீவிப்பித்துக்கொள்வாராக. நம்பர்-விஸ்வசிக்கப்ப டுமவர்கள்.

நம்பர்-நம்பப்படுமவர்கள். இம்மூன்றுபாட்டாலும் - பாகவதருடைய சர ண்யத்வம் சொல்லிற்று.......................................................*

## ஈடு-ஏழாம்பாட்டு.

ஆஶ்ரிதவிஷயத்திலவன்பண்ணும் மஹோபகாரங்களிலே வித்த ரானவர்களுக்குத் தோற்றிருக்குமவர்கள் கிடீரெனக் கெற்றைக்கும் ஸ் வாமிகளென்கிறார்.

(சன்மசன்மாந்தரங்காத்து) பஞ்சாக்நிவித்யையிற் சொல்லுகிற படியே-மேகத்திலேபுக்கு வர்ஷரூபத்தாலே பூகதமாய், வ்ரீஹியிலேபுக் கு,அந்நரூபத்தாலேபுருஷன்பக்கலிலேபுக்கு, பின்புபஞ்சமியானவாஹு- தியிலேபுக்கு, பின்பிறேகர்ப்பமாவது; இப்படிவருகிற ஜந்மபரம்பரைகளை வேர்ப்பற்றறேயறுத்து. வர்த்தமாநதேஹாவதியாக்கிப் பின்பொருதே ஹத்தில் புகாதபடிபண்ணி. இப்படிசெய்வதாரையென்னில் (அடியார்க ளை) தன்திருவடிகளிலே சர்வபரந்யாசம்பண்ணியிருக்குமவர்களை. (கொ ண்டுபோயித்யாதி) "மாரணமானல்" என்கிறபடியே-சரீரவிஶ்லேஷத்தள வும் பொறுத்திருந்து அந்திமஸ்ம்ருதியும் பக்தியுமிவர்களுக்குப் பணியா க்காதே "அஹம்ஸ்மராமி" (அஹம்ஸ்மராமி) என்கிறபடியே-தானேநினைத் து, வழிதெரியாதபடி யிருக்கிறசதாதிகையான நாடியாலே "ஹார்தாநு- க்ருஹீதஃ" (ஹார்தாநுக்ருஹீதஃ) என்கிறபடியே-தான்கூடக்கொண்டு பு றப்பட்டு, அந்தசரீரவிஶ்லேஷசமயத்தி லிவன்பட்டக்லேசமெல்லாம் தீ ரும்படியாக அவ்வளவிலே யொருபரமாத்ம ப்ரவேசத்தைப்பண்ணுவித்

து, சிறுப்ரஜைகள்நொந்தால் தாயானவள் சிசிரோபசாரம்பண்ணுமாபோலே அவ்வளவிலே மேல்வழிபோகைக்குத் தரிப்புண்டாம்படிபண்ணி, "உயிர்கொண்டுடலொழிய வோடும்போதோடி யயர்வென்றதீர்ப்பான்" என்கிறபடியே-சென்றுமுகங்கொடுத்து, கர்மசம்பந்த மறச்செய்தேயும் வித்யாமாஹாத்ம்யத்தாலே விரஜையளவும் ஸூக்ஷ்மசரீரம்நிற்கும்படிபண்ணி, அர்ச்சிராதிகணங்களோடொக்க ஆஸிட்டிரர்தே, "நயாமி" (நயாமி) என்கிறபடியே-தானேவந்து, "மாதவன்றன்றுணையாநடந்தாள்" என்கிற * கள்வன்கொல்லில் பிராட்டியைப்போலே தன்சிறகின்கீழேகொண்டு, வழியிலுள்ளார் சிரசாவஹிக்கும்படி இவ்வருகுள்ளவற்றைக்கழித்துப் பரமபதத்திலேகொண்டுபுக்கு, "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" (ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே) என்கிறபடியே-ஸ்வஸ்வரூபப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து, பின்னையும்விடாதே பாதோபதாநமாகத்தன் திருவடிகளின்கீழேயிட்டுக்கொண்டு, இதுதானிவனுக்குபகரித்தானு யிருக்கையன்றிக்கே தன்பேறாக நினைத்திருக்கும் மஹோபகாரகனை. "ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே" (ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே) இத்யாதி. (தன்மைபெறுத்தி) ஸ்வஸ்வரூபாவிர்ப்பாவத்தைப் பிறப்பித்து. (அப்பனை) இதுதன்னையிவன் சேதநனாகையாலே உபகாரமாகநினைத்திருக்கும்; பாரதந்த்ர்யத்தாலே அவன்தனக்காகச் செய்தானுயிருக்கும். (தொன்மைபிதற்றவல்லாரை) ஸ்வாபாவிகமான ஔதார்யகுணத்திலே யீடுபட்டு அக்ரமமாகப்புகழுமவர்களை. "தாநஹம்த்விஷதஃ" (தாநஹம்த்விஷதஃ) என்றுதள்ளுமது இவன்செய்தகுற்றங்களைக் கண்டாகையாலே ஔபாதிகமிறே, ஸ்வாபாவிகமான நிலையாவதிப்படிரக்ஷிக்கை. (பிதற்றுமவர்கண்டீர்) "அந்தஃபுரவ்ருத்தாந்த மிவர்களுக்குநிலமாவதே" என்று அவர்கள்விஷயத்திலே யீடுபட்டேத்துமவர்கள்கிடீர். (நன்மைபெறுத்து) பாகவதசேஷத்வபர்யந்தமான பகவச்சேஷத்வசம்பத்தையுண்டாக்கி. (எம்மைநாளுய்யக்கொள்கின்றநம்பரே) நமக்கவன்றிருவடிகளில் கைங்கர்யத்தை யாவதாத்மபாவி நடத்தக்கடவ விஸ்வஸநீயர். மூதலிக ளென்றுமாம்.. ........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (சன்மசன்மாந்தரமித்யாதி) "தொன்மைபிதற்றவல்லா ரை" இத்யாதிமேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (ஆஸ்ரிதேத்யாதி) எற்றைக்கும்-எல்லாக்காலத்துக்கும்.

காத்து-பரிஹரித்து. "சன்மசன்மாந்தரம்" என்கைக்கு-அப்படிஜந்மபரம்பரைகளுண்டோவென்ன (பஞ்சாக்நீத்யாதி) பஞ்சாக்நிகளாவன-அக்நித்வேநரூபிதங்களான த்யுபர்ஜந்ய ப்ருதிவீபுருஷயோஷித்துக்கள். இவ்விடத்தில்; அக்நியென்றும், ஆஹுதியென்றும்-பர்யாயம். இந்தவைந்திலும்சேதநன் ப்ரவேசிக்கும்

க்ரமமாவது-யாதநாசரீரத்தாலேநரகாநுபவம்பண்ணி, அந்தசரீரத்தைவிட்டு,புண்யசரீரத்தையெடுத்து ஸ்வர்க்காநுபவம்பண்ணி,அநந்தரம்கோட்டைக்கும்புறம்பே " 𑌧𑍍𑌵𑌂𑌸 " ( த்வம்ஸ ) என்றுதள்ள, அந்தசரீரத்தை ராக்ஷஸர்பக்ஷிக்க, ஸூக்ஷ்மசரீரத்தோடே நிராலம்பநமாக வாகாசத்திலேவிழ, ஆதித்யன்தன் கிரணத்தாலே ஹிமங்களை க்ரஹித்தந்த ஈரத்தாலே ஆகாசத்திலே, மங்கிக்கிடக்கிற வாத்மாவையெடுத்து மேகத்திலேபொகட, அந்தஹிமம் மேகத்திலேவர்ஷரூபேணபரிணதமாய் வர்ஷத்வாராபூகதமாய் ஸஸ்யதாரகஜலத்வாராஸஸ்யகதமாய் அந்நரூபேண பரிணமிக்கு மளவும்கிடந்து, அந்நத்வாராபுருஷசரீரகதமாய் சுக்லமாய்ப்பரிணமிக்குமளவும்கிடந்து, சுக்லத்வாராஸ்த்ரீ சரீரகதமாய் " 𑌪𑌂𑌚𑌮𑍍𑌯𑌾𑌮𑌾𑌹𑍁𑌤𑌾𑌵𑌾𑌪𑌃𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌚𑌸𑍋𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 " ( பஞ்சம்யாமாஹுதாவாப꞉புருஷவசஸோபவந்தி) என்றுபுருஷவாச்யனுகை. ப்ரதமாஹுதியேதொடங்கி அநுவர்த்தமாநங்களான ஸூக்ஷ்மங்களான வப்புக்கள்புருஷசப்தவாச்யங்களாமென்றபடி. ஆப꞉என்றது-பூதாந்தரங்களுக்கு முபலக்ஷணமாய், அத்தாலே-ஸூக்ஷ்மசரீரவிசிஷ்டரானசேதநனைலக்ஷிக்கிறது. " 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌗𑍍𑌨𑍌𑌦𑍇𑌵𑌾𑌃𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌂𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 " ( தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌதேவாஶ்ஶ்ரத்தாம்ஜுஹ்வதி ) இதயாதிஶ்ருதியிலே, தேவா꞉என்றபதங்கள்-ப்ராணவாசிகள். ஶ்ரத்தாம்என்று - " 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌆𑌪𑌃 " (ஶ்ரத்தாவாஆப꞉) என்கிறஶ்ருதிப்ரக்ரியையாலே அப்புக்களைச்சொல்லி,இவை-பூதாந்தரங்களுக்குமுபலக்ஷணமாய், அத்தாலே-ஸூக்ஷ்மசரீரவிசிஷ்டனுனசேதநனைலக்ஷிச்கிறது- " 𑌸𑍋𑌮𑍋𑌰𑌾𑌜𑌾𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 " ( ஸோமோராஜாஸம்பவதி ) என்றது-அம்ருதமயதேவசரீரமுண்டாமென்றபடி. இந்தசந்மந்தானே யுண்டாய்விட்டதே. இனிஜந்மபரம்பரைகளிலேபோகாதபடி யெப்படியென்ன (வர்த்தமாநேத்யாதி) " 𑌉𑌪𑌾𑌯𑌭𑌕𑍍𑌤𑌿𑌃𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌘𑌨𑌾𑌶𑌿𑌨𑍀॥𑌸𑌾𑌧𑍍𑌯𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑍁𑌸𑌾𑌹𑌨𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌸𑍍𑌯𑌾𑌪𑌿𑌭𑍂𑌯𑌸𑍀।𑌦𑍃𑌪𑍍𑌤𑌾𑌨𑌾𑌮𑌪𑌿𑌜𑌨𑍍𑌤𑍂𑌨𑌾𑌂𑌦𑍇𑌹𑌾𑌨𑍍𑌤𑌰𑌨𑌿𑌵𑌾𑌰𑌿𑌣𑍀 " ( உபாயபக்தி꞉ப்ராரப்தவ்யதிரிக்தாகநாஶிநீ।ஸாத்யபக்திஸ்துஸாஹந்த்ரீப்ராரப்தஸ்யாபிபூயஸீ।த்ருப்தாநாமபிஜந்தூநாம் தேஹாந்தரநிவாரிணீ) என்னக்கடவதிறே, இதுதான்ப்ரபந்ந விஷயமென்று கீழருளிச்செய்தத்தை மூலத்திலே யேறிட்டருளிச்செய்கிறுர் ( இப்படியித்யாதி )

கொடுபோகிற ப்ரகாரத்தை வேதாந்தப்ரக்ரியையாலே காட்டுகிறுர் ( மரணமானுலித்யாதி ) ( பரமாத்மப்ரவேசத்தைப்பண்ணுவித்து )என்றத்தை-பாஷ்யப்ரக்ரியைக்கு மர்ச்சிராதிசதிக்கும்சேர, நாடீவிசேஷநிஷ்க்ரமணத்துக்குமுன்னுகக்கண்டுகொள்வது. " 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌰𑍍𑌮𑌨𑌸𑌿𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑍈𑌃 " ( இந்த்ரியைர்மநஸிஸம்பத்யமாநை꞉ ) இத்யாரப்ய, " 𑌤𑍇𑌜𑌃𑌪𑌰𑌸𑍍𑌯𑌾𑌂𑌦𑍇𑌵𑌤𑌾𑌯𑌾𑌮𑍍 " ( தேஜ꞉பரஸ்யாம்தேவதாயாம் ) என்று-பரமாத்மப்ரவேசத்துக்கு ப்ரமாணம். நாடீநிஷ்க்ரமணத்துக்கு ப்ரமாணம் - " 𑌶𑌤𑌂𑌚𑍈𑌕𑌾𑌚𑌹𑍃𑌦𑌯𑌸𑍍𑌯𑌨𑌾𑌡𑍍𑌯𑌃 " (ஶதஞ்சைகாசஹ்ருதயஸ்யநாட்ய꞉) இத்யாதி, " 𑌤𑌦𑌾𑌸𑌾𑌂𑌨𑌾𑌡𑍀𑌷𑍁𑌸𑍃𑌪𑍍𑌤𑌾𑌃 " ( தஆஸாநாடீஷுஸ்ருப்தா꞉ ) இத்யாதி. பரமாத்மப்ரவேஶஸ்ய ப்ரயோஜநமாஹ ( சிறுப்ரஜைகளித்யாதி ) அத்தசையி லவனிப்படிசெய்கைக்கு ப்ரமாணம் ( உயிர்கொண்டித்யாதி ) பூர்வமேவவ்யாக்யாதம். ( மாதவன்தன்துணையித்யாதி ) ஶ்ரிய꞉பதியேதுணையாகநடந்தானென்றபடி. திருமொழி-மூன்ரும்பத்து, கள்வன்கொல்லிலே நாலாம்பாட்டு. " ஏதவன் " இத்யாதி.

“ தன்மைபெறுத்தி ” என்றதுக்குபாவம் ( ஸ்வேரூபேணேத்யாதி ) உபதாநம்-அணே. வைக்குமென்னுதே, “ கொள்ளும் ” என்றதுக்குபாவம். ( இதுதாணித்யாதி ) “ ஹ்ஹவெ௨ஹ்ஹெஹவஹவதி ” ( ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி ) என்று-ஐக்யம்மோக்ஷமென்னுநிற்க, தாளிணைக்கீழ்க்கொள்ளுகை யாவதேதென்ன ( ஸாயுஜ்யமித்யாதி ) “ கிஊராஊெதநிதா்ஹவஹி ” ( கிங்கராமமதேநித்யம்பவந்தி ) இத்யத்ராஹ்ருதயம். அவன்தன் பேருகனிணைத்திருக்குமாகில், அதிவனுக் குபகாரமானபடி யென்னென்ன ( இதுதன்னையித்யாதி ) சரீரதயாபாரதந்த்ர்யத்தாலே யென்றபடி.

“ தாநஹஂத்விஷதஃ ” ( தாநஹம்த்விஷதஃ ) என்னுநிற்க, ஔதார்யம் ஸ்வாபாவிக மென்கிறதென்னென்ன ( தாநஹமித்யாதி ) அந்தஃபுரவ்ருத்தாந்தமென்றது - இப்படியிவனுக்கு வரிசையாக வர்ச்சிராதிமார்க்கத்தாலே கொண்டுபோகைமுதலானவை பரமரஹஸ்யமென்றபடி.

நம்பர்-விஸ்வஸநீயர், பூர்ணரொன்னுதல்.

தன்மைபெறுத்தி-ஸ்வரூபாவிர்ப்பாவத்தைப் பிறப்பித்து. தொன்மை-ஸ்வாபாவிகோபகாரகதை. நன்மைபெறுத்து-நன்மையைப்பெறும்படிபண்ணி. (நாளுய்யக்கொள்கின்றநம்பர்) நாள்தோறும்-யாவதாத்மபாவி யுஜ்ஜீவிப்பித்துக்கொள்ளுகிற விஸ்வஸநீயர். நம்பர்-நம்பப்படுமவர்களித்யர்த்தஃ. பஞ்சாக்நிவித்யாயாம்சாந்தோக்யே, “ தஸிநேதஸிநூஊெவாஸ்ஜாஜுஹதி ” ( தஸ்மிந்நேதஸ்மிந்நக்னௌதேவாஶ்ஶ்ரத்தாஞ்ஜுஹ்வதி ) இத்யாரப்ய, “ தஸ்ாஆஹுதெ ரூஹஂஸஂஹவதி ” ( தஸ்யாஆஹுதேர்கர்ப்பஸ்ஸம்பவதி ) இத்யந்தம்கண்டுகொளவது. வாராஹேபூமிம் ப்ரதிபகவாந், “ ததஸஂ்ரியஊணஊகாஷவாஷாணஸஷிஹஂ। அஹஂஸஂராஊஊகூஂநயாஊிவாஊஜதிஂ ” ( ததஸ்தம்ம்ரியமாணந்துகாஷ்டபாஷாணஸந்நிபம்। அஹம்ஸ்மராமிமத்பக்தம் நயாமிபரமாங்கதிம்) பாஷ்யேசதுர்த்தாத்யாயேத்விதீயபாதே, “ தஊொகொஹஜஊநஂதஷ்காஶி தஷாரொவிஷாஸாஊூாதஷெஷமதாநஊஸ்திஊொமாஹுஹாரா நஊஹுஹீதஸுதாயிகயா. ” (ததோகோக்ரஜ்வலநம்தத்ப்ரகாஶிதத்வாரோவித்யாஸாமர்த்த்யாத் தச்சேஷகத்யநுஸ்ம்ருத்யோகாச்ச ஹார்தாநுக்ருஹீதஶ்ஶதாதிகயா)சாந்தோக்யே,“வஊஜ்ஜொதிரவஸஂவஊவெஊநஊவெணாஹிநிஷஊதெ”(பரஞ்ஜ்யோதிருபஸம்பத்யஸ்வேரூபேணாபிநிஷ்பத்யதே) “ஸாயஜஂஹ்திவஊாயெதீவஹகூஸவஹிநஃ। கிஂகராஊெதநிதாஂஹவஹி நிரவஊவாஃ ” ( ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயேதீவ்ரபக்தாஸ்தபஸ்விநஃ । கிங்கராமமதேநித்யம்பவந்திநிருபத்ரவாஃ ) கீதாஸுஷோடஶே, “ தாநஹஂஷிஷதஃ கூஊாநுஸஂஸாஊெஷநஊாயஊாநு। கூிவாஊஜஸஂஊஹாநாஸஊிஷெவயொநிஷ ” ( தாநஹம்த்விஷதஃக்ரூராந்ஸம்ஸாரேஷுநராதமாந்। க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவயோநிஷு. ) ................................*

## எட்டாம்பாட்டு.

நம்பனை ஞாலம்படைத்தவனைத்திருமார்பனை
உம்பருலகினில்யார்க்குமுணர்வரியான்றன்னைக்
கும்பிநரகர்களேத்துவரேலுமவர்கண்டீ
ரெம்பல்பிறப்பிடைதோறெந்தொழுகுலந்தாங்களே.

## ஆறாயிரப்படி.

(நம்பனை) சர்வஸ்வாமியாய், ஜகத்ஸ்ரஷ்டாவாய், ப்ரஹ்மாதிகளுக்கு வாங்மநஸாபரிச்சேத்ய மஹிமனாயிருந்தவனை யநந்யப்ரயோஜநராய்க்கொண்டேத்துவார் கும்பீநரகயாதநாநுபவாநுகுணபாபங்களைப்பண்ணினரேயாகிலும் அவர்கண்டீர் எம்பல் பிறப்பிடைதோறெந்தொழுகுலந்தாங்களென்கிறார் .......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ராப்யபூதனான ஸ்ரீயஃபதியை ஸ்துதிக்குமவர்களெங்களுக்குக் கைங்கர்யப்ரதிசம்பந்திதயா ப்ராப்யரென்கிறார்.

நம்பனை-நிருபாதிகமாகத்தஞ்சமாமவனாய். ஞாலம்படைத்தவனை - தன்னையாஶ்ரயித்தநுபவிக்கைக்குறுப்பாகஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ணுமவனாய். திருமார்பனை-ஸ்ருஷ்டிதசையோடு ஆஶ்ரயணதசையோடு ப்ராப்யதசையோடுவாசியறஅநுவ்ருத்தமான ஸ்ரீயஃபதித்வத்தையுடையனாய். உம்பருலகினில் - ஸ்வஸ்ருஷ்டமான உபரிதநலோகங்களில். யார்க்கும்-எத்தனையேனுமதிசயிதஜ்ஞாநர்க்கும். உணர்வரியான்றன்னை-அறியவரியபெருமையையுடையவனை. கும்பிநரகர்களும்-கும்பீபாகநரகவாசிகளானபாபப்ரசுரர்களும். ஏத்துவரேல்-ஏத்தினர்களாகில். அவர்தாங்கள் கண்டீர்-அவர்கள்தாங்கள்கிடீர். எம்-எங்கள். பல் - பலவகைப்பட்ட. பிறப்பிடைதோறு-ஜந்மாவகாசந்தோறும். எம்-எங்கள். தொழு-சேஷவ்ருத்திக்குப்ரதிசம்பந்தியான. குலம்-குலம்.

இப்பாட்டு-ப்ராப்யபரம். இதினுடையவிவரணம் * நெடுமாற்கடிமை......*

## ஈடு-எட்டாம்பாட்டு.

அவனுடைய ஸ்ரீயஃபதித்வத்திலே தோற்றிருக்குமவர்களெனக்கு நாதரென்கிறார்.

(நம்பனை) நம்பப்படுமவனை. ஏதேனும் துர்த்தசையிலு மாத்மாவுக்குத் தஞ்சமானவனை. கீழ்ச்சொன்னவர்களும் நம்பராகைக் கடியானவனை. இவனையொழிந்தபந்துக்கள்விஶ்வஸநீயரல்லரென்கை; "ஸவிதாச" (ஸபித்ராச) "பெற்றார்பெற்றொழிந்தார்" இத்யாதி. மஹாவ்யா

தியாளனானவன், "எனக்கின்னபோதிலே இன்னவ்யாதிவந்துநலியும், அப்போதுநானென்னையறியேன், பிரானே அப்போதென்னைரக்ஷிக்கவேணும்" என்றுஸ்வஸ்த்ததசையிலே யறிவித்துவைத்தால் அவர்களுணர்ந்திருந்து நோக்குமாபோலே, தான்தனக்குதவாததசையிலு மீஸ்வரன் ரக்ஷிக்கும்படி. [ஸபித்ராசேத்யாதி] ஈஸ்வரன்தனக்குமாகாதவன்றும் தஞ்சமாவான்தானேயாயிற்று. பெருமாள்பக்கல்பண்ணின அபகாரத்தைக்கண்டு தமப்பன்கைவிட்டான். சகாரத்தாலே-தாயும்கைவிட்டாளென்கிறது; அவள்பற்றுமுன்னுகப்பற்றுமிவன் விடும்போது அவளும்விட்டாளாகவேணுமிறே. வாத்ஸல்யமுறைத்தவிடத்திலேயிறேமூந்தறவிழுவது, ஆகையாலே யவள்காலிலேமூந்தறவிழுந்தான்; அவள்மையெழுதி மஞ்சள்பூசிப்புறப்பட்டுநின்றாள், இவனும்குடநீர்வழிந்துநின்றான். [பரித்யக்தஃ] (பரித்யக்தஃ) இவன்வ்ருத்தஹாநிகண்டு "பண்டேவிட்டிலோமோ" என்றார்கள். [ஸுரைஸ்ச] (ஸுரைஸ்ச) மாதாபிதாக்கள்கைவிட்டாலும் ஸஜாதீயர்விடாதே கைக்கொள்ளுவர்களாயிற்று, "இவர்கள்மூடியவிடுகிறார்களோ" என்னுமத்தாலே "அவர்களுக்குப்ரியம்" என்றுநினைத்து. [ஸமஹர்ஷிபிஃ] (ஸமஹர்ஷிபிஃ) அவர்கள்விட்டாலும்விடாத ஆந்ருஸம்ஸ்ய ப்ரதாநரானருஷிகளும் விட்டார்கள். ஆந்ருஸம்ஸ்யத்துக்கு விஷயவ்யவஸ்த்தையுண்டிறே. பெற்றவர்கள்கைவிட்டால் நாட்டார்க்குப்பணியன்றிறேகாக்கைநோக்குகை, ஆகையாலே [த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய] (த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய) லோகங்களில் திறந்துகிடந்த வாசலெல்லா மொருகால்நுழைந்தாற்போலே ஒன்பதின்கால் நுழைந்தானாயிற்று, "ஒருகாலல்லாவொருகாலாகிலும் க்ருபைபிறக்கக்கூடுமோ" என்று; இவன்புகப்புக, தள்ளிக்கதவையடைத்தார்கள். "தமேவஸரணங்கதஃ" (தமேவஸரணங்கதஃ) தன்மேலே ப்ரஹ்மாஸ்த்ரத்தைத் தொடுத்துக்கொண்டு நிற்கிறவர்திருவடிகளிலேவந்து விழுந்தானாயிற்று. அதாவது- "அரிசினத்தாலீன்றதா யகற்றிடினும்மற்றவள்தனருள் நினைந்தேயழுங்குழவி" என்கிறபடியே, அவன்றிருவடிகளை யொழியப்புகலில்லாமை. இப்படியெல்லாவவஸ்த்தைகளிலும் விஸ்வஸநீயன் சர்வேஸ்வரனே. எங்கேகண்டோமென்னில் (ஞாலம்படைத்தவனை) தனக்கு, தானுமின்றிக்கே பிறருமின்றிக்கே அசிதவிசேஷமாய்கிடக்கிற தசையிலே, புருஷார்த்தோபயோகியான சரீரத்தையுண்டாக்கினவனை. அது ஆருக்குப்ரியமாகவென்னில் (திருமார்பனை) அவளுக்குப்ரியமாக; "யஸ்யாவீக்ஷ்யமுகந்ததிங்கிதபராதீநஃ" (யஸ்யாவீக்ஷ்யமுகந்ததிங்கிதபராதீநஃ) என்னக்கடவதிறே. (உம்பரித்யாதி) உபரிதநலோகங்களிலெத்தனையேனு மதிசயிதஜ்ஞாநர்க்கு மறியவொண்ணாதவனை. (கும்பிநரகர்கள்) மஹாபாபபலமாகக் கும்பீபாகமான நரகத்திலேகிடந்தும் அங்கேதிருநாம

த்தைச் சொல்லுவர்களாகில். (அவர்கண்டீர்) ஏதேனும்துர்க்கதரேயாகிலும் அவ்விருப்பிலே நமக்குப்ராப்யரென்கை. (எம்பல்பிறப்பிடைதோறெந்தொழுகுலந்தாங்களே) நம்முடைய பலவகைப்பட்ட ஜந்மங்களிலவகாசங்கள்தோறும், திருநாமத்தைச்சொன்னவர்களே யன்றெனக்குத்தேஶ்யர்; அவர்கள்குலங்களாக எங்கள்குலத்துக்காசார்யசந்தாநம். அந்தது:காநுபவம்பண்ணுகிற்க, திருநாமத்தைச்சொல்லக் கூடுமோவென்னில்; க்லேசாதிசயத்தாலே, "அம்மே, அப்பா" என்னக்கூடாதோவென்று காணுமிவர்க்குநினைவு..............................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (நம்பனையித்யாதி) "திருமார்பனை, ஏத்துமவரேலுமவர்கண்டீர், எந்தொழுகுலந்தாங்களே" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (அவனுடையவித்யாதி)

நம்பன்-ரக்ஷகத்வேந விஶ்வஸநீயன். காதாசித்கமாகத் தஞ்சமாகையல்லாதார்க்கு முண்டாகையாலே யத்தைவ்யாவர்த்திக்கிறார் (ஏதேனுமித்யாதி) ஏதேனும்-துர்த்தசையிலும்-காகாசுரனுக்குப்போலேதான் பகையானதசையிலும். கீழேததியரை - "நம்பர்" என்றீரோயென்ன (கீழ்ச்சொன்னவர்களுமித்யாதி) இவனை "நம்பன்" என்றத்தால்பலிதம் (இவனையொழிந்தவித்யாதி) உக்தார்த்தத்துக்குப்ரமாணங்கள் (ஸபித்ராசேத்யாதி) சுந்தரகாண்டே மாருதிம் ப்ரதிஸீதா, "ஸபித்ராவபரித்யக்தஸ்ஸர்வைஶ்ச ஸமஹர்ஷிபி:। த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் கத:." (ஸபித்ராசபரித்யக்தஸ்ஸர்வைஶ்சஸமஹர்ஷிபி:। த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்யதமேவஶரணம்கத:) (பெற்றாரித்யாதி) திருமொழி-எட்டாம்பத்து. ஒன்பதாம்திருமொழி-ஏழாம்பாட்டு. (பெற்றார்பெற்றொழிந்தார்) சரீரமாத்ரத்தை யுத்பாதித்த பித்ராதிகள்பெற்று அவ்வளவிலேவிட்டுப்போனார்கள்; பின்னும்-அவர்கள் விட்டபின்பும்; நின்று-அவர்கள்வழியாலேநின்று; அடியேனுக்கு-தன்கைபார்த்திருக்க வேண்டும்படியானவெனக்கு; உற்றானாய் வளர்த்து-சர்வவிதபந்துவும் தானேயாய் நின்றென்னைவளர்த்து; என்னுயிராகிநின்றானை - எனக்குதாரகனுமானவனை. எடுத்த பாசுரத்துக்கு பாவம் (மஹாவ்யாதியித்யாதி)

கீழெடுத்தஶ்லோகத்துக்கர்த்தம் (ஈஶ்வரன்தனக்குமித்யாதி) ஆகாதவன்றும்-ஈஶ்வரன்றனக்கும் ப்ரதிகூலனானவன்றும். யத்வா, ஈஶ்வரனிச்சேதநனுக்குத் தஞ்சமாகாதவன்றுமென்னுதல். தானே - ஈஶ்வரனே. இது - ஶ்லோகத்துக்கெல்லாம் தாத்பர்யம். சகாரம்-அநுக்தஸமுச்சயபரம். தாயார்முற்படவிட்டாளாகச் சொல்லுகிறதென்னென்ன (அவள்பற்றித்யாதி) அவன்றான் முந்தறமாதாவைப் பற்றுவானென்னென்ன (வாத்ஸல்யமித்யாதி) "பரி" என்கிறவுபஸர்க்கார்த்தம் (அவள்மையெழுதியித்யாதி) குடநீர்வழிந்து-ஸஜலகட ப்ரஹாரம்பண்ணி. "த்யக்த:" (த்யக்த:) என்றபூதார்த்தத்துக்குபாவம் (இவனித்யாதி) "ஸர்வைஶ்" (ஸர்வைஶ்ச) என்றசஶப்தம்-ப்ராதாந்யத்திலே. மாதாபித்ருபரித்யாகத்திலே ஸர்வமஹர்ஷிபரித்யாகம்சொல்லவேணுமோவென்ன (மாதாபிதாக்களித்

யாதி ) ஆந்ருஶம்ஸ்ய ப்ரதாநரானால் விடுவானென்னென்ன ( ஆந்ருஶம்ஸ்யத்துக் கித்யாதி ) காக்கைநோக்குகையென்றது-சாடு. காகத்தைரக்ஷிக்கையென்று ஸ்வ பாவார்த்தம். காக்கை குத்தாமல் ரக்ஷிக்கையென்றுத்வநி. இங்கே - " யதி நா மாஸ்ய காயஸ்ய யதந்தஸ்தத்பஹிர்பவேத் । தண்டமுத்யம்ய லோகோயம் ஶுநகாகாம்ஶ்ச வாரயேத் " ( யதிநாமாஸ்யகாயஸ்யயதந்தஸ்தத்பஹிர்ப்பவேத்। தண்டமுத்யம்யலோகோயம்ஶுநஃகாகாம்ஶ்சவாரயேத் ) என்றதநுசந்தேயம். "ஸம், பரி " என்றவுபஸர்க்கதாத்பர்யம் ( லோகங்களிலித்யாதி ) அப்படிசெய்வானென் னென்ன ( ஒருகாலல்லாவித்யாதி ) அப்படிநிற்கிறவர் திருவடிகளிலே வீழ்கைக் குஹேதுவேதென்ன ( அதாவதித்யாதி ) ( அரிசினத்தாலித்யாதி ) பெருமாள்திரு மொழி. " தருதுயரம் " இத்யாதி. அரிசினத்தால்-அரிந்துபொகடவேண்டும்படி யான கோபத்தையுடையளாய் ; ஈன்றதா யகற்றிடினும்-பெற்றதாய்கைவிட்டாலு ம் ; மற்றவள்தனருள்நினைந்தேயழும் குழவியதுபோன்று-அந்தத்தாயினுடைய அ ருளையே யபேக்ஷித்தே யழுகிறசிறுப்ரஜைபோலே யித்யர்த்தஃ. ப்ரக்ருதத்திலே யு பஸம்ஹரிக்கிறார் ( இப்படியித்யாதி )

உக்தார்த்தத்துக்குப்ரமாணம் ( யஸ்யாஇத்யாதி ) ஸ்ரீஸ்துதௌ, " ஸ்வஸ்தி ஸ்ரீர்திஶதாதஶேஷஜகதாம் ஸர்க்கோபஸர்க்கஸ்திதி ஸ்வர்க்கம் துர்க்கதிமாபவர்க்கிகபதம் ஸர்வஞ்ச குர்வந் ஹரிஃ । யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தே கிலம் க்ரீடேயம் கலு நாந்யதாஸ்ய ரஸதா ஸ்யாதைகரஸ்யாத்தயா. " ( ஸ்வஸ்திஸ்ரீர்த்திஶதாதஶேஷஜகதாம்ஸர்க்கோபஸர்க்கஸ்த்தி திஸ்வர்க்கம்துர்க்கதிமாபவர்க்கிகபதம்ஸர்வஞ்சகுர்வந்ஹரிஃ । யஸ்யாவீக்ஷ்யமுக ம்ததிங்கிதபராதீநோவிதத்தேகிலம்க்ரீடேயம்கலுநாந்யதாஸ்யரஸதாஸ்யாதைகர ஸ்யாத்தயா)

ஏத்துகை-திருநாமம்சொல்லுகை.

இவர்க்குநினைவென்கையாலே-மஹாதஃகாநுபவசமயத்தில்திருநாமம்சொ ல்லக்கூடாதென்றுகருத்து. எந்தொழுகுலந்தாங்கள்-எங்களுக்குத் தொழப்படும் குலத்தையுடையவர்களென்றபடி. யத்வா, தொழுகுலந்தாங்கள்-முழுச்சொல்லு. தொழுகுலங்களென்றபடி.

க்ரமேணாந்வயஃ.............................................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

குலந்தாங்குசாதிகணாலிலும்கீழிழிந்தெத்தனை
நலந்தானிலாதசண்டாளசண்டாளர்களாகிலும்
வலந்தாங்குசக்கரத்தண்ணன்மணிவண்ணற்காளென்றுள்
கலந்தாரடியார்தம்மடியாரெம்மடிகளே.

## ஆ று யி ர ப் ப டி.

( குலம் ) வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்கு அடி மைசெய்யுமிதுவே ப்ரயோஜநமாக வாஶ்ரயிப்பார், ஜாத்யாசாராதிகளா

லெத்தனையேனுந் தண்ணியரோயாகிலும் அவரடியார் நமக்குஸ்வாமிக ளென்கிறார்.............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதருடைய ஜந்மாத்யபகர்ஷ தோஷநிவர்த்தகமான பரமபாவநத்வத்தை யுடையவனை யநந்யப்ரயோஜநரா யநுபவிப்பார் த்ரிபுருஷமெனக்கு சேஷிகளென்கிறார்.

குலம்-அநுலோமப்ரதிலோமவிவாஹத்தாலேசகலகுலங்களுக்கும்.தாங்கு-ஆதாரபூதரான. சாதிகள்-ப்ராஹ்மணுதிஜாதிகள். நாலிலும்-நாலிலும். கீழிழிந்து-கீழேபோந்து. எத்தனை-மிகவும். நலந்தானிலாத-“நாம்அபக்ருஷ்டஜந்மாக்கள்” என்கிறஅறிவுமின்றியேயிருக்கும். சண்டாளர்-சண்டாலர்ப்ராஹ்மணஸ்த்தாநத்திலேயாம்படி. சண்டாளர்களாகிலும்-அவர்களுக்குமநாதரணீயர்களான சண்டாலர்களாகிலும். வலம்-வலத்திலே. தாங்கு-ஏந்தப்பட்டு “வரணம்பவித்ரம்” (சரணம்பவித்ரம்) என்கிறபடியேபவித்ரபூதனை. சக்கரத்து-ஆழ்வானையுடைய. அண்ணல்-ஸ்வாமியாய். மணி-ஸ்வசம்பந்தத்தாலேயெல்லாரையும் பரிசுத்தராக்கும் ரத்நம்போலேபவித்ரமாய். வண்ணற்கு-உஜ்ஜ்வலமானவடிவையுடையவனுக்கு. ஆள்-நாம்சேஷபூதர். என்று - என்றுநினைத்து. உள் - அநந்யப்ரயோஜநராய். கலந்தார்-கலந்தவர்களுக்கு. அடியார்தம் - அடியார்க்கு. அடியார்-அடியாரானவர்கள். எம்-எங்களுக்கு. அடிகள் -ஸ்வாமிகள்..............................................*

## ஈடு-ஒன்பதாம்பாட்டு.

கையுந்திருவாழியுமான அழகிலேதோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சேஷபூதரானவர்களெனக்கு ஸ்வாமிகளென்கிறார்.

(குலமித்யாதி) க்ரமவிவாஹத்தாலும் அநுலோமப்ரதிலோமவிவாஹத்தாலுமுள்ள குலங்களைதரிப்பதான ப்ராஹ்மணுதியான நாலு ஜந்மத்திலும் கீழேகீழேபோய். (எத்தனையித்யாதி) அந்தசண்டாலஜந்மத்துக் கடைத்தஜ்ஞாநவ்ருத்தமின்றிக்கே யிருப்பாருமாய்; நாம், “சண்டாலர்” என்றால்நோக்காதே போமாபோலே அவர்கள்தாங்கள் விலங்குமவர்களாகிலும். இவர்களுத்தேஸ்யராகைக்கென்ன வலக்குறியுண்டென்ன; வ்ருத்தவான்களன்றோ விவர்களென்று கைமேலே காட்டிக்கொடுக்கிறார்மேல் (வலந்தாங்குசக்கரமித்யாதி) “வடிவாய்நின்வலமார்பினில்வாழ்கின்ற மங்கையும்பல்லாண்டு” என்று, “வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு” என்னுமாபோலே, இவரும் கீழ்ப்பாட்டிலே “திருமார்பனை” என்றார்; இங்கே “வலந்தாங்குசக்கரம்” என்றார். வலவருகேதரிக்கப்பட்ட திருவாழியையுடையனாய்; அதுக்காஸ்ரயமான, நீலமணிபோலேஸ்ரமஹரமான வடிவழகையுடைய சர்வாதிகனுக்கு. (ஆளென்று) ஸ்வரூபஜ்ஞாநம்முன்பாக “அடிமை செய்கையே ப்ரயோஜநம்” என்றிருக்கு மவர்களுடையவடியார் எனக்குஸ்வாமிகளென்கிறார். வ்ருத்தவானபிமாநத்திலே யொதுங்குமிதுவேயிறே வேண்டுவது. அவர்களவனிலு முத்தேஸ்யராவர்களிறே.........*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (குலந்தாங்கித்யாதி) "வலந்தாங்குசக்கரத்தண்ணல்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (கையுமித்யாதி)

க்ரமவிவாஹமாவது - ப்ராஹ்மக்ஷத்ரவைஶ்யசூத்ரர்கள் ஸ்வஸ்வஜாதியிலே பண்ணும்விவாஹம்; அநுலோமவிவாஹமாவது - ப்ராஹ்மணனுத்தரவர்ணத்ரயத்திலும், க்ஷத்ரியனுத்தரவர்ணத்வயத்திலும், வைஶ்யன் சூத்ரவர்ணத்திலும் பண்ணும்விவாஹம். ப்ரதிலோமவிவாஹமாவது-சூத்ரன் பூர்வவர்ணத்ரயத்திலும்,வைஶ்யன் பூர்வவர்ணத்வயத்திலும், க்ஷத்ரியன் பூர்வவர்ணத்திலும் பண்ணும்விவாஹம். இது-ருஶ்யஶ்ருங்கன்பக்கலிலும் யயாதிபக்கலிலும் காணலாம். தாங்கு-தரித்திருக்கிற. சாதிகள்-ப்ராஹ்மணாதிவர்ணங்கள். "நலந்தான்-எத்தனையும்-இலாத" என்றந்வயித்தர்த்தம் (அந்தசண்டாலஜந்மத்துக்கித்யாதி) எத்தனை - அல்பமும். சண்டாளசண்டாளர் - சண்டாலர்க்கும் சண்டாலரென்றபடி. எத்தனைநலந்தானிலாதவென்றது-த்விதீயசண்டாலர்க்குவிசேஷணம்.

(வலக்குறியிதி) சாடு. பலவச்சிஹ்நமும், வலபார்ஶ்வத்தில் லக்ஷணமும். வலக்குறி - வலபார்ஶ்வத்தில் திருவாழியென்று ஸ்வபாவார்த்தம்; சாடுவுக்கு, குறியென்று - மறு. வ்ருத்தம் - ஆசார இதித்வநி:; வர்த்துலம் - ஸுதர்ஶநமிதிஸ்வபாவார்த்த:. வ்ருத்தவான்கள்-ஆசாரவான்கள்; திருவாழியை ரக்ஷகமாகவுடையவர்களென்றுமாம். கைமேலேயென்றதும் - சாடு. அவனுடையதிருக்கைமேலே-ஹஸ்தகதமாகவென்றுமாம். (வடிவாயித்யாதி) திருப்பல்லாண்டு. உனக்குநிறமாய் உன்னுடையவலமார்பிலே போகரூபமாக நித்யவாசம்பண்ணுகிற பிராட்டியும் பல்லாண்டு; (வடிவாரித்யாதி) ஶ்யாமளமான திருமேனியிலே வ்யாப்தமான தேஜஸ்ஸையுடையனாய் வலப்பக்கத்திலே நித்யவாசம்பண்ணுமவனாய் பிறர்க்கநபிபவநீயனாயிருக்கிற வாழ்வானோட்டைச்சேர்த்தியும் நித்யமாய்ச்செல்ல வேணுமென்றபடி. "வலந்தாங்குசக்கரத்து-மணிவண்ணன்-அண்ணற்கு" என்றந்வயித்தர்த்தம் (வலவருகேயித்யாதி)

"ஆள்" என்றதுக்குபாவம் (ஸ்வரூபஜ்ஞாநமித்யாதி) உள்கலக்கை-ஒரு நீராகக்கலக்கையாய், அநந்யப்ரயோஜநராய்க் கலக்கையென்றபடி. உள்கலந்தாரானவடியாரென்றபடி. அடியாரென்று-வ்ருத்திபர்யந்தம் விவக்ஷிதம். அத்யந்தநிஹீநரானாலும் பாகவதாபிமாநாந்தர்க்கதரோ யுத்தேஶ்யரென்னக்கூடுமோவென்ன, ரஸோக்த்யாபரிஹாரதி (வ்ருத்தவானித்யாதி) வ்ருத்தவான்-ஈஶ்வரன்.

(மணிவண்ணற்கித்யாதி) மணிவண்ணற்கு நாம்சேஷபூதரென்றுள்கலந்தாரானவடியாருடைய வடியாரெங்களுக்கு ஸ்வாமிகளித்யர்த்த:. "அடியார்தம்" என்று-முழுச்சொல்லு. அடியாரென்றபடி. பர்வத்ரயமாகவும் சொல்லுவர்கள். க்ரமேணாந்வய:..............................................................*

## பத்தாம்பாட்டு.

அடியார்ந்தவையமுண்டாலிலையன்னவசஞ்செய்யும்
படியாதுமில்குழவிப்படியெந்தைபிரான்றனக்
கடியாரடியார்தம்மடியாரடியார்தமக்
கடியாரடியார்தம்மடியாரடியோங்களே.

## ஆ ரு யி ர ப் ப டி.

( அடியார்ந்த ) இந்தலோகத்தை யளந்தருளி யுண்டருளி யாலி லையிலேகண்வளர்ந்தருளின அவனுடையகாருண்ய சௌந்தர்யாதிகுண ங்களுக்குத்தோற்றடிமையா யிருப்பாரடியார் தம்மடியாரடியார் தமக்கடி யாரடியார் தம்மடியாரடியோங்க ளென்கிறார்..............................*

## ப ன் னீ ர ா யி ர ப் ப டி.

அநந்தரம், ப்ரளயாபத்ஸகனான வடதளசாயிக்கு சேஷபூத ரானவர்களு டைய சம்பந்திபரம்பரையான ஏழுபடிகாலுக்கு நாமடிமையென்கிறார்.

த்ரைவிக்ரமாபதாநத்திலே அடி-தன்திருவடிகளோடு. ஆர்ந்த-சேர்ந்த. வை யம்-பூமியை. உண்டு-ப்ரளயாபத்திலேயமுதுசெய்து. ஆலிலை-ஓராலிலையிலே. அன் னவசஞ்செய்யும் - உண்டதுஜரியாதபடிகண்வளர்ந்தருளக்கடவனாய். படி - ஒப்பு. யாதும்-ஒன்றும். இல்-இல்லாத. குழவிப்படி-முக்தசிசுவிக்ரஹத்தையுடையனாய்' பி ரான்-அந்தஸ்வபாவத்தாலே. எந்தைதனக்கு - எங்களுக்குஸ்வாமியானவனுக்கு. அ டியாரடியார்தம்மடியாரடியார்தமக்கடியாரடியார்தம்- அடியாரானவர்களுடைய சம்பந்திபாரம்பர்யத்தினெல்லைநிலத்துக்கே. அடியார்-அடியோங்கள். அடியோங் கள்-நாங்கள்.

பாட்டுமுடிந்தவாறே யேழுபடிகாலிலே நின்றாரித்தனை. சேஷத்வப்ரீதிக்கு முடிவில்லாமையாலே, ததீயரானசேஷிபாரம்பர்யத்துக்கு முடிவில்லையென்றுகரு த்து. படி-ஒப்பு. குழவிப்படி-குழவிவடிவு.........................................*

## ஈ டு - ப த் த ா ம் ப ா ட் டு.

அவனுடைய அகடிதகடநா சாமர்த்த்யத்திலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய சேஷத்வத்தினெல்லை நிலம்நானென்கிறார்.

( அடியார்ந்தவையமுண்டு ) அமுதுசெய்யமுன்பே யடியிட்டப டியிறேயிது. தன்படிக்குக் காற்கூறும்போராதத்தையிறே யமுதுசெய்த து. திருவடிக்களவான பூமியையமுதுசெய்து. ( ஆலிலையன்னவசஞ்செ ய்யும் ) ஒருபவனான ஆலந்தளிரிலே, உணவுக்கீடாக இடம்வலங்கொள் ளும். அமுதுசெய்தபடிஜரியாமேவலக்கைக்கீழ்ப்படவாயிற்றுகிடப்பது. எல்லார்க்குமொக்குமே தந்தாம் ஜீவநஹாநிவாராமல் பரிஹரிக்கை. கூ ழாட்படுகை யவனுக்கு மொத்திருக்கிறபடி. ( படியாதுமில்குழவிப்படி ) ஒப்பொன்று மின்றிக்கேயிருக்கிற பிள்ளைத்தனத்தாலே. யசோதாஸ்தநந் தயமுமொப்பன்று வடதளசாயிக்கு ; " தொட்டில்நின்றும் தறையிலே விழப்புகுகிறோம் " என்றஞ்சவறியாத பால்யமிறேயங்கு, " ஆலிலையி னின்றும் ப்ரளயத்திலேவிழுகிறோம் " என்றஞ்சவறியாத மௌக்த்யமி றேயிங்கு. (எந்தைபிரான்) அந்த அகடிதகடநா சாமர்த்த்யத்தாலேயெ ன்னைத்தோற்பித்த வுபகாரகன். ( அடியாரித்யாதி ) " தமீஶ்வராணாம்பரமம்மஹேஶ்வரம் " ( தமீஸ்வராணாம்பரமம்மஹேஸ்வரம் ) என்று-சே

ஷித்வத்துக்கவனுக் கவ்வருகில்லாதாப்போலே, சேஷத்வத்துக்குத் தம க்கவ்வருகில்லாதபடி யதினெல்லையிலே நிற்கிறார். ஐஸ்வர்யத்தை யாசைப்பட்டவர்கள், தன்னோடு ஸஜாதீயரிலேற்றத்தை யாசைப்பட்டு, க்ஷத்ரியர்க்குமேலே யாசைப்பட்டு, இந்த்ரபதத்தை யாசைப்பட்டு, ப்ரஹ்மாவினளவி லாசைப்படுமாபோலே, இவருமிவ்வருகி லெல்லையையாசைப்படுகிறார். இப்போதும் தம்முடையருசிக்கவதியுண்டாய் இவ்வளவிலே நின்றாரல்லர், சந்தஸ்ஸிலிதுக் கவ்வருகுபோகவொண்ணாமே நின்றதித்தனையிறே. "இப்படிவைஷ்ணவர்களை விரும்பினால் இதுலௌகிகரோடு சேராதிருந்ததாகில் ஆழ்வார்விரும்பினத்தை விஸ்வசித்தோமாகிறோம்" என்று ஜீயரருளிச்செய்யும்படி.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( அடியார்ந்தவித்யாதி ) "ஆலிலையன்னவசஞ்செய்யும்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை ( அவனுடையவித்யாதி )

பதச்சேர்த்தியிலேசாடு ( அமுதுசெய்யவித்யாதி ) அடியிட்டபடியிறே-உத்யோகித்தபடியிறே யென்றுசாடு. படி-பூமிঃ, ப்ரகாரঃ, விக்ரஹஸ்ச. காற்கூறு-காலம்ஸம், பாதப்ரமாணமும். ( போராதத்தையிறேயிதி ) "ஆர்ந்த" என்கையாலே-போராமைசித்தம். சப்தார்த்தம் ( திருவடிக்கித்யாதி ) ஆர்ந்த - (அளவான) பவனன-பவனன. உத்பவியாநிற்கிற வித்யர்த்தঃ. உணவுக்கிடாக-புக்தத்துக்கிடாக. ( அன்னவசம்செய்யும் ) அன்னத்துக்குவசமாக-அன்னத்துக்கநுகுணமாகச்செய்யு மவனாய் ; அதாவது-உண்டதுஜரியாதபடி கண்வளர்ந்தருளக்கடவனா யிதிசப்தார்த்தঃ. விவரணம் ( அமுதுசெய்தபடியித்யாதி ) அர்த்தாந்தரமாதல். அப்போது, "அன்னவசம்செய்யும்" என்றதுக்கு-புக்தமானவன்னத்துக் கநுகுணமாக. அதாவது-அதிகமாக புஜித்தவந்நம் சாத்மிக்கைக்காகவிடம்வலங்கொள்ளுமவனென்று முந்தினவர்த்தம்; இரண்டாமர்த்தம், அந்நத்துக்கநுகுணமாக, அதாவது-அந்நத்துக்கு ஹாநிவாராதபடிவலங்கொள்ளுமென்றபடி. வலக்கைகீழ்ப்படக்கிடப்பானென்னென்ன (எல்லார்க்குமித்யாதி) ஜீவநம்-ஆஹாரமென்று ஸ்வபாவார்த்தம், ப்ராணனென்றுத்வநி. ரஸோக்த்யந்தரம் ( கூழாட்படுகையித்யாதி ) கூழுக்காகவாட்படுகை யித்யர்த்தঃ. அதாவது-சேதநர்க்குக்கூழ்நிமித்தமாக வடிமைப்படுகை ஸ்வபாவம்; ஈஸ்வரனுக்குக் கூழைநோக்குகைக்காக வடிமைப்படுகை ஸ்வபாவமென்றபடி. சப்தார்த்தம் ( ஒப்பொன்றுமித்யாதி ) "யாதும்" என்றதுக்குபாவம் ( யசோதேத்யாதி ) அதெப்படியென்ன ( தொட்டிலித்யாதி ) குழவிப்படி - ( பிள்ளைத்தனம் )

தாத்பர்யம் ( தமீஸ்வராணுமித்யாதி ) லோகத்தாரெல்லாரும் மேன்மேலே பதங்களையபேக்ஷிக்க, இவர்கீழேகீழே யபேக்ஷிக்கிறதென்னென்ன ( ஐஸ்வர்யத்தையித்யாதி ) அதாவது-அஜ்ஞராகையாலே விஸ்வாமித்ராதிக ளப்படியாசைப்படுகிறார்களென்றபடி. ஆனாலிவ்வளவிலே நின்றதுருசியளவு பட்டோவென்ன ( இப்போதித்யாதி ) "சண்டாளசண்டாளர்களாகிலும்" என்றிப்படிவிரும்பினால் லோகவிருத்தமன்றோவென்ன ( இப்படியித்யாதி )

க்ரமேணார்வயঃ.......................................................*

# பதினொன்றாம்பாட்டு.

---

அடியோங்குநூற்றுவர்வீயவன்றைவர்க்கருள்செய்த
நெடியோனைத்தென்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்க
ளடியார்ந்தவாயிரத்துள்ளிவைபத்தவன்றொண்டர்மேன்
முடிவாரக்கற்கிற்கிற்சன்மஞ்செய்யாமைமுடியுமே.

## ஆறாயிரப்படி.

( அடியோங்கு ) பாண்டவர்பக்கலுள்ள நிரவதிகவாத்ஸல்யத்தாலே, தத்விரோதிகளாய் ஐஸ்வர்யபலதர்ப்பிதரான துர்யோதநாதிகளை நிரசித்தருளின எம்பெருமானுடைய வாத்ஸல்யஸௌசீல்யகாருண்ய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யாத்ய சங்க்யேய கல்யாணகுணங்களுக்குத் தோற்றடிமையாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்க ளாரேனுமாகிலு மவர்களுக்கடிமை பரமப்ராப்யமென்றுசொன்ன இத்திருவாய்மொழியை யாரக்கற்கவல்லாராகி லவர்களுடைய பாகவதசேஷதைக ரதித்வவிரோதிகளெல்லாம் போமென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக ஜந்மநிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

அடி-தங்கள்ராஜ்யப்ரதிஷ்டை. ஓங்கு - உயர்ந்துவரும்படியான. நூற்றுவர்-துர்யோதநாதிகள்நூற்றுவரும். வீய-முடியும்படி. அன்று-அவர்களாலேநிரஸ்தரானவன்று. ஐவர்க்கு-பாண்டவர்களைவர்க்கும். அருள் - சர்வப்ரகாரோபகாரத்தை. செய்த-பண்ணி. நெடியோனை-பின்பொன்றுஞ்செய்யாதாரைப்போலே பெரியபாரிப்பையுடையவனைப்பற்ற. தென்-கட்டளைப்பட்ட. குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வாருடைய. குற்றேவல்கள் - அந்தரங்கவ்ருத்திரூபமாய். அடி-பாதபந்தாதிலக்ஷணங்களால். ஆர்ந்த-பூர்ணமான. ஆயிரத்துள்-ஆயிரத்துள்ளும். அவன்-அவன். தொண்டர்மேல் - தொண்டர்மேல். முடிவு-முடிவான. இவைபத்து-இவைபத்தையும். ஆர-நெஞ்சிலேபொருந்த. கற்கிற்கில் - அப்யசிக்கவல்லாராகில். சன்மம் - ததீயசேஷத்வப்ரதிபந்தகமானஜந்மம். செய்யாமை-உண்டாகாதபடி. முடியும்-முடிந்துபோம்.

இது-கலித்துறை.........................................*

## ஈடு_பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-பாகவதசேஷத்வ ப்ரதிபாதகமான இத்திருவாய்மொழியை யப்யசித்தவர்கள் இப்புருஷார்த்தத்துக்கு விரோதியான சம்சாரத்தைக்கடப்பர்க ளென்கிறார்.

(அடியோங்குநூற்றுவர்வீய) பாண்டவர்களை அரக்குமாடத்திலே யகப்படுத்தியும், சூதிலேதோற்பித்தும், வநவாசாதிகளைப்பண்ணுவித்தும், தாங்கள் புத்ரமித்ராதிகளாலே பல்கிராஜ்யத்திலே வேர்விழுந்த துர்யோதனாதிகள் நூற்றுவரும் முடியும்படி. (அன்று) அவர்களாலே நிரஸ்தரானவன்று. (ஐவர்க்கருள்செய்தநெடியோனை) இரண்டிடத்திலுமொக்குங் காணுமைவர்க்கருள்செய்கை. இங்கு * திசைதிசைவலித்தெற்றுகின்ற வைவர்க்கருள் செய்தானிறே, அங்குஅவர்களாலே யெற்றுண்டவைவர்க்கருள்செய்தான். (ஐவர்க்கு) இவர்களுடையவானை குதிரையுள்ளிட்டவை யவர்கள்பறித்துக்கொள்ள, "யஸ்யமந்த்ரீசகோப்தாச" (யஸ்யமந்த்ரீசகோப்தாச) என்கிறபடியே இழந்தவையெல்லாந்தானேயாய்நின்றான். (நெடியோனை) பாண்டவர்கள்கார்யஞ்செய்துபோகிறவன்றும், "நாதிஸ்வஸ்தமநா:" (நாதிஸ்வஸ்தமநா:) என்று-அவர்கள்கார்யமொன்றுஞ் செய்யப்பெற்றிலோ மென்றிருந்தபடி. (தென்குருகூரித்யாதி) ஆழ்வார், பாகவதசேஷத்வ பர்யந்தமானகைங்கர்யத்தை வாசிகமாகப்பண்ணுகையாலே அந்தரங்கவ்ருத்தியாயிற்று சர்வேஸ்வரனுக்கு. (அடியார்ந்தவாயிரத்துள்) ருக்வேதம்போலவும், "பாதபத்தோக்ஷரஸம:" (பாதபத்தோக்ஷரஸம:) என்கிற ஸ்ரீராமாயணம்போலவும், பாதங்கள் பூர்ணமானவாயிரம். (அவன்றொண்டர்மேன்முடிவு) இதில்சர்வேஸ்வரனைச் சொன்னவிடங்கள்-உபஸர்ஜ்ஜநகோடியிலேயாமித்தனை. "ஆரக்கற்கிற்கில், நெஞ்சிலேபடியும்படி கற்கசக்தராகில். இதிலொருபாட்டும் விழவிடாதேயென்றும். (சன்மஞ்செய்யாமைமுடியும்) ததீயசேஷத்வவிரோதியான ஜந்மாந்வயமறும்.....................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (அடியோங்கித்யாதி) "அவன்தொண்டர்மேல்முடிவான-இவைபத்து-ஆரக்கற்கிற்கில் சன்மம்செய்யாமைமுடியும்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (பாகவதேத்யாதி)

அடியோங்குகை-வேர்விழுகை. "ஐவர்க்கு" என்றத்தையும் கடாக்ஷித்து, பாண்டவர்களிருக்க விவர்கள் ரூடமூலரானபடி யெங்ஙனேயென்கிற சங்கையையும் பரிஹரியாநின்றுகொண்டர்த்தம் (பாண்டவர்களையித்யாதி) பல்கி-சம்ருத்தராய். ஹார்த்தபாவம் (இரண்டிடத்திலுமித்யாதி) திசைதிசைவலித்தெற்றுகின்றவைவரால்வரும் து:கமில்லாதபடியருள் செய்தானென்றபடி. எற்றுண்ட-பாதிக்கப்பட்ட. "அருள்செய்த" என்றதுக்கர்த்தம் (இவர்களுடையவித்யாதி) க்ருபையாற்பெரியனென்றர்த்தம் (பாண்டவர்களித்யாதி) வ்யாமோஹத்தால் பெரியோனென்னுதல்.

அடியார்ந்த-பாதங்களாலேபூர்ணமான. (ருக்வேதம்போலவுமிதி) மற்றவேதங்களும்பாரதாதிகளும்சர்வத்ரபரிபூர்ண சமபாதங்களாயிராதென்றுகருத்து. "தேஷாம்ருக்யத்ரார்த்தவஸேந பாதவ்யவஸ்தா" (தேஷாம்ருக்யத்ரார்த்தவ

ஹேநபாதவ்யவஸ்த்தா ) என்றுபாதபந்தமுண்டானதாக ப்ரமாணப்ரசித்தமாகை யாலே யிவையிரண்டையுமெடுத்தது. சர்வேஶ்வரனைச்சொன்ன விடமில்லையோ வென்ன (இதில்சர்வேஶ்வரனையித்யாதி) உபசர்ஜநகோடியிலே யென்றது- "நி த்யாதிகளையுடையவன்" என்னுமாபோலே விசேஷணதயா சொல்லிற்றித்தனை யென்றபடி. தொண்டர்மேல்முடிவு-தொண்டர்மேலேயிதுக்கு பர்யவசாநம். தத் விஷயமென்றபடி.

ஆரக்கற்கையாவது-பொருந்தக்கற்கையென்னுதல், பூர்ணமாகவென்னுதல். ஆர்தல்-பொருந்துதலாய், (நெஞ்சிலேபடியும்படியென்று) முந்தினது. ஆர்தல்-பூர்த்தியாய், (ஒருபாட்டும்விழவிடாதேயென்று) இரண்டாவது. என்றுமென்ற து-என்றுமாமென்றபடி. ப்ரகரணாநுகுணமாக ததீயசேஷத்வ முண்டாமென்ன வேண்டாவோவென்ன (ததீயேத்யாதி) விரோதிநிவ்ருத்தியைச்சொன்னால் தன் னடையே சொல்லிற்றுமென்றபடி. சன்மம்செய்யாமைமுடியும்-ஜநியாமைசித்தி க்கு மிதிசப்தார்த்தம். "ததீயசேஷத்வவிரோதியான ஜந்மமுண்டாகாதபடி முடிந் துபோம்" என்றுரையில்சப்தார்த்தம்.........................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( பயிலும்சுடரொளி. )

ஸ்ரீதாலோகாதிஹ்ருத்ரா வ்யூஹபாஹுபுஜயாதிவ்யமால்யாஸ்த்ர ராஜா ஸத்வாகல்பகல்ப்த்யா த்ரிதஶரஸக்ருதா ரக்ஷணைகப்ரவ்ருத்த்யா । முக்தைருத்தம்ஸிதாங்க்ர்யா ஶ்யாமயா நித்யஸத்யா ஶ்ரேயாஞ்சீராஜிதாநாம் ஸ்வவஹநபிஷிதஜநஸ்ஸூரிதாஸ்ரூத்ஸ்வதோ. (௩௦)

(ஸ்ப்பீதாலோகாதிபூம்நா) பயிலும்சுடரொளிமூர்த்தியை- விலக்ஷணமா ய்ச்செறிந்திருந்த தேஜஸ்ஸையுடையதுமாய்; (ப்ருதுபஹுபுஜயா) தோளுமோ ர்நான்குடை-கல்பகசாகைகள்போலே சுற்றுடைத்தாயிருக்கிற நாலுதிருத்தோள் களை யுடையதுமாய்; (திவ்யமால்யாஸ்த்ரபாஜா) நறுந்துழாய்ப்போதனைப்பொ ன்னெடும்சக்கரத்தெந்தை-திவ்யபரிமளமான திருத்துழாய்மாலையையும் தேஜிஷ் டமான திருவாழியையுமுடையதுமாய்; (ஸத்வஸ்த்ராகல்பக்ல்ப்த்யா) உடையார் ந்தவாடையனித்யாதி-திவ்யங்களான திருப்பரிவட்டம், திருக்கண்டசரம், திருவ ரைநூல்வடம், திருயஜ்ஞோபவீதம், திருவபிஷேகம்முதலான மற்றுமுள்ள திரு வாபரணங்களை யுடையதுமாய்; (த்ரிதஶரஸக்ருதா) அமரர்கட்கருமை யொழிய வன்று ரமுதூட்டியவப்பனை-தேவர்களுக்கு போக்யமானவம்ருதத்தைக்கொடுக்கு மதுவுமாய்; (ரக்ஷணைகப்ரவ்ருத்த்யா) அளிக்கும்பரமனைக்கண்ணனை-ரக்ஷண த்தையே ஸ்வபாவமாகவுடையதுமாய்; (முக்தைருத்தம்ஸிதாங்க்ர்யா) சன்மச ன்மாந்தரங்காத்தித்யாதி-ஆஶ்ரிதரைசம்சாரத்தினின்றும் முக்தராக்கி, அவர்களா லே செவ்விப்பூப்போலே சிரஸ்ஸிலேசூடப்பட்ட திருவடிகளை யுடையதுமாய் (ஶ்யாமயா) அண்ணல்மணிவண்ணர்க்கு - நீலரத்நம்போலே ஶ்யாமமையுமாய்; (நித்யஸத்யா) ஆலிலையன்னவசம்செய்யும் படியாதுமில்குழவி - ப்ரளயகாலத்தி

துமிடைவிடாதே நித்யையுமாயிருக்கிற எம்பெருமான்திருமேனி சோலைக்குத் தோற்றடிமைசெய்யும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய தாஸதாஸதாஸர்களெமக்குஸ்வாமிகளென்று "பயிலும்சுடரொளி" என்கிறதசகத்திலே ஆழ்வாரத்யவசித்தருளினாரென்கிறார்........................................................................*

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

பயிலுந்திருமால்பதந்தன்னினெஞ்சம்
தயலுண்டுநிற்குந்ததியர்க்-கியல்வுடனே
யாளானார்க்காளாகுமாறனடியதனி
லாளாகார்சன்மமுடியா. (௨எ)

(பயிலும்திருமால்) இதில்-ததீயரைப்பற்றும் பற்றாக அநுசந்தித்த பாசுரத்தையநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழே-சௌலப்யகாஷ்ட்டையை யுபதேசிக்க, அத்தையும் காற்கடைக்கொள்ளுகையான ஸம்ஸாரிகளோட்டைசஹவாஸத்தால்வந்தவெக்காயமாறும்படி, தனக்குப்பாதரேகைபோலே பரதந்த்ரரான ஸ்ரீவைஷ்ணவர்களை அவன்காட்டக்கண்டு அவர்கள்திருவடிகளிலே தலையைமடுத்து, அவர்கள்தாம் அவன்படிகளிலே பலபடியாக மண்டியிருக்கிறபடியைக்கொண்டாடி, அவர்களெல்லைநிலத்திலே சென்றினியராகிற * பயிலுஞ்சுடரொளியின் தாத்பர்யத்தை "பயிலும்திருமால்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை. "ஶ்ரு தாஜாதசாமகுலம்" (சச்சதாமாதுலகுலம்) இதிவத்.

(பயிலுந்திருமால்பதந்தன்னில்) ஆஶ்ரிதஸங்க ஸ்வபாவனான ஸ்ரீபதியினுடைய திருவடிகளிலே. இத்தால் - "திருநாரணன்" என்றத்தைச்சொல்லுகிறது. பயிலும்திருவென்று -எம்பெருமானோடே சர்வகாலமும் ஸம்ஶ்லிஷ்டையான ஸ்ரீயென்னவுமாம். (பதந்தன்னில்நெஞ்சம்தயலுண்டுநிற்கும்ததியர்க்கென்றது) "பாதம்பணியவல்லாரை" என்றத்தை. நெஞ்சம்தயலுண்டு நிற்கையாவது-திருவடிகளில் போக்யதையையநுசந்தித்து ஆர்த்ரசித்தரா யிருக்கையென்றபடி. "உன்னிணைத்தாமரை கட்கன்புருகிநிற்குமது" என்னக்கடவதிறே. அன்றிக்கே, தயலென்று-தையலாய், திருவடிகளிலே பந்தபாவராயிருக்குமவர்களென்றாகவுமாம். ததியர்க்கென்று-தத்ஸம்பந்தமே நிருபகமாயுள்ளவர்களுக்கென்கிறது. "பயிலுந்திருவுடையார்" என்றும், "தாளுந்தடக்கையும் கூப்பிப்பணியுமவர்" என்றும், "பாதம்பணியவல்லார்" என்றும், "திருநாரணன்தொண்டர்" என்றுமிப்புடைகளிலே நிருபகமாயிருக்கை. (இயல்வுடனேயாளானார்க்காளாகும் மாறனடியதனில்) வடிவழகிலுமாயுதாபரணாதிகளிலுமொப்பனை யழகிலும்தோற்றடிமையாயிருக்குமவர்க்காளாகையே ஸ்வரூபமென்றிருக்கு மாழ்வார்திருவடிகளில். (ஆளாகார்) அடிமையாகாதார். (சன்மம்முடியா) ஜந்மக்ஷயம்பிறவாது. "எமர்கீழ்மேலெழுபிறப்பும்விடியாவெந்நரகத்தென்றும் சேர்தல்மாறினர்" என்னும்படி ஆழ்வார்சம்பந்தமுடையவர்களுக்கிறே ஸம்ஸாரஸம்பந்தம்முடிவது. * இவையுமோர்பத்து சொன்னலிறேசன்மம்செய்யாமே இலங்குவான் யாவருமேறுவது, அல்லாதார்க்குசித்தியாதிறே; ஆகையால், ததீயசேஷத்வத்தி னெல்லைநிலத்திலே நிற்கிறவாழ்வார் திருவடிகளை யாஶ்ரயிக்கவே ஜந்மஸம்ஸார நிவ்ருத்திபூர்வகமாகவே மோக்ஷசித்தியாமென்றபடி..........................................(௨எ)

மூன்றாம்பத்தில் - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - ௨எ. பாட்டு - ௨௭௭.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## மூன்றாம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### முடியானே - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(முடியானே) "தேர்கடவியபெருமான் கனைகழல்காண்பதென்றுகொல்கண்கள்" என்றுபிறந்த அபேக்ஷையானது மிகவுமுத்பூதையாய், அந்தவபேக்ஷாநுகுணமாகக் காணப்பெறாத வ்யசநத்தினாலே யத்யந்தமவசந்நராய்க்கொண்டு, தம்முடைய சர்வகரணங்களாலும் சர்வப்ரகாரத்தாலு மெம்பெருமானை யநுபவிக்கவேணுமென்று சொல்லிக்கொண்டு கூப்பிடுகிறார்.........................................................*

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், கீழ்-இவரநுபவித்த பாகவதசேஷத்வத்துக்கடியான பகவத்குணவைலக்ஷண்யமானது இவர்திருவுள்ளத்திலே யநுபவாபிநிவேசத்தை ஜநிப்பிக்க அத்தாலேப்ரஸ்துதமான பாகவதசம்ஶ்லேஷம் விடாய்க்குத் தம்பகமாக, நெஞ்சுமுதலான தம்முடையகரணங்களோடு தம்மோடுவாசியற வநுபவாலாபத்தாலே யார்த்திபிறந்து; அநுபாவ்யனுடைய சேஷித்வாத்யாகாரத்தையும், அநிஷ்டத்தைப்போக்கி அநந்யார்ஹ மாக்கும்படியையும், ஆஶ்ரிதவ்யாமோஹத்தையும், அவதாரமூலமான அநந்தசாயித்வத்தையும், ஆஶ்ரிதர்க்கு முகங்காட்டுகைக்கீடான வாஹநவத்தையையும், அவர்களுக் கநுபாவ்யமாம்படி கையுந்திருவாழியுமான வழகையும், இவ்வாஹநாயுத விசிஷ்டவஸ்துவே தாரகாதிகளானபடியையும், அநுபவிப்பிக்கும் சௌந்தர்ய ஸ்வபாவத்தையும், அநுபவப்ரதிபந்தகநிவ்ருத்திப்ரகாரத்தையும், நிவர்த்தநத்திலநாயாசத்தையுமநுசந்தித்து, அநுபவங்கிட்டாத ஆர்த்தியாலே அதிசயிதமாகக் கூப்பிடுகிறார்..............................*

### ஈடு.

"தேர்கடவியபெருமான் கனைகழல்காண்பதென்றுகொல்கண்கள்" என்று-தம்முடைய கண்களவனைக்காண வேணுமென்று விடாய்த்தபடிசொன்னார் * செய்யதாமரைக்கண்ணனில் ; * நிழலுமடிதாறுமான

ஸ்ரீவைஷ்ணவர்களைக்காட்டிக்கொடுக்க, அநந்தரம் ப்ரவ்ருத்தமான பாக வதசம்ஶ்லேஷம் * போதயந்த: பரஸ்பரம்பண்ணி தரிக்கைக்குடலன்றிக்கே பகவத்குணங்களுக்கு ஸ்மாரகமாய்க் கீழ்ப்பிறந்த விடாய்க்குத் தம் பகமாயிற்று, கீழே-பாகவதர்களுடைய ஸ்வரூபநிரூபகத்வேந அவனையுஞ்சொல்லிற்றிறே ; ஒவொன்றுக்காகப் புகுந்தாலும் தன்னையொழியப் புறம்பொன்றுக் காளாகாதபடி தன்பக்கலிலே துவக்கிக்கொள்ளவற்றாயிறே பகவத்விஷயமிருப்பது. அத்தாலுமபிநிவேசம் கரைபுரண்டு, "என்றுகொல்கண்கள்காண்பது" என்னுமளவன்றிக்கே மற்றையிந்த்ரியங்களும்விடாய்த்து, ஓரிந்த்ரியத்தினுடைய வ்ருத்தியை மற்றையிந்த்ரியங்களு மாசைப்பட்டும், மற்றையிந்த்ரியங்களினுடையவ்ருத்தியை மற்றையிந்த்ரியமாசைப்பட்டும், அவையெல்லாவற்றினுடைய வ்ருத்தியையும் தாமாசைப்பட்டும், தம்மிலும் விடாய்த்த கரணங்களும் கரணங்களிலும் விடாய்த்ததாமுமாய் ; க்ஷாமகாலத்திலே பஹுப்ரஜனானவன் தன்பசிக்காற்றமாட்டாதே ப்ரஜைகள் பசிக்காற்றமாட்டாதே, அவற்றின்வாயில் சோற்றைத்தான்பறித்துஜீவிப்பது, தன்வாயில்சோற்றை அவைபறித்து ஜீவிப்பதாய், "என்பசிக்கென்செய்வேன், என்ப்ரஜைகளின்பசிக்கென் செய்வேன்" என்னுமாபோலே, தாமும்தம்முடையகரணக்ராமமுமாக நோவுபட்டுக் கூப்பிடுகிறார். [ ஶாதெ௱ஸ்லோகாஹிகஷிதெ௱: ] (காதரைஶ்ஶோகாபிகர்ஶிதை: ) என்று சிலர்பட்டினிகிடக்கச் சிலர்ஜீவிக்குமோபாதி, இவ்வுடம்பைக்கொண்டணையவாசைப்பட்டு இவ்வாசையோடே முடிந்துபோய் இனியொருசரீரபரிக்ரஹம்பண்ணி அவனையநுபவிக்கவிராமே, ஆசைப்பட்டவிக்கரணங்களைக்கொண்டே நானநுபவிக்கும்படிபண்ணித்தரவேணுமென்றாளிறே பிராட்டியும்; அப்படியிவரும்நோவுபட்டு, ஆயுதங்களையும் ஆபரணங்களையும் அவற்றுக்காஶ்ரயமானதிருமேனியையும் குணங்களையும் சேஷ்டிதங்களையுமுடைய வெம்பெருமானைக் காணவேணுமென்று "முன்புபோலே ஈஶ்வரனுக்கொரு குணவிஷ்காராதிகளால் பட்டினிபரிஹரிக்கவொண்ணாது" என்னும்படி, கேட்டாரெல்லாம்நீராம்படி, பெருந்தானத்திலே பெருமிடறுசெய்துகூப்பிடுகிறார். [ ஶுஹெ நஸாஜ்ஜம்தநெ௱வஹிதொஹிவஸாநுவஹ—ஏநு ] (குஹேநஸார்த்தம்தத்ரைவஸ்த்திதோஸ்மிதிவஸாந்பஹூந் ) ஸ்ரீகுஹப்பெருமாளோடேகூட, பெருமாளைப்பிரிந்த விடத்தினின்றும் கால்வாங்கமாட்டாதே நின்றானாயிற்று சுமந்த்ரன் ; அங்குநின்றபோதாநிரண்டு நாளாயிருக்கச்செய்தே "வஹ—ஏநு" (பஹூந் ) என்னாநின்றதாயிற்று பிரிவாலே காலம்நெடுகினபடி. "ஸ்ரீகுஹப்பெருமாளோடேநிற்க, காலம்நெடுகுவானென்" என்றுமிளகாழ்வானைக்கேட்க, "ஸ்மாரகசந்நிதியில் ஆற்றாமை யிரட்டிக்குமிறே" என்றருளிச்செய்தாராம். "மேகக்குழாங்கள்காள் காட்டேன்மின்னும்முரு வென்னுயிர்க்கதுகாலன்" என்றாரிறே.

சைதந்யப்ரஸ்ருதித்வாரமான கரணங்கள் விடாய்க்கையாவதென்னென்னில்; ஆழ்வாருடைய அபிநிவேசாதிசயத்தைச்சொன்னபடி. இந்த்ரியங்களும் தனித்தனியே சேதநசமாதியாலே விடாய்க்கும்படியாயிற்று பகவத்விஷயத்தி லிவர்க்குப்பிறந்தவாசனை. இதரவிஷயங்களில் வாசனை விடாயைப் பிறப்பியாநின்றால் குணாதிகவிஷயத்திற் சொல்லவேண்டாவிறே. பகவத்விஷயத்தில் வாசனைபண்ணுகிறார் பண்ணுகிறது சாதநபுத்யாவல்ல, இதரவிஷயங்களோபாதி யிவ்விஷயம் ரசிக்கவேணுமென்று; "யாவ்ரீதிரவிவெகாநாம்" (யாப்ரீதிரவிவேகாநாம்) ஒருஇந்த்ரியத்தின்வ்ருத்தியை இந்த்ரியாந்தரமாசைப்படக் கூடுமோவென்னில்; சக்ஷுஶ்ரவா:, கண்ணாலேகாண்பதுஞ்செய்துகேட்பதுஞ்செய்யாநின்றதிறே, அதுவுமவன்கொடுத்ததே, அதுநமக்குத்தட்டென்ன அவன்தந்தால்; ஒருதேசவிசேஷத்திலே தன்னையநுபவிப்பார்க்குச் சொடாநின்றானிறே * தம்மையேயொக்க வருளவேண்டுகையாலே; * தூதுசெய்கண்கள் கொண்டொன்றுபேசித் தூமொழியிசைகள் கொண்டொன்று நோக்கியிறே யவன்றன்படி. அதாவது-ஆறுகிண்ணகமெடுத்தால் பலவாய்த்தலைகளாலும் போகச்செய்தேயும் கடலில்புகுமம்ஶம் குறைவற்றுப் போமாபோலே, இவருடைய அபிநிவேசாதிசயம் இவருடையகரணங்களாகிற வாய்த்தலைகளாலே பெருகுகிறபடி..............................*

## ஜீயர் அரும்பதம்.

முடியானேப்ரவேஶே, "தேர்கடவிய" இத்யாதியில்விடாய்தீர, * பயிலும்சுடரொளியில் சமாதாநம்பண்ணியிருக்க, இத்திருவாய்மொழியி லாற்றாமையாலே கூப்பிடுகைக்கடியேதென்ன (தேர்கடவியவித்யாதி) கீழ்ப்பிறந்தவிடாய்-* கனைகழலைக்காணப் பெருமையால்வந்தவிடாய்.

விடாய்க்குத்தம்பகமானபடி யென்னென்ன (கீழேபாகவதர்களுடையவித்யாதி) அதாவது-குணங்களிலே யீடுபட்டவர்கள், வடிவழகிலேயீடுபட்டவர்கள், சேஷ்டிதங்களிலே யீடுபட்டவர்களென்று அவனையும்சொல்லிற்றிறே யென்றபடி. நிருபகத்வேநசொன்னாலுத்தம்பகமாகக் கூடுமோவென்ன (வேறான்றுக்காகவித்யாதி) அன்றிக்கே, (தேர்கடவியவித்யாதியும், நிழலுமடிதாறுமித்யாதியும், கீழே பாகவதர்களுடைய வித்யாதியுமாகிற வாக்யத்ரயமும்) ஆற்றாமையாலே கூப்பிடுகைக்கு ஹேதுத்ரயபரமாதல்.

அத்தாலும்-ஸ்மாரகசந்நிதியாலும் நிருபகத்வேந ப்ரஸ்துதமாகையாலும். யத்வா, "கனைகழல்காண்பதென்றுகொல்" என்கிறவிடாயாலும், கீழில்பாகவதசம்ஶ்லேஷமதுக்குத் தம்பகமாகையாலு மென்னவுமாம். (ஓரிந்த்ரியத்தினுடையவிதி) இரண்டாம்பாட்டுத்தொடங்கி யாறுபாட்டளவும்-ஓரிந்த்ரியத்தினுடையவ்ருத்தியை யிந்த்ரியாந்தரமாசைப்பட்டபடி; "ஆவியே" இத்யாதிமேல் மூன்றுபாட்டையும்பற்ற (அவையெல்லாவற்றினுடைய வ்ருத்தியையும் தாமாசைப்பட்டென்றது) ஏகேந்த்ரியவ்ருத்தியை யாசைப்பட்டது-மற்றையிந்த்ரிய சதுஷ்டயவ்ருத்

தியையாசைப்பட்டதுக்குமுபலக்ஷணம். இது-வ்யாக்யாநத்திலேவ்யக்தம். மற்றை யிந்த்ரியங்களும் விடாய்த்தென்கையாலே-போக்த்ருத்வமும் தோன்றுகையாலே, தம்முடையவ்ருத்தியை யிந்த்ரியங்களாசைப்பட்டமை தோன்றுகிறது. கரணங்களும்தாமும்தனித்தனியேவிடாய்த்ததுக்குத்ருஷ்டாந்தம் (காத்ராணீத்யாதி)ஶ்லோகதாத்பர்யம் ( சிலரித்யாதி ) சுந்தரகாண்டேசத்வாரிம்சேஹநூமந்தம்ப்ரதிசீதா, "யதாதம்புருஷவ்யாக்ரம்காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதை:। ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததாகுருதயாம்மயி." ( யதாதம்புருஷவ்யாக்ரம்காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததாகுருதயாம்மயி ) "ஶோகாபிகர்ஶிதை:" ( ஶோகாபிகர்ஶிதை: ) என்கிறபஹுவசநத்தாலே-தனித்தனியேகரணங்களும், "ஸகாமாஹம்" ( ஸகாமாஹம் ) என்றுதாமும், விடாய்த்தபடிசொல்லுகிறது. ஆயுதங்களையுமென்றது - "பொன்னெடும்சக்கரத்துன்னையே" என்றத்தைப்பற்ற. ஆபரணங்களையுமென்றது - "முடியானே" என்றத்தைப்பற்ற. குணங்களையுமென்றது - "மூவுலகுந்தொழுதேத்தும்சீர்" "எனதாவியையீர்கின்ற சீலமே" இத்யாதியைப்பற்ற. பெருந்தானத்திலேயென்றது - "முடியானே" "தஞ்சனே, வஞ்சனே" "வானவர்தம்நாயகனே" இத்யாதிதூராஹ்வாநங்களைப்பற்ற. தானம்-ஸ்வரம்.

ஸிம்ஹாவலோகநந்யாயேநஸ்மாரகசந்நிதிவிடாய்க்குத் தம்பகமென்றதுக்கு சம்வாதம் ( குஹேநேத்யாதி ) "ஆஶயாயதிவாராமபுநஶ்ஶப்தாபயேதிதி" ( ஆஶயாயதிவாராம:புநஶ்ஶப்தாபயேதிதி ) இத்யுத்தரார்த்தம். இதம்தசரதம் ப்ரதிசுமந்த்ரவாக்யம். இஶ்ஶ்லோகத்துக்கர்த்தம் ( ஸ்ரீகுஹப்பெருமாளோடித்யாதி ) "தத்ரைவ" ( தத்ரைவ ) என்ற ஏவகாரார்த்தம் ( கால்வாங்கமாட்டாதேயென்றது ) சக்ரவர்த்தி, பெருமாளைப்பிரிந்த அஞ்சாம்நாள் ஸ்வர்க்கஸ்த்தனாகையாலே, சுமந்த்ரன் தமஸாதீரத்திலும் கங்காகூலத்திலுமாகப்பெருமாளோடே யிரண்டுநாள் கூடியிருந்து, குஹப்பெருமாளோடே ஶ்ருங்கிபேரபுரத்திலே யிரண்டுநாள் கூடியிருந்து, அஞ்சாம்நாள் சக்ரவர்த்திஜீவிக்கச் செய்தேயிறே வந்தது ; அத்தைப்பற்ற ( ஒன்றிரண்டுநாளாயிருக்கவென்றது ) உக்தார்த்தத்துக் காப்தஸம்வாதம் (ஸ்ரீகுஹப்பெருமாளோடேயித்யாதி) இவ்வர்த்தத்திலேயாழ்வார் ஸ்ரீஸூக்தி ( மேகக்குழாங்களித்யாதி ) மேகசமூஹங்காள், உங்கள்வடிவைக்காட்டாதே கொள்ளுங்கோள், என்னுயிர்க்கந்தவடிவுகாலனு யிராநின்றதென்றபடி.

சங்கைக்குபரிஹாரம் ( ஆழ்வாருடையவித்யாதி ) விவரணம் ( இந்த்ரியங்களுமித்யாதி ) பரிஹாராந்தரமாதல், வாசனைவிடாயைப் பிறப்பிக்குமோவென்ன ( இதரவிஷயங்களிலித்யாதி ) இதரவிஷயங்கள் ஸ்வயம்போக்யங்களாகையாலே யவற்றில்வாசனை விடாயைப்பிறப்பிக்கும் ; தேவதையானவிவனிடத்தில் வாசனை பண்ணுகிறது "பலமதஉபபத்தே:" ( பலமதஉபபத்தே: ) என்று-பலசாதநத்வேநவன்றோ, இதுவிடாயைப் பிறப்பிக்குமோவென்ன ( பகவத்விஷயத்திலித்யாதி ) அப்படியிது ரசிக்கவேணுமென்ற பேருண்டோவென்ன ( யாப்ரீதிரித்யாதி) "யாப்ரீதிரவிவேகாநாம்விஷயேஷ்வநபாயிநீ। த்வாமநுஸ்மரதஸ்ஸாமே ஹ்ருதயாந்மாபஸர்ப்பது" ( யாப்ரீதிரவிவேகாநாம்விஷயேஷ்வநபாயிநீ । த்வாமநுஸ்மரதஸ்ஸாமே ஹ்ருதயாந்மாபஸர்ப்பது ) இதிப்ரதமேஶ்ஶே பகவந்தம் ப்ரதிப்ரஹ்லாத:.

இதுசர்ப்பத்துக்கொழிய மநுஷ்யர்க்குக்கூடுமோவென்ன (அதுவுமித்யாதி) ஆஶ்ரிதர்க்கவன்கொடுக்க வெங்கேகண்டோமென்ன (ஒருதேசேத்யாதி) (தம்மையேயொக்க வருளவேண்டுகையாலே) சாம்யாபத்தியைக்கொடுக்க வேண்டுகையாலே. தனக்குண்டாயேகொடுக்கவேணுமே, ஈஶ்வரனுக்குக்கரணநியமராஹித்ய முண்டோவென்ன (தூதுசெய்யித்யாதி) தூதக்ருத்யத்தைப்பண்ணும் கண்களைக்கொண்டு ஸ்வாபிப்ராயத்தைச் சொல்லி, பரிசுத்தமான வ்ருத்தியையுடைய விசையைக்கொண்டு ஸ்வாபேக்ஷிதங்களைக் கடாக்ஷித்தென்று பாசுரார்த்தம். "ஶ்ரவஸஶ்சக்ஷுஶ்ச" (ஶ்ரவஸஶ்சக்ருஶஶ்ச) இத்யாத்யநுசந்தேயம். கரணங்களும் சேதநசமாதியாலே விடாய்த்தால், தம்மபிநிவேசம் மட்டமாகாதோவென்ன (அதாவதித்யாதி) அதாவதென்றது-வார்த்தைப்பாடு. சகலகரணங்களாலுமவனை யநுபவிக்க வாசைப்படுகிறொன்றபடி..........................................*



## எட்டாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

முடியானேஎமூவுலகுந்தொழுதேத்துஞ்சீ
ரடியானேஎயாழ்கடலைக்கடைந்தாய்புள்ளூர்
கொடியானேஎகொண்டல்வண்ணவண்டத்தும்பரி
னெடியானேஎயென்றுகிடக்குமென்னெஞ்சமே.

### ஆறுயிரப்படி.

சர்வலோகாதிபத்ய சூசகமாய் நிரதிசயதீப்தியுக்தமாய் அதிரமணீயதர்ஶநமாயிருந்த திருவபிஷேகத்தாலேயலங்க்ருதனாய், ப்ரஹ்மேசாநாதிகளுக்கு மீஶ்வரனாய்வைத்து அநாலோசித விசேஷாசேஷலோகசரண்யனாய், ஆஶ்ரிதஜநசமீஹிதநிர்வர்த்தகனாயிருந்தவனே, பொன்மலையின்மீமிசைக்கார் முகில்போலேபெரியதிருவடி திருத்தோளின் மேலேறியருளி இந்தலோகத்திலேவந்துதோன்றாய், என்றெம்பெருமானைக்காணவாசைப்பட்டபோதே காணப்பெறாமையாலே குறைபட்டுக் கிடக்குமென்னெஞ்சமென்கிறார். ..................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ப்ராப்தமுமாய் சரண்யமுமாய் ப்ராப்யமுமான பகவத்விஷயத்திலே தம்முடையநெஞ்சுக்குண்டான அபிநிவேசத்தை யருளிச்செய்கிறார்.

முடியானே-உபயவிபூதிக்கும்சேஷியான மேன்மைக்குசூசகமானமுடியையுடையவனே. அந்தவுறவடியாக, மூவுலகும்-சர்வலோகமும். தொழுது-ஆஶ்ரயித்து. ஏத்தும்-ஸ்துதிக்கும். சீர்-சரண்யத்வைகாந்தகுணபூர்ணமான. அடியானே-திருவடிகளையுடையவனே. ஆஶ்ரிதர்ப்ரயோஜநாந்தரங்களைவேண்டிலும் ஆழ்கடல்-

ஆழ்கடலை. கடைந்தாய் - கடைந்துகொடுக்குமுபகாரகனே. புள்-ஆஶ்ரிதரிருந்தவிடத்திலே வருகைக்குமவர்கள் தூரத்தில்கண்டுகக்கைக்குமடியான பெரியதிருவடியை. ஊர்-வாஹநமும். கொடியானே-த்வஜமுமாகவுடையவனே. கொண்டல்-அவர்களுக்கநுபாவ்யமாம்படிஶ்ரமஹரமாய் காளமேகம்போன்ற. வண்ணு-வடிவையுடையவனே. இவ்வடிவழகையநுபவிப்பித்து அண்டத்து-பரமபதவாசிகளான. உம்பரில்-சூரிகளுக்குநிர்வாஹகனுன. நெடியானே-பெரியவனே. என்று-என்றுதனித்தனியேயிந்தஸ்வபாவங்களையநுசந்தித்து. என்னெஞ்சம்-என்னெஞ்சானது. இடைக்கும்-ஒருப்ரவ்ருத்திக்ஷமமன்றிக்கே சிதிலமாய்க்கிடவாநின்றது.

அண்டத்தும்பரென்று - ப்ரஹ்மாதிகளாகவுமாம். ........................*

## ஈடு - முதற்பாட்டு.

தம்முடையதிருவுள்ளத்துக் கலன்பக்கலுண்டான சாபலாதிசயத்தைச் சொல்லுகிறுர்.

(முடியானே) ஆதிராஜ்யஸூசகமாய் உபயவிபூதிக்கும் கவித்தமுடியிறே, அவன்சேஷித்வ ப்ரகாசகமான திருவபிஷேகத்திலே முந்துறக் கண்வைக்கிறுர். அல்லாதார் முடிகளைப்பொய்ம்முடியாக்கும்படி தலையானமுடியிறே. உபயவிபூதிக்கு மொருமுடியிலே கட்டுண்ணும்படி கவித்தமுடியிறே. (முடியானே) இவர்க்கிதிலோடுகிறவிடாயின்பெருமை இசையினுசையிலே காணுமித்தனை. புகும்க்ரமங்களெல்லா மில்லையிதில், முதலிலேயுயர்ந்ததானமா யிருக்கும். (முடியானே) கீழ் "பொன்முடியன்" என்றதுதான் முடியவநுவர்த்திக்கிறபடி. (மூவுலகுமித்யாதி) குணுகுணநிரூபணம்பண்ணுதே அசேஷலோகசரண்யமான திருவடிகளையுடையவனே. திருவபிஷேகத்தினழகை யநுசந்தித்துத்தோற்றுத் திருவடிகளிலேவிழுகிறுர். ஒருகாலுமடிவிடாரோ. "தன்தாளிணைக்கீழ்க் கொள்ளும்" என்றதுவடிம்பிடுகிறபடி. சர்வசாதாரணமான திருவடிகளை யென்றலையிலே வையாயென்றுகருத்து. (ஆழ்கடலைக்கடைந்தாய்) "ஆரமுதூட்டியவப்பனை" என்றதுபின்னுமிகிறபடி. இத்திருவடிகளில் போக்யதையைவிட்டு ப்ரயோஜநாந்தரத்தை யாசைப்பட்டார்க்கும்வருந்தியபேக்ஷித சம்விதாநம்பண்ணுமவனே. "அப்ரமேயோமஹோததி:" (அப்ரமேயோமஹோததி:) என்றொருவராலளவிடப் போகாதபடியிருக்கிற கடலைக்குளப்படிபோலே கலக்கினபடி. (புள்ளூர்கொடியானே) தன்னையுகந்தார்பக்கல்வந்து தோற்றும்படி பெரியதிருவடியை வாஹநமாகவும் கொடியாகவுமுடையவனே, ஆஶ்ரிதரிருந்தவிடத்தே செல்லுகைக்குவாஹநம், தூரத்திலேகண்டு "வாராநின்றுன்" என்றுதரிக்கைக்கு த்வஜமாகை. கடலைக்கடையப்புக்கு தேவஜாதியிளைத்துக் கைவாங்கினவளவிலே சாய்கரகம்போலே அம்ருதத்தைக்கொண்டு வந்துகொடுக்கைக்குத் திருவடிமுதுகிலேவந்து தோன்றினபடியென்றுமாம். (கொ

ண்டல்வண்ணா ) திருவடிமுதுகிலே தோற்றினபோது ஒருமேருவைக் கினிய காளமேகம்படிந்தாற்போலே யாயிற்றிருப்பது. " நீலம்மேராவிவாம்புதம் " ( நீலம்மேராவிவாம்புதம் ) ( அண்டத்தும்பரில் ) அவன்தோளிலிருக்கு மிருப்பைக்கண்டால் " இவனேசர்வாதிகன் " என்றுதோற்றும்படியா யிற்றிருப்பது. ப்ரஹ்மாதிகளுடைய வைஸ்வர்யமடைய பரிச்சிந்நமாய்த் தன்னைஸ்வர்யம் மேலாய்த்தோற்றும்படியிறேயிருப்பது. வடிவழகோபாதி அவனைஸ்வர்யமு மாகர்ஷகமாயிருக்கிறபடி. ( என்றுகிடக்கும் ) " நெடியானே " என்றால், காணவேணும்கேட்கவேணுமென்கிறசொல்லால் தலைக்கட்டமாட்டுகிறதில்லை ; " நெடியானே " என்றுபாடோடிக் கிடவாநின்றது ; " உத்வார்யேதிலக்ருத்தீநம்புநர்நோவாசகிஞ்சந " ( உக்த்வார்யேதிஸக்ருத்தீநம்புநர்நோவாசகிஞ்சந) என்ற ஸ்ரீபரதாழ்வானைப்போலே, ( என்னெஞ்சமே ) " கொடியவென்னெஞ்சம் " ( என்னுமாபோலே, கொண்டாடிச்சொல்லுகிறாரல்லர்; நான்செய்தபடிசெய்ய, இதின்விடாய்க்கென் செய்வேனென்கிறார். பர்த்தாவே ரக்ஷிக்கவேண்டாவோ, இவ்வயிறுதாரி நெஞ்சையென்னால் பரிக்கப்போமோ வென்கிறார்..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. ( முடியானேயித்யாதி ) " நெடியானே " என்றுகிடக்குமென்னெஞ்சம், என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( தம்முடையவித்யாதி )

முடியைமுற்படச்சொல்லுவானென்னென்ன ( ஆதிராஜ்யேத்யாதி ) ( கவித்தமுடியிறே ) என்றவநந்தரம், ஆகையாலேயென்றுகூட்டுவது, ப்ரஹ்மாதிகளுக்கும் முடியுண்டேயென்ன ; ரஸோக்தி ( அல்லாதாரித்யாதிவாக்யத்வயம் ) பொய்முடியாக்கும்-அஸத்ஸமமாக்குமென்று ஸ்வபாவார்த்தம். சப்பையானமுடியென்றுசாடு. தலையானமுடி-தலையிலேயிருக்கிறமுடி. ஸ்ரேஷ்டமானமுடியென்றுசாடு. ஒருமுடியிலே-ஒருபந்தத்திலேயிதிசாடு, திருவபிஷேகத்திலே யிதிஸ்வபாவார்த்தம். தலையானமையைக் காட்டுகிறார் ( உபயவிபூதிக்குமித்யாதி ) " முடியானே " என்கிறது-ஹ்ரஸ்வதீர்க்கப்லுதங்களிலே அதிப்லுதமாகையாலே - ஆர்த்திஸூசகமாயிருக்கிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார்(இவர்க்கிதிலித்யாதி)ஹ்ரஸ்வதீர்க்கப்லுதங்களென்கிறவடைவிலே வரவேண்டாவோவென்ன (புகும்க்ரமங்களித்யாதி) உயர்ந்ததானம்-அதிப்லுதமான வுச்சஸ்வரம். ப்ரவேசத்திலே-பாகவதஸ்வருபநிருபகத்வேந ப்ரஸக்தங்களான அவனுடையவவயவஸௌந்தர்யங்கள் விடாய்க்குத்தம்பகங்களாயினவென்றதுக்கு நியாமகபதங்களைமுதலிக்கிறார் (கேழ்ப்பொன்முடியனித்யாதி) மேலேமுதலிக்கிறவாக்யங்களுக்குமிப்படியேசங்கதிகண்டுகொள்வது.

" மூவுலகும் " என்றத்தால்பலிதம் ( குணகுணேத்யாதி ) முடிக்கநந்தரம் அவயவாந்தரங்களைவிட்டுத் திருவடியைச்சொல்லுவானென்னென்ன ( திருவபிஷேகத்தினித்யாதி ) ரஸோக்தி ( ஒருகாலுமித்யாதி ) வடிம்பிடுகை-ப்ரோரிக்கை. " மூவுலகும் " இத்யாதிக்குபாவம் ( சர்வசாதாரணமானவித்யாதி )

திருவடிகளுக்கநந்தரம் " ஆழ்கடலைக்கடைந்தாய் " என்றதுக்குபாவம் ( இத்திருவடிகளிலித்யாதி ) "ஆழ்" என்றவிசேஷணத்துக்குத்தாத்பர்யம் ( அப்ரமேயஇத்யாதி ) " [illegible] " ( ஸமுத்ரம்ராகவோராஜா ஶரணம்கந்துமர்ஹதி । காகிதஸ்ஸகரோணய மப்ரமேயோமஹோததிஃ ) இதியுத்தகாண்டே ஏகோநவிம்ஶே விபீஷணஃ.

அநந்யப்ரயோஜநர்விஷயமாகபாவம் ( தன்னையுகந்தாரித்யாதி ) ( புள்ளூர்கொடியானே ) ஊர்என்று - ஊருகிறதாய், அதாவது-வாஹநமாய்; புள்ளைவாஹநமாகவும் கொடியாகவுமுடையவனேயென்றபடி. வாஹநமும் கொடியும்சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் ( ஆஶ்ரிதரித்யாதி ) கீழிற்பதத்தோடேகூட்டி ப்ரயோஜநாந்தர பரவிஷயதயா தாத்பர்யாந்தரம் (கடலைக்கடையவித்யாதி) சாய்கரகம் - விடாய்த்தவன் முகத்திலே நீர்விழும்படியாக வுயரவைத்தகரகம். தண்ணீர்ப்பந்தலிற்கரகமென்றபடி.

கினிய-கபளீகரிக்க. அப்படியிருக்குமோவென்ன ( நீலம்மேராவித்யாதி ) ராஜதர்மே. " [illegible] " ( ததோமஹதிபர்யங்கேமணிகாஞ்சநசித்ரிதே । ததர்ஶக்ருஷ்ணமாஸீநம்நீலம்மேராவிவாம்புதம் ) அயமத்ரகருடஸ்யஸ்கந்தே நிஷண்ணதாயாஃ த்ருஷ்டாந்ததயோக்த இதிமந்தவ்யஃ.

" புள்ளூர்கொடியானே-அண்டத்தும்பரில்நெடியானே " என்றுகூட்டிபாவம் ( அவன்தோளிலித்யாதி ) அண்டத்தும்பரிற்காட்டில்நெடியானே " என்றதால் பலிதம் ( ப்ரஹ்மாதிகளுடையவித்யாதி ) ஆகாசத்திலிருக்கிற ப்ரஹ்மாதிதேவர்களிற்காட்டில் பெரியவனேயிதிசப்தார்த்தஃ. அண்டம்-ஆகாசம். உம்பர்-தேவதைகள். மேலும், " கொண்டல்வண்ணவண்டத்தும்பரில்நெடியானே " என்றுகூட்டிபாவம் ( வடிவழகோபாதியித்யாதி )

" கிடக்கும் " என்றதுக்குவாசனை (நெடியானேயித்யாதிவாக்யத்வயமும்) பாடோடிக்கிடக்கை-திரும்பமாட்டாதபடி யொருபக்கமாகவே படுத்துக்கொண்டுகிடக்கை. அப்படிகிடந்தபேருண்டோவென்ன ( உக்த்வார்யேத்யாதி ) " [illegible] " ( துஃகாபிதப்தோபரதோராஜபுத்ரோமஹாபலஃ ) இதிபூர்வார்த்தம். இதம்சித்ரகூடே ராமதர்ஶநாநந்தரம்பரதஃ. நிநமிதி - க்ரியாவிசேஷணம். " கொடியவென்னெஞ்சம் " என்கிறவிது கொண்டாட்டமாகையாவது-பிறர், தோஷம்சொன்னாலுமவனை விடாதேயவன்பக்கலிலே பற்றிக்கிடக்கப் பெற்றோமேயிந்நெஞ்சென்று உபஶ்லோகித்துச்சொல்லுகை. " என்செய்வேன் " என்கிறதென், தமக்குநோக்கவொண்ணுதோவென்ன ( பர்த்தாவேயித்யாதி ) வயிறுதாரி-குக்ஷிம்பரி.

என்னெஞ்சமித்யாதி க்ரமேணாந்வயஃ.............................................*

## இரண்டாம்பாட்டு.

நெஞ்சமேநீணகராகவிருந்தவென்
றஞ்சனேஎதண்ணிலங்கைக்கிறையைச்செற்ற
நஞ்சனேஎஞாலங்கொள்வான்குறளாகிய
வஞ்சனேஎயென்னுமெப்போதுமென்வாசகமே.

### ஆறுயிரப்படி.

(நெஞ்சமே) ஆஸ்ரிதசமீஹித விரோதிநிரசந சமர்த்தனாய்த் தத் ஸமீஹித நிர்வர்த்தநோபாயஜ்ஞனாயிருந்தநீ, நெஞ்சுன்னை நினைக்கவருள் செய்தாற்போலே நானுமுன்னை நினைக்கவருள் செய்தருளவேணுமென் றெப்போது மலற்றாநிற்குமென் வாசகமென்கிறார்.......................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிஷ்டத்தைக்கழித்து அநந்யார்ஹமாக்கும்படியை யென்வாக்கெப்போதுஞ் சொல்லாநின்றதென்கிறார்.

என்-என். வாசகம் - வாசகமானது. எப்போதும் - சர்வகாலமும். நெஞ்சமே-நெஞ்சையே. நீள்-பெரிய. நகராக-திவ்யநகரியாகக்கொண்டு. இருந்த - வர்த்திக்கையாலே. என்-எனக்கு. தஞ்சனே-நற்றுணையானவனே. தண் - குளவிக்கூடு போலே ராக்ஷசர்சேர்ந்ததண்மையையுடைத்தான. இலங்கைக்கு - லங்கைக்கு. இறையை-நிர்வாஹகனானராவணனை. செற்ற-முடித்த. நஞ்சனே - நஞ்சானவனே. மஹாபல்யபிமாநத்தைக்கழித்து, ஞாலம்-பூமியை. கொள்வான்-அநந்யார்ஹமாக்கிக்கொள்ளுகைக்காக. குறளாகிய - வாமநவேஷனான. வஞ்சனே - க்ருத்ரிமனே. என்னும்-என்னாநிற்கும்.

ராவணனையழித்தாற்போலே இந்த்ரியபாரவஶ்யத்தைத்தவிர்த்து, பூமியைக்கொண்டாற்போலே யென்னை யநந்யார்ஹனாக்கவேணுமென்றுகருத்து..........*

### ஈடு - இரண்டாம்பாட்டு.

"ஐ௩ஃவ-௫ெவூாவா௰௬௲ஃ" (மந꞉பூர்வோவாகுத்தர꞉) என்று மநஸ்ஸுக்கநந்தரமானவாக்கு மநோவ்ருத்தியையும் தன்வ்ருத்தியையுமாசைப்படாநின்றதென்கிறார்.

(நெஞ்சமேயித்யாதி) வாக்கின்வார்த்தையிருக்கிறபடி. என்றும் நெஞ்சிலேயிருந்துபோமித்தனையோ, என்பக்கலுமொருகாலிருக்கலாகாதோவென்னாநின்றது. அவதாரணத்தாலே -இந்த்ரியாந்தரங்கள், பரமபதம், க்ஷீராப்திதொடக்கமானவிடங்களென்படுகிறதோ; "கல்லுங்கனைகடலும்வைகுந்த வானும் புல்லென்றொழிந்தனகொலேபாவம்" என்னுமாபோலே, பரமபதமு மவ்விருப்புமென்படுகிறதோ.

* கலங்காப்பெருநகரத்திற் பண்ணுமாதரத்தையிதிலே பண்ணாநின்றான். பரமபதத்திலிட்டளமும் தீர்ந்ததிங்கேயாயிற்று. மநஸ்ஸையிட்

டளமில்லாதநகரமாகக்கொண்டிருந்தான். இல்லையாகில் மறந்துகூப்பிடு மாறுமிறே. (என்தஞ்சனே) இப்படி கூப்பிடப்பண்ணின உபகாரகத்வத்தை நினைத்துச்சொல்லுகிறார், சம்சாரிகளிலிப்படி கூப்பிடுகிறாரில்லையிறே. இவர் நெஞ்சிலேயிருக்கையிறே யிவ்விஷயத்தில் கூப்பிடுகிறது. (தண்ணிலங்கையித்யாதி) கட்டளைப்பட்ட லங்கைக்கிறைவனான ராவணனை நிரஸித்து அவனுக்கு நஞ்சானவனே. ஒன்றுக்கும் விக்ருதனாகாததிருவடியும் லங்கையில் கட்டளையைக்கண்டு "அஹோவீர்யமஹோதைர்ய மஹோஸத்த்வமஹோத்யுதி:" (அஹோவீர்யமஹோதைர்ய மஹோஸத்த்வமஹோத்யுதிঃ) என்று மதித்த வைஶ்வர்யமிறே. தண்மையாலே-கட்டளைப்பாட்டைலக்ஷிக்கிறது. (ஞாலமித்யாதி) மஹாபலியாலே யபஹ்ருதையான பூமியைமீட்கும் விரகறியுமவனே. ராவணனைப்போலேதலையையறுவிட்டது, ஔதார்யமென்பதொரு குணலேஶமுண்டாகையாலே. "இவன்கையிலே யொருதர்மாபாஸமுண்டாயிருந்தது" என்று இவனை யழியாதே, சர்வாதிகனானதன்னை யர்த்தியாக்கி யிந்த்ரனுக்கு ராஜ்யத்தைவாங்கிக்கொடுத்தவிரகு. (வஞ்சனே) * கள்ளக்குறளாய்மாவலியைவஞ்சித்து, சிறுகாலைக்காட்டி "மூவடி" என்றுவேண்டிப் பெரியகாலாலேயளந்து, இரண்டடியிலேயடக்கி ஓரடிக்குச் சிறையிலேயிட்டுவைத்த வஞ்சநம். கொள்வானென்கிறார் - இந்த்ரன்பேறுதன்பேறாகையாலே. இவ்வஞ்சநத்தையே சர்வகாலமும் சொல்லாநின்றதென்வாக்கானது. இவ்வஞ்சநத்தை யநுசந்தித்தபின்பு ராமாவதாரத்தின் செவ்வையிலும்போகிறதில்லை; தன்பெருமை யழியாமற்செய்தவிடமிறே ராமாவதாரம், தன்பெருமையை யழியமாறினவிடமிறேயிது. (எப்போதும்) கலியர் "சோறுசோறு" என்னுமாபோலே ........................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (நெஞ்சமேயித்யாதி) நெஞ்சுக்கநந்தரம் வாக்கைச்சொன்னதுக்குபாவம் (மநஃபூர்வஇத்யாதி) யஜுஷீயம்ஶ்ருதி:.

வாக்கின்வார்த்தையையுபபாதிக்கிறார் (என்றும்நெஞ்சிலேயித்யாதி) அர்த்தாந்தரம் (அவதாரணத்தாலேயித்யாதி) இது-வ்யாக்யாநத்திலேவ்யக்தம். ஏகாரத்தமென்றே நிர்வஹிப்பது. ப்ரமாணகதநமுகேந கீழ்வாக்யவிவரணம் (கல்லுமித்யாதி) பெரியதிருவந்தாதி யறுபத்தெட்டாம்பாட்டு. திருமலையும், ஸ்வஸந்நிதாநத்தாலே கோஷிக்கிறகடலும், வைகுண்டஶப்தவாச்யமான போகபூமியு மிவன் ஸந்நிதியில்லாமையாலே புல்லியவாய்ப்போய்விட்டன; ஏபாவம் - என்னேபாவம். தம்முள்ளேயவன் புகுந்துபோகமாட்டாதேநிற்கிறபடியைக்கண்டு, ஹ்ருஷ்டராய் என்னேபாவமென்கிறார். "புல்லென்றழகழிதல் புல்லேநல்குதல் பொலிவழிதல்" என்னக்கடவதிறே என்றுபாசுரார்த்தம். "நகர்" என்றதுக்குபாவம் (கலங்காப்பெருநகரத்திலித்யாதி) கலங்காப்பெருநகர்-பரமபதம். * நீட்சிக்குபாவம் (பரமபதத்திலித்யாதி) இட்டளம்-சங்கோசம். மநஸ்ஸை நீணகராகக்கொண்

டானென்று தானறிந்தபடி யெங்ஙனேயென்ன (இல்லையாகிலித்யாதி) அதாவது-நெஞ்சிலேயிருக்கையாலேயன்றோ வாக்குக்கூப்பிடாநின்றதென்றபடி. " கரணங்கள் தனித்தனியே சேதநசமாதியாலே கூப்பிடுகிறனவாகச்சொல்லுகிற ப்ரகரணத்துக்கு, அவன் நெஞ்சிலேயிருக்கையாலே வாக்குக்கூப்பிடுகிறதென்கை விருத்தமாகையாலே, இவ்வாக்யம்-ஸந்திக்தம் " என்பர். யத்வா, நெஞ்சிலேயிருந்தானில்லையாகில் மறந்து நெஞ்சுக்குக்கூப்பீடுமாறுமிறே யென்றபடியாதல். கார்யாத்காரணமுந்நேயமென்றபடி. " என்தஞ்சனே " என்றது - வாக்கின்வார்த்தையாயிருக்க, ஆழ்வார்வார்த்தையாக வருளிச்செய்ததும் சந்திக்தம். அன்றிக்கே, "சைதந்யப்ரஸ்ருதித்வாரமான கரணங்கள் விடாய்க்கையாவதென்னென்னில்; ஆழ்வாருடைய அபிநிவேசாதிசயத்தைச்சொன்னபடி " என்ற பரிஹாரவாக்யத்துக்குச்சேர-கரணங்களுக்கும் ஆழ்வார்க்கும் பேதமில்லாமையாலே, அபேதத்தைவிவக்ஷித்திப்படி யருளிச்செய்கிறுரென்று விரோதபரிஹாரம்பண்ணவுமாம். மேலுமிப்படி விருத்தமான வாக்யங்களுண்டாகில், இப்படியே பரிஹாரம்கண்டுகொள்வது. கூப்பிடப்பண்ணுகை யுபகாரமோவென்ன (சம்ஸாரிகளிலித்யாதி) இல்லையாகிலித்யாதிவாக்யத்தில்-வ்யதிரேகத்தாலே யுபபாதிதமானவர்த்தத்தை, அந்வயமுகேந த்ருடீகரிக்கிருர் (இவர்நெஞ்சிலேயித்யாதி)

"தண்" என்று-அழகாய், கட்டளைப்பாட்டைச்சொல்லுகிறது. அப்படிகட்டளைப்பாடுடைத்தாயிருக்குமோவென்ன (ஒன்றுக்குமித்யாதி) " அஹோராக்ஷஸராஜஸ்ய ஸர்வலக்ஷணயுக்ததா " (அஹோராக்ஷஸராஜஸ்யஸர்வலக்ஷணயுக்ததா) இத்யுத்தரார்த்தம். சுந்தரகாண்டே ராவணஸமீபகதஹநூமத்வாக்யமிதம்.

"வஞ்சனே" என்றத்தால் - ( விரகறியுமவனேயென்றது ) வஞ்சனேயென்று - விரகாதல், வஞ்சனையாதல். ஒருவிரகறியவேணுமோ, விக்ரஹித்து வாங்கவொண்ணுதோவென்ன (ராவணனைப்போலேயித்யாதி) விரகேதென்ன (இவன்கையிலேயித்யாதி) ஒருதர்மாபாஸமாவது-ஔதார்யம். "வஞ்சனே" என்றதுக்கு பாவம் (கள்ளக்குறளாயித்யாதி) திருமொழி-அஞ்சாம்பத்து * அறிவதில்ரண்டாம்பாட்டு. க்ருத்ரிமமான வாமநவேஷத்தையுடையனுய் மஹாபலியை வஞ்சித்து இதிபாசுரார்த்தஃ. கொண்டுகொடுப்பானென்னுதே, " கொள்வான் " என்கிறதென்னென்ன (கொள்வானென்கிறுரித்யாதி)

"வாசகமே" என்கிற ஏவகாரத்தை - * வஞ்சநத்திலேகூட்டிபாவம் ( இவ்வஞ்சநத்தையித்யாதி ) ஏவகாரவ்யாவர்த்யமாஹ ( இவ்வஞ்சநத்தையநுசந்தித்தவித்யாதி ) இவ்வாக்யம் " இலங்கைக்கிறையைச்செற்ற " என்றத்தைப்பற்ற. ராமாவதாரத்திலேவாசியேதென்ன (தன்பெருமையித்யாதி) கலியர்-பசியர்.

என்வாசகம்-எப்போதும்-நெஞ்சமேயித்யாரப்ய, என்னுமித்யந்வயஃ......*

## மூன்றும்பாட்டு.

வாசகமேயேத்தவருள்செய்யும்வானவர்த
நாயகனேஎநாளிளந்திங்களைக்கோள்விடுத்து
வேயகம்பால்வெண்ணெய்தொடுவுண்டவாநுயர்
தாயவனேஎயென்றுதடவுமென்கைகளே.

## ஆறுயிரப்படி.

(வாசகமே) வானவர்தம் நாயகனுய்வைத்து வாசகமேயேத்தவருள்செய்தருளினாற்போலே, அபிநவபூர்ண சந்த்ரகிரணம்போலே திருமுத்தினொளி புறப்படும்படி திருப்பவளத்தைத்திறந்து, வெண்ணெய்தொடுவுண்ட வுன்னுடையவவ்வழகை நானுமேத்தும்படி யருள்செய்யவேணுமென்று தடவுமென்கைகளென்கிறார்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவ்யாமோஹத்தாலே அவர்கள் பதார்த்தங்களை விரும்பும்படியான க்ருஷ்ணனை யென்கைகளாராயாநின்றனவென்கிறார்.

வாசகமே-வாசகமே. ஏத்த-ஏத்தும்படி. அதுக்கே, அருள்-அருளை. செய்யும்- செய்யுமவனாய். வானவர்தம் - அத்தாலே ஸூரிகளுங்கொண்டாடும்படி. நாயகனே-நிர்வாஹகனானவனே. நாள்-அபிநவனாய். இளம்-இளையனான. திங்கள்-உதயசந்த்ரனுடைய. கோள்-அநுரக்தமானதேஜஸ்ஸை. விடுத்து-விரிக்குமாபோலே. அதரசோபாவிசிஷ்டமானஸ்மிதசந்த்ரிகையைப்ரகாசிப்பித்து, வேயகம்-மூங்கிற்குடிலின். பால்-அகவாயிலேவைத்த. வெண்ணெய்-வெண்ணெயை. தொடு-களவுகண்டு. உண்ட-அமுதுசெய்தத்தாலே. ஆனாயர்-இடையருடைய. தாயவனே-சத்தாதிகளுக்குவர்த்தகனானவனே. என்று-என்று. என்-என். கைகள்-கைகளானவை. தடவும்-களவுகாணப்புக்கவிடத்தேதடவிப்பிடிக்கத்தேடாநின்றன.

நாள்-புதுமை. இளமை-உதயாவஸ்த்தை. கோள்-ஒளி. விடுத்தல் - விரித்தல். நாளிளந்திங்களைக்கோள்விடுத்தென்று-உபமாநமுகத்தாலே உபமேயமானஸ்மிதத்தை லக்ஷிக்கிறது ..............................*

## ஈடு-மூன்றாம்பாட்டு.

கைகளானவை வாக்வ்ருத்தியையும் தன்வ்ருத்தியையு மாசைப்படாநின்றனவென்கிறார்.

(வாசகமேயேத்தவித்யாதி) கைகளானவை; இவ்வாக்கேயேத்திப்போமித்தனையோ, நானுமொருகாலேத்தின லாகாதோ என்னாநின்றது. "விவநு்வஃ" (விபங்யவஃ) என்கிறபடியே - நித்யஸூரிகளேத்தவிருக்கிற வுனக்கு, வாக்கேதேனும் பச்சையிட்டதுண்டோ. நித்யஸூரிகளைப்போலே வாக்குக்குன்னையேத்துகையே ஸ்வபாவமாகக் கொடுத்தவனென்னுதல். நிரபேக்ஷனாயிருக்கச்செய்தேயன்றோ வாக்குக்கேத்தலாம்படி ஸாபேக்ஷனாயிற்று, அந்தநைரபேக்ஷ்ய மென்பக்கலிலேயாயிற்றே. (நாளிளந்திங்களைக்கோள்விடுத்து) *படலடைத்தசிறுகுரம்பை நுழைந்துபுக்குப் பசுவெண்ணெய்களவுகாணப்புக்கவிடத்திலே; உறிகளிலேசேமித்துவைப்பர்களிறே, தன்னிறத்தினிருட்சியாலும் அவ்விடத்தினிருட்சியாலும் தெரியாமையாலே தடவாநிற்கச்செய்தே, கையிலே வெண்ணெய்த்தாழிகள் தட்டினப்ரியத்தாலே ஸ்மிதம்பண்ணுமிதுவே கைவிளக்கா

கவமுதுசெய்யுமாயிற்று. ஆள்தட்டிற்றாகில் வாயைமூடவமையுங்காணும்; ஆள் தட்டுகைதானபிமதமாகையாலே ஸ்மிதம்மாறுமே. பின்னை ஸ்ரீகௌஸ்துபத்தைக்கையாலேபுதைக்கவமையுமே. அபிநவசந்த்ரனைப் போலேயாயிற்று முறுவலிருக்கிறது. "செக்கரிடைநுனிக்கொம்பிற்றோன்றும் சிறுபிறைமுளைப்போல நக்கசெந்துவர்வாய்த்திண்ணைமீதே நளிர் வெண்பல்முளையிலக" என்னக்கடவதிறே. திங்கள்போலென்னாதே, திங்களென்றது - முற்றுவமையிருக்கிறபடி, "தாவிவையங்கொண்டதடந் தாமரை" என்னுமாபோலே. (கோள்விடுத்து) தேஜஸ்ஸைப்புறப்படவிட்டு. திருவதரம்மறைக்குமத்தைத்தவிருகை. (வேயகம்) மூங்கிலாலே சமைந்தவகம். (பால்வெண்ணெய்தொடுவுண்ட) அவ்வகங்களில் பாலையும் வெண்ணெயையும் களவுகண்டமுதுசெய்த. அகத்திடத்துவெண்ணெயென்றுமாம். (வேயகம்பால்வெண்ணெய்தொடுவுண்ட) வேய்த்தகத்திடத்து வெண்ணெயைக்களவுகண்டமுதுசெய்தவென்றுமாம். வேய்த்து-அவசரம்பார்த்து. வேய்த்திறேகளவுகாண்பது; "போரார்வேல்" இத்யாதி. (ஆனாயர்தாயவனே என்று) ஆனாயர்க்குத்தாய்போலே பரிவனானவனேயென்று (தடவுமென்கைகள்) படலையடைத்துள்ளேபுக்குக் கொண்டியிலே பிடிக்கக்காணுந்தேடுகிறது. நவநீதசௌர்ய வ்ருத்தாந்தத்தை யநுசந்தித்தவாறே கைகளுக்குக்கண்தோற்றுகிறதில்லை, [ராமம் மேநுகதா த்ருஷ்டி: இத்யாதி] [ராமம்மேநுகதாத்ருஷ்டிரித்யாதி] கடல் கொண்டவஸ்துமீளுமோ. அறுபதினாயிரமாண்டு மலடுநின்று பட்டினிவிட்டவென்கண்கள்மீளுமோ. நல்லதுகண்டு கால்தாழ்ந்தத்தை, இனி "நம்மது" என்று வழக்குப்பேசினால் பசையுண்டோ. [ஸுஹ்ராவி] [அத்யாபி] தன்னைக்கொண்டு காரியங்கொள்ளவேண்டுமிற்றைக்கு முதவுகிறதில்லை. அவரைக்காணவிட்டால், அவரைப்பெற்ற சௌபாக்யமுடையவுன்னைக்கண்டு தரிக்கவேண்டு மிவ்வளவிலும் மீளுகிறதில்லை .........*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (வாசகமேயித்யாதி) "வாசகமேயேத்த - தாயவனே என்றுதடவும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (கைகளானவையித்யாதி)

அவதாரணார்த்தம் (கைகளானவையித்யாதி) அருள்செய்யும் நாயகனென்னாதே "வானவர்தம்நாயகனே" என்றுவிசேஷித்ததுக்கு தாத்பர்யத்வயம். முந்தினது -(விபங்யவஇத்யாதி) (நித்யசூரிகளேத்த) நிரபேக்ஷனாய் (இருக்கிறவுனக்கு) என்றபடி த்விதீயதாத்பர்யம் (நித்யசூரிகளைப்போலேயித்யாதி) இந்தயோஜனையில், "வாசகமேத்தவே-அருள்செய்யும்" இத்யந்வய:. ஏத்தவே-ஏத்துகையேஸ்வபாவமாக. ப்ரதமார்த்தவிவரணம் (நிரபேக்ஷனாயித்யாதி)

வெண்ணெய்தொடுவுண்கிறவளவிலே நாளிளந்திங்களைக்கோள் விடுக்கைக்கு ப்ரஸக்தியேதென்ன (படலடைத்தவித்யாதி) அன்றிக்கே, பதாவதாரிகையா

தல். சாணப்புக்கவிடத்திலே - (தட்டின) இத்யந்வய8. திருமொழி நாலாம்பத்து நாலாந்திருமொழி மூன்றாம்பாட்டு. "படல்" இத்யாதி. படலாலேயடைத்து வைத்த சிற்றகங்களிலே படலைத்திறந்து நுழைந்துபுக்கு அன்றுகடைந்தசெவ்விய வெண்ணெயிதிபாசுரார்த்த8. அமுதுசெய்யும்போது ஆரோனும்வந்தாலோவென்ன (ஆள்தட்டிற்றாகிலித்யாதி) ஸ்மிதம்பண்ணாநிற்க, வாயைமூடும்படியென்னென்ன (ஆள்தட்டுகைதானித்யாதி) ஆனால்கௌஸ்துபமுண்டேயென்ன (பின்னையித்யாதி) நாளாலிலேயசந்த்ரனைப்போலே யிருக்கிறதிருமுத்தினொளி புறப்படும்படிஸ்மிதம்பண்ணி யிதிசப்தார்த்த8. கோள்-தேஜஸ்ஸு. விடுக்கை-ப்ரவஹிப்பிக்கை. ஸ்மிதம்பண்ணி யென்றபடி. "திங்களை" என்கிறவைகாரம்-அவ்யயம். திங்களினுடையவென்றபடி. அப்படி அபிநவசந்த்ரனைப்போலே யிருக்குமோவென்ன (செக்கரிடையித்யாதி) பெரியாழ்வார்திருமொழி யெட்டாந்திருமொழி யிரண்டாம்பாட்டு செக்கர்வானத்திடையிலே சாகாக்ரத்திலேதோன்றும்படி யுந்நேயமான பாலசந்த்ராங்குரம்போலே, ஸ்மிதம்பண்ணுகிற மிக்கச்சிவந்திருந்துள்ள திருவதரமாகிற வுயர்ந்தநிலத்தின்மேலே குளிர்ந்துவெளுத்திருக்கிற திருமுத்தினங்குரத்தினுடைய தேஜஸ்ஸானது ப்ரகாசிக்கவென்றுபாசுரார்த்தம். செக்கர்-செவ்வானம். பிறை-பாலசந்த்ரன். நக்க-ஸ்மிதம்பண்ணுகிற. "செம்" என்றும், "துவர்" என்றும்-சிவப்பாகையாலே, மிகுதியைச்சொல்லுகிறது. நளிர்-குளிர்த்தி. முற்றுவமைக்கு தாஹரணம் (தாவியித்யாதி) பூமியையளந்துகொண்ட விஸ்த்ருதமான தாமரை போன்ற திருவடிகளிதிசப்தார்த்த8.தாமரையென்று-உபமேயம் லுப்தமாய் உபமாநம்மாத்ரமே சொல்லுகையாலே, முற்றுவமையென்கிறது. முற்றுவமை-பூர்ணோபமை. "வேய்" என்று-மூங்கிலென்னுதல், வேய்த்தென்னுதல் - வேய்த்து-வேறைப்பார்த்து, வேவுபார்த்தென்றபடி. பாலென்று-க்ஷீரமாதல், இடமாதல். அகம்-க்ருஹம். தொடுவுண்ட-திருடியுண்ட. தொடுவு-களவு. களவுகண்டு-திருடியென்றபடி. வேவுபார்க்கவேணுமோவென்ன (வேய்த்திறேயித்யாதி)

தடவுகிறது-கொண்டியிலேபிடிக்கைக்காகவென்னுதல், கண்தெரியாமையாலேயென்னுதல். இவ்வர்த்தத்வயமும் - வ்யாக்யாநத்திலேவிஶதம். இவ்வர்த்தத்வயத்தையுமடைவே யருளிச்செய்கிறார் (படலையடைத் தித்யாதிவாக்யத்வயத்தாலே) படல்-தடுக்கு. கொண்டியிலே-களவிலே. பிடித்துக்கொள்ளவொண்ணாதோ, தடவவேணுமோவென்ன (நவநீதேத்யாதி)

௬டுபாட்டாலே கண்தோற்றாமைக்கு ஸம்வாதம் (ராமமித்யாதி) "ராமம் மேऽநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே । ந த்வா பஶ்யாமி கௌஸல்யே ஸாது மா பாணிநா ஸ்ப்ருஶ" (ராமம்மேநுகதாத்ருஷ்டிரத்யாபிநநிவர்த்ததே। நத்வாபஶ்யாமிகௌஸல்யேஸாதுமாபாணிநாஸ்ப்ருஶ) இத்யயோத்யாகாண்டே த்விசத்வாரிம்ஶேகௌஸல்யாம் ப்ரதிதஶரத8. "ராமம்" என்றதுக்குபாவம் (கடல்கொண்டவித்யாதி) "மே" என்றதுக்கு தாத்பர்யத்வயம் (அறுபதினாயிரமாண்டித்யாதி வாக்யத்வயமும்) பசை-ப்ரயோஜநம். விவரணம் (அவனாயித்யாதி) "பாணிநா ஸ்ப்ருஶ" (பாணிநாஸ்ப்ருஶ) என்றதுக்கு-ஸ்பர்ஶநேந்த்ரியமுண்டோ வில்லையோ தொட்டுப்பார் என்றத்தைநினைப்பது.

என்னைகளித்யாதி க்ரமேணாந்வய8.........................................*

## நான்காம்பாட்டு.

கைகளாலாரத்தொழுதுதொழுதுன்னை
வைகலுமாத்திரைப்போதுமோர்வீடின்றிப்
பைகொள்பாம்பேறியுறைபரனேஉன்னை
மெய்கொள்ளக்காணவிரும்புமென்கண்களே.

## ஆறுயிரப்படி.

(கைகளாலார) பைகொள்பாம்பேறியுறைபரனே யுன்னையொரு க்ஷணமாத்ரமு மொழியாமே யெப்போதுங் கைகளாலே யாரத்தொழுது, மெய்கொள்ளக்காண விரும்பாநிற்குமென்கண்களென்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவ்வவதாரமூலமான அநந்தசாயியைக்காண வாசைப்படாநின்றதென் கண்களென்கிறார்.

என்-என். கண்கள்-கண்களானவை. கைகளால்-கைகளாலே. உன்னை - உன்னை. ஆர-பரிபூர்ணமாக. தொழுதுதொழுது-பலகாலுந்தொழுது. வைகலும்-காலதத்வமுள்ளதனையும். ஓர்-ஒரு. மாத்திரைப்போதும்-க்ஷணமாத்ரமும், வீடின்றி-விடாதே. பை-விரிகிறபணங்களை. கொள்-உடைய. பாம்பேறி - திருவநந்தாழ்வான்மேலே. உறை - நித்யவாசம்பண்ணுகிற. பரனே - பரமசேஷியே. உன்னை-உன்னையே. மெய்கொள்ள-அபரோக்ஷித்து. காண-காணவேணுமென்று. விரும்பும்-ஆசைப்படாநின்றன.

கண்கள் கையாலேதொழுகையாவது-அதினுடையவ்ருத்தியிலு மந்வயிக்கத்தேடுகை. பை - பணம்.......................................................................*

## ஈடு-நான்காம்பாட்டு.

கண்களானவை கைகளின்வ்ருத்தியையும் ஸ்வவ்ருத்தியையுமாசைப்படாநின்றதென்கிறார்.

(கைகளால்) காமினியாய் முலையெழுந்துவைத்து காந்தனுடைய கரஸ்பர்ஶம்பெறாத வேபாதியிறே யிவற்றுக்குத்தொழாதொழிகை. கைவந்தபடிசெய்யவிறே யிவராசைப்படுகிறது, "தெ₃ஹஸம்வத்ரீஸ்₂வராய" (தேஹஸம்பத்ரீஸ்வராய) இறே. (ஆரத்தொழுது) பசியர் "வயிறாரவுண்ண" எனனுமாபோலே, "உன்னைத்தொழவேணும்" என்றாசைப்பட்டுப்பெறாமையாலே யுறாவிக்கிடக்கிற விக்கைகளானவைநிறையத்தொழுது. வாய்வந்தபடிசொல்லவும், கைவந்தபடிசெய்யவுமிறே யிவராசைப்படுகிறது. வாய்க்கேத்துகையோபாதியிறே கைக்குத்தொழுகையும். (தொழுதுதொழுது) ப்ரயோஜநாந்தரத்துக்காகத்தொழில் ப்ரயோஜநத்

தளவிலேமீளும்,சாதகபுத்யாதொழில் சாத்யம்சித்தித்தவளவிலேமீளும், அங்ஙனன்றிக்கே யிதுவேயாத்ரையாய். "முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்" (முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்) என்று - முக்தர்க்குலக்ஷணஞ் சொல்லுகிறவிடத்தில் ஶ்வேதத்வீபவாசிகள் படியாகச்சொல்லி, அவர்களையிறே "நித்யாஞ்சலிபுடாঃ" (நித்யாஞ்சலிபுடாঃ) என்கிறது. [ஹ்ருஷ்டாঃ] [ஹ்ருஷ்டாঃ] பசியிலே யுண்ணப்பெற்றாற்போலேயாயிற்று தொழுதாவிருக்கும்படி. [நமஇத்யேவவாதிநঃ] [நமஇத்யேவவாதிநঃ] இதுவே சீலமாயிருக்கை. (உன்னை) இத்தலைதொழுது சத்தைபெறுமா போலே, தொழுவித்துக்கொண்டு சத்தைபெறுமுன்னை. கைவந்தபடி செய்யச்சொல்லிவிட்டவுன்னை. ப்ராப்தனானவுன்னை. "ஸேவாஶ்வவ்ருத்திঃ" (ஸேவாஶ்வவ்ருத்திঃ) இறே புறம்புதொழுவது. தொழுதல்லது தரியாதகையாலே, தொழுவித்துக்கொண்டல்லது தரியாதவுன்னை. (வைகலுமித்யாதி) நாள்தோறும், அதுதன்னிலு மொருக்ஷணமுமிடைவிடாதே. ஒருநாளைக்கொருகால்தொழுது தேவையற்றிராதே, இடைவிடாதேதொழுது. நித்யாக்நிஹோத்ராதிகளோபாதியாகப்போராது. (பைகொளித்யாதி) தொழுவித்துக்கொள்ளுகைக்கீடான உச்ச்ராயத்தையும், ஸ்ப்ருஹணீயதையையும், தொழுமவர்களிருக்கும்படியையுஞ் சொல்லிற்று. திருமேனியோட்டைஸ்பர்ஶத்தாலே விகஸிதமானபணங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளுகையாலே, தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே யிருக்கையாலே (பரனென்கிறது) அநந்தசாயியிறே சர்வேஶ்வரனாவான். பர்யங்கவித்யையிற்சொல்லுகிறபேற்றை ஆசைப்படாநின்றது. (உன்னை) ப்ராப்தனுமாய் போக்யனுமானவுன்னை. (மெய்கொள்ளக்காண) பற்றும்பற்றாகமெய்யேகாண. மாநஸாநுபவம் பாவநாப்ரகர்ஷத்தாலே ப்ரத்யக்ஷஸமாநமாம்படி விசததமமாக, "இனிக்கிட்டிற்று" என்றணைக்கத்தேட, கைக்கெட்டாமையாலே கூப்பிடோடே தலைக்கட்டிவிடுகையன்றிக்கே ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படி காணத்தேடாநின்றது. (விரும்பும்) ஆசைப்படாநின்றது. கிடைப்பது, கிடையாதொழிவது, ஆசைப்படாநின்றது. (என்கண்களே) என்கண்கள் தன்கைகளாலேதொழவும் தான்காணவுமாசைப்படாநின்றது. ஸ்ரீபரதாழ்வான், பெருமாள்பின்னேபோன இளையபெருமாளை "அவருமொருவரோ" என்று கொண்டாடி, அவர்போய்ச்செய்த அடிமையையுந் தானாசைப்பட்டாற்போலே................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (கைகளாலித்யாதி) "கைகளாலாரத்தொழுது, காண விரும்பும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ) கண்களானவையித்யாதி ) தொழுவதுகைகளாலே யாயிருக்க, "கைகளால்" என்றுவிசேஷிக்கிறது

க்குஸங்கதர்ஶநமாகபாவம் (காமிநியாயித்யாதி) கீழ்ச்சொன்னத்தை ரஸோக்தியாலே விசதீகரிக்கிறூர் (கைவந்தபடியித்யாதிவாக்யத்வயேந) ஆகையாலே (கைவந்தபடி) என்றுகூட்டுவது. கைவந்தபடி - ஸ்வேச்சையானபடி யென்றுரசம். அவனுக்காகக் கண்டகைகளென்று கீழேயருளிச்செய்து, தொழப்பெறுமையாலேயுருவினகைகளென்று தாத்பர்யாந்தரம் (உன்னைத்தொழவித்யாதி) "காமிநியாய்" இத்யாதிவாக்யவிவரணமாதல். கீழ்ப்பாட்டையும்கடாக்ஷித்துசாடு (வாய்வந்தபடியித்யாதி) விவரணம் (வாய்க்கித்யாதி) வீப்ஸைக்குதாத்பர்யம் (ப்ரயோஜநாந்தரேத்யாதி) ப்ரயோஜநத்தளவிலே-ப்ரயோஜநஸித்தியளவிலே. (இதுவேயாத்ராயாய்) ப்ராப்யமாகையாலே யென்றபடி. தொழுகையே யாத்ராயாணபேறுண்டோவென்ன (முக்தாநாமித்யாதி) நாராயணீயே, "முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதச் ச்வேதத்வீபவாஸிநாம் । நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந:." (முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்யச்ச்வேதத்வீபவாஸிநாம் । நித்யாஞ்சலிபுடாஹ்ருஷ்டாநமஇத்யேவவாதிந:) ஹ்ருஷ்டா: என்கிறபதம்-அஞ்சலிகரணத்தினுடைய வத்யந்தாபீஷ்டதமத்வத்தை ஸூசிப்பிக்கிறது. நமஇத்யேவவாதிந: என்கிறவிது-வாசிகநமஸ்காரத்தினுடைய நித்யதையைஸூசிப்பிக்கிறது. "வாதிந:" (வாதிந:) என்றதுக்கு-தாச்சீல்யே ணிநிப்ரத்யயமாகையாலே, (இதுவேசீலமாயிருக்கையென்று) "உன்னை" என்றதுக்கு தாத்பர்யத்ரயம் (இத்தலையித்யாதிவாக்யத்ரயத்தாலே) தொழுகைக்கு ப்ராப்தனுகவேணுமோவென்ன (ஸேவேத்யாதி) மாநவே, "ஸேவா ச்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத்தாம் பரிவர்ஜயேத்" (ஸேவாஸ்வவ்ருத்திராக்யாதாதஸ்மாத்தாம்பரிவர்ஜயேத்) "உன்னை" என்றதின் முந்தினவர்த்தவிவரணம் வ்யதிரேகமுகேந (தொழுதல்லதித்யாதி)

"வைகலும்" என்றபோதே-தொழுகையிலவிச்சேதம் சித்தமாயிருக்க, "மாத்திரைப்போதுமோர்வீடின்றி" என்றுதனித்துச் சொன்னதுக்குபாவம் (ஒருநாளைக்கித்யாதி) இத்தால் வ்யாவர்த்திக்கப்படுமவற்றை யருளிச்செய்கிறூர் (நித்யாக்நீத்யாதி)

"பரன்" என்றதுக்கு-உச்ச்ராயமும், ஸ்ப்ருஹணீயதையு மர்த்தமாக்கி, இரண்டையும் தந்த்ரேணவருளிச்செய்கிறூர் (தொழுவித்தித்யாதி) "பைகொள்" என்றவிசேஷணத்துக்குபாவம் (தொழுமவர்களிருக்கும்படியையு மென்றது) "ஸ்ப்ருஹணீயதையையும்" என்றதின்விவரணம் (தகட்டிலித்யாதி) "உச்ச்ராயத்தையும்" என்றவர்த்தவிவரணம் (அநந்தசாயியித்யாதி) பதப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம் (பர்யங்கவித்யையிலித்யாதி)

"பரன்" என்றதினர்த்தத்வயத்தையும்பற்ற (ப்ராப்தனுமாயித்யாதி) "பற்றும்பற்றுக" என்றத்தைவிஶதீகரிக்கிறூர் (மாநஸாநுபவமித்யாதி) பாவநாப்ரகர்ஷம்-நிரந்தரஸ்ம்ருதி சந்தாநாதிசயம். ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படி - யாதொன்று முன்புமநஸ்ஸாலே யநுபூதமாயிற்று, அதுவேயிப்போதுகண்ணாலு மநுபவிக்கப்படுகிறதென்று ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படி யித்யர்த்த:. "நமாம்ஸசக்ஷுரபிவீக்ஷதே தம்" (நமாம்ஸசக்ஷுரபிவீக்ஷதேதம்) இத்யேதச்ருதிர்நிதாயாஹ (கிடைப்பதித்யாதி) அவதாரிகைக்குச்சேரபலிதம் (என்கண்களித்யாதி) (தன்கைகளாலேயிதி) இது-கரணியானவிவருடைய வ்ருத்தியையாசைப்பட்டபடி.

கரணம்கரணாந்தரத்தின் வ்ருத்தியையாசைப்பட்டமைக்கு த்ருஷ்டாந்தம் (ஸ்ரீபரதாழ்வானித்யாதி ( அவருமொருவரோயென்றுகொண்டாடியென்று ) "ஸித்தார்த்த: கலு ஸௌமித்ரிர்யஶ்சந்த்ரவிமலோபமம் । க்ருத்ஸ்நம் த்ரக்ஷ்யதி ராமஸ்ய ராஜீவாக்ஷம் மஹாத்யுதி:" ( ஸித்தார்த்த:கலுஸௌமித்ரிர்யஶ்சந்த்ரவிமலோபமம் । க்ருகந்த்ரக்ஷ்யதிராமஸ்யராஜீவாக்ஷம்மஹாத்யுதி: ) என்றத்தைப்பற்ற. கரணங்கள் கரணாந்தரத்தின்வ்ருத்தியையாசைப்பட்டமை-இப்பாட்டுத்தொடங்கி சாப்தமாகையாலேஸ்ப்புடம் ; கீழிற்பாட்டுக்களிலே-ஏவகாரார்த்தசித்தம்........*

---

# ஐந்தாம்பாட்டு.

கண்களாற்காணவருங்கொலென்றுசையான்
மண்கொண்டவாமனனேறமகிழ்ந்துசெல்
பண்கொண்டபுள்ளின்சிறகொலிபாவித்துத்
திண்கொள்ளவோர்க்குங்கிடந்தென்செவிகளே.

## ஆறாயிரப்படி.

( கண்களால் ) மண்கொண்டவாமனனேறியருள, மதுபானம்பண்ணினவண்டுபோலே களித்துக்கொண்டுசெல்லும் பெரியதிருவடிமேலே யவனேறியருளி வரும்படியைக்காண வேணுமென்றும், வரும்போது பெரியதிருவடியினுடைய அத்திருச்சிறகினொலிகேட்கவேணுமென்றுமாசைப்படாநிற்குமென் செவிகளென்கிறார்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்செவிகளானவை காணவுமாசைப்பட்டு, காட்சிகொடுக்கவரும்போது பெரியதிருவடியின் சிறகொலியைக்கேட்கவு மாசைப்படாநின்றனவென்கிறார்.

கண்களால்-காண்கைக்குக்கரணமானகண்களாலே. காண-அபரோக்ஷித்துக்காணும்படி. வருங்கொல்-வரக்கூடுமோ. என்று-என்கிற. ஆசையால்-ஆசையாலே. மண்கொண்ட-தன்வஸ்துவைப்பிறர்க்குக்கொடாமலர்த்தியாய்ச்சென்றுபூமியைக்கொண்ட. வாமனன்-ஸ்ரீவாமநனானவன். ஏற-ஆசைப்பட்டார்க்குமுகங்காட்டுகைக்காகத்தன்னைமேற்கொள்ள. மகிழ்ந்து-அத்தாலேப்ரீதனாய்-செல் - செல்லக்கடவனான. புள்ளின்-பெரியதிருவடியினுடைய. பண்-ஸாமஸ்வரத்தை. கொள்-உடைத்தான. சிறகொலி-சிறகொலியை. பாவித்து-நினைத்து. என்-என். செவிகள்-செவிகளானவை. கிடந்து-பரவசமாய்க்கிடந்து. திண்கொள்ள-திண்ணியதாக. ஓர்க்கும்-நிரூபியாநின்றன.

பண்கொண்டவென்று-கலனையுடைத்தான வென்றுமாம்...................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

செவிகளானவை கண்ணினுடைய வ்ருத்தியையும் தன்னுடைய வ்ருத்தியையு மாசைப்படாநின்றன வென்கிறார்.

( கண்களாலித்யாதி ) "தன்னைக்காணவேணும்" என்றுவிடாய்த்த இக்கண்ணாலேயொருகால் காணவருமோவென்னு மாசையாலே. கன்னமிட்டுங்காணவேண்டும்படியிறே வஸ்துவைலக்ஷண்யமிருப்பது. "சக்ஷுஸ்ஸந்த்ரஷ்டவ்யஞ்ச நாராயண:" ( சக்ஷுஸ்ஸந்த்ரஷ்டவ்யஞ்சநாராயணः ) என்கிறபடியேகண்ணுக்கு வகுத்தவிஷயத்தைக்காணவருமோவென்னுநின்றது. "காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம்" ( காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம் ) என்னுமாபோலே. அவனும் வருவானேயோவென்னில், அதொன்றில்லை ( ஆசையால் ) தன்சாபலத்தாலே. அன்றியே, தன்னாசையைப்பார்க்கவவன்வரவுதப்பாதென்றும். அவ்வளவமையுமொன்றிறே; பகவத்விஷயத்திலிட்ட படைகற்படையிறே; "நேஹாபிக்ரமநாஶோஸ்தி" ( நேஹாபிக்ரமநாஶோஸ்தி ) ( மண்கொண்டவாமனன் ) மண்கொண்டபின்பும் "வாமனன்" என்கிறார்காணும், முடிசூடினபின்பும் கருந்தறையில் பேர்சொல்லு மந்தரங்களைப்போலே. வளர்ந்தபின்பும் வாமனனென்கிறாரிதிலே தாம்துவக்குண்டபடியாலே. ( ஏறமகிழ்ந்துசெல் ) தன்னைமேற்கொள்ள, அத்தால்வந்த ஹர்ஷப்ரகர்ஷத்துக்குப்போக்குவிட்டுச்சஞ்சரியாநிற்கை. ( பண்கொண்டபுள் ) பண்ணென்று - வாஹநபரிஷ்க்ரியையைச்சொல்லுதல்; அன்றியே, * வேதாத்மாவாகையாலே ப்ருஹத்ரதந்தராதி ஸாமங்களைச்சொல்லுதல். ( சிறகொலிபாவித்து ) திருவடிசிறகில் த்வநியையேபாவித்து. (திண்கொள்ளவோர்க்கும்) முன்னேநின்று சிலர்வார்த்தைசொன்னால் அதிலேசெவிதாழ்கிறதில்லை, இத்தையேதிண்ணிதாகப் புத்திபண்ணுகின்றது. அதின்பக்கல் பக்ஷபாதமிறேயிதுக்கடி..... ................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( கண்களாலித்யாதி ) "கண்களாற்காணவருங்கொல், திண்கொள்ளவோர்க்கும் கிடந்தென்செவிகள்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( செவிகளானவையித்யாதி )

காண்கிறதுகண்ணாலேயாயிருக்க, "கண்களால்" என்று-விசேஷிக்கிறதுக்குபாவம் ( தன்னைக்காணவித்யாதி ) தன்வ்ருத்தியையே யன்றிக்கேகண்ணின் வ்ருத்தியையு மாசைப்படுகைக்கடியேதென்ன ; வைலக்ஷண்யமென்னுமத்தை ரஸோக்தியாக வருளிச்செய்கிறார் ( கன்னமிட்டுமித்யாதி ) கன்னம்-கர்ணமும், சுரங்கமும். கன்னமிட்டாகிலும்-சுரங்கமறுத்தாகிலு மென்றுத்வநி. காதாலேயுமென்று ஸ்வபாவார்த்தம். ப்ராக்ருதத்திலே கன்னமிட்டுமாவது-தனக்கில்லாதகண்ணையிட்டுக்கொண்டு மென்றபடியாதல், கண்ணாலேகாண்கிற மாத்ரமன்றிக்கே கன்ன

மிட்டும் காணவேண்டும்படியென்னுதல். "தன்னைக்காணவேணும்" இத்யாதிவாக்யவிவரணம் (சக்ஷுஸ்சேத்யாதி) "உ੍ஷவ்ஜு" (த்ரஷ்டவ்யஞ்ச) என்றதுக்கு - (வருத்தவிஷயத்தை) என்கையாலே, காணப்படுகிறவற்றுக் கர்த்தர்யாமியென்கிற வர்த்தமன்றிக்கே, இதுவுமோரர்த்தம் விவக்ஷிதம். அசேதநமான கரணங்களுக்கு "வருங்கொல்" என்றுவிடாய்க்கை கூடுமோவென்ன (காத்ராரித்யாதி) ப்ரவேஶஏவவிகிதஃ. "ஆசையால்-கண்களாற்காணவருங்கொல்" என்றந்வயித்துத்தாத்பர்யாந்தரம் (அன்றியேயித்யாதி) ஆசையைப்பார்க்க-ஆசையைப்பார்த்தால். ஆசைஹேதுவாகவென்றபடி. (தப்பாதென்றும்) இப்படியுந்தாத்பர்ய மாகலாமென்றபடி. ஆசாமாத்ரம் போருமோவென்ன (அவ்வளவித்யாதி) ஹேதுமாஹ (பகவதித்யாதி) உக்தத்துக்கு ப்ராமாணம் (நே ஹேத்யாதி) "நெஹாஹிக்ரமநாஶொஸ்தி ப்ரத்யவாயொ நவிஷ்யதெ। ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதெ மஹதொ பயாத்" (நேஹாபிக்ரமநாஶோஸ்திப்ரத்யவாயோநவித்யதே। ஸ்வல்பமப்யஸ்யதர்மஸ்யத்ராயதேமஹதோபயாத்) இதிகீதாஸூக்திரியே.

மண்கொண்டதிரிவிக்கிரமன் என்னுதே, "வாமனன்" என்கிறதென்னென்ன (மண்கொண்டபின்புமித்யாதி) கருந்தறை-சூந்யஸ்த்தலம். அதாவது-முடிசூடுகிறதுக்கு முன்புண்டான சிறுபேரென்றபடி. பரிஹாராந்தரம் (வளர்ந்தவித்யாதி) பண்கொண்ட-பண்ணையுடைத்தான. பண்ணென்று-வாஹந பரிஷ்காரமாதல், ஸ்வரோபலக்ஷிதமான ஸாமங்களாதல். வாமதேவ்யாதி என்னுமல், ப்ருஹத்ரதந்த்ராதி என்றது - "வ்ருஹத்ரதந்த்ரௌ பக்ஷௌ" (ப்ருஹத்ரதந்தரோபக்ஷௌ) என்றுபக்ஷங்களை ப்ருஹத்ரதந்தர ஸாமங்களாகச் சொல்லுகையாலே ப்ருஹத்ரதந்த்ராதி ஸாமகாநத்தையுடைத்தான சிறகொலியென்றபடி.

திண்ணிதாக-த்ருடமாக. இப்படிசெய்கைக்கடியேதென்ன, சாடு (அதின் பக்கலித்யாதி) சிறகொலியின்பக்கல் தனக்குண்டான அபிநிவேஶம், திருவடிபக்கலுண்டான பக்ஷபாதமென்றுசாடு.

பாவித்து-பாவனைபண்ணி. நினைத்தென்றபடி. கிடந்து-பரவசமாய்க்கிடந்து. ஓர்க்கும்-நிரூபியாநிற்கும். புத்திபண்ணுநிற்குமென்றபடி. என்செவிகள்-கண்களாலித்யாதி, ஆசையால்-கிடந்து-மண்கொண்டவித்யாதி க்ரமேணாந்வயஃ........*

---

# ஆறும்பாட்டு.

செவிகளாலாரநின்கீர்த்திக்கனியென்னுங்
கவிகளேகாலப்பண்டேனுறைப்பத்துற்றுப்
புவியின்மேற்பொன்னெடுஞ்சக்கரத்துன்னையே
யவிவின்றியாதரிக்குமெனதாவியே.

## ஆறாயிரப்படி.

(செவிகளாலார) உன்னுடையகீர்த்திக்கவியென்னும் கனிகளை, காலப்பண்ணுகிறதேனிலே கலந்தென்செவிகளாரத்துற்று, பொன்னெ

டுஞ்சக்கரத்துன்னை யிந்தலோகத்திலே காணவேணுமென்றவிவின்றி யாதரிக்கு மெனதாவியென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கையுந்திருவாழியுமானவழகை யநுபவிக்கவேணுமென் றென்ப்ராணனாசைப்படாநின்றதென்கிறார்.

எனது-என்னுடைய, விளம்பாக்ஷமமான. ஆவி-ப்ராணனானது, நின்-உன்னுடைய. கீர்த்தி-கீர்த்தியின். கனி-பக்வபலம். என்னும்-என்னலாம்படியான. கவிகளே-கவிகளையே. காலம்-காலாநுரூபமான. பண்-பண்ணுகிற. தேன்-தேனிலே. உறைப்ப-மிகவும்செறிய. துற்று-துற்று. செவிகளால்-செவிகளாலே. ஆர-நிரம்பவநுபவிக்கைக்காக, புவியின்மேல்-பூமியிலே. பொன்-தர்ஶநீயமாய். நெடும்-நிரதிசயபோக்யமான. சக்கரத்து-திருவாழியையுடைய. உன்னையே-உன்னையே. அவிவின்றி-விச்சேதரஹிதமாய். ஆதரிக்கும்-ஆதரியாநிற்கும்...........................*

## ஈடு - ஆறும்பாட்டு.

என்னுடைய ப்ராணமானது உன்னுடையகீர்த்தியைத் தன்செவியாலேகேட்க வாசைப்படாநின்றதென்கிறார்; கன்னமிட்டுக்கொண்டும் கேட்கவேண்டும்படியிறே பகவத்கீர்த்தியிருப்பது.

(செவிகளாலார) செவிகள் வயிறுநிறையும்படியாக. (தன்கீர்த்திக்கனியென்னும்கவிகளே) கீர்த்திரூபமாய்க்கனிபோலேயிருக்கிறகவிகளை. கவிகனிபோலிருக்கை யன்றிக்கே, கனிகவியாயிற்றென்கிறதிறே-போக்யதாதிசயத்தாலே. (காலமித்யாதி) செருக்கராயிருக்கும் ராஜபுத்ரர்கள் நல்லபழங்களைத் தேனிலேதோய்த்து புஜிக்குமாபோலே, உன்கீர்த்தியாகிறகனிகளை, காலங்களுக்கு அடைத்தபண்ணுகிறதேனிலே, அத்தேன் மிஞ்சும்படிகலந்து. (துற்று) அநுபவித்து. அதுபரமபதத்தேபோய்ப்பெறுவதொன்றன்றோவென்ன (புவியின்மேல்) எங்கேனும்விடாய்த்தாரை எங்கேனும்விடாய்தீர்க்கவொண்ணாது, பசித்தவிடத்தேசோறிடவேணும். (பொன்னெடுஞ்சக்கரமித்யாதி) தேசமிதுவேயானவோபாதி விஷயமுமிதுவேயாகவேணும். “ [illegible] ” ( தமஸ꞉பரமோதாதாஶங்கசக்ரகதாதர꞉. ) ஸ்ப்ருஹணீயமாய் போக்யதையெல்லையின்றிக்கேயிருக்கிற திருவாழியை நிரூபகமாகவுடையவுன்னையே. (அவிவின்றியாதரிக்கும்) விச்சேதமில்லாதபடி யாதரியாநின்றது. “ [illegible] ” (துர்லபம்) என்றுபாராதேகிடைக்கும் விஷயத்திற்போலே சாபலம்பண்ணுகின்றது. ( எனதாவியே ) “ தன்னடையேவரப்பெறவேணுங்காண் ” என்றால் அதுகேளாது, “ அவனருள்பெறுமளவில் நில்லாது ” என்னும்படியானஆவி...............................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (செவிகளாலித்யாதி) “ செவிகளாலாரநின் கீர்த்திக்கனியென்னும், அவிவின்றியாதரிக்கு மெனதாவி ” என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை

(என்னுடையப்ராணனித்யாதி) ப்ராணனுக்குச்செவியுண்டோவென்ன ) கன்னமிட்டித்யாதி ) தனக்கில்லாதசெவியையு மிட்டுக்கொண்டென்று ஸ்வபாவார்த்தம்; சாடுவுக்கு, கன்னமிடுகை-திருடுகை.

"ஆல்" - அசை-ஆனால், கனிபோலென்னுதே, "கனியென்னும் கவிகள்" என்கிறதென்னென்ன (கவிகனிபோலித்யாதி) "காலப்பண்டேனுறைப்ப" என்றதுக்குபாவம் (செருக்கராயித்யாதி) உன்கீர்த்தியாகிறகனிகளையென்றது —கீர்த்திப்ரதிபாதகமான கவியாகிற கனிகளையென்றபடி. உறைப்ப - (மிஞ்சும்படிகலந்து)

அது - அநுபவம். பரமபதத்தேபோய்ப்பெறுவதென்றது - "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" ( ஏதத்ஸாமகாயந்நாஸ்தே ) என்றத்தைநினைத்து. "புவியின்மேல்" என்றவருடைய ஹார்த்தபாவம் (எங்கேனுமித்யாதி) (விஷயமுமிதுவேயாகவேணும்) பரமபதத்திலஸாதாரணவிக்ரஹமேயாகவேணும். பரமபதத்திலே பொன்னெடும் சக்கரத்தோடேயிருக்குமோவென்ன (தமஸஇத்யாதி) இதம்மண்டோதரீவாக்யம், பூர்வமேவலிகிதம். சப்தார்த்தம் ( ஸ்ப்ருஹணீயமாயித்யாதி ) * நெடுமைக்கர்த்தம் (போக்யதையித்யாதி) சப்தார்த்தம் (விச்சேதமித்யாதி) விவரணம் (துர்லபமென்றித்யாதி) துர்லபமென்றது - "பொன்னெடும்சக்கரத்துன்னை" என்றத்தைப்பற்ற. "எனதாவி" என்றதுக்குவாசகை (தன்னடையேயித்யாதி) நீர்சொன்னதுகேளாதோ வும்முடையவாவியென்ன ( அவனருளித்யாதி ) அவன்க்ருபைபெறுமளவும் ப்ராணன் நில்லாதென்றபடி.

எனதாவி-செவிகளாலித்யாதி க்ரமேணார்வய:8 ..............................*

---

# ஏ ழா ம் பா ட் டு.

ஆவியேயாரமுதேயென்னையாளுடைத்
தூவியம்புள்ளுடையாய்சுடர்நேமியாய்
பாவியேனெஞ்சம்புலம்பப்பலகாலும்
கூவியுங்காணப்பெறேனுனகோலமே.

## ஆறாயிரப்படி.

(ஆவியே) என்னுடையதாரகமே, என்னுடையபோக்யமே, உன்னைவிஸ்லேஷித்து நானவஸந்நனை விந்ததசையிலே நான் முடிவதற்கு முன்னே யிக்ஷணத்திலேவந்தென்னை யடிமைகொள்ளுகைக்காகப் பெரியதிருவடியை திவ்யவாஹநமாகவுடையவனே, த்வத்ஸம்ஸ்லேஷவிரோதியான வென்னுடைய வினைகடிகைக்காக வெப்போதுங் கைகழலாநேமியாய், பாவியேன் நெஞ்சம்புலம்பப் பலகாலும் கூவியும்காணப் பெறுகிறிலேனுன்னழகையென்கிறார்... ......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி யாஸ்ரிதஸுலபனைப் போக்யனானவுன்னை யநுபவிக்கப்பெறுகிறிலேனென்று, கரணங்களோபாதி கரணியான தம்முடைய விழவுசொல்லுகிறார்.

ஆவியே-வ்யதிரேகத்தில் முடியும்படி தாரகமானப்ராணனுய். ஆர் - பரிபூர்ணமான. அமுதே-நித்யபோக்யபூதனுய். என்னை-என்னை. ஆளுடை - அடிமைகொள்ளுகைக்கீடான. அம்-அழகிய. தூவி-சிறகையுடைய. புள் - பெரியதிருவடியை. உடையாய்-வாஹநமாகவுடையனுய். சுடர் - ப்ரதிபந்தகத்தைக்கழிக்கு முஜ்ஜ்வலமான. நேமியாய்-திருவாழியையுடையவனே. உன-உன்னுடைய. கோலம் - நிரதிஶயபோக்யமானவடிவழகை. பாவியேன்-மஹாபாபியானவென்னுடைய. நெஞ்சம்-நெஞ்சானது. புலம்ப—ஆசைப்பட்டுக்கூப்பிட. அவ்வாசையடியாக, பலகாலும்-அநேககாலம். கூவியும் - நான்கூப்பிட்டவிடத்திலும். காண-கண்டநுபவிக்க. பெறேன்-பெறுகிறிலேன்.

“தத்தஸ்யஸத்ருஶம்” (தத்தஸ்யஸத்ருஶம்) என்கிறஸ்வரூபமுமிழந்தேன், அபிமதமுமிழந்தேனென்று கருத்து ..........................................*

ஈடு-ஏழாம்பாட்டு.

காணங்களையொழியத் தம்முடையவிழவுசொல்லுகிருர். ப்ரஜைகளினிழவும் பசியும்சொன்னுர்-கீழ், தம்மிழவும் பசியும்சொல்லுகிருர்-மேல். இப்பாட்டில் - நான்மஹாபாபியாகையாலே நெஞ்சின்விடாயுந்தீரப்பெற்றிலேன், என்விடாயுந்தீரப்பெற்றிலேனென்கிருர்.

(ஆவியே) அபிநிவேஶம் மிக்காலும், ப்ராப்யனுகிருன் சேஷியாலுல் வருந்தனையும்பாடாற்றவேண்டாவோவென்ன; ப்ராணனைவிட்டிருக்கப்போமோவென்கிருர். “ஆவியாவியும்நீ” என்கிறபடியே யவனிறேயாவி. (ஆரமுதே) தாரகமுமாய் போக்யமுமாயிருக்க, விட்டிருக்கப்போமோ. ஆரமுது-ஆர்ந்தவமுது. பூர்ணமான அம்ருதம். தேவஜாதியினுடைய அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி. உள்ளுந்தோறும் தித்திக்குமமுது, * அமுதிலுமாற்ற வினியவமுதமிறே. (என்னையித்யாதி) மற்றை யம்ருதத்தைக்கொண்டுவருமவனேகாணு மிவ்வம்ருதத்தையும்கொண்டுவருவான். பெரியதிருவடிதிருத்தோளிலிருக்கு மிருப்பைக்காட்டி யென்னையெழுதிக்கொண்டவனே. அதவா (என்னையாளுடை - தூவியம்புள்ளென்று) பெரியதிருவடியோடே யந்வயித்துச்சொல்லவுமாம். சேர்க்குமவர்களுக்கு சேஷமென்றிறே யிவரிருப்பது. தாரகமுமாய் போக்யமுமாயிருப்பதொன்றைக்கொண்டுவந்து தருவாருண்டாயிருக்க, ஆறியிருக்கவிரகுண்டோ. (சுடர்நேமியாய்) அழகுக்கும் விரோதிநிரஸநத்துக்கும்தானேயாயிருக்கும் பரிகரமிறே. வரும்வழியில் ப்ரதிபந்தகங்களுண்டாகிலும் கைமேலே தீர்த்துக்கொண்டுவருகைக்குப்பரிகாமுண்டே. (பாவியேன்) பகவத்விஷயத்தை யாசைப்பட்டாரிலிழந்தாரில்லைகண்டீர், “ஆரே துயருழந்தார்” இத்யாதி.

(பாவியேன்நெஞ்சம்) எனக்குக் கரணமாயிறே யிதிழக்கவேண்டிற்று. [நந்தன்பெற்றன னல்வினையில்லாநங்கள்கோன் வசுதேவன்பெற்றி

லனே] தமப்பனுன ப்ராப்தியொத்திருக்க, ஸுக்ருதம்பண்ணுதவென்னைக்கைப்பிடிக்கையிறே ஸ்ரீவசுதேவரிழந்த தென்னுமாபோலே. "𑌮𑌮𑍈𑌵 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍" (மமைவ துஷ்க்ருதம்கிஞ்சித்) என்னக்கடவதிறே. (புலம்ப) நெஞ்சானது காணப்பெறுத இழவோடேகூப்பிட. "கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான்" என்னுமாபோலே, * நெஞ்சத்துப்பேராதுநிற்கும்பெருமானையிறே நெஞ்சுகாணப்பெறுமல் கூப்பிடுகிறது. (பலகாலும்) ஒருகால் கூப்பிட்டார்க்கு மிழக்கவேண்டாதவிஷயத்திலே பலகால்கூப்பிட்டும். (கூவியும்காணப்பெறேன்) ஒன்றிலபிமதம் பெற்றேனல்லேன், ஸ்வரூபம்பெற்றேனல்லேனென்கிருர். "𑌤𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌸𑌦𑍃𑌶𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிருக்கப்பெற்றேனல்லேன், மடலூர்ந்தார்பெற்றபேற்றைப்பெற்றேனல்லேன். என்ஸ்வரூபத்தையுமழித்தேன், அவன்ஸ்வரூபத்தையுமழித்தேன். அவன்நீர்மையையுமழித்தேன், என்சேஷத்வத்தையுமழித்தேன். அவனீஸ்வரத்வத்தையுமழித்தேன், என்னுடைய ஈப்ஸிதவ்யத்வமும்போயிற்று; இனிக்கொள்ளவிருக்கிறுரார், கொடுக்கவிருக்கிறுரார். (உனகோலமே) இரண்டுதலையையுமழித்துப்பெறவேண்டும் விஷயவைலக்ஷண்யஞ்சொல்லுகிறது. வ்யதிரேகத்தில்கண்ணுறங்குதல், சூதுசதுரங்கங்களோடேபோதுபோக்குதல்செய்யலாம் விஷயமாகப்பெற்றேனே; "உண்டோகண்கள்துஞ்சுதல்" என்றும், "என்னினைந்துபோக்குவரிப்போது" என்றும், கண்ணுமுறங்காதே போதுபோக்கவு மரிதாயிறேயிருப்பது....................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (ஆவியேயித்யாதி) பேடிகாசங்கதி கதநபூர்வகமாக விப்பாட்டுக்கவதாரிகையையு மருளிச்செய்கிருர் (கரணங்களையொழியவித்யாதி) சொல்லுகிருர்மேலென்றது-மேலிற்பாட்டுக்களெல்லா வற்றுலுமென்றபடி. (இப்பாட்டிலித்யாதி) "நெஞ்சம்புலம்ப" என்றும், "கூவியும்காணப்பெறேன்" என்றும்சொல்லுகையாலே-நெஞ்சின்விடாயும் தம்விடாயும்தீரப்பெற்றிலேனென்கிருரென்றபடி. இப்பாட்டிலும்-நெஞ்சின்விடாய் சொல்லிற்றேயாகிலும், முதற்பாட்டுத்தொடங்கி - நெஞ்சுமுதலான கரணங்களின் விடாய்கீழேசொல்லுகையாலே, கரணியான தம் விடாய்சொல்லுகிறதே ப்ரதாநமென்றபடி.

(ஆவியே) சரீரத்துக்கு ப்ராணனைப்போலே தமக்கிவன்ப்ராணனென்றபடி. (அபிநிவேசம்மிக்காலும்) "கூவியும்காணப்பெறேன்" என்னும்படி அபிநிவேசம் மிக்காலுமென்றபடி. பாடாற்ற - துக்கம்பொறுக்க, அவனே ஆவியென்ன (ஆவியாவியித்யாதி) "𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃" (ப்ராணஸ்யப்ராணஃ) என்னக்கடவதிறே.

(தாரகமுமாய் போக்யமுமாய்) தாரகமுமாய், தத்தேதுவானபோக்யதையையுமுடைத்தாயென்றபடி. "ஆவி" என்றத்தாலே-தாரகத்வம். "அமுது" என்றத்தாலே-போக்யத்வம். "ஆரமுது" என்றத்தாலேவ்யாவ்ருத்தி (தேவஜாதியித்

யாதி) வ்யாவ்ருத்தியேதென்ன (உள்ளுந்தோறுமித்யாதி வாக்யத்வயத்தாலே) உள்ளுந்தோறும் - உள்ளத்திலேவைத் தநுசந்திக்குந்தோறும். ஆற்றவினியன்-மிகவும் போக்யமானவன்.

கொண்டுவருமவனேகாணுமென்றது- விநதைக்காகக்கொண்டுவந்தமையைப்பற்ற. "தூவியம்புள்ளுடை - என்னையாளுடையாய்" என்றுகூட்டிபாவம் (பெரியதிருவடியித்யாதி) அவனிருக்க, "என்னையாளுடை-தூவியம்புள்" என்கிறதென்னென்ன (சேர்க்குமவரித்யாதி) "ஆவியே" இத்யாதி பதத்ரயத்தையும் கடாக்ஷித்து நிகமிக்கிறார் (தாரகமுமாயித்யாதி)

சுடர் - அழகு. "சுடர்" என்றத்தாலே - (அழகுக்கு-பரிகரம்) "நேமி" என்றத்தாலே - (விரோதிநிரசனத்துக்கு-பரிகரம்) பதப்ரயோகத்துக்குபாவம் (வரும்வழியிலித்யாதி) (கைமேலேயிதி) ரசோக்திঃ. கைமேலே - ஸத்யঃஎன்றுசாடு. கையிற்றிருவாழியாலேயென்று ஸ்வபாவார்த்தம்.

"பாவியேன் - கூவியும்காணப்பெறேன்" என்றுகூட்டிபாவம் (பகவத்விஷயத்தையித்யாதி) அப்படியிழந்தாரில்லையோவென்ன (ஆரோதயருழந்தாரித்யாதி) மூன்றாந்திருவந்தாதி இருபத்தேழாம்பாட்டு. எம்பெருமானை யாஶ்ரயித்துவைத்து, துன்புற்றார்-துঃகஹேதுவான பாபத்தைப்பண்ணினவர்களாயிருக்கிற, ஆண்டையார்-ஆஶ்ரயித்தபழையாரில், ஆரோதயருழந்தார்-ஆர்தான் பாபபலமானதுঃகத்தை யநுபவித்தாரித்யர்த்தঃ. பாவியேனுகையாலேயிழந்தேனென்றார்- கீழ்; அன்றிக்கே, பாவியேன் நெஞ்சாகையாலே யிழக்கவேண்டிற்றென்றர்த்தாந்தரம் (எனக்குக்கரணமித்யாதி) முந்தினவர்த்தம்- "பாவியேன்காணப்பெறேன்" என்று-தம்மிழவுக்குறுப்பாகச்சொல்லுகிறது; இரண்டாவது- "பாவியேன்நெஞ்சாகையாலே புலம்புகிறதென்றபடி. ஸ்வஸம்பந்தத்தாலே யிழக்கவேண்டிற்று என்றதுக்கு சம்வாதம் (நந்தனித்யாதி) பெருமாள்திருமொழி அறுபத்துமூன்றாம்பாட்டு. "முந்தைநன்முறை" இத்யாதி. ஸ்ரீநந்தகோபர்பெற்ற பாக்யமெல்லாம் பாக்யஹீனையான வென்னைக்கைப்பிடித்த ஸ்வாமியான ஸ்ரீவசுதேவர்பெற்றிலரோவென்று சப்தார்த்தம். இதுக்கர்த்தம் (தமப்பனுனவித்யாதி) முந்தினவர்த்தத்துக்கு சம்வாதம் (மமைவேத்யாதி) "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சின் மஹதஸ்தி ந ஸம்ஶய: । ஸமர்த்தாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ" (மமைவதுஷ்க்ருதம் கிஞ்சிந்மஹதஸ்திநஸம்ஶயঃ। ஸமர்த்தாவபிதௌயந்மாம்நாவேக்ஷேதேபரந்தபௌ) இதி சுந்தரகாண்டே ஷட்த்ரிம்ஶே ஹநூமந்தம்ப்ரதிஸீதா. காணப்பெறாதது அஸந்நிஹிதனுயோவென்ன (கடிக்கமலத்தித்யாதி) முதற்றிருவந்தாதி ஐம்பத்தாறாம்பாட்டு. "பேரோவரப்பிதற்றில்" இத்யாதி. (நேரோகடிக்கமலத்துள்ளித்யாதி) அவ்யவதாநேந, பரிமளத்தையுடைய திருநாபீகமலத்திலே நிரந்தரவாசம்பண்ணுநிற்கச்செய்தேயும் ப்ரஹ்மாவானவன் சர்வேஶ்வரன் திருவடித்தாமரையைக்காணமாட்டுகிறிலனிதிசப்தார்த்தঃ. (நெஞ்சத்துப்பேராதிதி) மூன்றாந்திருவந்தாதி எண்பத்தோராம்பாட்டு. "நெஞ்சால்நினைப்பரியன்" இத்யாதி. நெஞ்சத்துப்பேராதுநிற்கும்பெருமானை - நெஞ்சைவிட்டுப்போகமாட்டாதே நித்யவாஸம்பண்ணும் சர்வேஶ்வரனையித்யர்த்தঃ. (ஒருகாற்கூப்பிட்டார்க்குமிதி) ஸ்ரீகஜேந்த்ராழ்வானொருகாற்கூப்பிட, வந்துமுகங்காட்டினனிறேயென்றபடி. சப்தார்த்தம் (ஒன்றிலித்யாதி) வ்யுத்க்ரமேணபூர்வவாக்யவிவரணம் (தத்தஸ்யேத்யாதி) "ஶோகஸந்தப்த ஹ்ருதயாம்" (ஶோகஸந்தப்தஹ்ருதயாம்) இத்யாதி, ஹநூமந்தம் ப்ரதிஸீதா, பூர்வமே

வலிகித்தம். மடலூர்ந்துபெற்றவள் - உஷை. " ஸ்வரூபம்பெற்றேனல்லேன் " என்றத்தை பங்க்யந்தரேண த்விவிதமாகவிவரிக்கிறார் (என்ஸ்வரூபத்தையுமித்யாதி) வ்யுத்க்ரமேணவிவரணம் (அவன்நீர்மையையுமித்யாதி) நீர்மையையழிக்கையாவது- "ஆஸ்ரிதருடையவாபத்திலேவந்துதவிரக்ஷிக்கும் பரமக்ருபாவான்" என்றுசொல்லப்படுகிறநீர்மையை, இப்போதிவர்க்குதவாமையாலே, " இப்படி யிவர்நோவுபட்டுக்கூப்பிடவும்வந்துதவிற்றிலன் " என்று நாட்டாரந்நீர்மையையில்லைசெய்வர்களாகையா லிவ்வழியாலே நீர்மையையழித்தேனென்றபடி. பங்க்யந்தரேண "அவன் ஸ்வரூபத்தையுமழித்தேன்" என்றதின்விவரணம் ( அவனீஸ்வரத்வத்தையித்யாதி) மேலுக்கவதாரிகை (இரண்டுதலையையுமித்யாதி) " இரண்டுதலையையுமழித்து " இத்யாதியாற்சொன்னவர்த்தத்தை வ்யதிரேகமுகேந த்ருடீகரிக்கிறார் (வ்யதிரேகத்திலித்யாதி) வ்யதிரேகஃ-விஸ்லேஷஃ. அப்படிபோதுபோக்கவொண்ணாதவிஷயமோவென்ன (உண்டோகண்களித்யாதி) திருவிருத்தம் தொண்ணூற்றேழாம் பாட்டு, "எழுவதும் " இத்யாதி-கண்களுறங்குதலுண்டோவித்யர்த்தஃ. (என்னினைந்தித்யாதி) பெரியதிருவந்தாதி யெண்பத்தாறும்பாட்டு. "கார்கலந்த" இத்யாதி. சூழ்ந்துகிடக்கிற பாபபலமாய்த் தறைகாணவொண்ணாத துஃகத்தை யிக்காலமெத்தை யநுஸந்தித்துப்போக்குவனென்றர்த்தம். கோலம்- அழகுடையவிக்ரஹம்.

ஆவியே இத்யாரப்ய, உனகோலத்தை-கூவியுங்காணப்பெறேனித்யந்வயஃ.*

---

## எட்டாம்பாட்டு.

கோலமேதாமரைக்கண்ணதோரஞ்சன
நீலமேநின்றெனதாவியையீர்கின்ற
சீலமேசென்றுசெல்லாதனமுன்னிலாங்
காலமேயுன்னையெந்நாள்கண்டுகொள்வனே.

### ஆறாயிரப்படி.

( கோலமே ) கோலமே, தாமரைக்கண்களை யுடையதொரு அஞ்சனநீலமே, இப்படியிருந்துவைத் தென்னுடைய நிகர்ஷம்பாராதே *என்னெஞ்சமே நீணகராகவிருந்த நிரவதிகசௌசீல்யத்தாலே யென்னைமயக்குகிறவனே, உன்னையென்று நான்காண்பதென்றுசொல்ல ; எம்பெருமானும் " காணக்கடவிய காலம்வந்தாலன்றோ காணலாவது " என்றருளிச்செய்ய ; அக்காலந்தான் நீயிட்டவழக்கன்றோ, ஆனபின்பு " இக்காலந்தன்னையே யந்தக்காணக்கடவிய காலமாக்குவோம் " என்றுமுன்னாலாக்க முடியாதோவென்கிறார்..................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநுபாவ்யமான சௌந்தர்யாதிகளையுடைய வுன்னையெந்நாள் கண்டநுபவிக்கப் பெறுவதென்கிறார்.

கோலமே-ஒப்பனைரூபம்தரித்தாற்போலேதர்ஸநீயனாய். தாமரை- தாமரை போன்ற. கண்ணது-கண்களையுடைத்தாய். ஓர்-அத்விதீயமான. அஞ்சனம்-அஞ்ச

நத்ரவ்யத்தினுடைய. நீலமே - நீலநிறந்தான் வடிவானவனாய். இந்தரூபகுணத்தள வன்றியே நின்று-ஸ்த்திரமாய்நின்ற. எனதாவியை - என்னுத்மாவை. ஈர்கின்ற- ஈராநிற்கிற. சீலமே-சீலமேநிரூபகமானவனாய்.சென்று-சென்றபூதகாலமும்.செல் லாதன-செல்லாதபவிஷ்யத்காலமும். முன்னிலாம்-முன்னேவர்த்தமானமாயுள்ள. காலமே-காலமும்நீயிட்டவழக்காம்படியானவனே. உன்னை-ஏவம்விதனானவுன்னை. எந்நாள்-என்று. கண்டு-கண்டு. கொள்வன்-அநுபவிப்பது.

கோலமேய்ந்த தாமரைக்கண்ணனென்றுமாம்...............................*

## ஈடு-எட்டாம்பாட்டு.

உம்முடைய அபேக்ஷிதஞ்செய்கைக் கொருகாலமில்லையோ, அது வருங்கிடீரென்ன; அதுவும் நீயிட்டவழக்கன்றோ வென்கிறார்.

(கோலமே) அழகுமதுக் காஶ்ரயமுமென்றிரண்டின்றிக்கே, அழகுதானே வடிவாயிருக்கிறபடி. ஜ்ஞாதாவின்பக்கலிலே ஜ்ஞாநவ்யபதேசம் பண்ணுநின்றதிறே * தத்குணசாரத்வத்தாலே, அப்படியழகேவிஞ்சியத்தைவிட்டு நிரூபிக்கவேண்டும்படி யிருக்கையாலே (கோலமேயென்கிறார்) (தாமரையித்யாதி) அதுக்காஶ்ரயமான திருவுடம்பிருக்கிறபடி. அதுதன்னிலும் ஓரோ அவயவங்களே யமைந்திருக்கிறபடி. சிவப்பாலும் விகாசத்தாலும் மார்தவத்தாலும் தாமரையையொருவகையுபமை சொல்லலாம்படியிருக்கிற கண்ணழகையுடையவனே. (அஞ்சனநீலமே) அஞ்சனமே, நீலமே, என்றபடி. ஒன்றேயுபமாநமாவதொன்றில்லாமையாலே அங்குமிங்கும் கதிர்பொறுக்குகிறார். நைல்யகுணந்தன்னைவடிவாக வகுத்தாற்போலே யாயிற்றிருப்பது. அழகும் வடிவுமேயாய் அகவாயிலொரு பசையற்றிருக்குமோவென்னில் (நின்றித்யாதி) வ்யதிரேகத்தில் வடிவைமறக்கிலும் மறக்கவொண்ணாதபடியின்னுடி, என்னெஞ்சையீராநின்றுள்ள சீலமேஸ்வரூபமானவனே. * செய்யதாமரைக்கண்ணனில் "நெஞ்சினால் நினைப்பான் யவனவனாகும் நீள்கடல்வண்ணன்" என்கிற-அர்ச்சாவதாரத்தின் நீர்மையையிறே யிவர்நினைக்கிறது. அன்றியே, * வளவேழுலகில் தம்மைச்சேரவிட்டுக்கொண்ட சீலமாதல். இப்படியழகும் குணங்களுமுண்டானாலும், பெறுமிடத்தில் இன்னகாலமென்றில்லையோவென்னில் (சென்றித்யாதி) அக்காலமும் நீயிட்டவழக்கன்றோ; [ ग्रन्थाक्षर ] (காலஸ்யசஹிம்ருத்யோஶ்சஜங்கமஸ்த்தாவரஸ்யச । ஈஶதேபகவாநேகஸ்ஸத்யமேதத்ப்ரவீமிதே) பதார்த்தங்களினுடைய வுத்பத்திக்கு முன்பும்நின்று இவையழிந்தாலும் நிற்கக்கடவகாலத்துக்கும், இவற்றினுடைய சம்ஹர்த்தாக்களுக்கும் ஸ்ரஷ்டாக்களுக்கும்; "[ ग्रन्थाक्षर ]" (ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்) என்று, சம்ஹர்த்தாக்களை-ம்ருத்யுசப்தத்தாலே சொல்லக்கடவதிறே.

ஸ்ருஷ்டிக்குக்கார்மீபவித்த பதார்த்தங்களினுடைய உத்பத்திக்குமுன்புமு ளனுய அழிந்தாலுமுளனுய் என்றுமொக்க வுணர்ந்திருந்து, ஸ்ரஷ்டாக் களும் சம்ஹர்த்தாக்களும் ஸ்ருஜ்யருமானவித்தையடையத் தன்புத்யதீ நமாக நியமிக்கிறுனெருவனே; [ சத்யமித்யாதி ] பகவத்விஷயத்தி லர் த்தவாதமில்லை, தன்னை "ஆப்தன்" என்றுவிஸ்வசித்தவனுக்குப் பொ ய்சொல்வாரில்லை. சென்றென்கிறது-பூதகாலத்தை. செல்லாதனவென்ற து-பவிஷ்யத்காலத்தை. முன்னிலாங்காலமென்கிறது-முன்னேவர்த்திக் கிற வர்த்தமாநகாலத்தை. ( காலமே ) காலத்ரயத்தையும் நீயிட்டவழக் காக வுடையவனே. ( உன்னையித்யாதி ) வடிவழகும் குணங்களும் விட லாயிருந்ததில்லை, காலக்கழிப்புச்சொல்ல வொண்ணுதபடியாயிருந்தது, ஆனபின்பு நானுன்னைக்காண்பதென்று, சொல்லாய். "" வ-ஹுணெ-ஷ்வ த-ஹு ஶெவஷெ-ஷ்வஂவஜ்ரா ஸ'(பூர்ணேசதுர்த்தஸேவர்ஷேபஞ்சம்யாம்) என்முற்போலே நீயும் நம்மையிந்நாள் காணக்கடவை" என்றுசொல் லாய்......................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (கோலமேயித்யாதி) "சென்றுசெல்லாதன முன்னிலாங் காலமே" என்றத்தைக்கடாக்ஷித் துக்திப்ரத்யுக்திருபேணுவதாரிகை (உம்முடைய வித்யாதி)

கோலத்தையுடையனென்னுதே கோலந்தானுகச்சொன்னதுக்குபாவம் (அ ழகுமித்யாதி) கோலம் - வடிவழகு. குணத்தையிட்டு குணியைநிருபிக்கலாமோ வென்ன ( ஜ்ஞாதாவினித்யாதி ) ஜ்ஞாநவ்யபதேஸம்பண்ணுகின்றதிறேயென்றது- "விஜ்ஞா-நஂயஜ்ஞஂ-த-நு-தெ" (விஜ்ஞாநம்யஜ்ஞம்தநுதே) என்கிற ஶ்ருதிசொல் லாநின்றதிறேயென்றபடி. தத்குணசாரத்வத்தாலே - ஜ்ஞாநகுணசாரத்வத்தாலே.

"அஞ்சனநீலமே" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறுர் (அதுக்காஶ் ரயமானவித்யாதி) "தாமரைக்கண்" என்றது-சர்வாவயவங்களுக்கு முபலக்ஷண மென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறுர் (அதுதன்னிலுமித்யாதி) "தாமரை" என்றதுக்குபாவம் (சிவப்பாலுமித்யாதி ) நீலம் - நெய்தல். இரண்டையும் சொல் லவேணுமோவென்ன (ஒன்றேயித்யாதி) அஞ்சநத்தின் நைல்யமென்றர்த்தாந்தரம் (நைல்யகுணமித்யாதி) அஞ்சனம்-மை. அஞ்சனம்போலவும் நெய்தல்போலவுமி ருக்கிற திருமேனியையுடையவனேயென்று முந்தினவர்த்தம்; அஞ்சநத்தின் நைல் யம்போன்ற வடிவையுடையவனேயென்றிரண்டாமர்த்தம்.

இங்கெந்தசீலத்தைச்சொல்லுகிறதென்ன (செய்யதாமரையித்யாதி)

காலமவனிட்டவழக்கென்னுமதுக்குப்ரமாணம் (காலஸ்யேத்யாதி) "கால ஸ்ய ஹி ம்ரு-த்யோ-ஶ்ச ஜஂ-கமஸ்தா-வரஸ்ய । ஈஶதெ ஹ-வா-நெக-ஸ்ஸ-த்ய மெ-த-த்ப்ர வீமி-தெ" ( காலஸ்யசஹிம்ருத்யோஶ்சஜங்கமஸ்த்தாவரஸ்யச। ஈஶதே பகவாநேகஸ்ஸத்யமேதத்ப்ரவீமிதே) இத்யுத்யோகபர்வண்யஷ்டஷஷ்டிதமே த்ரு தராஷ்ட்ரம் ப்ரதிஸஞ்ஜயஃ. "காலஸ்ய" (காலஸ்யச) என்கிறசப்தம்-ப்ரா தாந்யத்திலே. காலத்துக்கு ப்ராதாந்யமேதென்ன ( பதார்த்தங்களினுடையவித்

யாதி) "𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌶𑍍𑌚" (ம்ருத்யோஸ்ச) என்ற சஸப்தம் - அநுக்த ஸமுச்சயமாக்கி (ஸ்ரஷ்டாக்களுக்குமென்றது) "𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌃" (ம்ருத்யோ:) என்றது-ஸம்ஹார்த்தாக்களுக்கெல்லாமுபலக்ஷணம். ம்ருத்யுசப்தம்-யமவாசகமொழிய, ஸம்ஹர்த்ருவாசகமாமோவென்ன (ம்ருத்யுர்யஸ்யேத்யாதி) கடவல்லியாமியம்ஸ்ருதி:. உக்தநிகமநபூர்வகமாக, "𑌭𑌗𑌵𑌾𑌨𑍇𑌕𑌃 - 𑌈𑌶𑌤𑍇" (பகவாநேக: - ஈஸதே) என்றதுக்கர்த்தம் (ஸ்ருஷ்டிக்கித்யாதி) (உணர்ந்திருந்தென்னுமளவும்) காலத்துக்கு நிர்வாஹகனும் க்ரமம். "𑌏𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂" (ஏதத்ஸத்யம்) என்றதுக்கர்த்தம் (பகவத்விஷயத்திலித்யாதி) "தே" என்றதுக்குபாவம் (தன்னையித்யாதி)

"என்நாள்" என்று - அவதிகேட்கைக்கு, அபேக்ஷிதம்பெறுகை நிஸ்சிதமோவென்ன (வடிவழகுமித்யாதி) கழிப்பு-கண்ணழிவு. அறுதியிட்டுக்கொடுத்தது- "𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍇 𑌹𑌿 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑍇" (சதுர்த்தஸேஹிஸம்பூர்ணே) இத்யாதிஸ்லோகமாயிருக்க, "𑌪𑍂𑌰𑍍𑌣𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍇 𑌵𑌰𑍍𑌷𑍇" (பூர்ணே சதுர்த்தஸே வர்ஷே) என்றத்தையெடுத்தது - ஸ்புடார்த்தமாகையாலே, "𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍇 𑌹𑌿 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑍇 𑌵𑌰𑍍𑌷𑍇𑌽𑌹𑌨𑌿 𑌰𑌘𑍂𑌤𑍍𑌤𑌮 । 𑌨 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌯𑌦𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌹𑍁𑌤𑌾𑌶𑌨𑌮𑍍 । 𑌤𑌥𑍇𑌤𑌿 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌤𑌂 𑌪𑌰𑌿𑌷𑍍𑌵𑌜𑍍𑌯 𑌸𑌾𑌦𑌰𑌮𑍍" (சதுர்த்தஸேஹிஸம்பூர்ணேவர்ஷேஹநிரகூத்தம। நத்ரக்ஷ்யாமியதித்வாந்து ப்ரவேக்ஷ்யாமிஹுதாஸநம்। ததேதிசப்ரதிஜ்ஞாயதம் பரிஷ்வஜ்யஸாதரம்) இத்யாதி. யுத்தகாண்டே, "𑌪𑍂𑌰𑍍𑌣𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍇 𑌵𑌰𑍍𑌷𑍇 𑌪𑌞𑍍𑌚𑌮𑍍𑌯𑌾𑌂 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌾𑌗𑍍𑌰𑌜𑌃 । 𑌭𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌾𑌶𑍍𑌰𑌮𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌵𑌵𑌨𑍍𑌦𑍇 𑌨𑌿𑌯𑌤𑍋 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍" (பூர்ணேசதுர்த்தஸேவர்ஷேபஞ்சம்யாம்லக்ஷ்மணக்ரஜ:। பரத்வாஜாஸ்ரமம்ப்ராப்யவவந்தேநியதோமுநிம்)

க்ரமேணாந்வய:..............................................................*

## ஒன்பதாம்பாட்டு.

கொள்வனன்மாவலிமூவடிதாவென்ற
கள்வனேகஞ்சனைவஞ்சித்துவாணனை
யுள்வன்மைதீரவோராயிரந்தோடுணித்த
புள்வல்லாயுன்னையெஞ்ஞான்றுபொருந்துவனே.

### ஆறுயிரப்படி.

(கொள்வனன்) கோலினவைமுடிக்க விரகறிவானொருவனாய், ஆஸ்ரிதவிரோதி நிரசநஸ்வபாவனாய், விரோதிநிரசந சமர்த்தனாயிருந்த வுன்னையெஞ்ஞான்று பொருந்துவனென்கிறார்...........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், சமஸ்தப்ரதிபந்தக நிவர்த்தகனானவுன்னைநான் ப்ராபிப்பதென்றென்கிறார்.

மாவலி-மாவலீ. நான்-நான். மூவடி-மூவடி. கொள்வன்-கொள்வன். தா-தா. என்ற - என்றுமுக்தோக்தியாலேயவனைவசீகரித்த. கள்வனே - க்ருத்ரிமனாய் கஞ்சனைவஞ்சித்து-கம்சனுடையவஞ்சநமவன்றன்னோடேபோம்படிபண்ணி. வாணனை-வாணனை. உள்வன்மை-நெஞ்சுவலி. தீர-அழியும்படி. ஓர்-அத்விதீயமான. தோள்-தோள். ஆயிரம்-ஆயிரத்தையும். துணித்த-துணித்துப்போகட்ட. புள்வல்லாய்-கருடவாஹநனே. உன்னை - இப்படியாஸ்ரிதவிரோதிநிவர்த்தநசமர்த்தனானவுன்னை. எஞ்ஞான்று-என்று. பொருந்துவன்-சேர்வது..............................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ரக்ஷணோபாயஜ்ஞனுமாய் விரோதிநிரசந சீலனுமானவுன்னை நான்கிட்டுவதென்றென்கிறார்.

(கொள்வன்) மலையாளர் வளைப்புப்போலே, கொண்டல்லது போகேனென்றானாயிற்று. அன்றியே, இவனுடையவிநீத வேஷத்தைக்கண்டு "இவன் நம்பக்கலிலே ஒன்றைக்கொள்வதுகாண்" என்றுநினைந்தமை தோற்றவிருந்தானாயிற்றுமஹாபலி; அவன்நினைத்தத்தையறிந்து, நான்கொள்வனென்கிறார்; அன்றியே, இவன்வடிவில் நைரபேக்ஷ்யத்தைக்கண்டு, "இவன்நம்மையொன்றுகொள்ளுமோ" என்றிருந்தான்; நீயங்ஙன்நினைக்கவேண்டா, நான்சாபேக்ஷனென்கிறார். (நான்) உன்பக்கல்பெற்றாலன்றி யோரடியிடாதநான். (மாவலி) பிறந்தவன்றே பிக்ஷையிலே யதிகரிக்கையாலேப்ரபுக்களையுபசரித்து வார்த்தைசொல்லியறியானே. முன்புசிலர்க்குத் தாழ்வுசொல்லியறியான், பிறந்தபின்புவாசனை பண்ணுகைக்குநாளில்லை, அத்தாலே (மாவலியென்கிறார்) எல்லாரும்தன்னை யுயரச்சொல்லுமதொழிய இப்படிசொல்லக்கேட்டறியாமையாலே, இவனொருபாலன் தன்முன்பேநின்று சிறுபேரைச்சொல்லி யழைத்தவாறே யினியனாய் முகத்தைப்பார்த்து, "உனக்குவேண்டுவதென்" என்றான். (மூவடி) தன்பக்கல் கொள்ளுமவர்களிலிப்படி சிறுகவர்த்திப்பாரில்லாமையாலே யநாதரித்திருந்தான்; அந்யபரதைபண்ணாதே (தா) என்கிறார். (என்றகள்வனே) இந்த்ரன் சரணம்புக்குநின்றான், உதாரனாயிருப்பானொருவனவனுடைய ராஜ்யத்தைப் பறித்துக்கொண்டான்; "ராவணாதிகளைப்போலே யழியச்செய்யப் போயிற்றில்லை ஒருதர்மபாசத்தை யேறிட்டுக்கொண்டு நிற்கையாலே, இவனோ சரணம்புக்குநின்றான், இனிப்போம்வழியென்" என்றுபார்த்து தன்னையிரப்பாளனாக்கி, சுக்ராதிகள் "இவன்தேவகார்யஞ்செய்யவந்தான்" என்னச்செய்தேயும் அவன்நெஞ்சில்படாதபடி அவனைவடிவழகாலும் பேச்சழகாலும் வாய்மாளப்பண்ணின வஞ்சநங்களெல்லாவற்றையும் நினைத்து (கள்வனேஎன்கிறார்) (கஞ்சனைவஞ்சித்து) கம்ஸன்மாதுலனாய், ப்ரமாதத்தாலே புகுந்ததாகத்தானும் துஃகியாய்க்கண்ணநீர் பாய்த்துவானாகவாசலிலே குவலயாபீடத்தையும் மல்லரையும் நிறுத்திவைக்க, அத்

னதையடையநிரசித்து. கம்சன்கோலின வஞ்சநத்தை யவன்றன்னோடே போக்கினவனே. ( வாணனித்யாதி ) க்ஷுத்ர தேவதையைப் பற்றி ,, ஈயமெஸாஹயம்ஜமெதாஹவதி ” ( அதஸோபயங்கதோபவதி ) என்றிருக்குமாபோலேயிருந்த வாணனுடையநெஞ்சு வலிகைமேலேபோம்படியாகப் பெரியதிருவடியின்மேலேயேறிச் சாரிகைவந்தவனே. ( ஆயிரந்தோள் துணித்த ) “ இவன்கைவிஞ்சினான் ” என்று இவனைக்கைகழியவிட்டான். ( புள்வல்லாய் ) “ வாள்வலலாய், தோள்வல்லாய் ” என்றாற்போலே. ( உன்னையெஞ்ஞான்று பொருந்துவனே ” அவன்பக்கல்நின்றும் பிரிந்தாற்போலேயிருக்கிறதுகாணும் ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்தவாறே. ,‘ ஊநநஹாராவமெவணாஹழ ” ( அநந்யாராகவேணாஹம் ) என்கிறபிராட்டி அசோகவநிகையிலே பிரிந்திருந்தாற்போலே யிருக்கிறதுகாணும் ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்தவாறேஉடம்புடனிருக்குமிருப்பு. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவாறே அநாதிகாலம் சம்சாரியாய்நின்ற நிலைவந்தேறியாய்த்தோற்றிற்று. சர்வஜ்ஞனாய் சர்வசக்தியாய் சீலாதிகுணங்களையுடைய வுன்னைப் பார்த்தா லிழக்கவேண்டுவதில்லை, நானிழக்கமாட்டாதவனாயிருந்தேன், ஆனபின்புன்னைக் கிட்டுங்காலம் சொல்லாயென்கிறார். “ சர்வாத்மாக்களுக்கும் சேஷத்வமவிசிஷ்டமா யிருக்கச்செய்தேயும் பத்தரும்முக்தரும் நித்யருமென்கிற பிரிவோபாதியிறே மஹிஷிகளும் ; ‘ அநந்யா ’ என்கிற பிராட்டியினுடையவார்த்தை யெல்லார்க்குஞ்சொல்லலாம்படியிறே ஸ்வரூபத்தை யுணர்ந்தாலிருப்பது, ஈஸ்வரனில் பிராட்டிமார்க்கு பேதஞ்சொல்லுகிற ப்ரமாணங்களெல்லாம்-அல்லாதாரோபாதி பிரிவுண்டென்னுமிடம் சொல்லுகிறன ; ஐக்யஞ்சொல்லுகிற விடமெல்லாம்-பாரதந்த்ர்யகாஷ்ட்டையைப்பற்றச் சொல்லுகிறன ” என்று ப்ராசங்கிகமாக வோருருவிலே யருளிச்செய்தார்.

( ஆயிரந்தோளித்யாதி ) “ கரபாதையிறே யிவனையிப்படி கலங்கப்பண்ணிற்று ” என்று அடுத்தேறுகவந்த காத்தைக்கழித்து ப்ராப்தகரத்திலே நிறுத்தினவனே. * ஆயிரங்கரங்கழித்த வாதிமாலிறே. ( உன்னையெஞ்ஞான்றுபொருந்துவனே ) வாணனுடைய கைப்பற்றையுங்கழித்து இறையிலியாக்கினவுன்னை எந்நாள்வந்து கிட்டுவனென்கிறார்.......*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (கொள்வனித்யாதி) “ கள்வனேகஞ்சனைவஞ்சித்து ” இத்யாதி, “எஞ்ஞான்றுபொருந்துவன்” என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (ரக்ஷணோபாயஜ்ஞனுமாயித்யாதி)

முந்தினவர்த்தம்-யாசகத்வசாதுர்யத்திலே. நீதாராவிட்டாலும் நான்கொள்வனென்றுகருத்து. மலையாளர் வளைப்பாவது - மலையாளரொருவன்பக்கலிலே யொன்றைவாங்கநினைத்தால் வாங்கியல்லதுபோகாதபடி வளைத்துக்கொள்வர்க

ள், அதுபோலே யென்றபடி. த்விதியார்த்தம் - வைஶிஷ்ட்யத்திலே. த்ருதீயார்த்தம்-நைரபேக்ஷ்யத்திலே. ப்ரதமார்த்தத்துக்குச்சேர (உன்பக்கலித்யாதி) அர்த்தியாலல் "மஹாராஜாவே" என்னவேண்டாவோவென்ன (பிறந்தவன்றேயித்யாதி, மாவலியென்கிறனித்யந்தம்) அவதாரிகை (எல்லாருமித்யாதி) உயர - உத்க்ருஷ்டமாக. இனியனுய்-ரஸிகனுய். ப்ரீதனுயித்யர்த்தஃ. களவேதென்ன (இந்த்ரனித்யாதி.)

வஞ்சிக்குமது தோஷமன்றிக்கே குணமாகைக்காக வருளிச்செய்கிறுர் (கம்சனித்யாதி)

என்றிருக்குமாபோலே-என்றுபகவந்நிஷ்ட்ட னிருக்குமாபோலே. க்ஷுத்ரதேவதையைப்பற்றி- (இருந்தவாணன்) இத்யந்வயஃ. உள்வன்மை - (நெஞ்சுவலி) கைமேலே-உடனே. கையோடேயென்று ஸ்வபாவார்த்தம். சாரிகை-வையாளி. "வாணன்-ஆயிரந்தோள்துணித்த" என்றதுக்குரஸோக்தி (இவன்கைவிஞ்சினுனித்யாதி) அவிதேயனுனுனென்று த்யஜித்தானென்றுரஸோக்தி. கைபெருத்தானென்று கையைக்கழித்துவிட்டானென்று ஸ்வபாவார்த்தம் (வாள்வல்லாயித்யாதி) இந்தப்புள்ளை நடத்தும்போதிவனே யாகவேணுமென்றபடி.

பொருந்துகை-கூடுகை. கூடுவனென்னுதே "பொருந்துவன்" என்றுபிராட்டிமார் பாசுரத்தைச்சொல்லுவானென்னென்ன (அவன்பக்கல்நின்றுமித்யாதி) விவரணம் (அநந்யேத்யாதி) "ஶக்யாலோபயிதும்நாஹமைஶ்வர்யேண தநேநவா। அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" (ஶக்யாலோபயிதும்நாஹமைஶ்வர்யேணதநேநவா । அநந்யாராகவேணுஹம்பாஸ்கரேணப்ரபாயதா) இதிசுந்தரகாண்டே ராவணம்ப்ரதிசீதா. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தாலவன்பக்கல் நின்றும்பிரிந்தமைதோன்றும் படியென்றனேயென்ன (ஸ்வரூபஜ்ஞாநமித்யாதி) பொருந்துகைநிஶ்சிதமோ, "எஞ்ஞான்று" என்கைக்கென்ன (சர்வஜ்ஞனுயித்யாதி) "கள்வனே" என்கையாலே-சர்வஜ்ஞத்வம். "கஞ்சனைவஞ்சித்து" இத்யாதியாலே-சர்வசக்தித்வம். "ஈர்கின்றசீலமே" என்கையாலே (ஶீலாதிகுணங்களையுடையவென்றது)

"கதா த்ரக்ஷ்யதி மாம் பதிஃ" (கதாத்ரக்ஷ்யதிமாம்பதிஃ) என்று - அநபாயினியானவளைப்போலே, "பொருந்துவன்" என்னும்படியென்னென்ன (சர்வாத்மாக்களுக்குமித்யாதி) ஆகையாலே (அநந்யாஎன்கிற) என்றுகூட்டுவது. "அஹந்தாப்ரஹ்மணஸ்தஸ்ய ஸாஹமஸ்மி ஸநாதநீ" (அஹந்தாப்ரஹ்மணஸ்தஸ்யஸாஹமஸ்மிஸநாதநீ) "நரநாரீமயோ ஹரிஃ" (நரநாரீமயோஹரிஃ) என்று-ஈஶ்வரனேடைக்ய கதநமுகேந வீஶ்வரகோடியாகச் சொல்லாநிற்க, பிராட்டியை சேதநகோடியாகச் சொல்லுவானென்னென்ன (ஈஶ்வரனிலித்யாதி) ப்ராசங்கிகமாகவென்றது - "சர்வாத்மாக்களுக்கும்" என்றுதொடங்கியாதல், "ஈஶ்வரன்" இத்யாதிவாக்யம்தொடங்கியாதல்.

சாடுப்ரயோகார்த்தம் புநஶ்சபதோபாதாநம் (ஆயிரமித்யாதி) கரம் - கப்பம். "கரமும்கடமும்குடியிறையாகும்" என்னக்கடவதிறே. அடுத்தேறுக-அதிகமாக. அடுத்தடுத்தேறினவென்று ஸ்வபாவார்த்தம். கரம்கழித்தமைக்கு சம்

௪௪

வாதம் ( ஆயிரமித்யாதி ) திருச்சந்தவிருத்த மைம்பத்துமூன்றும்பாட்டு. "மோடியோடு" இத்யாதி. பாணனுடைய ஆயிரந்தோளையுங்கழித்த காரணபூதனான ஸர்வேஶ்வரனித்யர்த்தஃ. ( கைப்பற்றையும் ) கைவசமானத்தையுமென்றுசாடு, கைகளைப்பற்றி யுடையனாயிருந்தமையையுமென்று ஸ்வபாவார்த்தம். இறையிலியாக்கி-இறையில்லாதவனாக்கி. இறை-தேவதையும், கரமும்.

க்ரமேணாந்வயஃ...............................................................................*

# பத்தாம்பாட்டு.

பொருந்தியமாமருதினிடைபோயவெம்
பெருந்தகாயுன்கழல்காணியபேதுற்று
வருந்திநான்வாசகமாலைகொண்டுன்னையே
யிருந்திருந்தெத்தனைகாலம்புலம்புவனே.

## ஆறாயிரப்படி.

( பொருந்திய ) பொருந்தினமாமருதி னிடையகப்படாதேபோயென்னை ரக்ஷித்தருளின பரமகாருணிகனே, உன்றிருவடிகளைக்காணவாசைப்பட்டுப்பெறுதொழிந்திப்படி மூடியவும்பெறுதேயிருந்து பெரியவருத்தத்தோடே யுன்குணங்களைச்சொல்லிக்கொண்டு நானின்னமெத்தனைகாலங்கிடந் தலற்றக்கடவேனென்கிறார்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரதிபந்தகத்தை அநாயாஸேநபோக்குமுன் திருவடிகளைக்காணவாசைப்பட்டு எத்தனைகாலங்கூப்பிடக்கடவேனென்கிறார்.

பொருந்திய-தன்னில்தான்செறிந்துநிற்கிற. மா-பெரிய. மருதின் - மருதுகளின். இடை-நடுவே. போய-அநாயாசேநபோயத்தைமுறித்து. உன்னை, எம்-எங்களுக்கு. பெரும்-ஸ்வாமியாகத்தந்த. தகாய்-பெரியவனே. உன்-உன்னுடைய. கழல்-அக்காலத்திலேமறியவிட்டசிவந்ததிருவடிகளை. காணிய-காணவேணுமென்கிற.'பேது-ஈடுபாட்டை. உற்று-உடையேனாய். வருந்தி-க்லேஶித்து. நான்-விளம்பாக்ஷமனான நான். வாசகம்-உன்னுடையகுணவாசகமான. மாலை - சப்தசந்தர்ப்பத்தை. கொண்டு-கொண்டு. உன்னையே-நிரதிசயபோக்யனானவுன்னையேநோக்கி. இருந்திருந்து-இளைத்திருந்திருந்து. எத்தனைகாலம்-எத்தனைகாலம். புலம்புவன்-கூப்பிடக்கடவேன்.

காணிய-காண்கைக்கு..............................................................................*

## ஈடு-பத்தாம்பாட்டு.

உன்னைக்காணப்பெறுத வ்யசநத்தாலே க்லேசப்படுகிறநா னின்னமெத்தனைகாலங் கூப்பிடக்கடவேனென்கிறார்.

(பொருந்தியமாமருது) மருது, மாமருது, பொருந்தியமாமருது. மருதென்கையாலே - மரத்தைச்சொல்லி; "மரங்கள்போல்வலிய நெஞ்சம்" என்று-வன்மைக்கு மரத்தையிறேசொல்லுவது; அத்தாலே-நெஞ்சின்வன்மையைச்சொன்னபடி. மாமருதென்கையாலே-மாவென்று-கறுப்பாய், இத்தால்-சீற்றத்தைச்சொன்னபடி. அன்றியே, மஹத்தையாய், வேறுவினைசெய்யாதே மேலேவிழவமைந்திருக்கை. நினைத்த காரியத்துக்குப் பொருந்தியமாமருது. இவற்றின்நெஞ்சில் பொருத்தம். ஆக, இப்படி க்ருதசங்கேதராய், சீற்றத்தையுடையராய், க்ருஷ்ணதர்ஸநத்தாலும் நெஞ்சுநெகிழாதவன்மையை யுடையவை. (இடைபோய) இப்படிநிற்கிறவற்றினருகே போகையுங்கூட பயங்கரமாயிருக்க, இவற்றின்நடுவே, ஒன்றிலேவெளிகண்டு போவாரைப்போலே போனாயிற்று. (போயவெம்பெருந்தகாய்) அவற்றின்நடுவே யவற்றைத்தப்பிப் போயெனக்குசேஷியானவுன்னைத்தந்தபெரியோனே. (உன்கழலித்யாதி) "ததஃகடகடாஸப்தஸமாகர்ணநதத்பரஃ" (ததஃகட்கடாஸப்தஸமாகர்ணநதத்பரஃ) என்று-அவைமுறிந்து விழுகிறபோதை யோசைகேட்டுப்புரிந்துபார்த்து, அபூர்வதர்ஸநத்தாலே விகசிதமானவக்கண்போலே சிவந்திருக்கிற திருவடிகளைக்காண வேணுமென்றாசைப்பட்டு. [ஜகாமகமலேக்ஷணஃ] (ஜகாமகமலேக்ஷணஃ) புரிந்துபார்த்த கண்களைக்காணவாசைப்பட்டான்ருஷி; தவழ்ந்துபோகிறபோதைத் திருவடிகளைக்காண வாசைப்படுகிறாரிவர். எல்லாவவஸ்த்தையிலு மவனையடிவிடாரே. தந்தாம் ஜீவநத்தைநோக்கத்தேடு மித்தனையிறேயெல்லாரும், இவரும்தம்முடைய ஜீவநத்தைநோக்கத்தேடுகிறார். (பேதுற்று) அறிவுகெட்டு. (வருந்தி) இழந்தவிஷயத்துக்குத்தக்கபடியிறே க்லேசமுமிருப்பது. (நான்) அடியேபிடித்து ஜீவித்துப்போந்தநான். "நின்செம்மாபாதபற்புத்தலை சேர்த்தொல்லை" என்கிறபடியே-அத்திருவடிகள் பெறில்தலையாக ஜீவித்து, அதில்லையாகிலில்லையாம்நான். (வாசகமாலைகொண்டு) ஒருமலையெடுத்தாற்போலேயாயிற்றிவர்க்கொரு சொற்கொண்டுசொல்லுகை. (உன்னை) பேசித்தலைக்கட்ட வொண்ணாதவுன்னை. "யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்ய மநஸாஸஹ" (யதோவாசோநிவர்த்தந்தேஅப்ராப்யமநஸாஸஹ) இறே. (இருந்திருந்து) ஒருகாலொன்று சொல்லப்புக்காலது தலைக்கட்டுங்காட்டில் நடுவேபதின்கால் பட்டைப்பொதிச்சோறவிழ்க்கவேணுங்காணும். (எத்தனைகாலம்புலம்புவனே) சாதநபுத்யாசொல்லமாட்டார், ப்ராப்யபுத்யாதவிரமாட்டார்; இதுக்குமுடிவென்னென்கிறார்..........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( பொருந்தியவித்யாதி ) “ கழல்காணியபேதுற்றுவருந்தி நான், எத்தனைகாலம்புலம்புவன் ” என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( உன்னைக்காணப்பெருதவித்யாதி )

( மரங்கள்போலித்யாதி ) மரங்கள்போலே கடிநமானநெஞ்சமென்றபடி. திருமாலை. வன்மை-காடிந்யம். வினை-யுத்தம். ( நினைத்தகாரியத்துக்கு ) முடிக்கைக்கென்றபடி. “ பொருந்திய ” என்றதுக்கர்த்தம் ( இவற்றினித்யாதி ) சப்தமிருந்தவடைவுக்குச்சேர நிகமிக்கிருர் ( ஆகவித்யாதி ) “ மருதினிடை ” என்கிற ஏகவசநதாத்பர்யம் ( ஒன்றிலேவெளிகண்டித்யாதி ) “ போய ” என்றவநந்தரம், “ எம் ” என்றதுக்குவாசனை ( அவற்றின்நடுவேயித்யாதி ) பெருந்தகாய் - பெரியவனே.

மருதையொடித்தவநந்தரம் திருவடிகளை யருளிச்செய்தது-ருஷிக்குத் திருக்கண்களிலே யாதரம்நடந்தாற்போலே, தமக்குத்திருவடிகளிலே யாதரம் நடந்ததென்று தோற்றுகைக்காக வென்கிருர் ( ததஃகடகடாசப்தேத்யாதி ) “ வ்யக்ராயாமதஸ்யாம்ஸகர்ஷமாண உலூகலம் । யமளார்ஜுநயோர்மத்யே ஜகாம கமலேக்ஷண꞉ । கர்ஷதா வ்ருக்ஷயோர்மத்யே திர்யக்கதமுலூகலம் । பக்நாவுத்துங்கஶாகாக்ரௌ தேந தௌ யமளார்ஜுநௌ । தத꞉ கடகடாஶப்தஸமாகர்ணநதத்பர꞉ । ஆஜகாம வ்ரஜஜநோ த்ரஷ்டுமுத்ரஸ்தமாநஸ꞉ ” ( வ்யக்ராயாமதஸ்யாம்ஸகர்ஷமாண உலூகலம்। யமளார்ஜுநயோர்மத்யே ஜகாமகமலேக்ஷண꞉। கர்ஷதாவ்ருக்ஷயோர்மத்யே திர்யக்கதமுலூகலம் । பக்நாவுத்துங்கஶாகாக்ரௌ தேநதௌயமளார்ஜுநௌ । ததஃகடகடாஶப்தஸமாகர்ணநதத்பரஃ । ஆஜகாமவ்ரஜஜநோத்ரஷ்டுமுத்ரஸ்தமாநஸஃ ) இதிபஞ்சமேம்ஶேஷஷ்டே. “ தத꞉ கடகடா ” ( ததஃகடகடா ) இத்யாதிபதம்-வ்ரஜஜநவிசேஷணமாயிருக்க, கமலேக்ஷணனைக்கு ஹேதுத்வேநவெடுத்தது-முறிந்துவிழுகிறபோதில் சப்தஶ்ரவணௌத்கண்ட்யமிவனுக்கு முண்டாகையைப்பற்ற. விகசிதமான வக்கண்போலேயென்றது - “ கமலேக்ஷண꞉ ” ( கமலேக்ஷணஃ ) என்றத்தைப்பற்ற. இத்தால்-ருஷியிற்காட்டில்வ்யாவ்ருத்தி. ( ஜகாமேத்யாதி ) சேஷத்வாநுகுணமாகத் திருவடிகளை யநுசந்திக்கிருரென்றபடி. பிரிந்துநோவுபடுகிற வவஸ்த்தையிலும் ஸ்வரூபம்குலையாமலிருக்கிற வாகாரமிவர்க்குண்டா யிருக்கிறதென்னுமிடந்தோற்ற வருளிச்செய்கிருர் ( எல்லாவவஸ்த்தையிலுமித்யாதி ) ( அடிவிடாரேயிதி ) சாடிஃ. அடி-திருவடிகள். முதலிதித்வநிஃ. ருஷியைப்போலே கண்ணழகைக்காண வாசைப்படாதே, இவர்திருவடிகளழகைக்காணவாசைப்படுகிறதென்னென்ன ( தந்தாம்ஜீவநமித்யாதி ) ஜீவநத்தை நோக்கவென்றதுக்கு-ப்ராணனை ரக்ஷிக்கவென்று த்வந்யர்த்தம், தமக்குப்ராணனான திருவடிகளைக் காணவென்றுஸ்வபாவார்த்தம், நோக்குகை - ரக்ஷிக்கையும், பார்க்கையும். * அமலங்களாக விழிக்கும்கண்களைப்பற்ற * தேனே மலரும் திருப்பாதமிவர்க்கு போக்யமென்றுகருத்து.

காணியபேதுற்று - காணவேணுமென் றறிவுகெட்டு. கணிய- காண்கைக்கு. வருந்தி-க்லேசித்து. க்லேசிக்கைக்கடியேதென்ன ( இழந்தவித்யாதி ) “ துயரா

சுடரடி " என்றத்தைக்கடாக்ஷித் தருளிச்செய்கிறார் (அடியேபிடித்தித்யாதி) விவரணம் (நின்செம்மாவித்யாதி) இந்த வாக்யத்வயமும்-ரஸோக்தி. அடியேபிடித்து-திருவடிகளேயேபற்றியென்று ஸ்வபாவார்த்தம். முதலிலேபிடித்திதிசாடு. தலையாகஜீவித்து - தலையிலேவைத்துக்கொண்டு ஜீவித்து, நன்றாகஜீவித்திதிசாடு. " கொண்டு " என்றதுக்குபாவம் (ஒருமலையித்யாதி) அப்படிபேசித் தலைக்கட்டவொண்ணுதோவென்ன (யதோவாசஇத்யாதி) வீப்சைக்கர்த்தம் (ஒருகாலித்யாதி) பட்டைப்பொதிச்சோறு - கமுகம்பட்டையிலே கட்டினபாதேயம். இத்தால்- " உண்ணும்சோறு " இத்யாத்யுக்த ப்ரகாரவிஶிஷ்டத்வாத் மத்யேமத்யே பகவத் ஸ்மரணத்தாலே இளைப்பாறவென்றுகருத்து. புலம்புவன்-கூப்பிடக்கடவேன். "புலம்புவனே " என்று தகைப்பம்வானென், சொல்லவொண்ணுதோவென்ன (சாதநபுத்யேத்யாதி) ஆனுல்தவிரவொண்ணுதோவென்ன (ப்ராப்யபுத்யேத்யாதி) வாசகமாலைகொண்டு-குணவாசகமான சொற்றெடையைக்கொண்டு.

க்ரமேணுந்வய8.........................................................................*

---

# பதினென்றும்பாட்டு.

புலம்புசீர்ப்பூமியளந்தபெருமானை
நலங்கொள்சீர்நன்குருகூர்ச்சடகோபன்சொல்
வலங்கொண்டவாயிரத்துள்ளிவையுமோர்பத்
திலங்குவான்யாவருமேறுவர்சொன்னலே.

## ஆருயிரப்படி.

(புலம்புசீர்) எல்லாராலு மேத்தப்படுங்குணங்களை யுடையனுன பூமியளந்த எம்பெருமானை, குணைகதாரகத்வமாகிற கல்யாணகுணத்தை யுடையனுயிருந்த நன்குருகூர்ச்சடகோபன்சொன்ன இத்திருவாய்மொழியைச் சொன்னுரெல்லாருந் திருநாட்டிலேபுகப் பெறுவாரொன்கிருர்........................................ ........................................ ..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம்,இத்திருவாய்மொழிக்குப்பலமாக பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிருர்,

புலம்பு - எல்லாருங்கொண்டாடும்படியான. சீர்-குணங்களையுடையனுய்க்கொண்டு. பூமி-பூமியை. அளந்த-அளந்த. பெருமானை-சர்வேஸ்வரனை. நலம்-அநுபவாபிநிவேசமாகிறநன்மையை. கொள்-உடைய. சீர்-ஜ்ஞாநாதிகுணவிஶிஷ்டராய். நன்-நன்றான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்த. வலம்-அர்த்தப்ரதிபாதநபலத்தை. கொண்ட-உடைத்தான. ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும். ஓர்-அத்விதீயமான. இவைப

த்தும்-இப்பத்தையும். சொன்னால்-சொன்னால். யாவரும்-எல்லாரும். இலங்கு-அத்யுஜ்ஜ்வலமான. வான்-பரமபதத்திலே. ஏறுவர்-ஏறப்பெறுவர்கள்.

இது-கலிவிருத்தம்.......................................................................*

## ஈடு_பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியில் சப்தமாத்ரத்தாலே இதில் ப்ரார்த்தித்தபடியே யநுபவிக்கலான பரமபதத்தைச் செல்லப்பெறுவரென்கிறார்.

(புலம்புசீர்) இவர்புகழுமாபோலே லோகமடையப் புகழும்படியாயிற்றிவன் குணங்கள். (பூமியளந்தபெருமானை) பூமியையளந்து அந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யத்தைத்தவிர்த்த சர்வஸ்வாமியையாயிற்றுக்கவிபாடிற்று. (நலங்கொள்சீர்) கரணங்களும் சேதநசமாதியாலே விடாய்த்து, அவைதானேரிந்த்ரியவ்ருத்தியை யோரிந்த்ரியமாசைப்பட்டு, இவையெல்லாவற்றின் வ்ருத்தியையுந்தாமாசைப்பட்டு, இப்படிபகவத்விஷயத்திலே விடாய்க்கும்படியான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையுடைய ஆழ்வார். அநுபவாபி நிவேசமாகிற நன்மையையுடைய ஜ்ஞாநாதிகுண விஸிஷ்டராய் நன்றானதிருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார்சொல். (வலங்கொண்டவித்யாதி) ப்ரதிபாத்யத்தை வலம்வந்து விளாக்கொலை கொண்டவென்னுதல், ப்ரதிபாதநசாமர்த்த்யத்தை யுடையவென்னுதல். (இலங்குவானித்யாதி) அத்விதீயமான விப்பத்தைச்சொன்னால், இன்னாரினையாரென்னாதே, பகவதநுபவத்துக்கு விச்சேதமில்லாதவைலக்ஷண்யத்தை யுடையபரமபதத்தை ப்ராபிக்கப்பெறுவர். "ஸஏகதாபவதி" (ஸஏகதாபவதி) என்றோதுகிறபடியே-அநேகசரீரங்களைப் பரிக்ரஹித்து, அவ்வோசரீரங்களில் கரணங்களும் பூர்ணாநுபவம் பண்ணலாம்படியான தேசத்திலே புகப்பெறுவரென்றபடி.........................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (புலம்பித்யாதி) "இவையுமோர்பத்து-சொன்னால்-யாவரும்-இலங்குவான்-ஏறுவர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை.

த்ருஷ்டாந்தபூர்வகமாகவர்த்தம் (இவர்புகழுமித்யாதி)

"சீர்" என்று-வைஷ்ண ஸ்ரீயாய், அதுக்குநன்மையேதென்ன (கரணங்களுமித்யாதி) (நலங்கொள்சீர்) பரிபூர்ணமாய் பக்வமானபக்தியாகிற சம்பத்தையுடையவரென்றபடி.

வலம்-ப்ரதக்ஷிணமும், பலமும். விளாக்கொலைகொண்ட-வ்யாபித்த. ப்ரதிபாத்யத்தை வலம்வருகையாவது-உள்ளபடி ப்ரதிபாதிக்கை. "ஓர்" என்றதினர்த்தம் (அத்விதீயமானவென்றது)

இன்னார்-ஏதத்ஸ்வரூபா:. இனையார்-ஏதத்ஸ்வபாவா:.

புலம்புசீரித்யாரப்ய, ஆயிரத்துள் ளிவையுமோர்பத்தை-சொன்னால்-யாவரும்-இலங்குவான்-ஏறுவரித்யந்வய:...............................................*

( முடியானே. )

சித்தாக்ருஷ்டிப்ரவீணைரபிலபநஶுசைஸ்ஸ்பர்ஶவாஞ்சாநுஹாரை
ராதந்வாநைர்த்ருஶாம் ஶ்ருதிஹிதஸஹிதைராத்மநித்யாதரார்ஹை: |
விஶ்லேஷக்ரோஶக்ருத்பிஸ்ஸ்மரதரதிகரைர்தத்தஸாயுஜ்யஸங்கை:
ஸ்வாங்கை: குர்வாணைர்பாலலௌல்யம் அதிசலசேஷ்டிதஶ்ஶௌரிராஹ. ௯௧

( சித்தாக்ருஷ்டிப்ரவீணை: ) என்றுகிடக்குமென்னெஞ்சமே - மநஸ்ஸினுடைய வாகர்ஷணத்திலே சமர்த்தங்களுமாய்; ( அபிலபநசுசை: ) என்னுமெப்போது மென்வாசகமே - “ வாக்குக்குச்சொல்லவேணும் ” என்கிற சுகஜநகங்களுமாய் : ( ஸ்பர்ஸவாஞ்சாநுஹாரை: ) என்று தடவுமென்கைகளே- கைகளுக்கு “ தழுவவேணும் ” என்கிற வாசாவர்த்தகங்களுமாய் ; ( ஆதந்வாநைர்த்ருக்ஷாம் ) மெய்கொள்ளக்காண விரும்புமென்கண்களே - கண்களுக்கு “ காணவேணும் ” என்கிற விச்சாப்ரதங்களுமாய் ; ( ஶ்ருதிஹிதசஹிதை: ) திண்கொள்ளவோர்க்கும் கிடந்தென்செவிகளே - ஶ்ரோத்ரங்களுக்கு “ கேட்கவேணும் ” என்கிறஹிதகரங்களுமாய் ; ( ஆத்மநித்யாதரார்ஹை: ) உன்னையேயவிவின்றி யாதரிக்குமெனதாவியே - ஆத்மாவுக்கு நித்யாதரார்ஹங்களுமாய் ; ( விஶ்லேஷக்ரோசக்ருத்பி: ) பாவியேன்நெஞ்சம் புலம்பப்பலகாலும் கூவியுங்காணப்பெறேன்-விஶ்லேஷசமயத்திலே கூப்பிடப்பண்ணவற்ருய் ; ( ஸ்மரதரதிகரை: ) நின்றெனதாவியை யீர்கின்றசிலமே-நினைக்கநினைக்கவாத்மாவை சிதிலமாகப் பண்ணுகின்றனவாய்; ( தத்தசாயுஜ்யசங்கை:) உன்னையெஞ்ஞான்றுபொருந்துவனே-தன்னைப்பெறுவதெப்போ தெப்போதென்று ஸ்ப்ருஹையை யுண்டாக்குமவையாய் ; ( குர்வாணைர்பாலலௌல்யம்) பொருந்தியமாமருதினிடைபோய- “ அதிசஞ்சலசேஷ்டித: ” ( அதிசஞ்சலசேஷ்டித: ) என்கிறபடியே யதிசஞ்சலதையைப் பண்ணுமவையாய் ; அதவா, உன்னையேயிருந்திருந்தெத்தனைகாலம் புலம்புவனே-பாலரைப்போலே யதிசபலராய் அலற்றியழப்பண்ணுமவையா யொன்றுக்கொன்று கூடியிருக்கிற கல்யாணகுணங்களாலே யெம்பெருமான், சர்வகாலமும் காணவேணுமென் ருசைப்படும்படியான திவ்யவிக்ரஹத்தையுடையவனென்று “ முடியானே ” என்கிறதசகத்திலே ஆழ்வாரருளிச்செய்தா ரென்கிருர். (௯௧)

## திருவாய்மொழிநூற்றந்தாதி.

முடியாதவாசைமிகமுற்றுகரணங்க
ளடியார்தமைவிட்டவன்பாற் - படியா
வொன்றென்றின்செயல்விரும்பவுள்ளதெலாந்தாம்விரும்பத்
துன்னியதேமாறன்றன்சொல். (௨அ)

( முடியாதவாசைமிக ) இதில்-காணங்களும்தாமும் பெருவிடாய்ப்பட்டுப் பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். அதெங்ஙனேயென்னில்; * பயி

ஒம்சுடரொளியிலே-உத்தேஶ்யராக வநுசந்திக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்வருபத்துக்கு நிருபகத்வேந ப்ரஸ்துதமான பகவத்ஸௌந்தர்யாதிகள் விடாய்க்குத்தம்பகமாய், அத்தாலேவிடாய்கரைபுரண்டு, அநுபாவ்யமான பூஷணாயுதவிக்ரஹ குணசேஷ்டிதாதிகளைச்சொல்லி, தாமும்தம்முடைய கரணக்ராமமுமாய் முழுமிடறுசெய்து கூப்பிடுகிற * முடியானேயிலர்த்தத்தை சங்க்ரஹித்தருளிச்செய்கிறார் "முடியாதவாசைமிக" இத்யாதியாலேயென்கை.

(முடியாதவாசைமிக)* மயர்வறமதிநல மருளுகையாலே அடியேதொடங்கி வருகிற * ஆராதகாதலான தநுபவாலாபத்தாலேயதிசயிக்க. கீழே-பாகவத ஸ்வரூபநிரூபணத்துக்குடலாக பகவத்குணாதிகள் ப்ரஸ்துதமாக, அத்தாலேபக்த்யபிவ்ருத்தியாக. (முற்றுகரணங்கள்) பாஹ்யாப்யந்தர சகலகரணங்களும். (முடியாதவாசைமிகு-முற்றுகரணங்கள்என்று) கரணவிசேஷணமாகவுமாம். (அடியார் தமைவிட்டு) "எம்மையாளும்பரமர்," "எம்மையாளுடைநாதர்," என்றும், "எம்மையாளுடையார்கள்," "எம்பெருமக்கள்," "எம்மையளிக்கும்பிராக்கள்," "எம்மைச்சன்மசன்மாந்தரங்காப்பர்," "எம்மைநாளுய்யக்கொள்கின்றநம்பர்," எந்தொழுகுலந்தாங்கள்," "அடியாரெம்மடிகள்," "அடியார்தம்மடியாரடியோங்கள்" என்று-இப்படிசர்வப்ரகாரத்தாலும் சேஷிகளாக வநுசந்திக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களைவிட்டு. (அவன்பால்படியா) படிந்தபுருஷார்த்த காஷ்ட்டையைக் குலைக்கும்படியான வவனிடத்திலே யவகாஹித்துக் கரணங்களும்தாமும் தத்விஷயத்திலே ப்ரவணராய். "ஸாபெதஸ்ரோகாஸிகஸ்ரிபெதஃ। ஸம்ஸ்ருஷேயம்ஸகாஸாஹஂ" (காத்ரைஸ்ஸோகாபிகர்ஸிதைஃ। ஸம்ஸ்ப்ருஸேயம்ஸகாமாஹம்) என்னும்படியாக (ஒன்றொன்றின்செயல்விரும்ப வுள்ளதெலாம்தாம்விரும்ப) "நெஞ்சமேநீணகராகவிருந்தவென்தஞ்சனே," வாசகமேயேத்தவருள்செய்யும் வானவர்தம்நாயகனே," "கைகளாலாரத்தொழுதுதொழுதுன்னை," "கண்களாற்காணவருங்கொல்," என்று-வாக்பாணிசக்ஷுஸ்ஸ்ரோத்ரங்களானவிந்த்ரியங்கள் மநோவாக்பாணிசக்ஷுர்வ்ருத்திகளை யாசைப்படும்படியாகிற, இந்த்ரியவ்ருத்தி நியமமின்றிக்கே யவனையநுபவிக்கவேண்டும்படியான பெருவிடாயையுடையவாய்; கீழ்ச்சொன்னகரணங்களின் விடாயைக்கரணியான தாமொருவருமுடையராய், அவனையநுபவிக்கவாசைப்பட. அதாவது - "உன்னையே யவிவின்றி யாதரிக்குமெனதாவி" என்றும், "பாவியேன்நெஞ்சம் புலம்பப்பலகாலும் கூவியும்காணப்பெறேனுனகோலம்" என்றும், "உன்னையென்நாள்கண்டு கொள்வன்" என்றும், "உன்னையெஞ்ஞான்றுபொருந்துவன்" என்றும், "உன்னையேயிருந்திருந்தெத்தனைகாலம்புலம்புவன்" என்றுமிறேயிவருடைய ப்ராவண்யமிருக்கும்படியென்கை. (துன்னியதேமாறன்றன்சொல்) இப்படிகரணக்ராமத்தினுடையவும் கரணியானவாழ்வார் தம்முடையவுமார்த்யதிசயத்தை யுடைத்தானவாழ்வார் ஸுக்தியானவித்திருவாய்மொழி, "மிடைந்தசொல்" என்னும்படிசப்தநிபிடமாயிருந்தது. துன்னுதல்-நெருக்கம்..............................*(உஅ)

மூன்றும்பத்தில் - எட்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - உஅ. பாட்டு - ௩௯௦.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## மூன்றும்பத்து.

## ஒன்பதாந்திருவாய்மொழி.

### சொன்னல் - ப்ரவேஸங்கள்.

### ஆருயிரப்படி.

(சொன்னல்) இப்படி தம்முடைய சர்வகரணங்களுந் தனித்தனியே ஸ்வேதரகரணங்களினுடைய வ்ருத்திகளை யெம்பெருமான்றிறத்திலே யாசைப்பட்டபடியே பெருமையாலே யத்யந்தமவஸங்ஙரான ஆழ்வார், இத்தசையில் தமக்குத் துணையாகைக்காக, "இந்தலோகத்திலே ஸ்ரீவைஷ்ணவர்களுளரோ" என்று பார்த்தவிடத்தில், இந்தலோகமெல்லாம் பகவத்வ்யதிரிக்தவிஷய ப்ரவணமாய் பகவத்பராங்முகமாய் மநுஷ்யாதிகளைக் கவிபாடிக்கொண்டு திரிகிறபடியைக்கண்டார்; கண்டு, தம்முடைய விழவெல்லாம் மறந்து; எம்பெருமானுக்கர்ஹமானவரு மந்தக்கரணங்களை யவஸ்துபூதமநுஷ்யாதிகள் பக்கலிலே விநியோகிக்கிறபடியென்னகாணென்றின்னதாய், அவர்களைக்குறித்து, கல்யாணமாய் பகவதநுரூபமான கவிகளை க்ஷுத்ரமநுஷ்யாதிகள்பக்கலிலே விநியோகிக்கலாகாதென்றுபார்த்து;.................... ........................................*

### பன்னீராயிரப்படி.

ஒன்பதாந்திருவாய்மொழியில், இப்படி தாமும் கரணக்ராமமுங்கூப்பிட்டபடியைக்கண்ட வீஸ்வரன் "லோகமடங்கவிதரஸ்தோத்ரம்பண்ணி யநர்த்தப்படாநிற்க, நீர் நம்மை ஸ்தோத்ரம்பண்ணும்படிபண்ணினோமே" என்றிவருடையபேற்றை ப்ரகாஸிப்பிக்கக்கண்டு சந்துஷ்டராய்; அவனுடைய ஸ்துத்யத்வத்துக்கே காந்தமான ஸௌலப்யாதிஸயத்தையும், ஸௌலப்யனுடைய சம்பந்தோத்கர்ஷத்தையும், நித்யஸூரிநிர்வாஹகத்வத்தையும், ஸ்துத்யதைக்கநுரூபமான சேஷித்வத்தையும், அபேக்ஷிதபலப்ரதத்வமான-ஔதார்யாதிஸயத்தையும், அதுக்கேகாந்தமான ஸ்ரிய:பதித்வத்தையும், ஸ்துதிவிஷயமான குணநாமமூர்த்தியையும், அவனுடையப்ராப்யபாவத்தையும், புருஷார்த்தப்ரதத்வத்தையும், ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வத்தையு மநுஸந்தித்து; ஏவம்பூதவிஷயத்தை ஸ்தோத்ரம்பண்ணாதே, நிஷ்ப்ரயோஜநமான இதரஸ்தோத்ரங்களைப்பண்ணி யநர்த்தப்படுகிறிகோளேயென்று லௌகிகரைக்குறித்து ஸ்வநிஷ்டையை யுபதேஸித்தருளுகிறார்... ........................*

ஈடு.

இப்படி தம்மிழவுக்குக்கூப்பிடுகிற விதுதவிர்ந்து தங்களிழவுக்குக்கூப்பிடும்படி பண்ணினார்கள் சம்சாரிகள். தாமும் தம்முடையகரணக்ராமமுமாய், கேட்டாரெல்லாம் நீராம்படி கூப்பிட்டார்-இதிற்றிருவாய்மொழியிலே; ''பருகிக்களித்தேனே'' என்று - பகவதநுபவம்பண்ணிக்களித்து அநந்தரம் * போதயந்தஃபரஸ்பரம்பண்ணுகைக்கு ''அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ'' என்று-நித்யசூரிகள் திரளிலேபுகத்தேடுமாபோலே, இவரிழவாலே கூப்பிட்டவநந்தரம் ''இவ்விழவுக்குக்கூட்டாவர்களிறே'' என்று சம்சாரிகளைப்பார்த்தார்; அவர்கள்பேற்றுக்குக் கூட்டல்லாதாற்போலே யிழவுக்கும் கூட்டன்றிக்கேயிருந்தார்கள்; [அறியார்சமணரயர்த்தார்பவுத்தர், சிறியார்சிவப்பட்டார்] என்கிறபடியே - அநுபபந்நங்களைச்சொல்லுவாரும், ப்ரத்யக்ஷஜ்ஞாராம்படி ஒருசேதநனைக்கொள்ளாதே ஜ்ஞாநஸந்தாநத்தைக்கொள்ளுவாரும், தன்னோட்டை யானொருக்ஷேத்ரஜ்ஞனையே ''ஈஸ்வரன்'' என்றிருப்பாரும், தேவதாந்தரங்களைப்பற்றியிருப்பாரும், ''அவர்கள் தாங்கள் சர்வஜ்ஞர்'' என்னும்படி சப்தாதிகளைப்பற்றி யவற்றைப்பெறுகைக்காகப்பிறரைக்கவிபாடித்திரிவாருமாயிருந்தார்கள்; அவர்களைக்கண்டவாறே, வாளேறுகாணத்தேளேறுமாயுமாபோலே தம்மிழவைமறந்தார்; பராநர்த்தங்கண்டாலத்தைப்பரிஹரித்துப் பின்பு தம்மிழவு பரிஹரிக்கநினைப்பாரொருவராகையாலே, ''இவர்களநர்த்தத்தைப்பரிஹரித்து இவர்களையுங்கூட்டிக்கொண்டுபோவோம்'' என்று அவர்களுக்கு பரமஹிதமான நல்வார்த்தையருளிச்செய்ய, அவர்களதுகேளாதே பழையபடியேநிற்க, அவர்களைவிட்டுத் தந்நிலையிலே போருகிறவிவர், அவர்களில் தமக்குண்டான வ்யாவ்ருத்தியைப்பேசிக்கொண்டு போருகிறார். அவர்கள் தாங்கள்; சமஸ்தகல்யாணகுணாத்மகனாய், ஸ்ரியஃபதியாய், அத்யந்தசுந்தரனாகையாலே கவிபாடுகிறது பொய்சொல்லிற்றாகாதே கவிக்குவிஷயம்போரும்படியாய், இவன்பாடினகவியைக் கேட்பித்துக் கொண்டாடுகைக்கீடாக ''கேட்டாரார் வானவர்கள்'' என்றும் ''தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள்'' என்றும் சொல்லுகிற பரிஜநங்களையுடையனாய், கவிபாடினார்க்கு வழங்குகைக்கு ''வேண்டிற்றெல்லாம் தருங்கோதிலென் வள்ளல்'' என்கிறபடியே பரமோதாரனாய், அவர்களுக்குக்கொடுக்கைக்கு உபயவிபூத்யைஸ்வர்யத்தையுடையனாய், ''வல்லதோர்வண்ணஞ்சொன்னாலதுவே யுனக்காம்வண்ணம்'' என்கிறபடியே - இவனேதேனுமொன்றைச்சொன்னாலும் தன்னையேசொல்லிற்றாம்படி சர்வசப்தவாச்யனாய், பாடினகவி கேட்பிக்க இருந்தவிடந்தேடிப்போ யருமைப்படவேண்டாதே ''எங்குமுளன்கண்ணன்'' என்கிறபடியே சர்வத்ரசந்நிஹிதனாய்;

சுலபனுமாய், கவிபாடினவர்களுக்கு போகமோக்ஷாதி சகலபுருஷார்த்த ப்ரதனுய், அவைகொடாவிடிலும் தன்னைக்கவிபாடுகைதானே ப்ரயோஜ னம்போரும்படியிருக்கிற சர்வேஸ்வரனைவிட்டு; கவிபாடுகைக்கீடானநன் மைகளொன்றுமின்றியே தலையில் மயிரில்லாதானொருவனை " பனியிரு ங்குழலன் " என்றும், இளிகண்ணனை "புண்டரீகாக்ஷன்" என்று மிப்பு டைகளிலேயாயிற்றுக்கவிபாடுவது; கவிபாடினல் தான் தருவதொன்றில் லாமையாலே நூறுகற்றையாதல் ஒருபொய்த்தரவாதலாயிற் றெழுதுவ து; இவன்றன் நெடுநாள்கூடி நெஞ்சுகன்றக்கவிபாடி சஹகாரிகளையுங் கூட்டிக்கொண்டு கேட்பிக்கச்செல்லுங்காட்டில் " அவரோமாண்டார் " என்றெதிரோவரும்படி நிலைநில்லாதாருமாய், ஆக, இருந்துமிழவாய்ப் போயுமிழவாய்ப்படி யவனுக்கிழவோடே தலைக்கட்டும்படியாய்; கவிபா டி யொருப்ரயோஜனம்பெறுதொழிகையன்றிக்கே, கவிபாட்டுண்கிறவனு க்கில்லாத நன்மைகளையிட்டு " இருமருங்குந்துய்யான் " என்னுமாபோ லேயிறே கவிபாடுவது, ஆனல் வருவதென்னென்னில்; உத்பத்தியிலே சிலகுறைகளுண்டாயிருக்குமே இவன்றனக்கு, மறந்தவற்றையிறே யிது கேட்டநாட்டார் நினைப்பது; அவனுடையதோஷங்களை வெளியிட்டு அ வ்வழியாலே யவத்யாவஹராய், அப்ராப்தவிஷயத்தைக் கவிபாடுகையா லே மேல்நரகமாய், " இன்னனைக்கவிபாடினவனன்றேயிவன் " என்று " தீண்டாதேகடக்கப்போ " என்னும்படியாய், இருக்கிறக்ஷுத்ரரை, க விபாடித்திரிகிறபடியைக்கண்டு; ஆத்மா ஈஸ்வரசேஷமாயிருக்க, அநர்ஹமான வுங்களுடைய கரணங்களைக்கொண்டு பிறரைஸ்துதிக்கையீடல் லஎன்று ஹிதத்தையருளிச்செய்ய;ராவணனுக்கு ஸ்ரீவிபீஷணுதிகள்சொ ன்னஹிதம்போலே யதுபலியாதொழிய; ஹிதஞ்சொல்லச்செய்தேயும் செவிதாழாத விவர்களோடொத்த ப்ராப்தியிறே நமக்குள்ளதென்றுபா ர்த்து, இவர்கள் நடுவே யித்தேசத்தி லித்தேஹத்தோடே வர்த்திக்கிறநா ம் முந்தற் முன்னம் பகவதர்ஹகரணராகப்பெற்றேமிறேயென்று, வழி பறிக்குமிடத்துத் தன்கையிற்பொருள்கொண்டு தப்பிப்போனருகக்கு மாபோலே தமக்குண்டான வ்யாவ்ருத்தியை யநுஸந்தித்து ஸ்வலாபத் தைப்பேசி ப்ரீதியோடே தலைக்கட்டுகிருர் ................................

## ஜீயர் அரும்பதம்.

சொன்னல் விரோதப்ரவேஶம், கீழே - அப்படிவிடாய்த்தவர் அவ்விடா ய்தீர்ந்து பரோபதேசம் பண்ணுகிருரோவென்கிற சங்கையிலே, அதுதீராதிருக்க ச்செய்தே சம்சாரிகளிழவு சஹிக்கமாட்டாமல் பரோபதேசம்பண்ணுகிருரென்று சங்கதி (இப்படியித்யாதி) விவரணம் (தாமும் தம்முடையவித்யாதி) கூட்டன்றிக் கேயிருந்தபடியென்னென்ன; தேவதாந்தரப்ராவண்யவிஷயப்ராவண்யாஸேவ்ய ஸேவேதரஸ்தோத்ரகாணுதிகளாலே யென்கிருர் (அறியாரித்யாதி) நான்முகன்றி

ருவந்தாதி யாரும்பாட்டு. "ஸ்யாதஸ்திஸ்யாந்நாஸ்தி" (ஸ்யாதஸ்திஸ்யாந்நாஸ்தி) இத்யாதியான சப்தபங்கியை யங்கீகரித்துக்கொண்டு, ஜகத்துத்ரவ்ய பர்யாயரூபேண சத்துமசத்தும் நித்யமுமநித்யமும் பிந்நமு மபிந்நமுமாயிருக்குமென்று தோற்றிற்றுச்சொல்லுகிற வார்ஹதர் தத்த்வஸ்த்திதியையறியார்கள்; சமணர்-ஆர்ஹதர். க்ஷணிகமான ஜ்ஞாநசந்ததியை "ஆத்மா" என்றுசொல்லுகிற பௌத்தர், நித்யனுனவாத்மாவையும் தத்தர்மமான ஜ்ஞாநத்தையும் தத்விஷயஜகத்தையுமுள்ளபடியறியாமல் மறந்தார்கள்; பவுத்தர்-பௌத்தர். அயர்த்தார்-மறந்தார்கள். ஸ்ருஜ்யத்வகர்மபஶ்யத்வாதிகளாலே யநீஶ்வரனுக சம்ப்ரதிபந்நனுனருத்ரனை பரதத்த்வமாகச்சொல்லுகிற சைவமதநிஷ்ட்டரானவர்க ளதிக்ஷுத்ரராயிருப்பர்கள்; சிவப்பட்டார்-சைவமதநிஷ்ட்டர். இதிபாசுரார்த்தம். பாட்டுக்கர்த்தம் (அநுபபந்நங்களையித்யாதி) அநுபபந்நங்களையென்றது - சப்தபங்கியைப்பற்ற. சப்தபங்கியாவது - "ஸ்யாதஸ்தி, ஸ்யாந்நாஸ்தி, ஸ்யாதஸ்திசநாஸ்திச, ஸ்யாதவக்தவ்யம், ஸ்யாதஸ்திசாவக்தவ்யம், ஸ்யாந்நாஸ்திசாவக்தவ்யம், ஸ்யாதஸ்திசநாஸ்திசாவக்தவ்யஞ்ச" (ஸ்யாதஸ்தி, ஸ்யாந்நாஸ்தி, ஸ்யாதஸ்திசநாஸ்திச, ஸ்யாதவக்தவ்யம், ஸ்யாதஸ்திசாவக்தவ்யம், ஸ்யாந்நாஸ்திசாவக்தவ்யம், ஸ்யாதஸ்திசநாஸ்திசாவக்தவ்யஞ்ச) இதி. ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படியென்றவிடத்திலே - "ஜகத்பங்குரம்பங்குராபுத்திராத்மா" (ஜகத்பங்குரம்பங்குராபுத்திராத்மா) இத்யாத்யநுசந்தேயம். ஜ்ஞாநசந்தாநத்தைக்கொள்ளுவார் - பௌத்தர். க்ஷேத்ரஜ்ஞனையீஶ்வரன் என்றிருப்பார் - சைவர். "சிவப்பட்டார்" என்றதுக்கர்த்தம் (தன்னோட்டையானித்யாதி) "சிறியார்" என்றதுக்கர்த்தம் (தேவதாந்தரங்களையித்யாதி) தேவதாந்தரங்கள் - க்ஷுத்ரதேவதைகள். "அறியார்சமணர்" இத்யாதியிற்சொல்லுகிறவர்களுக்கெல்லாம் ஹிதமருளிச்செய்யாமல், பரஸ்தோத்ரம்பண்ணுகிறவர்களுக்குமாத்ரம் ஹிதமருளிச்செய்கிறதுக்கு தாத்பர்யம் - அல்லாதவர்களுக்கும் முதற்றிருவாய்மொழிதொடங்கி யருளிச்செய்கையாலேயென்று கண்டுகொள்வது. வாளேறுகாணத்தேளேறுமாயுமாபோலேயென்றது - தேள்கொட்டி நோவுபடுகிறுனெருத்தனைப் பறிகாரர்வெட்டினுல், தேள்கொட்டினத்தாலுண்டான வேதனைபோமாபோலேயென்னுதல்; யத்வா, ஒருவன் தேள்கொட்டி நோவுபடாநிற்க, வேறொருவன் வெட்டுப்பட்டு நோவுபடக்கண்டால் தேள்கொட்டினநோவுபோமாபோலேயென்னுதல். நல்வார்த்தை - "பிறரைஸ்துதிக்கையாகாது" என்றுசொன்ன நல்வார்த்தை. இத்திருவாய்மொழியி லிதரஸ்தோத்ரமாகாதென்றது - ஒன்றுந்தேவில் தேவதாந்தரபரதையும், விபரீதசாஸ்த்ரநிஷ்ட்டையுமாகாதென்றதுக்குமுபலக்ஷணம். இதில் "நுந்நுமிட்டாதெய்வமேத்திலுல்" என்றதிறே. தமக்குண்டான வ்யாவ்ருத்தியையென்றது - "பச்சைப்பசும்பொய்கள்பேச - யான்கிலேன்" இத்யாதியைக்கடாக்ஷித்து.

பாட்டுக்களிலேயிறங்கி, பகவத்ஸ்தோத்ரத்தில் நன்மையையு மிதரஸ்தோத்ரத்தில் நிஷித்ததையையு மருளிச்செய்துகொண்டு உக்தார்த்தத்தைவிவரிக்கிருர் (அவர்கள்தாங்களித்யாதி) அவர்கள் தாங்களென்கிறவிதுக்கு - (சர்வேஶ்வரனைவிட்டு - க்ஷுத்ரரைக்கவிபாடித்திரிகிறபடியைக்கண்டு) என்றத்தோடேயந்வயம். (சமஸ்தகல்யாணேத்யாதி விசேஷணத்ரயமும் "ஆயபெரும்புகழெல்லையிலாதன" "என்திருமாலுக்கு" "மணிவண்ணன்" என்றத்தைப்பற்ற. கேட்டாரார்-கேட்டுத்ருப்தராகார், சூரிகள். (தொண்டர்க்கித்யாதி) பகவத்விஷயத்திலே தொண்டு

பட்டிருக்கிறவர்களுக்கு அம்ருதவத்போக்யமாக அநுபவிக்கும்படி சொன்மாலைகளைச்சொன்னேனென்றபடி. (வேண்டிற்றெல்லாமித்யாதி) அபேக்ஷிதமெல்லாம்தரும் கோதில்லாத வென்னுடைய பரமோதாரனென்றபடி. "விண்ணவர்தாதை" என்றத்தைப்பற்ற (உபயவிபூத்யைஶ்வர்யத்தையுடையனாயென்றது) (வல்லதோரித்யாதி) வல்லதொருப்ரகாரம்சொன்னாலு மதுவேயுனக்கு ப்ரகாரமாமித்யர்த்தஃ. "கண்ணன்குறுங்குடி" என்றத்தைப்பற்ற (சுலபனென்றது) "வேண்டிற்றெல்லாம்தரும்" என்றத்தைப்பற்ற (போகமோக்ஷாதீத்யாதி) "விண்ணவர்தாதையைப்பாடினால் தன்னாகவேகொண்டு" இத்யாதியைப்பற்ற (தன்னைக்கவிபாடுகை தானேயித்யாதி) "பாரிலோர்பற்றை" என்றத்தைப்பற்ற (கவிபாடுகைக்கீடான வித்யாதி) இளிகண்ணன் - புளித்தகண்ணன். "கொள்ளும்பயனில்லை" என்றத்தைப்பற்ற (கவிபாடினால்தானித்யாதி) பொய்த்தரவு-பொய்யோலை. இவ்விடத்திலே - வார்த்தைபதின்கலம் வழியிலோரொண்கலம் கூட்டிலறுகலம் கொடுப்பதுமுக்கலம் ஆள்கலம்போக்கிப் பதர்கலம்போக்கி நான்கலம்பெற்றேனென்னும் பிள்ளைகாங்கயர்க்கே" என்றத்தை நினைப்பது. "மன்னாமனிசரை" என்றத்தைப்பற்ற (இவன்றான்நெடுநாள்கூடியித்யாதி) கவிபாடுகைக்குஹேது - ஸ்வார்த்தம், பரார்த்தமென்றிரண்டு; அதில் ஸ்வார்த்தம் - த்ருஷ்டாத்ருஷ்டப்ரயோஜநபேதேந த்விவிதம்; அதில் த்ருஷ்டப்ரயோஜநாபாவத்தை த்வேதாகாட்டினார் (கவிபாடினால்தா னித்யாதியாலே) அத்ருஷ்டப்ரயோஜநமும் - ஐஹலௌகிக பாரலௌகிகபேதேந த்விவிதமாகையாலே, உபயாபாவத்தையும் வ்யுத்க்ரமமாகக்காட்டுகிறார் (அப்ராப்தவிஷயத்தையித்யாதியாலும், இன்னானைக்கவிபாடினவனித்யாதியாலும்) பரார்த்தாபாவத்தைக் காட்டுகிறார் (கவிபாடியொருப்ரயோஜநமித்யாதி) இருந்துமிழவாய்-அகத்திலிருந்தும் துஃகமாய். போயுமிழவாய் - அங்கே போயும் துஃகமாய். இருமருங்கும்துய்யான்-உபயகுலபரிசுத்தம். மருங்கு-பார்ஶ்வம். இருமருங்கு-இரண்டுபார்ஶ்வம். உபயகுலமென்றபடி. ஒருப்ரயோஜநம் பெறுதொழிகையன்றிக்கே - (அவ்வழியாலே-அவனுடையதோஷங்களைவெளியிட்டு-அவத்யாவஹராய்) என்றந்வயம். (இன்னானைக்கவிபாடினவனன்றோவித்யாதி) ஐஹலௌகிகமான புருஷார்த்தம்-சிஷ்டர்களங்கீகரிக்கை; அதுசித்தியாமையாலே ஐஹலௌகிகபுருஷார்த்த ஹாநியென்றபடி. "𑌅𑌸𑌤𑌾𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌨𑌾𑌨𑍁𑌮𑍋𑌦𑍇𑌤 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨। 𑌸𑍍𑌮𑌰𑌣𑌾𑌦𑌪𑌿 𑌯𑌤𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌮𑌹𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍍" (அஸதாம்குணகர்மாணிநாநுமோதேதகிஞ்சந। ஸ்மரணாதபியத்தேஷாம்மஹத்பவதிகில்பிஷம்) "𑌪𑌦𑍍𑌯𑌮𑌙𑍍𑌗𑍁𑌳𑌿𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦 𑌉𑌰𑍋𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑌕𑍍𑌷𑌰𑌮𑍍। 𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌗𑍍𑌰𑌹𑌣𑌞𑍍𑌚𑍈𑌵 𑌦𑌾𑌸𑍍𑌯𑌮𑍇𑌤𑌚𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌮𑍍" (பத்யமங்குளிவிச்சேதஉரோவிந்யஸ்தமக்ஷரம் । தந்நாமக்ரஹணஞ்சைவதாஸ்யமேதச்சதுர்விதம்) இத்யாதிப்படியே-ஒருவனைஸ்துதிக்கையாவது சமஸ்தபாபாவஹமாய் அவனுக்குதாசனாகை யொன்றாகையாலே, நீக்ஷுத்ரனுக்கு தாசனல்லையோ கடக்கப்போவென்பர்களென்றபடி. உத்பத்தியிலே சிலகுறைகளுண்டாயிருக்குமே யென்றவிடத்திலே - "𑌅𑌨𑌾𑌦𑌾𑌵𑌿𑌹 𑌸𑌂𑌸𑌾𑌰𑍇 𑌦𑍁𑌰𑍍𑌵𑌾𑌰𑍇 𑌮𑌕𑌰𑌧𑍍𑌵𑌜𑍇। 𑌕𑍁𑌲𑍇𑌶𑌕𑌾𑌮𑌿𑌨𑍀𑌮𑍂𑌲𑍇 𑌕𑌾 𑌜𑌾𑌤𑌿𑌪𑌰𑌿𑌕𑌲𑍍𑌪𑌨𑌾" (அநாதாவிஹஸம்ஸாரேதுர்வாரோமகரத்வஜே। குலேசகாமிநீமூலே காஜாதிபரிகல்பநா) என்றத்தைநினைப்பது. ஈடல்ல-அநுரூபமல்ல. "உலகம்படைத்தான் கவியாயினேற்கு" என்று-ஸ்வவ்யாவ்ருத்தி..............................*

## ஒன்பதாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

சொன்னால்விரோதமிதாகிலுஞ்சொல்லுவன்கேண்மினோ
வென்னாவிலின்கவியானொருவர்க்குங்கொடுக்கிலேன்
தென்னாதெனாவென்றுவண்டுமுரறிருவேங்கடத்
தென்னானையென்னப்பனெம்பெருமானுளனாகவே.

### ஆறாயிரப்படி.

நிஷேத்யதயாவும் சொல்லுகையீடன்று, ஆகிலும், எம்பெருமானுக்கீடான வழகியகவிகளை யிழக்கமாட்டாமையாலே சொல்லுகிறேன் கேளுங்களென்றுவைத்து, இப்படிபகவத்பராங்முகமான லோகத்திலே நானெம்பெருமானையல்லது மற்றொருவனைக் கவிபாடுகைக்கீடல்லாத ப்ரக்ருதியாகப் பெற்றேனேயென்றுகொண்டு ஸ்வலாபத்தைப் பேசுகிறார்..............................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், என்னைஸ்துதிப்பிக்கைக்காகத் திருமலையிலே சந்நிதிபண்ணின வுபகாரகனையொழிய வேறொருவனை ஸ்தோத்ரம்பண்ணேனென்று ஸ்வமதத்தை யருளிச்செய்கிறார்.

இது - நீங்களிதரஸ்தோத்ரம்தவிருகைக்குறுப்பானவிந்தஹிதம். சொன்னால்-சொன்னால். விரோதம்-உங்களபிமதத்துக்குவிரோதம். ஆகிலும்-ஆயிருக்கிலும். சொல்லுவன்-உங்களநர்த்தம்பொறுக்கமாட்டாமையாலே சொல்லக்கடவேன். கேண்மின்-நீங்கள்செவிதாழ்த்துக்கேளுங்கள். வண்டு-வண்டுகளானவை. தென்னாதெனாவென்று-மதுபாநப்ரீதியாலேதென்னாதென்னாவென்று. முரல்-ஆளத்திவைப்பாரைப்போலேசப்திக்கிற. திருவேங்கடத்து-திருமலையிலேசந்நிஹிதனாய். என்னானை-எனக்குக்கவிபாடுகைக்குவிஷயம்போந்து. என்னப்பன்-கவிக்குப்பரிசிலாகத்தன்னைத்தருமுபகாரகனாய். எம்பெருமான்-ப்ராப்தனானஸ்வாமியானவன். உளனாக-இக்கவிபாட்டாலேதானுளனாயிருக்க. என்-என். நாவில்-நாவினுடையசத்தைக்குப்ரயோஜநமாய். இன்-கவிபாட்டுண்கிறவீஶ்வரனுக்கினிதான. கவி-கவியை. யான்-அவனுக்கநந்யார்ஹசேஷபூதனானநான். ஒருவர்க்கும்-வேறொருவர்க்கும். கொடுக்கிலேன்-கொடுக்கசக்தனல்லேன்..............................................................*

### ஈடு-முதற்பாட்டு.

முதற்பாட்டில்-க்ஷுத்ரவிஷயங்களைக் கவிபாடுகையுங்களுக்குஹிதமல்லவென் றுபதேசிக்கையிலே ப்ரவ்ருத்தரானவர், அவர்களுக்கு ருசிபிறக்கைக்காக, நானிருக்கிறபடி கண்டீகோளேயென்று தம்முடையமதத்தை யருளிச்செய்கிறார்.

(சொன்னால்விரோதமிது) ப்ரயோஜநாந்தரபரராய்க் கவிபாடுகிறவுங்களை, "கவிபாடாதேகொள்ளுங்கோள்" என்கையாலது-உந்தம்

ப்ரயோஜநத்தைத்தவிர்க்கையிறே; "நம்முடையப்ரயோஜநத்துக்கிழவாக வார்த்தைசொல்லாநின்ருனீ" என்றுவிரோதமாய்த் தலைக்கட்டுமிறே யுங்களுக்கு. ஆயிருக்க, சொல்லுகிறேன். அன்றிக்கே, [ யொவஸாதஸ்ய உவ்)தாழ ] (யோவஸாதஸ்ஸஉச்யதாம்) என்று "திருநாமத்தைச் சொன்னுல் அநந்தரமிடிவிழும்" என்றுவருமநர்த்தத்தைச் சொன்னி கோளாதல்,திருநாமத்தைச்சொன்னிகோளாதல் செய்யுங்கோளென்ருனிறே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானு சுரப்ரஜைகளை ; அப்படியே, இதுவுங்களுக்கு "அநர்த்தம்" என்றுப்ரதிபந்நமாயிருந்ததே யாகிலும்சொல்லுகிறேன். அன்றிக்கே, [ கூணு உ-ஏமெ ] (கர்ணமூலே என்று) ராஜதாரப் ராவண்ய நிஷேதத்தோபாதி, ஓலக்கத்திற்சொல்லும் வார்த்தையன்றிது. அசேவ்யசேவை நிஷேத்யதயாவும் என்வாயாற்சொல்லவொண்ணுது, இங்ஙனேயிருக்கச்செய்தேயும் சொல்லும்படியிறே நீங்கள்நிற்கிறதெளர்க்கத்யம், ஆகையாலேநான் சொன்னுலதெனக்கு விரோதமாமிறே.

(ஆகிலும்சொல்லுவன்) ஆயிருக்கவுஞ் சொல்லுகிறேன். இப்படியாகிலும் சொல்லுகிறதென்னென்னில் ; நீங்கள் சமதமாத்யுபேதராய் சமித்பாணிகளாய்வர, சொல்லுகிறேனன்றே, உங்களநர்த்தம்பொறுக்க மாட்டாமையாலேசொல்லுகிறேன்,ஆகையாலதுக்குப்பரிஹாரம்பிறக்குமளவும் சொல்லுகைதவிரேன். நீங்களுங்களபிமதத்தினின்றும் மீளமாட்டாதாப்போலே, நானுமுங்களுடைய ஹிதத்தினின்றும் மீளமாட்டாதபடி.

(கேண்மினோ) "இதுகேட்டவநந்தரம் அநுஷ்ட்டாநபர்யந்தமாகவேணுமிறே" என்றஞ்சவேண்டா, செவிதாழ்க்கவமையும், அநுஷ்டிக்கவேண்டா. அதுவென், ஹிதகாமராயன்றோ சொல்லுகிறதென்னில் ; கேட்கவே, சேதநராகையாலே மேல்விழுவர்களிறே, ராகப்ராப்தமாய் வருமதுக்கு நாம்சொல்லவேண்டாவிறே, ஆகையாலேநாமத்தை விதித்தோமாகிறதென்னென்று - கேண்மினென்கிருர். கடலோசைக்குச் செவிபுதையாதே கேட்கிறமையுண்டிறே, அவ்வோபாதியாகிலும் கேளுங்கோள். பன்மையால்-அநர்த்தமெல்லார்க்கு மொத்திருக்கையாலே யெல்லார்க்குஞ்சொல்லுகிருர். பால்குடிக்கக் கால்பிடிப்பாரைப்போலே பகவத்விஷயங்கேட்கக் கால்பிடிக்கிருரிறே யிவர்செல்லாமை.

(என்னுவிலித்யாதி) வழிகெடப்போகிறநீங்கள், ஒருவன், வழியேபோகாநின்ருல் "நாமுமப்படியேபோகவேணும்" என்றிருக்கவேண்டாவோ சேதநராகுல். நானிருக்கிறபடிகண்டிகோளே, அப்படியேயன்ருே உங்களுக்குமிருக்க வடுப்பதென்கிருர் (என்னு) [ யஸ்யைதெத ஸ்ய-தத்தழ ] (யஸ்யைதேதஸ்யதத்தநம்) என்கிறபடியே-நானவனுக்கு சேஷமாகையாலேயெனக்குக்காரணமாயவனுக்கு சேஷமானவென்னு.

என்னைப்போலே நாவால்காரியங்கொண்டாருண்டோ வென்கிறார்; "வஞ்சனேயென்னுமெப்போது மென்வாசகம்" என்னும்படியானநாவிறே. (இன்கவி) இவர்கவியை யீஸ்வரன்கேட்டு ப்ரஸந்நனாயினியனாக, அவ்வழியாலே தமக்கினியதாயிருக்கிறபடி. சேஷிக்கினியதான வழியாலேயிறே சேஷபூதனுக்கினியதாவது. மிதுநமாய்க்கலவாநின்ற விரண்டுதலைக்குமுள்ள ரஸம், சேஷசேஷிகள் பரிமாற்றத்திலுமுண்டிறே. அவனுக்கினியதாய் அவ்வழியாலே தனக்கினியதாகையிறே சேஷபூதனுக்குவாசி. (யான்) அவனுக்கநர்ஹ சேஷபூதனென்றிருக்கிறநான். இத்தைநினைத்திறேகீழே "யஸ்யைதே" (யஸ்யைதே) என்றது. (ஒருவர்க்குங்கொடுக்கிலேன்) கீழ்ச்சொன்ன அத்யந்தபாரதந்த்ர்யத்தோடு சேர்ந்திருந்த தில்லையிறேயிது; "புறம்பொருவர்க்குங்கொடேன்" என்கையாலே-இவ்விஷயத்தில் கொடுப்பேனென்கையாயிற்றிறே, தனக்கென்றொன்றுண்டாய்க் கொடுப்பதுகொள்ளுவதாகை சேருமோஸ்வரூபத்துக்கென்னில்; அடியிலேயீஸ்வரன் அநுசந்தாநசாமர்த்த்யத்தை (யும்ப்ரவ்ருத்திநிவ்ருத்திசக்தியையும்) கொடுத்துவைத்தால், பின்பு, நான் கொடுத்தேன் என்னலாயிறே. அவனதானதுதன்னை "நான்என்னத்தைக்கொடுத்தேன்" என்னலாம்படியிறே சம்பந்தமிருப்பது. கோதாநத்தில், பிதாபுத்ரன்கையிலே நீர்வார்த்துக்கொடுத்து, மீளவுமவன்கொடுக்க, அவன்கையிலேதான் பெற்றானாயிருக்குமாபோலே; இவனும்தனக்கேஸ்வம்மானத்தைத்தந்தானாய், இவன்சர்வஸ்வதாநம்பண்ணத்தான் பெற்றானாகநினைத்திருக்கு மீஸ்வராபிப்ராயத்தாலே சொல்லுகிறார்; "என்னால்தன்னையின்றமிழ்பாடிய" என்று-தானிவரையிட்டுப் பாடுவித்து, இவர்தன்னைப்பாடினாராக நினைத்திருக்கு மவனிறே. அல்லாதார் புறம்புள்ளார்க்குத் தங்கள்கவியைக்கொடுத்து வைக்கையாலே, யாதொருவர்க்குங் கொடுக்கமாட்டேனென்கிறார். (தென்னாவித்யாதி) இதுகாணுமிவர் கவிபாடினபடி. வண்டுகள்மதுபாநமத்தமாய் ப்ரீதிக்குப்போக்குவிட்டுமூரன்றதிசையாய் விழுந்தாற்போலே யாயிற்றிவரும் பகவதநுபவஜநிதஹர்ஷத்துக்குப் போக்குவிட்டது; "கவியான்பாடி" திர்யக்குக்களோடு முமுக்ஷுக்களோ டவ்வன்றன்னோடு வாசியறத்தென்னா தென்னாவென்னுமித்தனை. பகவத்ப்ரத்யாஸந்நரொல்லார்க்கு மிதுவேபாசுரமானால் அவன்றனக்குச்சொல்லவேண்டாவிறே; *தென்னாவென்னு மென்னம்மானிறே. (திருவேங்கடத்தென்னானை) வேதத்திற்காட்டில் ஸ்ரீராமாயணத்துக்குண்டான வேற்றம்போலே, ஸ்ரீவால்மீகிபகவான் கவிபாடினவிஷயத்திற்காட்டில் தாம்கவிபாடின விஷயத்துக்குண்டான வேற்றஞ்சொல்லுகிறார். (திருவேங்கடத்தென்னானை) ஆனைபெறக் கவிபாடுமவர்காணுமிவர், இவர்கவிபாடிக் கட்டினயானை யாயிற்றவன். அவ்வண்டுகளோடேசகோத்ரிகளா யநுபவிக்கிறார். அல்லாதாரைப்போலே, கவிபாடினவர்க்

குத் தன்னையொழிய வேறொரானையைக் கொடுத்துவிடுமவனன்றே. ச தாதர்ஶநீயமாய் எப்போதும் ஸ்தோத்ரம்பண்ணவேண்டி யிருக்குமவன். வண்டுகளானவை மதுபாநப்ரீதியாலே தென்னாதென்னா வென்றாளத்தி வைப்பாரைப்போலே சப்திக்கிறதிருமலையிலே சந்நிஹிதனாய், எனக்கானைபோலே அநுபாவ்யனானவனை. (என்னப்பன்) நாட்டார்பிறரைக்கவி பாடித்திரியாநிற்க, அவர்களுக்கும் ஹிதஞ்சொல்லவல்லேனும்படி பண்ணின மஹோபகாரகன். (எம்பெருமான்) அபகாரமேபண்ணினாலும் விடவொண்ணாதப்ராப்தி. (உளனாகவே) "𑌆𑌶𑌯𑌾𑌯𑌤𑌿𑌵𑌾𑌰𑌾𑌮𑌃" (ஆஶயாயதிவாராமஃ) என்றுப்ரார்த்திக்கப்படுமவன் என்வாயாலே யொரு சொற்கேட்டுத் தானுளனாகாநிற்க, நான்வேறொருவரைக்கவிபாடுவனோ. "𑌅𑌸𑌨𑍍𑌨𑍇𑌵" (அஸந்நேவ) என்று-தன்னைக்கிட்டாதவன்று சம்சாரி சேதநருடைய சத்தையில்லாதாப்போலே, தானென்னைக்கிட்டாதவன்று தன்சத்தையில்லையாம்படி யவன்வந்துநிற்க. அவனென்னைக்கொண்டு கவிபாடுவித்துக் கொள்ளுகைக்காக இங்கேவந்துநிற்கிற நிலையென்னாவது நான்புறம்பேயொருவரைக் கவிபாடினால். ஆனபின்பென்னைப்போலேயிருக்கை காணுங்கோளுங்களுக்கு மடுத்திருப்பது......................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு, (சொன்னாலித்யாதி) ஹிதோபதேசம்பண்ணுகிறாராகில், "யாரொருவர்க்கும்கொடுக்கிலேன்" என்று-தம்முடையபடியைச் சொல்லுவானென்னென்ன (க்ஷுத்ரவிஷயங்களையித்யாதி)

"சொன்னால்விரோதம்" என்றதுக்குமூன்றர்த்தம். அதில்-உங்களுக்குவிரோதமென்றிரண்டர்த்தம். அதாவது-அசேவ்யசேவை பண்ணவேண்டாவென்றும், ப்ராப்தமான பகவத்விஷயத்தை ஸ்துதியுங்கோளென்றும் சொல்லுகிறது உங்களுக்குவிரோதமென்று. இந்தவர்த்தத்வயத்தை யருளிச்செய்கிறார் (ப்ரயோஜநாந்தரோத்யாதியாலும், அன்றிக்கேயோவஸாத இத்யாதியாலும்) ஆயிருக்கச்சொல்லுகிறேனென்றது - பார்த்திருக்கப்போகாத நிரவதிகக்ருபையாலேயென்றபடி "𑌪𑍍𑌰𑌾𑌤𑌰𑍍𑌦𑍇𑌵𑍇𑌤𑌿 𑌕𑍃𑌷𑍍𑌣𑍇𑌤𑌿 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌤𑌿 𑌚 𑌜𑌲𑍍𑌪𑌤𑌾𑌮𑍍 । 𑌮𑌧𑍍𑌯𑌾𑌹𑍍𑌨𑍇 𑌚𑌾𑌪𑌰𑌾𑌹𑍍𑌣𑍇 𑌚 𑌯𑍋𑌽𑌵𑌸𑌾𑌦𑌸𑍍𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑌾𑌮𑍍" (ப்ராதர்த்தேவேதிக்ருஷ்ணேதிகோவிந்தேதிசஜல்பதாம் । மத்யாஹ்நேசாபராஹ்ணேசயோவஸாதஸ்ஸ உச்யதாம்) இதிப்ரஹ்லாதஃ. "𑌸𑍍𑌵𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑌭𑌿𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌪𑌾𑌶𑌹𑌸𑍍𑌤𑌂 𑌵𑌦𑌤𑌿𑌯𑌮𑌃𑌕𑌿𑌲𑌤𑌸𑍍𑌯𑌕𑌰𑍍𑌣𑌮𑍂𑌲𑍇" (ஸ்வபுருஷமபிவீக்ஷ்யபாஶஹஸ்தம்வததியமஃகிலதஸ்யகர்ணமூலே) இத்யாதி, த்ருதீயம்ஶ்ரேயமகிங்கரஸம்வாதே. இனியிவர்களுபதேசத்தாலே தமக்குவிரோதமென்று மூன்றாம் தாத்பர்யத்தை யிரண்டுவிதமாகவருளிச்செய்கிறார் (அன்றிக்கே கர்ணமூலே இத்யாதிவாக்யத்வயத்தாலே) அதாவது - அசேவ்யசேவை நிஷேத்யதயாப்ரசங்கிக்கிலும், தண்டதரனான வீஶ்வரன்திருவுள்ளத்துக் கஸஹ்யமாகையாலே தமக்கு விரோதமென்னுதல்; பகவத்விஷயத்தில்

* அன்பிலின்பீன்றேறலமுதவெள்ளத்தானும் சிறப்பாகையாலே, தத்வ்யதிரிக்தவிஷயங்களை நிஷேத்யதயா ப்ரசங்கிக்கிலுமதிலுண்டானவஸஹ்யதையாலே வாய்

வக்கிரிக்குமென்னுதல். (என்வாயாற்சொல்லவொண்ணுது) என்றவநந்தரம் - (ஆ ணையாலே நான்சொன்னுல்) இத்யாதிவாக்யமநுசந்தேயம்.

ஆயிருக்கவும் - உங்களுக்குமெனக்கும் விரோதமாயிருக்கவும். "இங்ஙனே யிருக்கச்செய்தேயும்" இத்யாதியை சங்காபூர்வகமாக விவரிக்கிறுர் (இப்படியாகி லுமித்யாதி) இப்படியாகிலும் - எங்களுக்கும் விரோதமா யுமக்கும் விரோதமாயி ருக்கச்செய்தேயும். அநர்த்தம் பொறுக்கமாட்டாததலையயுண்டென்னு, எங்களுக் கநிஷ்டமானவற்றைச் சொல்லலாமோவென்ன (நீங்களுங்களபிமதத்திலித்யாதி)

"கேண்மினே" என்றஸ்வரஸுசிதமானவர்த்தம் (இதுகேட்டவநந்தரமித்யா தி) செய்யுங்கோளென்னுதே, "கேண்மினே" என்றதுக்குவாஸனை (செவிதாழ் க்கவித்யாதி,(ஹிதகாமராயன்றேசொல்லுகிறது)அநுஷ்டியுங்கோளென்று சொ ல்லவொண்ணுதோ (என்னில்) என்றபடி. "செவிதாழ்க்கவமையும்" இத்யாதிவாக் யவிவரணம் (கடலோசைக்கித்யாதி) யத்வா, "ஓ" என்றதுக்குபாவமாதல். ப்ர ஹ்மவித்யையாகையாலே யுபதேசமஷட்கர்ணமாக வேண்டாவோவென்ன (பன் மையாலித்யாதி) பன்மை - பஹுவசநம். "கேண்மினே" என்றதுக்கு - சப்த மாத்ரம் போக்யமென்றுவிவக்ஷித்து தாத்பர்யாந்தரம் (பால்குடிக்கவித்யாதி) "செவிக்கினியசெஞ்சொல்" என்று - சப்தஶ்ரவணமே போக்யமென்றபடி.

ஸ்வமதமருளிச்செய்கிறதுக்கு ப்ரயோஜநம் (வழிகெடவித்யாதி) அத்தை விசதீகரிக்கிறுர் (நானிருக்கிறபடியித்யாதி) "என்னு" என்று - மமகாரம்பண்ண லாமோவென்ன (யஸ்யைதேயித்யாதி) "𑌤𑍍𑌰𑌯 𑌏𑌵𑌾𑌧𑌨𑌾 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌭𑌾𑌰𑍍𑌯𑌾 𑌦𑌾𑌸𑌸𑍍𑌤𑌥𑌾 𑌸𑍁𑌤𑌃। 𑌯𑌤𑍍𑌤𑍇 𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌧𑌨𑌮𑍍" (த்ரய ஏவாதநாராஜந்பார்யாதாஸஸ்ததாஸுத:। யத்தேஸமதிகச்சந்தியஸ்யைதேதஸ்யத த்தநம்) இதிபாரதே. "என்" என்றதுக்கு- சந்தோஷகர்ப்பதயாபாவாந்தரம் (எ ன்னைப்போலேயித்யாதி) அதாவது-பகவத்ப்ரவணமானநாவாகையாலே யத்தோ டே தமக்கொருசம்பந்த மபேக்ஷிதமென்றபடி. யத்வா, பகவத்ப்ரவணமானநா வைக்கொண்டாடுகிறுரென்னுதல். தம்முடையநா, பகவத்விஷயத்தி லெப்போது ம் ஸ்துதிக்குமென்னுமதுக்கு நியாமகம் (எங்ஙனேயித்யாதி) "இன்கவி" என்று- ஸ்வபோக்த்ருத்வந்தோற்றச்சொல்லலாமோவென்ன (இவர்கவியையித்யாதி) சே ஷவ்ருத்திசெய்கிற விவனுக்கினிமைக்கு ப்ரசக்தியுண்டோவென்ன (மிதுநமாயித் யாதி) பரிஹாராந்தரம் (அவனுக்கினியதாயித்யாதி) முந்தினபரிஹாரம் - தத்ப்ரஸ தநஹேதுத்வேந உத்தேஶ்யம்; இரண்டாவது - அவனுக்குபோக்யமாகையாலேயுத் தேஶ்யமென்றபடி. அன்றிக்கே விவரணமாதல். என்னுவிலின்கவி - என்னுடைய நாவிலேயுண்டான போக்யமானகவியித்யர்த்த:.

"யான்" என்றது - "என்" என்றத்தோடு புநருக்தமன்றேவென்ன (இத் தைநினைத்திறேயித்யாதி) இங்கே-அஹங்காரநிவ்ருத்திசொல்ல நினைத்திறே, கீழே- "யஸ்யைதே" என்று மமகாரநிவ்ருத்தியைச்சொல்லிற்றென்றபடி. கீழ் வாக்யவி வரணம் (புறம்பொருவர்க்குமித்யாதி) ஈஶ்வரனிவனுக்கு ஜ்ஞாத்ருத்வசக்தியைக் கொடுக்கையாலே, "நான்கொடுத்தேன்" என்கைக்கு விரோதமில்லையென்கிறுர் (அடியிலேயித்யாதி) அநுசந்தாநசாமர்த்த்யம்-ஜ்ஞாத்ருத்வசாமர்த்த்யம்.ஆனுலும் பகவதாயத்தமன்றேவென்ன (அவனதானவித்யாதி) இதுக்குதாஹரணம் (கோ தாநத்திலித்யாதி) பிதாவினுடை யஸ்வத்தை புத்ரன் "தன்னது" என்றபிமாநிக்க லாமிறேயென்றுகருத்து. ப்ரஹ்மோபதேசவேளையிலே கோதாநம் விவக்ஷிதம். அ

ப்படி யீஸ்வரன் நினைத்திருக்குமோவென்ன (என்னால்தன்னையித்யாதி) " யானொருவர்க்கும் கொடுக்கிலேன் " என்கைக்கு ப்ரசங்கமேதென்ன (அல்லாதாரித்யாதி) வஸ்துதஃஸ்வத்தைக்கொடுக்கையிங்கில்லை,லோகவ்யவஹாரத்தாலேசொன்னவித்தனையென்றபடி. கொடுத்துவைக்கையாலே - கொடுத்ததாக வ்யவஹரிக்கையாலே.

கவிபாடுகிற ப்ரகரணத்திலே வண்டுகள் முரன்றத்தை யருளிச்செய்கைக் கடியேதென்ன (இதுகாணுமித்யாதி) விவரணம் (வண்டுகளித்யாதி) முரன்றது-சப்தித்தது. இசையாய்-காநமாய். வண்டுகள் தென்னாதென்னாவென்கிறது சஹஜமென்கிறார் (திர்யக்குக்களோடித்யாதி) ஈஸ்வரனுக்குமப்படியோவென்ன (பகவத்ப்ரத்யாஸத்திரித்யாதி) பகவத்ப்ரத்யாஸத்தியில்லார்க்கு மிதுவேபாசுரமானால். அவனாநந்திப்பிக்க வாநந்தமக்நராய் "தென்னாதென்னா" என்னு மிதுவேபாசுரமானால். அன்வறனக்கு - ஸ்வதஃ ஆநந்தியானவனுக்கு. அவன்றானப்படி பாடினதுண்டோவென்ன (தென்னாவென்னுமித்யாதி)

(ஏற்றம்சொல்லுகிறாரிதி) ஏற்றமாவது-அர்ச்சாவதாரபர்யந்தமான ஸௌலப்யாதிகள். "என்னானை" என்கிறதினுடையபாவத்தை உத்தரோத்தரம் ரஸோக்தியாலே யருளிச்செய்கிறார் (ஆனைபெறவித்யாதி) ஆனைபெற்றாரோவென்ன (இவர்கவிபாடியித்யாதி) கட்டுகை - சம்பாதிக்கை. " வண்டுமுரல்திருவேங்கடத்தென்னானை " என்கிறதினுடையபாவத்தை ரஸோக்தியாலே காட்டுகிறார் (அவ்வண்டுகளோடேயித்யாதி) கோத்ரசப்தம் - பர்வதவாசி. "என்" என்றதுக்குபாவம் (அல்லாதாரையித்யாதி) ஆனையாகச்சொன்னத்தால் பலிதம் (சதாதர்ஸநீயமாயித்யாதி) அதாவது-ஆனையின் குணயோகம்.

"உபகாரகன்" என்கிறதெத்தாலேயென்ன (நாட்டாரித்யாதி)

" உளனாக " என்றது - சத்தைபெறுவானாயிருக்கவென்னுதல், கவிகேட்கைக்காக த்ருக்விஷயமாயிருக்கவென்னுதல். முந்தினவர்த்தம் (ஆஸ்யேத்யாதி வாக்யத்வயத்தாலே) " வாநஸ்ஸூாவயௌ " (புநஸ்ஸப்தாபயேத்) என்று - தன்னுடைய வினியசொற்கேட்க வாசைப்படும்படியிருக்கு மவனென்றபடி. த்விதியார்த்தம் (அவனென்னையித்யாதி) பரோபதேசப்ரகரணத்திலே ஸ்வசித்தாந்தம் சொல்லுகிறதுக்கு, அவதாரிகையிற்சொன்ன ப்ரயோஜநத்தை யிங்குமருளிச்செய்கிறார் (ஆனபின்பித்யாதி)

சொன்னால்விரோதமித்யாரப்ய, கேண்மினோ; தென்னாதெனாவித்யாரப்ய, உளனாக - என்னாவிலின்கவியானொருவர்க்கும் கொடுக்கிலேனித்யந்வயஃ... ... ...*



## இரண்டாம்பாட்டு.

உளனாகவேயெண்ணித்தன்னையொன்றாகத்தன்செல்வத்தை
வளனாமதிக்குமிம்மானிடத்தைககவிபாடியென்
குளனார்கழனிசூழ்கண்ணன்குறுங்குடிமெய்ம்மையே
உளனாயவெந்தையையெந்தைபெம்மானையொழியவே.

### ஆறாயிரப்படி.

( உளனாகவே ) நிரவதிகசம்பத்தையுடையனாய், நித்யநிர்த்தோஷநிஸ்ஸீமகல்யாணகுண மஹோததியாயிருந்த வெம்பெருமானையொழிய,

தன்னையுமொரு வஸ்துவாகப்பார்த்துத் தன்சம்பத்தையு மொருசம்பத்தாக மதித்திருக்கிற விம்மநுஷ்யரைக் கவிபாடியென்ன ப்ரயோஜநமுண்டென்றுகொண்டு பூர்வப்ரக்ருதத்தை யருளிச்செய்கிறார்................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இந்தசௌலப்யாதிகுணங்களோடே திருக்குறுங்குடியிலே நிற்கிறவென் குலநாதனையொழிய மநுஷ்யரைக்கவிபாடி ப்ரயோஜநமென்னென்கிறார்.

குளன்-நீர்நிலங்களால்• ஆர்-நிறைந்த. கழனி-கழனி. சூழ்-சூழ்ந்த. கண்-இடமுடைத்தாய்.நன்-நன்றான. குறுங்குடியே-திருக்குறுங்குடியிலே.மெய்ம்மை-பரமார்த்தமானசௌலப்யாதிகுணங்களைப்ரகாசிப்பித்துக்கொண்டு. உளனாய-நித்யசந்நிதிபண்ணின. எந்தையை-உபகாரகனான. எந்தைபெம்மானை - என்குலநாதனை. ஒழிய-ஒழிய. தன்னை-பகவத்ஜ்ஞாநமில்லாமையாலே அஸத்ஸமனாயிருக்கிறதன்னை. உளனாகவே-சத்தாவானாய்க்கொண்டே. ஒன்றாக-ஒருவஸ்துவாக. எண்ணி-நினைத்து• தன்-தனக்கின்றியேயிருக்கத்தன்னதாகவபிமாநித்த. செல்வத்தை-க்ஷுத்ரசம்பத்தை.வளனா-அத்யந்தவிலக்ஷணமாக.மதிக்கும்-தானே அபிமாநித்திருக்கும். இ-அதிக்ஷுத்ரையானவிந்த. மானிடத்தை-மநுஷ்யஜாதியை. கவிபாடி-கவிபாடி. என்-என்னப்ரயோஜநமுண்டு.

பரமார்த்தகுண விபூதிவிசிஷ்டனையொழிய, ஆபிமாநிககுணசம்பத்தையுடையாரைக் கவிபாடிப்ரயோஜநமில்லை யென்றுகருத்து..............................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

சத்யமுமாய் சமக்ரமுமான ஐஸ்வர்யத்தையுடையனாய், ஸ்வரூபரூபகுணங்களால் பூர்ணனுமாய்,ப்ராப்தனுமான சர்வேஸ்வரனைவிட்டு; ஒருசொல்லுக்குப் பாத்தமில்லாத ஐஸ்வர்யமுமாய், அதுதான் நிரூபித்தால் நிலைநில்லாமையாலே அசத்யமுமாய், அதுதனக்காஸ்ரயமுந்தேடிப்பிடிக்கவேண்டும்படியாயிருக்கிற க்ஷுத்ரரைக் கவிபாடியென்ன ப்ரயோஜந முண்டென்கிறார்.

(உளனாகவேயெண்ணி) இலனாகவே யத்யவசித்திருக்கிறாராயிற்றிவர். “நேஹநாநாஸ்தி” (நேஹநாநாஸ்தி) என்று-அவனுக்குப்புறம்பாயிருப்பதொரு வஸ்துவில்லை யென்றிருக்கும்படியாலே. ப்ரதிபத்தியிலும்வந்தால் அவனையுளனாக நினையாதபோது “அஸந்நேவ” (அஸந்நேவ) என்றுதாமுளரன்றிக்கே யிருப்பரிறே. தானுளனாகையாவது-ப்ரஹ்மவேதநமுண்டாகையிறே. அவனை “உளன்” என்றுநினைத்துத் தானுளனாகவேண்டியிருக்க, அவனை “இல்லை” என்றுதானுளனாகவிரகில்லையே. தன்னைக்கட்டிக்கொண்டுபோகாநிற்க, “நேயமஸ்திபுரீலங்காநயூயம்நசராவணஃ।யஸ்மாதிக்ஷ்வாகுநாதேந பத்தம்வைரம்மஹாத்மநா” (நேயமஸ்திபுரீலங்காநயூயம்நசராவணஃ । யஸ்மாதிக்ஷ்வாகுநா

தேஹபத்தம்வைரம்மஹாத்மநா) என்றானிறே திருவடி. (எண்ணி) ஒரு ஆசிநிற்கிறதாகவும், அதின்மேலே யொரு மேருநிற்கிறதாகவும் நினைக்கு மாபோலே சுவாலாகமநோரதித்து. (தன்னை) "உளன்கண்டாய் நன்னெஞ்சே யுத்தமனென்று மூளன்கண்டாய்" என்று - "அவன்நமக் குளன்காண்" என்றால் பின்னை நிர்ப்பரனாய் மார்விலே கைவைத் துறங்க லாம்படி யிருப்பானொருவனை, உளனென்றுதான் நினைக்கிறதோ. தன்னு டைய சத்பாவமவனுடைய வுண்மையாலே யாயிருக்க, அவனை யொழிய, "அஸந்நேவ" (அஸந்நேவ) என்று - இன்றிக்கேயிருக்கிறதன்னை. (ஒன்றாக) போரப்பொலியவநுசந்தித்து. (தன்செல்வத்தை) "ஸதிய ஹிம்ணியர்மாঃ" (ஸதிதர்மிணிதர்மாঃ) என்று - தானுண்டானலிறே தர் மமுண்டாவது; தன்னையேதேடிப்பிடிக்க வேண்டும்படியாயிருக்க, தன க்கொருசம்பத்துண்டாக நினைக்கிறானிறே. (வளரு) வளமாகவென்ற படி. அதாவது - அழகியதாகவென்னுதல், மேலாகவென்னுதல். ஈஸ்வர னைஸ்வர்யத்துக்குமேலாகவிறே தன்னைஸ்வர்யத்தை நினைத்திருப்பது. (மதிக்கும்) தானேயித்தைக்கு வாலாகமதிக்குமித்தனையிறே, புறம்பு இத் தையொன்றாக நினைக்கைக்கிவன்றனையவஸ்துக்களில்லையே. கல்ப்ரஹ்ம தேசத்திலேகரிக்கால் சோழப்ரஹ்மராயன் "திருவாய்மொழிக்கு வ்யா யாநஞ்செய்தேன்" என்றுஜீயர்க்குக்காட்ட, அவன்பக்கலுபஜீவநங்க ளைநினைத்து, பிள்ளையை "நீரித்தைக்கேட்டுசம்பாவியும்;" என்றருளிச் செய்ய, அவருங்கேட்டு, "ஆழ்வார்திருவுள்ளத்தையடியொற்றி அவர் போனவழியேபோம்படியே" என்ன, "ஆ ஆ, பிள்ளை, ஆழ்வார்க்கு மெனக்கும்வாசிபுத்திபண்ணிற்றில்லையோ, க்ரமகார்யஞ்செய்துஇடையி லே இதுவுஞ்செய்யவேண்டிற்றேயெனக்கு" என்றான். (இம்மானிடத் தை) கீழேயுரித்துவைத்தாரிறே யவர்கள்ஸ்வரூபத்தை (இம்மானிடத் தை) மநுஷ்யரென்று சொல்லவும் பாத்தங்காண்கிறிலர்காணும், அசே தநங்களைச்சொல்லும்படியிலே சொல்லுகிறார். தன்னைமெய்யாக வறியா தவனசித்ப்ராயனிறே. (கவிபாடியென்) இவர்கள் மறைத்திட்டுவைக்கி ற குற்றங்களை ப்ரபந்தீகரித்து வெளியிட்டாலுங்களுக்கென்ன ப்ரயோஜ நமுண்டு. குளன் - குளம். ஆர்தல் - மிகுதல். (குளனார்கழனிசூழ்) விளை நிலங்களிற்காட்டில் ஏரிக்கட்டேவிஞ்சியிருக்குமாயிற்று, இல்லையாகில் சாவிபோமிறே. ரக்ஷ்யத்திலும் ரக்ஷகமேவிஞ்சின வூராயிற்று. (கண்ண ன்குறுங்குடி) சர்வேஸ்வரன் "என்னது" என்றபிமாநித்துவர்த்திக் கும் நகரமாயிற்று. "கண், நன், குறுங்குடி" என்றுவ்யாக்யாநம்பண் ணினார்கள் தமிழர்; அப்போது, இடமுடைத்தாய் நன்றானதிருக்குறுங் குடியிலே யென்றுபொருள். (மெய்ம்மையேயுளனாய) கவிகளில்கேட்டுப் போமித்தனையாய்த் தன்பக்கலொருநன்மையின்றிக்கே யிருக்கையன்றிக் கே, சொன்னவையெல்லாம் மெய்யேபற்றும் பற்றாகக்காணலாம்படியி

ருக்கும்ஸ்வாமி. இவ்விஷயத்தி லர்த்தவாதமில்லை, புறம்புள்ளவற்றில ர்த்தவாதமல்லதில்லை. இவ்விஷயத்திலுள்ள தெல்லாஞ்சொல்லவொண்ணுது, புறம்புள்ளவற்றிற் சொல்லலாவதில்லை. (எந்தையை) நான்கவிபாடுகைக்குத் தன்குணங்களை ப்ரகாசிப்பித்துவைத்த வுபகாரகனை. கவிபாடுகைக்கு ப்ராப்தவிஷயமென்னவுமாம், திருக்குறுங்குடியிலே, சொன்ன குணங்களெல்லாம் பற்றும்பற்றுக வுடையனுய், நமக்குநாதனுமாய். (எந்தையித்யாதி) ப்ராப்திதம்மளவிலே பர்யவசியாமையாலே, என்குலநாதனென்கிருர். சமஸ்தகல்யாண குணுத்மகனுமாய் ப்ராப்தனுமான இவனையொழிய, ஒருகுணலேசமுமின்றிக்கே அதிக்ஷுத்ரருமாய் அப்ராப்தருமாயிருக்கிற மநுஷ்யரைக் கவிபாடியென்ன ப்ரயோஜநமுண்டு......*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (உளனுகவேயித்யாதி) "மெய்ம்மையே-உளனுய" என்றத்தைப்பற்ற (சத்யமுமாயித்யாதி) "குறுங்குடி-உளனுய-கண்ணன்" என்றத்தாலே சித்தித்தவர்த்தம் (ஸ்வரூபரூபேத்யாதி) பாத்தம்-விஷயம். "உளனுகவேயெண்ணி" என்றத்தைப்பற்ற (அதுதான்நிரூபித்தாலித்யாதி) "இம்மானிடம்" என்றத்தைப்பற்ற (அதுதனக்கித்யாதி) "உளனுகவேயெண்ணி" என்கையாலே-தர்மிஸ்வரூபமே பிடித்தில்லையென்றபடி.

"உளனுகவேயெண்ணி" என்று-அவன்நினைவைச்சொல்லுகையாலே, தத்ப்ரதிகோடியாக விவர்நினைவை யருளிச்செய்கிருர் (இலனுகவேயித்யாதி) அதுக்குஹேதுவேதென்ன (நேஹநாநாஸ்தீத்யாதி) அதாவது-அவனுக்குப்புறம்பாய் ஸ்வதந்த்ரமான வஸ்துவில்லையென்றபடி. இந்தஹேது-தத்வஸ்த்திதியைப்பற்ற. இலனுகவே அத்யவசிக்கைக்கு ஹேத்வந்தரம் (ப்ரதிபத்தியிலுமித்யாதி) ப்ரதிபத்திவிசேஷததபாவப்ரயுக்தமான சத்வாசத்வங்கள் விவக்ஷிதமென்றுகருத்து. (தாமுளரன்றிக்கேயிதி) "அன்றுநான்பிறந்திலேன் என்றிருக்குமவராகையாலே யவர்களையுமப்படியே யிவர்நினைத்திருப்பரொன்றுகருத்து. "உளனுகவேயெண்ணி" என்று வ்யங்க்யமாகச்சொல்லுகிறதென்ருன்,உளனன்றேவென்ன (தானுளனுகையாவதித்யாதி) "ப்ரதிபத்தியிலும்" என்றவாக்யத்திற்சொன்ன வர்த்தத்தை ஸ்த்திரீகரிக்கிருர் (அவனையித்யாதி) இலனுகவே அத்யவசிக்கைக்கு த்ருதீயஹேதுவை யுதாஹரணபூர்வகமாக வருளிச்செய்கிருர் (தன்னைக்கட்டிக்கொண்டித்யாதி) அஸ்த்தைர்யத்தாலுமில்லையென்று நினைத்திருக்கிருரொன்றபடி. (நேயமஸ்தீத்யாதி) சுந்தரகாண்டே த்ரிசத்வாரிம்ஸேமாருதிః. (என்ருனிறேதிருவடி) அப்படி விநாசம் சந்நிஹிதமாகையாலே "நேயமஸ்தி" என்றவன் சொன்னுற்போலே, இவரும்க்ஷணபங்குரதையைநினைத்து இவர்கள் தங்களை நித்யராகநினைத்திருப்பதே யென்கிருரொன்றுகருத்து. குவாலாக-அதிகமாக. "தன்னை-உளனுகவே" என்றதுக்கு வ்யங்க்யமாகபாவம் (உளன்கண்டாயித்யாதிவாக்யத்வயத்தாலே) முதற்றிருவந்தாதி தொண்ணூற்ருென்பதாம்பாட்டு. "அவனொருவனுளன்" என்றுசொன்னுலுகக்கும் நல்லநெஞ்சே, புருஷோத்தமன் நம்முடையரக்ஷணத்தாலே தன்சத்தையாம்படியவனுளனுமவன்கிடாய், நாமுளரானவன்ருேடிலரானவன்ருேடு வாசியற சர்வ

காலத்திலும் நம்மைரக்ஷிக்கையிலே தீக்ஷித்துளனுயிருக்கு மவன்கிடாயிதி பாசுரார்த்தஃ. போரப்பொலிய-மிகவும்.

"தன்செல்வத்தைவளனுமதிக்கும்" என்றதுக்கு வ்யங்க்யமாக தாத்பர்யம் (ஸத்தர்மிணீத்தியாதிவாக்யத்வயேந) ஆர்க்குமேலாகவென்ன, சரமாவதி (ஈஸ்வரனித்யாதி) "மதிக்குமிம்மானிடத்தை" என்று தத்கர்த்ருகத்வேந சொன்னதுக்கு பாவம் (தானேயித்யாதிவாக்யத்வயேந) இத்தை-செல்வத்தை. இவன்றனையவஸ்துக்களில்லை - இவனுக்கு சத்ருஶமானவவஸ்துக்களில்லை. தன்னையுளனுகவேயெண்ணி-அசத்ஸமனுயிருக்கிற தன்னை சத்தாவானுகவேநினைத்து, தன்னையொன்றுக-தன்னையொருவஸ்துவாகவும், தன்செல்வத்தை - தன்னுடையசம்பத்தை, வளனு-வளனுகவும், அத்யந்தவிலக்ஷணமாகவும்; மதிக்கும்-அபிமாநித்திருக்கிற. தன்னைத்தானேகுவாலாக நினைத்திருக்குமென்றவிடத்திலே யோஜாதிஹ்யம் (கல்ப்ரஹ்மதேசத்திலேயித்யாதி) உபஜீவநம் - ப்ரயோஜநம்.

இம்மானிடத்தை - இந்த க்ஷுத்ரமநுஷ்யஜாதியை யிதிசப்தார்த்தஃ. "இ" என்றதுக்குபாவம் (கீழேயுரித்தித்யாதி) "கீழே-உளனுகவே" என்றவிடத்திலே உரித்துவைத்தார்-வெளிப்படுத்திவைத்தார். "மானிடம்" என்றவசேதந சமாதிக்குபாவம் (மநுஷ்யனொன்றித்யாதி) "ஈஸ்வரனுக்குசரீரம்" என்கிறஜ்ஞாநமில்லாமையாலே யசேதநவாசிசப்தத்தாலே சொல்லுகிருரென்னுமத்தை ரசோக்தியாக வருளிச்செய்கிருர் (தன்னைமெய்யாகவித்யாதி) மெய்யாக-பகவச்சரீரமாக, சத்யமாகவென்றும். "என்" என்கிறதென், ப்ரயோஜநமில்லையோவென்ன (இவர்களித்யாதி)

"குளம்மிக்ககழனி" என்றத்தால்பலிதம் (விளைநிலங்களித்யாதி) இத்தால்-இங்கிருக்கிற சர்வேஸ்வரனுக்கு பலித்தகுணத்தை யருளிச்செய்கிருர் (ரக்ஷயத்திலுமித்யாதி) தமிழின்நிர்வாஹத்துக்கு, கண் - (இடமுடைத்தாய்) நன்-விலக்ஷணமான குறுங்குடியென்று சப்தார்த்தம்.

"மெய்ம்மை" என்றதுக்குவாசனை (கவிகளிலித்யாதி) அவதாரணத்துக்கர்த்தம் (இவ்விஷயத்திலித்யாதி) அர்த்தவாதம்-ஸ்துதி. இத்தால்-ஈஸ்வரனுடைய குணுதிகளபரிச்சிந்நங்களென்னுமிடமும், புறம்புள்ளார்க்கு குணுதிகளொன்றுமில்லையென்னுமிடமும் பலித்ததென்கிருர் (இவ்விஷயத்திலுள்ளதெல்லாமித்யாதி)

"எந்தையை" என்றதுக்கு-உபகாரகனென்றும், ஸ்வாமியென்றுமிரண்டர்த்தம் (நான்கவிபாடுகைக்கித்யாதி வாக்யத்வயத்தாலே) "மெய்ம்மையே" இத்யாதிபதத்ரயத்தாலும் பலிதமானப்ரமேயத்தை யருளிச்செய்துகொண்டு, அதுக்குப்ரதிகோடியையு மருளிச்செய்கிருர் (சமஸ்தேத்யாதி)

குறுங்குடிமெய்ம்மையே யுளனுயவெந்தையை-திருக்குறுங்குடியிலே,சொன்னகுணங்களையெல்லாம் மெய்யாகக்காணலாம்படி யுடையனுய்நிற்கிற வுபகாரகனை. எந்தைபெம்மானை-என்பிதாவுக்கு ஸ்வாமியானவனைஎன்குலநாதனையென்றபடி. உத்தரார்த்தபூர்வகமாக, தன்னை-உளனுகவே-ஒன்றுக-எண்ணி-தன்செல்வத்தை வளனுமதிக்கு மிம்மானிடத்தைக்கவிபாடியென் னித்யந்வயஃ..................*

## மூன்றாம்பாட்டு.

ஒழிவொன்றில்லாதபல்லூழிதோறூழிநிலாவப்போம்
வழியைத்தருநங்கள்வானவரீசனைநிற்கப்போய்க்
கழியமிகநல்லவான்கவிகொண்டுபுலவீர்கா
ளிழியக்கருதியோர்மானிடம்பாடலென்னாவதே.

## ஆறாயிரப்படி.

(ஒழிவொன்றில்லாத) இப்படி சமஸ்தகல்யாணகுணாத்மகனான வெம்பெருமானை யுங்களுடைய கழியமிக நல்லவான்கவிகொண்டு பாடப்பெறலாவது; பாடினால் பின்னையும்பெறும்பேறு, அநாக்ராததுஃககந்தமாய் நிரதிசய சுகரூபமாய் நித்யசித்தமான பகவத்கைங்கர்யலக்ஷணமோக்ஷமாவது; அவஸ்துபூதராய் நிஸ்ஸ்ரீகரான மநுஷ்யரையாவது கவிகளைக்கொண்டுபாடுவது; பாடினால் பின்னைப்போயதோகதியிலேவிழுவது; ஆனபின்பவனையொழிய விம்மநுஷ்யரை யெதுக்காகப்பாடுகிறீர்களென்கிறார்.........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யசூரிசேவ்யனான ப்ராப்யபூதனையொழிய, உங்களுடைய விலக்ஷணமானகவிகளைக்கொண்டு க்ஷுத்ரஸ்தோத்ரம்பண்ணினாலொருநன்மையில்லையென்கிறார்.

ஒன்று-ஒரு. ஒழிவு-விச்சேதம். இல்லாத-இல்லாதபடி. பல்-யாவதாத்மபாவியான. ஊழிதோறூழி-காலமெல்லாம். நிலாவ-நிலைநின்றநுபவிக்கும்படி. போம்-செல்லக்கடவதாயுள்ள. வழியை-வழிப்பாடானகைங்கர்யத்தை. தரும்-தரும். நங்கள்-நமக்குசேஷியான. வானவரீசனை-நித்யசூரிசேவ்யனை. நிற்க-ஒழிய. போய்-புறம்பேபோய். கழிய-அதிலோகமாம்படி. மிக-மிக்க. நல்ல-நன்மையையுடைத்தான. வான்-சீரிய. கவி-கவிகளை. கொண்டு-கொண்டு. புலவீர்காள்-அறிவுடையரானநீங்கள். இழிய-அறிவில்லாதாரைப்போலே அதஃபதிக்க. கருதி-நினைத்து. ஓர்-ஓர்பற்றுசில்லாத. மானிடம்-மநுஷ்யஜாதியை. பாடல்-பாடுகையாலே. என்னாவது-என்னலாபமுண்டாம்.

ஸ்தோதாக்களான வுங்களுக்கும் ஸ்துத்யரானவர்களுக்கும் ஸ்துதிக்குமொருநன்மை யில்லையென்றுகருத்து.......................................................*

## ஈடு-மூன்றாம்பாட்டு.

விலக்ஷணனு யுபகாரகனு யிருக்குமவனையொழிய, க்ஷுத்ரமநுஷ்யரைக் கவிபாடியென்ன ப்ரயோஜநமுண்டென்கிறார்.

(ஒழிவித்யாதி) காலதத்வமுள்ளதனையு மிடைவிடாதே, நிலாவ-வர்த்திக்கைக்கு. "ந வ வு ந ரா வ ர் த தெ" (நசபுநராவர்த்ததே)

என்கிறபடியே யாவதாத்மபாவிப்ரக்ருதிசம்பந்தமற்று, வழுவிலாவடிமைசெய்கைக்கு. காலக்ருதபரிணாமமில்லாத தேசத்தி லநுபவத்தைச் சொல்லாநிற்கச்செய்தேயும், காலம் நடையாடும்தேசத்திலே வர்த்திக்கிறவராகையாலே அத்தையிட்டுச்சொல்லுகிறார். (போம்வழியைத்தரும்) "போயநுபவிக்குமதுபரிச்சிந்நம்" என்னும்படி நிரவதிகபோக்யமான அர்ச்சிராதிமார்க்கத்தைத்தருமென்னுதல்; அன்றிக்கே, தன்னைக்கிட்டுமுபாயத்தைத்தருமென்னுதல்; என்று மொக்கவநுவர்த்தித்துக்கொண்டு நடக்கையே ரீதியாயிருக்குமிறே. வழியென்று - ப்ராப்யமாதல். வழியைத்தருகையாகிறது - தானுபாயமாகை. ப்ராப்யமானபோது, தான் போம்ரீதியாய், அதாகிறது - ஸ்வபாவமாய், சஹஜகைங்கர்யத்தைச்சொல்லுகிறது. (நங்கள்வானவரீசனைநிற்க) "புணைக்கொடுக்கிலும் போகவொட்டார்" என்கிறபேற்றை, கவிபாடினார்க்கு அவன்கொடுத்தாலும், "இவன்செய்ததுக்கு நாம்செய்ததுபோருமோ" என்று மேன்மேலனக்கொடுப்பிக்கும் பரிகரமுடையவனைவிட்டு. அவன் "இவனொருசொல் சொல்லவல்லனே" என்றவசரப்ரதீக்ஷனாய்நிற்கவென்றுமாம். (போய்) புறம்பேபாடுகைக்கு விஷயந்தேடிப்போய். "இவன்கவிபாடி வாராநின்றான்" என்றுகேட்டவாறே கழியப்போம், இவன்கவிகேட்டேதேனும் தனக்குக்கொடுக்கவேண்டுகிறதாகக்கொண்டு; இவனும் "அவன்புக்கவிடம்புக்கித்தைக்கேட்பித்தொன்றுபெற்றோமாய் விடவேணும்" என்று தொடர்ந்துபோமே; ஆக, அவன்போக இவன்போக, போகாநிற்குமித்தனை. "ஆஜகாம" (ஆஜகாம) என்று பகவத்விஷயத்திலே யோரடிவாராநின்றவாறே, பரக்ருஹத்தினின்றும் ஸ்வக்ருஹத்திலேபுகுந்தாப்போலேயிருக்கும்; வேறேசிலரைப்பற்றியருகேயிருக்கிலும் கழியப்போயிற்றதாயிருக்குமிறே. (கழியவித்யாதி) கவிபாட்டுண்கிறவனுக்கில்லாத நன்மைகளையிட்டுச்சொல்லுகையாலே அவனுக்கடங்காததாயிருக்குமிறே, "இவனைச்சொல்லுகிறது, நம்மையன்றோ" என்று ப்ரமித்திருக்குமிறே; ஆகையாலே யிவனைவிட்டுக்கழிய. இவனுக்கில்லாதவற்றையிட்டுப்பாடினால் அவற்றையுடையவனையிறே அக்கவிகாட்டும். (மிகநல்ல) எத்தனையேனும்நன்றான. வான்கவி-கனத்தகவி. "தத்பதஸமாஸஸந்தியோகம்" (ததுபகதஸமாஸஸந்தியோகம்) என்கிறபடியே சொற்செறிவுடைத்தாயிருக்கை. மிகவும் நல்லவாய் அரணியவானகவிகளைக்கொண்டு. (புலவீர்காள்) இக்கவிக்கும், பாட்டுண்கிறவிஷயத்துக்கும் வாசியறியும் நீங்கள். விசேஷஜ்ஞரானநீங்க ளிப்படி செய்யக்கடவிகோளோ. (இழியக்கருதி) அறிவுடையரானால் நின்றநிலைக்குமேலே ஓரேற்றந்தேடிக்கொள்ளுமதொழிய, கீழேபோய் அதঃபதிக்கத்தேடுவாருண்டோ. (ஓர்மானிடம்பாடல்) ஒருக்ஷுத்ரனைப்பாடுகை. (என்னாவது) உங்கள் விசேஷஜ்ஞதைக்குச்சேருமதாயோ, அவர்களுக்கொருநன்மையுண்டாயோ, உங்க

ளுக்கொரு ப்ரயோஜநமுண்டாயோ, கவிக்கநுரூபமாயோ; எதுக்காகப் பாடுகிறீர்கள்..............................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (ஒழிவொன்றித்யாதி) "போம்வழியைத்தரும் நங்கள்வானவரீசனைநிற்க, ஓர்மானிடம்பாடலென்னாவது" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (விலக்ஷணனாயித்யாதி)

"பல்லூழிதோறூழி-ஒழிவொன்றில்லாத-நிலாவ" என்றன்வயித்தர்த்தம் (காலதத்த்வமித்யாதி) ஒழிவொன்றில்லாத - ஒருவிச்சேதமில்லாதபடி. "நிலாவ" என்று-கைங்கர்யபர்யந்தம் விவக்ஷிதமென்கிறார் (நசபுநரித்யாதி) "நகாலஸ்தத்ர வை ப்ரபு:" (நகாலஸ்தத்ரவைப்ரபு:) அன்றோ, "பல்லூழிதோறூழி" என்கிறதென்னென்ன (காலக்ருதேத்யாதி) பரமபதத்தைத்தருமென்றதே, "போம்வழியைத்தரும்" என்றதுக்குபாவம் (போயநுபவிக்குமித்யாதி) "போம் வழி" என்றதுக்கு மூன்றுமர்த்தம் (என்றுமொக்கவித்யாதி) அதாவது - "யேநயேந தாதா கச்சதி" (யேநயேநதாதாகச்சதி) "சாயாவா ஸத்த்வமநுகச்சேத்" (ச்சாயாவாஸத்த்வமநுகச்சேத்) இத்யாதிப்படியே அநுவர்த்தித்துக்கொண்டென்றபடி. கீழ்வாக்யவிவரணம் (வழியென்றுப்ராப்யமாதலென்று) (ரீதியாயிருக்குமிறே) ஆகையாலே (வழியென்றுப்ராப்யமாதல்) என்றுகூட்டுவது. த்விதீயார்த்தவிவரணம் (வழியைத்தருகையாகிறதித்யாதி) த்ருதீயார்த்தத்தை ஸ்புடமாகவிவரிக்கிறார் (ப்ராப்யமானபோதித்யாதி) போம்-நடக்கிற. வழி-ரீதி. ஆக, "போம்வழி" என்றதுக்கு-போகிறவர்ச்சிராதிமார்க்கமென்னுதல், கிட்டுமுபாயமென்னுதல்; போம்வழி-நடக்கிறரீதியாய், அதாவது-அநுவர்த்தநஸ்வபாவமாய், சஹஜகைங்கர்யமென்னுதலென்று மூன்றர்த்தம்.

"நங்கள்" என்றது - * வானவர்க்குவிசேஷணம். "நிற்க" என்றதுக்கு-(விட்டு) என்றுமுந்தினவர்த்தம், (அவசரப்ரதீக்ஷனாய்நிற்க) என்றிரண்டாமர்த்தம். த்விதீயார்த்தத்துக்கு, ஐகாரம் - அவ்யயம். வானவரீசனென்றபடி. "வழியைத்தரும்" என்றவநந்தரம், நித்யசூரிகளைச்சொல்லுகிறதுக்குபாவம் (புணைக்கொடுக்கினுமித்யாதி) நித்யமுக்தரை புணையிடினும் போகவொட்டார்களித்யர்த்த:. புணை-ப்ராதிபாவ்யம். பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து ஐந்தாந்திருமொழி யிரண்டாம்பாட்டு. "சீயினாற்சிறந்தேறிய" இத்யாதி.

"கழிய" என்றபதத்தை - கவிக்கு விசேஷணமாக்கி, அதிலே, "போய்" என்றதுக்கர்த்தம் (புறம்பேபாடுகைக்கித்யாதி) கவியானவன் விஷயந்தேடிப்போயென்றபடி; கழிய - கவிபாட்டுண்கிறவனைவிட்டுக்கழிகிற. அன்றிக்கே, "கழிய-போய்" என்றந்வயித்து, கவியானவனுக்கு விசேஷணமாக்கி யருளிச்செய்கிறார் (இவன்கவிபாடியித்யாதி) அப்ராப்தவிஷயமாகையாலே கழியப்போனுமிறே. யத்வா, போய் - கவியானவன் தாதாவைத்தேடிப்போய், கழிய-தாதாவானவனோடேவென் றர்த்தமாக்கியருளிச்செய்கிறார் (இவன்கவிபாடியித்யாதி) என்னுதல். அப்படி அப்ராப்தவிஷயத்தைப்பாடினால் கைகழியப்போனதாயிருக்குமோவென்ன

(ஆஜகாமேத்யாதி) கழியப்போய்-தூரப்போகாநிற்கிற; "புலவீர்காள்" என்றந்வயிப்பது. ஜகாமஎன்னுதே, "ஆஜகாம" என்கையாலே (ஸ்வக்ருஹத்திலேபுகுந்தாற்போலேயென்றது) "கழிய" என்றபதம்-கவிக்குவிசேஷணமான முந்தினபக்ஷத்தையருளிச்செய்கிறார் (கவிபாட்டுண்கிறவனுக்கித்யாதி) அவனுக்கடங்காதென்று நாமெதுகொண்டு நிஸ்சயிப்பதென்ன; இக்கவி யவனுக்கடங்காததாயிருக்குமென்று நாம் நிஸ்சயிக்கவேண்டுவதில்லை, கவிபாட்டுண்கிறவன்றனக்கே "இதுநமக்கடங்காது" என்று நெஞ்சிலேதோன்றியிருக்குமென்கிறார் (இவனுணையித்யாதி) நம்மையன்றே - நம்மையன்றென்றபடி. அவனுடைய ப்ரமத்துக்குஹேதுவையருளிச்செய்கிறார் (இவனுக்கில்லாதவித்யாதி) அரணியவான - சொற்செறிவையுடைத்தான.

புலவர்-விசேஷஜ்ஞர். "𑌕𑌵𑌿𑌃 𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌦𑌰𑍍𑌶𑍀" (கவிঃக்ராந்ததர்ஸீ) என்னக்கடவதிறே. "புலவீர்காள் - இழியக்கருதி" என்றதுக்கு வாசநையருளிச்செய்கிறார் (அறிவுடையாருணித்யாதி) "என்னுவது" என்று - அநேககோடிகள்தோன்றுகையாலே, "புலவீர்காள்" இத்யாதிபததாத்பர்யசித்தமானவற்றை யருளிச்செய்கிறார் (உங்களித்யாதி) "புலவீர்காள்" என்றத்தைப்பற்ற (உங்கள்விசேஷஜ்ஞதைக்குச்சேருமதாயோவென்றது) "ஓர்மானிடம்" என்கையாலே (அவர்களுக்கொரு நன்மையுண்டாயோவென்றது) "இழியக்கருதி" என்கையாலே (உங்களுக்கொரு ப்ரயோஜநமுண்டாயோவென்றது) "வான்கவி" என்கையாலே (கவிக்கநுரூபமாயோவென்றது)

"𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌪𑌰𑍁𑌷𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 𑌰𑌾𑌵𑌣𑌂 𑌰𑌾𑌵𑌣𑌾𑌨𑍁𑌜𑌃 । 𑌆𑌜𑌗𑌾𑌮 𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑍇𑌨 𑌯𑌤𑍍𑌰 𑌰𑌾𑌮𑌸𑍍𑌸𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌃" (இத்யுக்த்வாபருஷம்வாக்யம்ராவணம் ராவணாநுஜঃ । ஆஜகாமமுஹூர்த்தேநயத்ரராமஸ்ஸலக்ஷ்மணঃ) இதியுத்தகாண்டே ஸப்ததஸே. "𑌤𑌰𑍁𑌪𑌕𑍍𑌷𑌸𑌮𑌾𑌸𑌸𑌨𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌸𑌮𑌮𑌧𑍁𑌰𑍋𑌪𑌨𑌤𑌾𑌰𑍍𑌥𑌵𑌾𑌕𑍍𑌯𑌬𑌦𑍍𑌧𑌮𑍍 । 𑌰𑌘𑍁𑌵𑌰𑌚𑌰𑌿𑌤𑌂 𑌮𑍁𑌨𑌿𑌪𑍍𑌰𑌣𑍀𑌤𑌂 𑌦𑌶𑌶𑌿𑌰𑌸𑌶𑍍𑌚 𑌵𑌧𑌂 𑌨𑌿𑌶𑌾𑌮𑌯𑌧𑍍𑌵𑌮𑍍" (தருபகதஸமாஸஸந்தியோகம் 'ஸமமதுரோபநதார்த்தவாக்யபத்தம் । ரகுவரசரிதம் முநிப்ரணீதம்தஸஸிரஸஸ்சவதம்நிஸாமயத்வம்) இதிபாலகாண்டே. புலவீர்காள்-ஒழிவொன்றில்லாத வித்யாரப்யாந்வயঃ. ........................*

---

## நான்காம்பாட்டு.

என்னுவதெத்தனைநாளைக்குப்போதும்புலவீர்காண்
மன்னுமனிசரைப்பாடிப்படைக்கும்பெரும்பொருண்
மின்னார்மணிமுடிவிண்ணவர்தாதையைப்பாடினாற்
றன்னாகவேகொண்டுசன்மஞ்செய்யாமையுங்கொள்ளுமே.

### ஆறாயிரப்படி.

(என்னுவது) மநுஷ்யரைப்பாடிலும் சிலப்ரயோஜநங்கள் சித்திக்கக்காணா நின்றோமிறேயென்னில்; அஸ்த்திரரான மநுஷ்யரைப்பாடியென்னப்ரயோஜநம்பெறுவது, பெற்றாற்றானெத்தனைநாளைக்குப் போதும்புலவீர்காள்; ஆனபின்புமின்னார் மணிமுடிவிண்ணவர் தாதையைப்

பாடுங்கள் ; பாடினால்வேறொரு ப்ரயோஜநமும்வேணுமோ, ஸ்வசேஷைதைக ரதிகளாக்கி ஸ்வவிஷய கைங்கர்யவிரோதியான சம்சாரத்தையும் போக்குமென்கிறார்.........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாதிகனானவனையொழிய அஸ்த்திரரான மநுஷ்யர்களைக் கவிபாடியென்ன ப்ரயோஜநமுண்டென்கிறார்.

புலவீர்காள் - சப்தார்த்தங்களில்வாசியறியும்புலவீர்காள். மன்னு-நீங்கள் பாடிச்செல்லுந்தனையும்நிலைநில்லாத. மனிசரை-மநுஷ்யர்களை. பாடி-கவிபாடி. படைக்கும்-பெறுப்பேறாகப்படைக்கும். பெரும்-உங்கள்பாரிப்பாலேபெரிய. பொருள்-அர்த்தமானது. என்-எது. ஆவது-உண்டாம். உண்டானாலும், எத்தனைநாளைக்கு-எத்தனைநாளைக்கு. போதும் - விநியோகார்ஹமாம். மின்-பேரொளியை. ஆர்-உடைத்தான. மணிமுடி-ரத்நாபிஷேகத்தையுடையனாய். விண்ணவர்-பரமபதவாசிகளுக்கு. தாதையை - சத்தாதிஹேதுபூதனானசர்வாதிகனை. பாடினல்-பாடினால். தன்னாகவே-தனக்கேயநந்யார்ஹமாக. கொண்டு-நினைத்து. சன்மம்-இதரஸ்தோத்ரஹேதுவானஜந்மம். செய்யாமையும்-கழியும்படியும். கொள்ளும் - அங்கீகரிக்கும். தன்னாகவே கொண்டென்று- சாம்யாபத்தியைப் பண்ணிக்கொடுக்குமென்றுமாம்.........................................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

கவிபாடினார்க்குத் தன்னோடொத்தவரிசையைக் கொடுக்குமவனைக் கவிபாடுமதொழிய, மந்தாயுஸ்ஸுக்களான க்ஷுத்ரராக்கவிபாடிப் பெறுவதென்னென்கிறார்.

(என்னாவது) ஒன்றுமாவதில்லை. ஒருப்ரயோஜநத்துக் காகவன்றோ பிறரைக்கவிபாடுகிறது நீங்கள், அதில்நீங்கள் நினைக்கிறதுசித்தியாது. ஆனால் சித்திப்பதென்னென்னில் ; கீழ்ச்சொன்னதண்மையே சித்திப்பது. (என்னாவது) உங்கள்நினைவால் சிலவர்த்தசித்தி, அர்த்தஸ்திதி லதஃபுகிக்கையே யென்னினைவால். ஒன்றுமில்லையாவதென், கவிபாடுவாரும் பாடினவர்களுக்குக் கொடுப்பார்களுமாயன்றோ போருகிறதென்ன (எத்தனைநாளைக்குப்போதும்) "இல்லை" என்றவோ பாதியாயன்றோ அதுதானிருப்பது. நிரூபித்தால் கவிபாட்டிட் டிரையாயிறேயிருப்பது. கவிகேட்பிக்கைக்கு சஹகாரிகளையுங்கூட்டிக் கேட்பித்துப்பெறுமதும், கவிபாடினநாளைக்குப் பணையம்வைத்துவாங்கி ஜீவித்ததுகொடுத்து மீட்கவும்போராது. (புலவீர்காள்) உங்கள் விசேஷஜ்ஞதைக்குப் போருமோவிது. "பாடினகவியின்நேர்த்தியிது, பேறிது, இதுக்கிது போரும், போராது" என்றுநீங்களே யறியவேண்டாவோ. புலவீர்காள்-சப்தார்த்தங்களின் வாசியறியுமவர்களே. (மன்னுமனிசரை) சிறிதுண்டாயல்பமாகிலும் நீங்கள்பெறுவது, நீங்கள்செல்லுமளவு மவர்கள்தானிருக்கிலிறே ; "அவரேமாண்டார்" என்றெதிரேவருவரே. (பாடிப்

படைக்கும்பெரும்பொருள் ) இந்த ஸ்ரீயஃபதி குறைவறக்கொடானே என்று க்ஷேபிக்கிறார்.

( மின்னாரித்யாதி ) கவிபாடி முடிபெற்றவர்களன்றே சென்று காணும்திரள். ஒளிமிக்க மணிகளையுடைய. * முடியுடைவானவரிறே. "விவநர்வஃ" (விபந்யவஃ) என்றுகவிபாடிமுடிசூடி யிருக்கிறவர்களிறே. கவிபாடிச்சென்றவர்களுக் கோலக்கங்கொடுத்துக் கொண்டாடிக் கேட்பிப்பாருமவர்களன்றே; * கேட்டாரார்வானவர்களிறே. (விண்ணவர்தாதையைப்பாடினல்) நித்யசூரிகளுக்கு நிர்வாஹகனானவனைக்கவி பாடினல். முடி - அவன்றனக்கு விசேஷணமானபோது, கவிபாடினார்க்குக் கொடுக்கச்சூடின முடியென்கை. (பாடினல்) இதுதானே ப்ரயோஜநம்போருமிறே. அதுக்குமேலே (தன்னாகவேகொண்டு) தனக்கேயாகவென்னுதல்; "ஊஊாயஜ்ஊாமதாஃ" (மமஸாதர்ம்யமாகதாஃ) "வாஊஂஊாஊ்ஊஉெவெதி" (பரமம்ஸாம்யமுபைதி) "தம்மையேயொக்கவருள்செய்வர்" என்கிறபடியே தன்னேடொக்கப் பண்ணியென்னவுமாம். (சன்மஞ்செய்யாமையுங்கொள்ளுமே) பின்னையொருவன்கீழேயிருந்து கவிபாடுகைக்கடியான ஜந்மத்தைப்போக்கும். பிறரைக்கவிபாடுகைக்கடிஜந்மமிறே. நித்யசூரிகள்தரத்தைக்கொடுத்து, பின்னைகாணும்சம்சாரசம்பந்தத்தையறுப்பது; ராஜபுத்ரன்றலையி லபிஷேகத்தை வைத்து, பின்னைவிலங்குவெட்டி விடுமாபோலே. ஸ்ரீவிபீஷணாழ்வானையபிஷேகம்பண்ணி, பின்புராவணனை வதித்தாற்போலே................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (என்னுவதித்யாதி) "தன்னாகவேகொண்டு, மன்னுமனிசரைப்பாடிப்படைக்கும்பெரும்பொருள் - என்னுவது" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (கவிபாடினார்க்கித்யாதி) வரிசை-பஹுமாநம்.

"என்னுவது" என்று - க்ஷேபமாகவருளிச்செய்கிறார் (ஒன்றுமாவதில்லையென்று) "புலவீர்காள்" என்று சம்போதித்து, "ஒன்றுமாவதில்லை" என்கிறவருடைய ஹார்த்தபாவம் (ஒருப்ரயோஜநத்துக்காகவித்யாதி) "சித்தியாது" என்றத்தால் பலிதத்தை சங்காபரிஹாரமுகேந வருளிச்செய்கிறார் (ஆனலித்யாதி) கீழ்ச்சொன்னதண்மையென்றது - "இழியக்கருதி" என்றத்தைப்பற்ற. "என்னுவது" என்றத்தால்பலிதம் (உங்கள்நினைவாலித்யாதி)

இல்லையென்றவோபாதியாய் - அத்யல்பமாய். ஓரோவிடங்களிலே பஹுத்ரவ்யப்ரதாநமும் சாண்கிறதேயென்ன (நிரூபித்தாலித்யாதி) கவிபாட்டிட்டிறையாய்-கவிபாடினதுக்கெதிர்ப்பைபயிடவேண்டும்படியாய். இட்டிறை-எதிர்ப்பையிடுகை. ஏதத்விவரணம் (கவிகேட்பிக்கைக்கித்யாதி) பணையும் - கொதுவை. ஜீவித்தது-புஜித்தது. ஏததுபபாதநம் (பாடினகவியித்யாதி) நேர்த்தி-வைலக்ஷண்யம்.

கவிபாட்டுண்கிறவருடைய அஸ்த்தைர்யத்தைச்சொல்லுகிறவருடைய ஹார்த்தபாவம் (சிறிதுண்டாயித்யாதி) அவரோமாண்டாரென்றதுக்கு - ஸ்பஷ்டோர்த்தஃ.

திருமொழி யாரும்பத் திரண்டாந்திருமொழி யைந்தாம்பாட்டு; " பாண்டேன் " இத்யாதி. " பெரும்பொருள் - என்னுவது " என்கையாலே யவர்களை க்ஷேபிக்கி றமைதோற்றுகிறதென்கிறார் (இந்தஸ்ரீபஃபதியித்யாதி)

"மின்னார்மணிமுடி" என்றத்தை * விண்ணவர்க்கு விசேஷணமாக்கியருளி ச்செய்கிறார் ( கவிபாடியித்யாதி ) சென்றுகாணும்-போய்க்காணும். சப்தார்த்தம் ( ஒளிமிக்கவித்யாதி ) அவர்களுக்கு முடியுண்டோவென்ன ( முடியுடையித்யாதி ) "மின்னார்மணிமுடி" என்றுவிசேஷிக்கிறதென்னென்ன ( விபங்யவஇத்யாதி ) "விண்ணவர்தாதை " என்றுவிசேஷித்ததுக்குபாவம் ( கவிபாடியித்யாதி ) அவர்கள் கொண்டாடுவர்களோவென்ன (கேட்டாராரித்யாதி) சப்தார்த்தம் ( நித்யஸூரிகளி த்யாதி) யோஜநாந்தரம் (முடியவன்றனக்கித்யாதி) யதிசப்தார்த்தம் (இதுதானே யித்யாதி) "பாடினால்" என்னு - அலப்யதைதோன்றுகிறதிறே.

" சன்மம்செய்யாமையும்" என்ற-சமப்தார்த்தம் ( அதுக்குமேலேயென்ற து ) (தனக்கேயாக) தன்னுகவேயாக-தனக்கேசேஷமாக-த்விதீயார்த்தம், ( தன்னுகவேகொண்டு ) தன்னேடொக்கப்பண்ணி. அதாவது - தன்னேடுசாம்யாபத்தியைப்பண்ணியென்றபடி. " ஜ஦ஂஜ ர நவோ஻ரிஜ ஸா஻ஹஸாயறாறமதாஃ। ஸஙொவிநொவஜாயஞெவ஻ஊயெநவ஻யஞிவ " ( இதம்ஜ்ஞாநமபாஸ்ரித்யமமஸாதர்ம்யமாகதாஃ। ஸர்க்கேபிநோபஜாயந்தேப்ரளயேநவ்யதந்திச ) இதிகீதாசுசதுர்த்தஸே. "நிரஂஜநஃவரஂஸாஂ஫ெவதி " ( நிரஞ்சநஃபரமம் ஸாம்யமுபைதி ) இதிமுண்டோபநிஷதி. தம்மையேயொக்கவருள்செய்வர் - தம்மைப்போலேயாம்படி க்ருபைபண்ணுவரித்யர்த்தஃ. திருமொழிபதினோராம்பத்து மூன்றாந்திருமொழியைந்தாம்பாட்டு. இக்ரமத்துக்குபாவம் ( நித்யஸூரிகளித்யாதி ) தரம்-அதிசயம். இதுக்குத்ருஷ்டாந்தத்வயம் ( ராஜபுத்ரனித்யாதி ) சன்மம் செய்யாமையும்கொள்ளும் - ஜந்மம்கழியும்படியாயு மங்கீகரிக்குமிதி சப்தார்த்தஃ.

புலவீர்காள், மன்னுமனிசரைப் பாடிப்படைக்கும் பெருமபொருள்-என்னுவது, எத்தனைநாளைக்குப் போதும் ; மின்னார்மணிமுடி இத்யாரப்ய, கொள்ளுமே யித்யந்வயஃ........................................................................*

# ஐந்தாம்பாட்டு.

கொள்ளும்பயனில்லைகுப்பைகிளர்த்தன்னசெல்வத்தை
வள்ளல்புகழ்ந்துநும்வாய்மையிழக்கும்புலவீர்காள்
கொள்ளக்குறைவிலன்வேண்டிற்றெல்லாந்தருங்கோதிலென்
வள்ளன்மணிவண்ணன்றன்னைக்கவிசொல்லவம்மினே.

## ஆறுயிரப்படி.

(கொள்ளும்) ப்ரயோஜநசூந்யமாய் ஹேயவிஷயங்களைக் கவிபாடி யுங்களுடையஅழகிய கவிகளையிழவாதே,தன்னுடையநிரவதிக நித்ய நிர்த்தோஷ கல்யாணகுணங்களாலேயுங்களுடையகவிகளைக்ருதார்த்தமாக்க வல்லனுய், உங்களுக்கு வேண்டிற்றெல்லாந்தரும் பரமோதாரனுய்,

தந்தாலுமொன்றும் செய்யாதானாய், "இவர்களுக்கென்செய்வோம்" என்றிருக்கும் ஸ்வபாவனாய், ஆஶ்ரிதசுலபனாயிருந்த வெம்பெருமானைக் கவிசொல்லவல்லீர்களோ வென்கிறார்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிஷ்ப்ரயோஜநமான இதரஸ்தோத்ரத்தைத்தவிர்ந்து சர்வபல ப்ரதனான மஹோதாரனைக் கவிபாடவாருங்கோ ளென்கிறார்.

கொள்ளும்-கொள்ளலாவது. பயன் - ஒருப்ரயோஜநம். இல்லை-இன்றியே. குப்பை-குப்பையை. கிளர்த்தன்ன-கிளறினாப்போலேதோஷமேதோற்றும்படியான. செல்வத்தை-சம்பத்தையுடையக்ஷுத்ரஜாதியை. வள்ளல்-மஹோதாரரையாக. புகழ்ந்து-புகழ்ந்து. நும்-உங்கள். வாய்மை-சத்யவாதித்வமாகிறவாக்மித்வத்தை. இழக்கும்-இழக்கிற. புலவீர்காள்-புலவீர்காள். கொள்ள-கவிபாடுகைக்குள்ளுறையாகக்கொள்ளுகைக்கும் கவிக்குப்ரயோஜநங்கொள்ளுகைக்கும். குறைவிலன்-குறைவற்றபூர்ணனாய். வேண்டிற்றெல்லாம்-நாம்வேண்டினவற்றையெல்லாம். தரும்-தருமிடத்தில். கோது-தாரதம்யம்பார்த்தல், ப்ரத்யுபகாரம்பார்த்தல், கொடுத்தத்தை நினைத்தல்செய்யுங்குற்றம். இல்-இல்லாதவனாய். இதுக்குதாஹரணமென்னலாம்படி என்-எனக்கு. வள்ளல்-தன்னையுபகரித்தமஹோதாரனாய். உபகாரமில்லையேயாகிலும்விடவொண்ணாதபடி மணி-நீலரத்நம்போலேஶ்லாக்யமான. வண்ணன்றன்னை - வடிவையுடையவனை. கவிசொல்ல - கவிசொல்லும்படி. வம்மின்-வாருங்கோள்...........................................................................*

## ஈடு-ஐந்தாம்பாட்டு.

உபகாரகருமன்றிக்கே, கவிபாடுகிறவர்களுக் கவத்யமாம்படி ஹேயருமாயிருக்கிறவர்களைக் கவிபாடாதே ; சமஸ்தகல்யாண குணாத்மகனுமாய் சர்வாபேக்ஷிதப்ரதனுமான சர்வேஶ்வரனைக் கவிபாடவாருங்களென்கிறார்.

(கொள்ளும்பயனில்லை) பிறரைக்கவிபாடவிழிகிறது அவர்களுத்தேஶ்யராயன்றே, ஒருப்ரயோஜநத்துக்காகவே, அதில்லையென்கிறார். "நீங்களுமிசையவே ஸ்வயம்ப்ரயோஜநமன்றே, ப்ரயோஜநபரராயே கவிபாடுகிறது, அதில்லை" என்னவேமீளுவரொன்றுபார்த்து, முந்தறமுன்னம் "இல்லை" என்கிறார். (கொள்ளும்பயனில்லை) நெஞ்சுகன்றக் கவிபாடுகிறவிதுக்குப் பெரியலாபங்காணும் "கொள்ளும்பயனில்லை" என்கை. கொள்ளக்கடவதொரு ப்ரயோஜநமில்லையென்கை. ஆக, உங்களுக்காகவொரு ப்ரயோஜநமில்லையாயிருந்தது. தங்களுக்கொரு ப்ரயோஜநமில்லையேயாகிலும், பரஹிதமாகவும் ப்ரவர்த்திக்கக்கடவதிறே ; அதுதானுண்டோவென்னில் (குப்பையித்யாதி) குப்பையைக்கிளறினாற்போலே யிருக்கிறசம்பத்தை. அதாவது-மறைந்துகிடக்கிறதோஷத்தை வெளியிடுகையாலே அவர்களுக்கவத்யாவஹமாமித்தனை. குப்பைகிளறினால் உள்மறைந்துகிடக்கிற கறைச்சீறாமுதலாவுள்ளவையிறே வெளிப்படுவது. அவர்களுக்கவத்யாவஹமாமளவன்றிக்கே, தங்களுக்கு மசுசிஸ்பர்ஶமுண்டாமென்கை. (வள்ளல்புகழ்ந்து) உதாரமாகப்பாடி. அவன்ற

னக்குமொரு நன்மையின்றிக்கே, பிறர்க்குமுறுப்பன்றிக்கேயிருக்கச்செய்தே; அவனுக்கு நன்மையுண்டாகவும், அதுதான் ஸ்வப்ரயோஜநத்துக்கடியாயிருக்கிறதாகவும் நன்றாகப்புகழ்ந்து. (நும்வாய்மையிழக்கும்) நீங்கள்கொள்ளும்பயனிதுவே. இரண்டுமில்லையென்றுசொன்னாரிறே, ஆகையாலேநீங்கள் "வாக்மிகள்" என்கிறப்ரசித்தியை யிழக்குமித்தனை. அன்றிக்கே, வாய்மையென்று-மெய்யாய், நாடறிய இல்லாதவர்த்தங்களைச்சொல்லுகையாலே பொய்ச்சொல்லிகளாமத்தனைநீங்கள். (புலவீர்காள்) பேறிழவறியும் நீங்கள்செய்யுமதோவிது. உங்கள்ஹிதம் நான்சொல்லவேண்டும்படியிருப்பதே. வர்ணாஶ்ரமங்களுக்குச்சேருமோநீங்கள் செய்கிறவை. சர்வசப்தவாச்யனவனை லந்தசப்தங்கடனக்குச் சேருமோ.

நீர்சொல்லுகிறவிஷயத்துக்கு, நாங்கள்கவிபாடுகிறவர்களிற்காட்டில் நன்மையுண்டோவென்னில் (கொள்ளக்குறைவிலன்) கீழ்ச்சொன்னவிரண்டையும் மாறாடிச்சொல்லுகிறார். கொள்ளும்பயனுமுண்டு, குப்பைகிளர்த்தன்னசெல்வமுமல்ல. நீங்கள்யாவையாவை சிலவேற்றங்களையிட்டுக்கவிபாடினிகோள், அவற்றை ஸ்வீகரிக்குமிடத்தி லொருகுறையுடையனல்லன். சமஸ்தகல்யாணகுணாத்மகன். (வேண்டிற்றெல்லாந்தரும்) கொள்ளும்பயனும்பெரிது. நீங்கள்கவிபாடினால் போகமோக்ஷங்கள் வேண்டுமவையெல்லாந்தரும். இவனையொழிந்தார், ஒருவனுக்கொன்றைக்கொடுத்தால் கொள்ளுகிறவனுக்கு மற்றொன்றபேக்ஷிதமானாலது கொடுக்கமாட்டார்களிறே; இங்குஅபேக்ஷிப்பார் தாழ்வாலேயிழக்கி லிழக்குமித்தனை, அவன்தரமாட்டாமையாலே யிழக்கவேண்டா; "ஸௌம்யம்மநோரதம்ஸ்வர்க்யம்ஸ்வர்க்கிவந்த்யஞ்சயத்பதம்|ததாதித்யாயிநாம்நித்யமபவர்க்கப்ரதோஹரி:" (ஸௌம்யமநோரதம்ஸ்வர்க்யம்ஸ்வர்க்கிவந்த்யஞ்சயத்பதம்|ததாதித்யாயிநாம்நித்யமபவர்க்கப்ரதோஹரி:) "ஸகலபலப்ரதோஹிவிஷ்ணு:" (ஸகலபலப்ரதோஹிவிஷ்ணு:) (கோதில்) ஒருவனுக்கொன்று கொடுக்குமிடத்தில் கோதற்றிருக்கும். கொடைக்குக்கோதில்லாமையாவது-தேசகாலபாத்ரங்கள் பார்த்துக்கொடுத்தல், கொடுக்கிறவனுக்கு "கொடுத்தோம்" என்கிறவபிமானமநுவர்த்தித்தல், கொள்ளுகிறவனுக்கு ப்ரத்யுபகாரந்தேடி நெஞ்சாறல்படுதல் செய்யவேண்டாதபடியிருக்கை. நீரிதறிந்தபடியென்னென்ன (என்வள்ளல்) நானநுபவித்ததைச்சொல்லுகிறேன். (மணிவண்ணன்) கொள்ளும்பயனுமின்றிக்கே ஐஶ்வர்யமுமின்றிக்கே யொழிந்தாலும் விடவொண்ணாதபடியாயிற்று வடிவழகு. ரூபாபாசம்கண்டு மேல்விழாநின்றதிறேபுறம்பு. வடிவழகுகண்டு கவிபாடினாலு மிவனையேபாடவேணும். கைக்கூலிகொடுத்து விரும்பாநின்றதிறே ரூபாபாசங்களையும். (மணிவண்ணன்றன்னைக்கவிசொல்லவம்மினோ) நான்சொல்லுகிறபடியை யுடையவனைக் கவிபாடவாருங்கோள். (வம்மின்) பிற்காலியாதே கடுகப்புகுரப்பாருங்கோள்.......*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( கொள்ளுமித்யாதி ) " கொள்ளும்பயனில்லை குப்பைகிளர்த்தன்னசெல்வத்தை, கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாந்தரும் " இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை ( உபகாரகருமித்யாதி )

" கொள்ளும்பயனில்லை " என்று-ப்ரயோஜநாபாவத்தை யெதுக்காகச்சொல்லுகிறுரென்ன ( பிறரையித்யாதி ) விவரணம் ( நீங்களுமித்யாதி ) " இல்லை " என்கைக்குபலமேதென்ன ( அதில்லையென்னவேயித்யாதி ) ( இல்லையென்கிறுர் ) ஹிதகாமராகையாலேயென்றபடி. வ்யாக்யாதாவினீடுபாடு ( நெஞ்சுகன்றவித்யாதி ) சப்தார்த்தம் ( கொள்ளக்கடவதித்யாதி ) " கொள்ளும்பயனில்லை " என்றத்தால்பலிதம் ( ஆகவித்யாதி )

இத்தால்-கீழ்ப்பண்ணினசங்கைக்கு பரிஹாரமேதென்ன (அதாவதித்யாதி) உக்தார்த்தத்தை விசதீகரிக்கைக்காக த்ருஷ்டாந்தகர்ப்பிதமானவர்த்தத்தை விவிச்யதர்சிப்பிக்கிறுர் ( குப்பையைக்கிளறினுலித்யாதி ) கறைச்சீரை-அழுக்குக்கந்தை. அத்தால்பலித்த விசேஷத்தைக்காட்டுகிறுர் ( அவர்களுக்கித்யாதி ) "குப்பைகிளர்த்தன்ன " என்றத்தால்-இருவர்க்குமவத்யமென்றபடி. இந்தவுபயாவத்யத்துக்கும் ப்ரதிகோடியாக வருளிச்செய்கிறுர் ( அவன்றனக்குமித்யாதி )

" கொள்ளும்பயனில்லை " என்றத்தோடே, " வாய்மையிழக்கும் " என்றத்தைக்கூட்டி யவர்களைக்ஷேபிக்கிறுர் ( நீங்கள்கொள்ளும் பயனிதுவேயென்று ) இரண்டுமில்லையென்று சொன்னுரிறேயென்றது - " கொள்ளும்பயனில்லை, குப்பைகிளர்த்தன்ன " என்றுஸ்வப்ரயோஜந பரப்ரயோஜநங்க ளிரண்டுமில்லையென்று சொன்னுரிறேயென்றபடி. வாய்மை-வாக்மிதை. ப்ரசித்தியையென்றது-அர்த்தசித்தம். இரண்டாமர்த்தம்-சத்யதை. வாய்மை-வாயினுடைய தர்மமானமெய். வாய்க்கு நிரூபகதர்மமிறே சத்யதை.

புலவீர்காள்-விசேஷஜ்ஞர்காள். விசேஷஜ்ஞராகையாவது - இவர்களைப்பாடினத்தால் தனக்குவரும் ப்ரயோஜநத்தையும், " பாட்டுண்கிறவனின்னஜாதீயன், தானின்னஜாதீயன் " என்னுமத்தையும், " சப்தங்களுக்குமுக்யவாச்யனின்னுன் " என்னுமத்தையுமறிகையிறே ; இம்மூன்றுக்கும் விருத்தமிறேநீங்கள் கவிபாடுகிறது, ஆகையாலுங்கள் ஹிதத்தையறிந்து நீங்கள்ப்ரவர்த்திக்க வேண்டாவோவென்கை - " புலவீர்காள் " என்கிறவருடைய ஹார்த்தபாவம். இத்தையருளிச்செய்கிறுர் ( பேறிழவறியுமித்யாதிநாலுவாக்யத்தாலே ) ( உங்கள்ஹிதம் ) இத்யாதிவாக்யம் - ( ஸர்வசப்தவாச்யன் ) இத்யாதிவாக்யாநந்தரோ அநுசந்தேயம்.

கீழ்ச்சொன்னவிரண்டையும் மாருடிச்சொல்லுகிறுரொன்றது - "கொள்ளும்பயனில்லை, குப்பைகிளர்த்தன்ன" என்றவிரண்டுக்கும் ப்ரதிகோடியைமாருடிச்சொல்லுகிறுர் - "கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாந்தரும்" என்றென்றபடி. அதாவது - அங்குக்கொள்ளும்பயனில்லை, இங்குவேண்டிற்றெல்லாந்தரும்; அங்குக்குப்பைகிளர்த்தன்னசெல்வம், இங்குக்கொள்ளக்குறைவிலனென் றிங்ஙனேமாருடிச்சொல்லுகிறுரொன்றபடி. கொள்ளக்குறைவிலன்-நீங்கள் சொல்லுகிறவேற்றங்களெல்லாவற்றையும் ஸ்வீகரிக்கைக்குக்குறைவிலனென்றபடி. மாருடிச்சொல்லுகையாவது-அங்கில்லையென்றத்தை யிங்குண்டென்றும், அங்குண்டானத்தை யிங்கில்லையென்றும்சொல்லுகை. "' ஏகாநேகஸ்வரூபாய ' ( ஏகாநேகஸ்வருபாய ) என்றுவைத்து, ' ஸ்தூலஸூக்ஷ்மாத்மநே நம: ' ( ஸ்த்தூலஸூக்ஷ்

மாத்மநேமः) என்றாற்போலேயிருக்கிறது" என்றருளிச்செய்வர். புத்திசௌகர்யார்த்தமாகக் கீழ்ச்சொன்ன விரண்டுக்கும் ப்ரதிகோடியை க்ரமேணவருளிச்செய்கிறார் (கொள்ளும்பயனுமித்யாதி) கவிகளைக்கொள்ளுமிடத்தில் - ஸ்வீகரிக்குமிடத்தில், குறையையுடையனல்லனித்யர்த்தः. (ஏற்றங்களையிட்டிதி) ஏற்றமாவது-ஸ்வருபரூபகுணவிபூதிகளால்வந்த வைலக்ஷண்யம். விவரணம் (சமஸ்தேத்யாதி)

"இவன்தரும்" என்கையாலே - மற்றொருவரும் கொடுக்கமாட்டார்களென்று தோற்றுகிறது; அத்தைக்காட்டுகிறார் (இவனையொழிந்தாரித்யாதி) பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணினார்கள் தாமெல்லாரும் போகமோக்ஷங்களைப் பெறுகிறார்களோவென்ன (இங்கித்யாதி) அவனப்படி சகலபலப்ரதனோவென்ன (பௌமமித்யாதி) "ஸௌமம்மநோரதம்ஸ்வர்க்யம்ஸ்வர்க்கிவந்த்யஞ்சயத்பதம் । ததாதித்யாயிநாம் நித்யமபவர்க்கப்ரதோஹரிः" (பௌமம்மநோரதம்ஸ்வர்க்யம்ஸ்வர்க்கிவந்த்யஞ்சயத்பதம் । ததாதித்யாயிநாம் நித்யமபவர்க்கப்ரதோஹரிः) "தேவேந்த்ரஸ்த்ரிபுவநமர்த்தமேகபிங்கஸ்ஸர்வர்த்திம்த்ரிபுவநகாஞ்சகார்த்தவீர்யः । வைதேஹः பரமபதம்ப்ரஸாத்யவிஷ்ணும் ஸம்ப்ராப்தஸ்ஸகலபலப்ரதோஹிவிஷ்ணுः" (தேவேந்த்ரஸ்த்ரிபுவநமர்த்தமேகபிங்கஸ்ஸர்வர்த்திம்த்ரிபுவநகாஞ்சகார்த்தவீர்யः । வைதேஹः பரமபதம்ப்ரஸாத்யவிஷ்ணும் ஸம்ப்ராப்தஸ்ஸகலபலப்ரதோஹிவிஷ்ணுः) இதி ஸ்ரீமாங்கள்யஸ்தவே. "நித்யம்" என்கையாலே - இதுவேயிவனுக்கு ஸ்வரூபமென்றபடி.

"வேண்டிற்றெல்லாம்தரும், கொள்ளக்குறைவிலன்" என்கிறவிரண்டையும் கடாக்ஷித்துபாவம் (கொள்ளும்பயனுமித்யாதி) வடிவழகு விடவொண்ணாமையை கிம்புநர்ந்யாயத்தாலே சாதிக்கிறார் (ரூபாபாசமித்யாதி) "மணிவண்ணன்" என்றதுக்கு கீழேகூட்டிபாவமருளிச்செய்தார் (கொள்ளும்பயனுமித்யாதி வாக்யத்திலே) மேலேகூட்டிபாவாந்தரம் (வடிவழகித்யாதி) "கொள்ளும்பயனின்றிக்கேயொழிந்தாலும் விடவொண்ணாதுவடிவழகு" என்றதுக்கு, (ரூபாபாசமித்யாதியாலே) உதாஹரணமருளிச்செய்த வநந்தரம், "ஐஶ்வர்யமின்றிக்கேயொழிந்தாலும் விடவொண்ணாதுவடிவழகு" என்றத்தை யுதாஹரணமுகேந விஶதீகரிக்கிறார் (கைக்கூலியித்யாதி)

"கவிசொல்லவம்மினோ" என்றத்தோடே "மணிவண்ணன்" என்றத்தைக் கூட்டிரஸோக்தி (நான்சொல்லுகிறவித்யாதி) படி-ப்ரகாரமும், வடிவும். வம்மின் (வாருங்கோள்) "ஓ" என்கிற ஸ்வரத்துக்குபாவம் (பிற்காலியாதேயித்யாதி) என்னுதல், விதிக்குபாவமாதல். ஓ-அசை.

க்ரமேணாந்வயः. ....................................................................................*

---

# ஆறும்பாட்டு.

---

வம்மின்புலவீர்நும்மெய்வருத்திக்கைசெய்துய்மினோ
விம்மன்னுலகினிற்செல்வரிப்போதில்லைநோக்கினோம்
நும்மின்கவிகொண்டுநுந்நுமிட்டாதெய்வமேத்தினாற்
செம்மின்சுடர்முடியென்திருமாலுக்குச்சேருமே.

## ஆறுயிரப்படி.

(வம்மின்) மநுஷ்யரைக்கவிபாடியேயாகிலும்தேஹயாத்ரையை நிர்வஹிக்கவேண்டாவோவென்னில்; அதுக்குபாயம்சொல்வேன் வாருங்கள். எங்ஙனேயென்னில் ; க்ருஷ்யாதிகளைப்பண்ணி ஜீவியுங்கள். க்ருஷ்யாதிகளாயாசாத்மகமாகையாலே யவைதுஷ்கரமல்லவோ, அவற்றிற்காட்டில் ஸ்ரீமான்களான மநுஷ்யர்களை ஜீவநார்த்தமாகக்கவிபாடுகையே நன்றன்றோவென்னில் ; உங்களபேக்ஷித பலப்ரதரான ஸ்ரீமான்களிந்த லோகத்திலுளரோவென்று பார்த்தோம், பார்த்தவிடத்திலொரு வருமின்றியேயிருந்தது. ஸ்ரீமான்களான மநுஷ்யர்களில்லையாகி லிந்த்ராதிகளையேத்தினாலோவென்னில் ; உங்களுடையவழகிய கவிகளைக்கொண்டு உங்களபீஷ்டதேவதைகளை நீங்களேத்தினாலும், பின்னையுமதெல்லா மந்த விந்த்ராதிதேவதைகளுக்கந்தராத்மபூதனாய் ஸ்ரியஃபதியாயிருந்தவெம்பெருமான் திருவடிகளிலேசேரும் ; ஆனபின் பெம்பெருமான்றன்னையே யேத்துங்களென்கிறார்.........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீங்களாரையேனுங் கவிபாடிலும் ஸ்ரியஃபதியான சர்வசேஷிக்கே யதுசேருமித்தனை யென்கிறார்.

புலவீர்-புலவராகையாலேவிசேஷஜ்ஞானநீங்கள். வம்மின் - இதரஸ்தோத்ரத்தைத்தவிர்ந்துவாருங்கோள். தேஹயாத்ராசேஷமாக நும்-உங்கள். மெய்-சரீரத்தை. வருத்தி-வருத்தி. கை-கைத்தொழில். செய்து-செய்து. உய்மினோ-உஜ்ஜீவியுங்கோள். மன்-ப்ரவாஹநித்யமான. இ-இந்த. உலகினில்-லோகத்தில். செல்வர்-ஸ்ரீமான்களாயிருப்பார். இப்போது-இக்காலத்தில். இல்லை-இல்லை. நோக்கினோம்-ஆராய்ந்துபார்த்தோம். இனி, நும்-உங்களுடைய. இன்-ஶ்லாக்யமான. கவி-கவிகளை. கொண்டு-கொண்டு. நும்நும்-உந்தம்முடையருச்யநுகுணமாக. இட்டாதெய்வம்-இஷ்டதேவதைகளை. ஏத்தினல்-ஸ்துதித்தால். அவர்களுக்குநீங்கள்சொல்லுகிற குணங்கள்சித்தியாமையாலே அவர்களுக்குச்சேராதே, செம்மின்-அப்ரதிஹதப்ரகாசமான. சுடர்-தேஜஸ்ஸையுடைத்தாயிருக்கிற. முடி-திருவபிஷேகத்தையுடையனாய். என் - எனக்குஸ்வாமியான. திருமாலுக்கே - ஸ்ரியஃபதிக்கே. சேரும்-சேருமித்தனை.

உங்களுக்குபகவத்குண சௌர்யமேபலம். சப்தார்த்தங்களிரண்டும் ஸ்ரியஃபதிக்கே சேருவதென்றுகருத்து.......................................................*

## ஈடு - ஆரும்பாட்டு.

ஜீவநார்த்தமாக மநுஷ்யாதிகளைக் கவிபாடுகிறோமென்ன ; க்ஷுத்ரரைக்கவிபாடி ஜீவிப்பதிலும் உடம்புநோவப்பணிசெய்து ஜீவிக்கை நன்றென்கிறார்.

(வம்மின்) காட்டுத்தீயிலே யகப்பட்டாரை மடுவைக்காட்டி யழைப்பாரைப்போலே வாருங்களென்கிறார். (புலவீர்) நல்லதறியும்நீங்கள் வாருங்கோள்.

எங்களைநீரழைக்கிறதென், எங்களுடைய தேஹயாத்ரை நடக்க வேண்டாவோ பிறரைக்கவிபாடி யாகிலுமென்ன; மெய்யேஜீவிக்கவேண்டிலுமுங்கள் தரங்கொலைய ஜீவிக்கவேணுமோ, உங்கள்தரங்கொலையாமல் ஜீவிக்கவொண்ணாதோ (நும்மெய்யித்யாதி) உங்கள்சரீரத்தை வருத்தியும் கைத்தொழில்செய்தும் ஜீவிக்கப்பாருங்கோள். இதுக்கெம்பாரருளிச்செய்யும்படி "கோட்டைசுமத்தல்புற்சிரைத்தல் செய்யமாட்டீர்களோ" என்று. அத்தாலெங்களுக்கு பூர்ணமாக ஜீவிக்கக்கிடையாதே, பிறரைக்கவிபாடினாலெங்களுக்கு வேண்டுவதுவாங்கி ஜீவிக்கலாமென்ன; அதாமிறேபெறில் (இம்மன்னுலகினில் செல்வரிப்போதில்லை நோக்கினோம்) ப்ரவாஹரூபேண நித்யமானவிந்தலோகத்தில், உங்கள் கவிகேட்டிதுக்கு, தரமாகத்தருகைக் குதாரராயிருக்கும் ஸ்ரீமான்களில்லை.

(இப்போதுநோக்கினோம்) "இவர்கள்நெஞ்சுகன்றக் கவிபாடுகிறவிதுக்கு ப்ரயோஜநமுண்டோ" என்று இப்போதாராய்ந்து பார்த்தோம், ஒருவருமில்லையாயிருந்தது. அர்த்தாந்தரமாகில், "இப்போதில்லை" என்னவேண்டாவே; முன்புமில்லையே. முன்பிவர்தாம் லோகயாத்ரையில் கண்வைக்குமவரன்றே, "இவர்கள்வ்யர்த்தமே துஃகப்படுகிறார்களோ, "ஏதேனும் ப்ரயோஜநமுண்டோ" என்று இப்போது பார்த்தோமென்கிறார்.

மநுஷ்யரிலன்றோவில்லாதது; தேவர்கள் மநுஷ்யரில் வ்யாவ்ருத்தரோ, இக்கவிகளைக்கொண்டெங்களுடைய இஷ்டதேவதைகளை ஸ்தோத்ரம்பண்ணுகிறோமென்ன (நும்மித்யாதி) உங்களுடைய வினியகவிகளைக்கொண்டு, ராஜசராயும் தாமசராயுமிருக்கிற வுங்களுக்குப்பொருந்தும், ராஜசராயும்தாமசராயுமுள்ள தேவதைகளைஸ்துதித்தால். அது (செம்மின்னித்யாதி) நீங்கள்சிலவேற்றங்களைச்சொல்லியிறே கவிபாடுவது, அது அவர்களுக்குக்கூடாது; "புண்டரீகாக்ஷன்" என்றாலதுள்ளவிடத்தேபோம், விருபாக்ஷன்பக்கல்போகாதே; ஆகையாலே, ஆதிராஜ்யஸூசகமானதிருவபிஷேகத்தையுடைய ஸ்ரியஃபதிபக்கலிலேவந்துசேரும். ஆகையாலுங்களுக்குசித்திப்பதுசௌர்யபலமே. "சர்வாதிகன், சமஸ்தகல்யாணகுணாத்மகன், சர்வரக்ஷகன்" என்றாப்போலேயிறே கவிபாடுவது, அதுள்ளவிடத்திலேவந்து சேருமிறே. அப்ரதிஹதப்ரகாசமான தேஜஸ்ஸையுடைத்தாயிருக்கிற திருவபிஷேகத்தையுடையனை. (என்றிருமாலுக்குச்சேரும்) உங்கள்ப்ரதிபத்தியொழிய, கவியின்ஸ்வபாவத்தாலும் ஸ்ரியஃபதிக்குச்சேரும்; "ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமு

ணர்வு” என்கிறபடியே-ஜ்ஞாநமாகிலவனையே நோக்குமாபோலே, கவிக ளானவை சப்தசந்தர்ப்பமாயிருக்கையாலே, சர்வசப்தவாச்யனவனாகை யாலுமவனுக்கேசேரும். அதாவது-சர்வசப்தங்களும், அசித்தும்தததபி மாநிஜீவனும் ததந்தர்யாமியான பரமாத்மாவுமான விஸ்ஸங்காதத்துக்கு வாசகங்களாகையாலே விசேஷ்யப்ராதாந்யத்தாலே அவனையேசொல்லி ற்றும் ; “ யெயஜஙி ” ( யேயஜந்தி ) இத்யாதிவத்........................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (வம்மினித்யாதி) “ நும்மெய்வருத்திக்கைசெய்துய்மினோ ” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ஜீவநார்த்தமாகவித்யாதி)

மீளவும் “வம்மின்” என்றதுக்கு த்ருஷ்டாந்தமுகேநபாவம் (காட்டுத்தீயி லேயித்யாதி) மடுவின்ஸ்த்தாநம்மெய்வருத்துகை.

தாத்பர்யம் (மெய்யேயித்யாதி) மெய்யே-சத்யமாக, சரீரமேயென்றும். தரம்-ஆதிக்யம், யோக்யதையுமாம். ஆத்மாவினுடைய ஜீவநத்தையுபேக்ஷித்து, “சரீரமிருந்தாலமையும்” என்றிருந்திகோளாகிலென்றபடி. வருத்தியும்-ப்ரயாசப் படுத்தியும். உக்தார்த்தத்துக்காப்தவசநம் (இதுக்கெம்பாரித்யாதி) கோட்டைசும த்தலென்றது - “மெய்வருத்தி” என்றதுக்கு. புற்சிறைத்தலென்றது - “ கைசெய் து ” என்றதுக்கு. சிறைத்தர்-செதுக்குகை.

மன்னுலகு-நித்யமானலோகம்.

லோகயாத்ரையில் கண்வையாதவரிப்போ தாராய்கைக்கடியேதென்ன ( இவர்கள்நெஞ்சுகன்றவித்யாதி ) கன்ற-உலர. “ இப்போது-நோக்கினோம் ” எ ன்றந்வயிக்கவேணுமோ, “ இப்போதில்லை, நோக்கினோம் ” என்றிருந்தபடியேஅ ர்த்தம்சொன்னாலோவென்ன ( அர்த்தாந்தரமாகிலித்யாதி ) ஆனாலிப்போதோ நோக்கிற்று, முன்புநோக்கவில்லையோவென்ன ( முன்பிவர்தாமித்யாதி ) ஆனாலிப் போதுதான் கண்வைத்தாரோவென்ன ( இவர்கள்வ்யர்த்தமேயித்யாதி ) இவர்க ளுடைய துஃகாதிசயத்தைக்கண்டு தயையாலே கண்வைத்தாரென்றபடி.

“ நுந்தம் ” என்கிறவதிகாரி பேதத்தைக்காட்டுகிறார் ( ராஜசராயுமித்யா தி ) இன்கவி - இனியகவி. ஶ்லாக்யமானகவி. நுந்தம்-உங்களுங்களுடைய. இட் டாதெய்வம்-இஷ்டதேவதைகளை.

“ திருமாலுக்குச்சேரும் ” என்றதுக்கிரண்டுஹேது-அர்த்தஸ்வபாவத்தாலு ம், சப்தஸ்வபாவத்தாலும்சேருமென்று. அதில், அர்த்தஸ்வபாவத்தாலே சேருமெ ன்றத்தை யருளிச்செய்கிறார் ( நீங்கள்சிலவித்யாதி ) எப்படிகூடாதென்ன ( புண் டரீகாக்ஷனித்யாதி ) சௌர்யபலமே-சௌர்யமேபலமென்றபடி. கீழ்ச்சொன்ன ஹேதுவைமீளவும் விசேஷிக்கிறார் ( சர்வாதிகனித்யாதி ) செம்மின்சுடர்முடி - ( அப்ரதிஹதப்ரகாசமான தேஜஸ்ஸையுடைத்தாயிருக்கிறதிருவபிஷேகத்தையுடை யனான ) செம்மை-செவ்வை-அதாவது-அப்ரதிஹதமாகை.

சப்தஸ்வபாவத்தாலும் சேருமென்றிரண்டாம் ஹேதுவையருளிச்செய்கி றார் ( உங்கள்ப்ரதிபத்தியித்யாதி ) “ என் ” என்றதின்தாத்பர்யம். ( கவியின்ஸ்வ பாவத்தாலும் ) * திருமாலின்தாத்பர்யம். “ ஶ்ரிய꞉பதிக்கேசேரும் ” என்றத்தை யுபபாதிக்கிறார் ( ஒண்டாமரையாளித்யாதி ) அழகியதாமரைப்பூவை யிருப்பிட மாகவுடைய பெரியபிராட்டியார்க்கு வல்லபனான சர்வேஶ்வரனொருவனையேசெ

ன்று சேராநிற்கும்ஜ்ஞாநமானது இதிபாசுரார்த்தః. முதற்றிருவந்தாதி யறுபத்தே ழாம்பாட்டு. "பெயருங்கருங்கடலே" இத்யாதி. தத்வாசகசப்தங்கள்வேணுமாகில் அவனைச்சொல்லுகிறது, சித்சித்வாசகசப்தங்களவனைச் சொல்லும்படியென்னென்ன; விசேஷ்யப்ராதாந்யத்தாலே சொல்லுமென்கிறார் (அதாவதித்யாதி) ஆராதநங்கள் விசேஷ்யதயாப்ரதாநனுகையாலே யீஶ்வரனையே விஷயமாகவுடைத்தாயிருக்கும்படி, சர்வசப்தங்களும்விசேஷ்யதயா ப்ரதாநனை வீஶ்வரனுக்கே வாசகமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (யேயஜந்தீத்யாதிவத் என்று) "யெயஜஂிவிதூ௫நெவாநூ௫ாஹணாநுஸஹ-தாஸதாநு । ஸவ-ூஹ-௫தாஷறாத்தா நஂவிஷ-௫ெவயஜஂிெத" (யேயஜந்திபித்ரூந்தேவாந்ப்ராஹ்மணாந்ஸஹூதாஶநாந் । ஸர்வபூதாந்தராத்மாநம்விஷ்ணுமேவயஜந்திதே) இதிதக்ஷஸ்ம்ருதௌ.

க்ரமேணார்வயః.......................................................*

## ஏழாம்பாட்டு.

சேருங்கொடைபுகழெல்லையிலானையோராயிரம்
பேருமுடையபிரானையல்லாந்மற்றியான்கிலேன்
மாரியனையகைமால்வரையொக்கும்திண்டோளென்று
பாரிலோர்பற்றையைப்பச்சைப்பசும்பொய்கள்பேசவே.

### ஆறாயிரப்படி.

(சேரும்) ஶ்ரியःபதியான தனக்கு சத்ருஶமான நிரவதிகௌதார்யாத்ய சங்க்யேய கல்யாணகுணங்களையுடையனாயிருந்த வெம்பெருமானையல்லால், மற்றிந்தலோகத்தில் த்ருணகல்பரான மநுஷ்யாதிகளை, மாரியனையகைமால்வரையொக்கும் திண்டோளென்று பச்சைப்பசும்பொய்கள்பேசேனென்றுகொண்டு ஸ்வலாபத்தைப்பேசுகிறார்..................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்துத்யமானகுணங்களையும் திருநாமங்களையும் பூர்ணமாகவுடையவனையொழிய, வேறொருவிஷயத்தைப் பொய்க்கவிபாடசக்தனல்லேனென்கிறார்.

சேரும்-தனக்குத்தகுதியான. கொடை-கொடையும். புகழ் - அத்தால்வந்த குணப்ரதையும். எல்லையிலானை-எல்லையிறந்திருக்குமவனாய். ஓர் - அத்விதீயமாய். ஆயிரம்-ஸஹஸ்ரஸங்க்யாதமான. பேரும்-திருநாமங்களையும். உடைய-உடைய. பிரானை-மஹோபகாரகனை. அல்லால்-ஒழிய. மற்று-வேறு. பாரில் - பூமியிலே. ஓர்-அறுபோலே நிஷ்ப்ரயோஜநமாயிருப்பதொரு. பற்றையை-பதார்த்தத்தை. கை-கைவழக்கங்கள். மாரி-மேகத்தை. அனையவென்று-ஒத்தனவென்றும். திண்-திறலிய. தோள்-தோள்கள். மால்-பெரிய. வரை-மலையை. ஒக்குமென்று - ஒக்குமென்றும். பச்சை-மெய்கலவாத. பசும்பொய்கள்-புதுப்பொய்களை. பேச - பேச. யான்-பூர்ணவிஷயத்தைப்பற்றினநான். கிலேன் - சக்தனல்லேன் .....................*

ஈடு-ஏழாம்பாட்டு.

வழிபறிக்கும்நிலத்தில் தன்கைப்பொருள்கொண்டு தப்பினவனுக்குமாபோலே; இவர்களைப்போலன்றிக்கே பகவத்விஷயத்தையொழிய வேறுசிலரைக்கவிபாடுகைக்கு நான் க்ஷமனன்றிக்கே யொழியப்பெற்றேனென்று ப்ரீதராகிறார்.

(சேருமித்யாதி) கொடையாலேசேர்ந்தபுகழுக் கெல்லையில்லாதவனை. அன்றிக்கே, தகுதியான கொடையாலுண்டானபுகழுக் கெல்லையில்லாதவனென்னுதல். அதாவது-ஒருவனொருவனுக்கொரு பசுகொடுத்தானாகில் "இவனுக்கிதுக்கடியென்" என்றிருப்பர்கள்; பெருமாள், சிம்ஹாஸநமும் ஸ்ரீசத்ருஞ்சயனுமகப்படக்கொடுத்து வெறுவியராய்நிற்கிறவளவிலே த்ரிஜடன்வந்தர்த்திக்க, "சரயூதீரத்துக்கிவ்வருகுபட்ட பசுக்களையடையக்கொண்டுபோ" என்று பெருமாள் கொடுக்க, "பெருமாள் கொடுத்தாராகில்சேரும்" என்றார்களிறே; அப்படியே தகுதியானகொடையால் வந்தபுகழுக் கெல்லையில்லாதவனை. இவ்விஷயத்தையாயிற்று கவிபாடுகிறது. (ஓராயிரமித்யாதி) கவிபாடுமிடத்தி லொன்றிரண்டுபேராய், அதுதானும் "ஐளபிளஃ" என்றாற்போலேயாய், ஒருசந்தஸ்ஸிலடங்காதபடியிருக்கையன்றிக்கே, நினைத்தபடி பாசுரமிட்டுக் கவிபாடலாம்படி யநேகந்திருநாமங்களையுண்டாக்கிவைத்த மஹோபகாரகனை. (ஓராயிரம்) ஓரொன்றே கவிபாடுகைக்கு விஷயம்போரும்படி யத்விதீயமாயிருக்கை. (பிரானை) அவற்றையெனக்கு ப்ரகாசிப்பித்த மஹோபகாரகனை. (அல்லாலித்யாதி) இவனையொழிய வேறொருவரைக்கவிபாட நான் சக்தனாகிறிலேன். எதுதான் நீர்மாட்டாதொழிகிறதென்ன (மாரியனையகை) கொடுக்கைக்கு முதலின்றிக்கேயிருக்கிறானொருவனை, கொடைக்கு மேகத்தையொக்குமென்கை. அதாவது-ப்ரயோஜந நிரபேக்ஷமாகக்கொடுக்கையும், கொடுக்கப்பெறாதபோது உடம்பு வெளுக்கையுமாகிற வித்யாதிகள். கையென்றது-கொடை. (மால்வரையொக்குமித்யாதி) கொடையைநினைத்துத் தேம்புகிற தோளைக்குறித்து; கொடுத்துப் பணைத்திருக்கிறதென்றும், இத்தோள்நிழலிலேயன்றோ லோகமாக ஜீவித்துக்கிடக்கிறதென்றும். (பாரிலோர்பற்றையை) போகபூமியிலுள்ளார் சிலராகிலாமிறே; பூமியிலுள்ளார் சிலராய், பற்றையாய். அதாவது-முளைத்தெழுந்து தீய்ந்துபோவன சிலசிறுதூறுண்டாயிற்று; அப்படியே, உத்பத்தியேதொடங்கி விநாசத்தளவும், தனக்குறுப்பாதல் பிறர்க்குறுப்பாதல் செய்யாதவர்களை. அன்றிக்கே, "பாரொன்று - நத்தமாய், அத்தால்-ஒரு குடிப்பற்றின்றிக்கேயிருக்கை. பற்றையை-கைப்பட்டத்தையிறுகப்பிடித்து ஒருவர்க்கொன்றீயாதவர்களை" என்றொருதமிழன் வ்யாக்யாநம்பண்ணினான். "த்ருணஸமன்" என்று சொல்லிப்போருவது. (பச்சைப்பசும்பொய்கள்பேசவே) மெய்கலவாதபொய்களைச்சொல்ல.

ஆயிரம்பேருமுடையபிரானையல்லால் மற்று - பாரிலோர்பற்றை யைப் பச்சைப்பசும்பொய்கள்பேச - யான்கிலேன்........................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (சேருமித்யாதி) இப்படி யுபதேசிக்கச்செய்தேயுமவர்கள் திருந்தாமையாலே ஸ்வலாபாநுசந்தாநத்தால் ப்ரீதரானபடியை சநிதர்ஸநமாக வருளிச்செய்யாநின்றுகொண்டு, "பிரானையல்லால் மற்றியான்கிலேன்" என்றபதத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (வழிபறிக்குமித்யாதி)

கொடை-சேரும்புகழென்னுதல், "சேரும்கொடைபுகழ்" என்னுதல். த்வீதியார்த்தத்தில், "சேரும்" என்றது - கொடைக்கு விசேஷணம். கொடை-தாநம். அவனுடையகொடை தகுதியாயிருக்குமென்னு மத்தை த்ரிஜடவ்ருத்தாந்தமுகேந காட்டுகிறார் (அதாவதித்யாதி) ஸ்ரீசத்ருஞ்சயன்-பெருமாளானை. வெறுவியராய்—இல்லாதவராய். இவ்விஷயத்தை-ப்ரக்ருதகுண விசிஷ்டவிஷய த்தை.

இப்ப்ரகரணத்திலே "ஆயிரம்பேருமுடைய" என்றதுக்குபாவம் (கவிபாடுமிடத்திலித்யாதி) (ஒருசந்தஸ்ஸிலிதி) ஒன்றிரண்டாகிலிறே யிவனுக்குவேண்டின சந்தஸ்ஸி லடங்காதொழிவதென்றபடி. "ஓர்" என்றதுக்குபாவம் (ஓரொன்றேயித்யாதி) இப்போது, "பிரான்" என்றதுக்குபாவம் ( அவற்றையித்யாதி )

கொடை மேகத்தோடு துல்யமாகை யெந்தப்ரகாரத்தாலேயென்ன (அதாவதித்யாதி) மாரி-மேகம். அனைய-சத்ருஸமான. கை-கொடை. (இத்யாதிகள்) என்கிறவாதிசப்தத்தாலே-அர்த்தித்வ நிரபேக்ஷத்வ ஜலஸ்த்தலவிபாகராஹித்யாதிகள் சொல்லப்படுகிறன. வரையோடொத்திருக்கிறதும் திண்ணியதாயிருக்கிறது மெவ்வாகாரத்தாலேயென்ன (கொடையைநினைத்தித்யாதி) தேம்புகிற-இளைக்கிற. *திண்மைக்கர்த்தம் ( இத்தோள்நிழலிலேயித்யாதி ) மால்வரை-பெரியமலை. திண்டோள் - த்ருடமானதோள். மால்வரையொக்குமாகார மிவனுக்கில்லையென்றவோபாதி, திண்மையு மிவனுக்கில்லையென்னுமிடம் கண்டுகொள்வது. அதாவது—தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்ளவும்மாட்டாதே சத்ருவுக்கஞ்சி காடுபாய்ந்துதிரிகிறவனை, "லோகமாக வுன்தோள்நிழலிலே ஜீவித்துக்கிடக்கிறது" என்னுநிற்பர்களென்று.

போகபூமி-ஸ்வர்க்காதிகள். நிர்ந்து-நசித்து. (தூறென்று) இவ்விடத்திலே, த்ருணத்தைச்சொல்லுகிறது. பாரில்-பூமியிலே. ஓர்பற்றையை-நிஷ்ப்ரயோஜநமாயிருப்பதொரு த்ருணத்தையென்னுதல்; பாரொன்று-நத்தமாய், இலோர்-இல்லாதவர்களென்னுதல். நத்தம்-இருப்பிடம். பற்றையென்று - த்ருணமாதல், லோபியாதல். பற்றிக்கொண்டு விடாதேயிருக்குமவனை - பற்றையென்கிறது. முந்தினவர்த்தமே நிர்வஹித்துப்போருவதென்கிறார் (த்ருணசமனித்யாதி)

"பச்சைப்பசும்பொய்" என்று - மிகவும்பொய்யென்றாய் (மெய்கலவாத பொய்யென்கிறார்) பச்சைப்பசுமை-நல்லபசுமை. அதாவது-அல்பமும் வாட்டமில்லாமை. பொய்க்குவாட்டமாவது-மெய்கலக்கை.

அந்வயிக்கிறார் (ஆயிரமித்யாதி) சேரும்கொடைபுகழித்யாரப்ய, பிரானையல்லால்மற்று-பாரிலோர்பற்றையை-மாரியனையகைமால்வரையொக்கும் திண்டோளென்று-பச்சைப்பசும்பொய்கள்பேச-யான்கிலேனித்யந்வய:.................*

# எட்டாம்பாட்டு.

வேயின்மலிபுரைதோளிபின்னைக்குமணாளனை
யாயபெரும்புகழெல்லையிலாதனபாடிப்போய்க்
காயங்கழித்தவன்றாளிணைக்கீழ்ப்புகுங்காதலன்
மாயமனிசரையென்சொல்லவல்லலேனென்வாய்கொண்டே.

## ஆறாயிரப்படி.

(வேயின்) நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகனுய்க்கொண்டு வேயின்மலி புரைதோளிபின்னைக்குமணாளனை கல்யாணநிஸ்ஸீம நிரவதிககுணங்களைப்பாடி யவன்றாளிணைக்கீழ்ப்புகுங் காதலையுடையவனான நான் அவனையொழிய "இந்த ப்ரக்ருதிவஶ்யரானமநுஷ்யரைக்கவிபாடுவேன்" என்றாற்று னென்வாயெனக்கு விதேயமோவென்கிறார்........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரமப்ராப்யபூதனான க்ருஷ்ணனைக்கவிபாடி யவனைப்பெற ஆசைப்பட்டிருக்கிற நான், க்ஷுத்ரரைக்கவிபாடவல்லலேனோவென்கிறார்.

வேயின்-பசுமைக்கும் திரட்சிக்கும் செவ்வைக்கும் வேயொப்பாமிடத்தில். மலி-அதிலும்மிகைத்து. புரை-விளங்குவதான. தோளி-தோளையுடைய. பின்னைக்கு-பின்னைக்கு. மணாளனை-நித்யாபிமதனானக்ருஷ்ணனை, ஆய-ஸ்வரூபாநுபந்தியாய். பெரும்-தனித்தனி அபரிச்சின்நமாய். எல்லையிலாதன-அஸங்க்யாதமான. புகழ்-குணங்களை. பாடி-பாடி. போய்-நெடுங்காலம்நடந்து. காயம்-சரீரத்தை. கழித்து-கழித்து. அவன்-பரமப்ராப்யபூதனானவவனுடைய. தாளிணைக்கீழ்-திருவடிகளிலே. புகும்-ஒதுங்குகையிலே. காதலன்-ஆசையையுடையநான். மாயம்-ப்ரக்ருதிவஶ்யரான. மனிசரை-மநுஷ்யரை. என்வாய்கொண்டு-பகவத்ஸ்துதியோக்யமானவென்வாக்கைக்கொண்டு. என்-எத்தை. சொல்லவல்லேன்-சொல்லவல்லேன்.

போயென்றது-காயங்கழித்து-ஒருதேசவிசேஷத்தேறப்போயென்றுமாம்.*

## ஈடு-எட்டாம்பாட்டு.

நான் பிறரைக்கவிபாடுவேனென்னிலும், என்வாக்கான தவனையொழியப்பாடாதென்கிறார்.

(வேயினித்யாதி) நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனுமாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனுமான ஸர்வேஶ்வரனைக்கவிபாடி யிப்படியிலே யிச்சரீரத்தைக்கழித்து, இதினந்தரம் அடிமைக்கிடாயிருப்பதொரு சரீரத்தைப்பெற்று அவனுக்கடிமைசெய்யவேணுமென் றாசைப்பட்டிருக்கிறநான் என்வாயைக்கொண்டு, நீர்க்குமிழிபோலேயிருக்கிற க்ஷுத்ரரைக்கவிபாடவல்லலேனோவென்கிறார்.

(வேயினித்யாதி) பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் வேயிலும் விஞ்சினவழகையுடைத்தாய், பரஸ்பர ஸத்ருஶமானதோளையுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனை. மலிதல் - மிகுதி. புரை-ஒப்பு. பிறரைக்கவிபாடுகைக்கு யோக்யமான சரீரசம்பந்தமறுக்கைக்கும், விலக்ஷணமான சரீரத்தைப்பெற்றுத் திருவடிகளிலேயடிமை செய்கைக்கும் புருஷகாரமான நப்பின்னைப்பிராட்டியென்கை. அச்சேர்த்தியிலே கவிபாடினநான் வேறுசிலரைக்கவிபாடவோ. இனிக் கைகழியப்போகவல்லாரோ பிராட்டிகைப்புடையிலே நின்றுகவிபாடுகிறவர். (பின்னைக்குமணாளனை) அவள் செவ்விகொள்ள இட்டுப்பிறந்தவனை. (ஆய) ஆயப்பட்டிருக்கை. ஹேயப்ரதிபடமாயிருக்கை. அன்றியே, ஆயவென்றது-ஆனவென்றாய், ஸ்வரூபாநுபந்தியென்றுமாம். (பெரும்புகழ்) ரூபகுணத்தோடு ஆத்மகுணத்தோடு வாசியறவோரோவொன்றே நிரவதிகமாயிருக்கை. (எல்லையிலாதன) இப்படிப்பட்டகுணங்க ளஸங்க்யாதமாயிருக்கை. (பாடிப்போய்க்காயங்கழித்து) [வாணூஹஸ்ர தவத்ரஸ்ஹாயா யாංஜரிதංமயா] [பாண்டரஸ்யாதபத்ரஸ்யச்சாயாயாம்ஜரிதம்மயா] என்று சக்ரவர்த்தி, ப்ரஜாரக்ஷணார்த்தமாகச் சுற்றும்பயணந்திரிந்து மூத்தின்குடைநிழலிலே சரீரத்தை ஜரிப்பித்தாற்போலே, பகவத்குணங்களை ப்ரீதிப்ரேரிதனாய்ச்சொல்லி யிதுவேயாத்ரையாய்ச் சரீரத்தைவிட்டு. (அவனித்யாதி) இத்தைக்கழித்தவநந்தரம், ஸ்வாநுபவம்பண்ணியிருத்தல், ப்ரயோஜநாந்தரங்களைக்கொள்ளுதல் செய்யவிராதே; அடிமைக்குப்பாங்கானசரீரத்தைப்பெற்று, தாய்முலைக்கீழேபோயொதுங்கும் ஸ்தநந்தயப்ரஜைபோலே திருவடிகளின்கீழே யொதுங்குவேனென்னு மபிநிவேசத்தையுடைய நான். (மாயமனிசரை) உத்பத்தியோடே வ்யாப்தமான விநாசத்தையுடையவர்களை. அதாவது-பாட்டத்தொடங்கினகவிமூடிவதற்குமுன்னேமுடியும் மநுஷ்யரை. (என்வாய்கொண்டு-என்சொல்லவல்லேன்) கழுத்துக்குமேலேசொல்லவென்னிலு மிசைகிறதில்லை. (என்வாய்கொண்டு) வேறேசிலர்வாக்காலேபாடினால் பாடலாம். "உநஃவ-ஹிவ்ரூ வாமஃ-ஊத்தாஃ," (மநஃபூர்வோவாகுத்தரஃ) அங்கேகாதலைப்பண்ணிப் புறம்பேசிலரைக்கவிபாடப்போமோ; ஆசைப்படுவதொருவிஷயமாய், பேசுவதொருவிஷயமாயிருக்குமோ. எல்லாவிந்த்ரியங்களுக்கு மடிமநஸ்ஸிறே, அத்தையநுவர்த்திக்குமத்தனையிறே அல்லாதகரணங்கள். இப்போதிப்படிசொல்லுகைக்கு ப்ரசங்கமென்னென்னில்; ப்ராப்தியொத்திருக்கப்புறம்பேசிலர் சிலரைக்கவிபாடக்காண்கையாலே, நான்மூந்தற முன்னமிதில்நின்றும் தப்பப்பெற்றேனென்கிறார். ............................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (வேயினித்யாதி) கவிபாடமாட்டேனென்னுதே, "வாய்கொண்டு-என்சொல்வல்லேன்" என்றதுக்குபாவம் (நான்பிறனாயித்யாதி) பாட்டுக்கெல்லாம் தொகுத்தருளிச்செய்கிறுர் ( நப்பின்னைப்பிராட்டிக்கித்யாதி ) அடிமைக்கீடாயிருப்பதொரு சரீரத்தைப்பெற்றென்றது-அர்த்தசித்தம்.

ப்ரதமபாதத்துக்கர்த்தம் (பசுமைக்குமித்யாதி) "வேயின்" என்றது-பஞ்சமி. அழகையென்றது-அர்த்தசித்தம். நப்பின்னைப்பிராட்டியைச்சொல்லுகிறதுக்கு பாவத்வயம்-ப்ராபகப்ராப்யதசையில் புருஷகாரமாகவென்னுதல், கவிக்குவிஷயமாகவென்னுதல். ப்ரதமம்பாவமாவது (பிறனாயித்யாதி) த்விதீயமாவது (அச்சேர்த்தியிலேயித்யாதி) "தோளி" என்றதுக்கு ரசோக்தியாகபாவம் ( இனிக்கைகழியவித்யாதி ) கைகழிய-கைவிட்டு. கைப்புடை-கைப்பக்கம். குடவரையென்றுத்வநி. "மணாளன்" என்றதுக்குபாவம் (அவள்செவ்வியித்யாதி) செவ்விகொள்ள இட்டுப்பிறக்கை - காந்திசௌந்தர்யாதிகளை யநுபவிக்கைக்காகப்பிறக்கை. இட்டுப்பிறக்கை-ததர்த்தமாகப்பிறக்கை.

ஆயப்பட்டிருக்கை - சோதிக்கப்பட்டிருக்கை. கீழையுமுட்கொண்டுபாவம் (ரூபகுணத்தோடித்யாதி) "பின்னைக்குமணாளன்" என்றதிலே - ரூபகுணமும்சித்தம். "பாடிப்போய்க்காயங்கழித்து" என்றதுக்குவாசனை ( பாண்டரஸ்யேத்யாதி ) அயோத்யாகாண்டே பௌராந்ப்ரதிதசரதஃ, "𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌚𑌰𑌤𑌾𑌹𑌿𑌤𑌂" (இதம்ஶரீரம்க்ருத்ஸ்நஸ்யலோகஸ்யசரதாஹிதம்) இதிபூர்வார்த்தம். "𑌪𑌾𑌣𑍍𑌡𑌰𑌸𑍍𑌯" (பாண்டரஸ்ய) என்றத்தைப்பற்ற ( முத்தின்குடையென்றது ) "போய்" (இதுவேயாத்ரையாய்) காநைகதத்பரராய் யாவத்காலம் சஞ்சரித்தென்றபடி.

"காயம்கழித்து" என்றவநந்தரம், "அவன்தாளிணைக்கீழ்ப்புகுங்காதலன்" என்கையாலே-கேவலரையும் ப்ரஹ்மாதிகளையும் வ்யாவர்த்திக்கிறதென்கிறுர் (இத்தைக்கழித்தவித்யாதி)

கீழ்வாக்யத்தால்பலிதம் (அதாவதித்யாதி) மாயமனிசரை - முடியும்மநுஷ்யரை. மாய்தல்-விநாசம். சொல்லுகிறது வாயாலேயாயிருக்கச்செய்தே, "வாய்கொண்டு" என்றுவிசேஷிக்கிறதுக்கு தாத்பர்யம் ( கழுத்துக்குமேலேயித்யாதி ) இது-சாடு. கழுத்துக்குமேலே-அஹ்ருதயமாக. * முடியானேயிற்கரணங்களாகையாலே யிசைகிறதில்லையென்றபடி. "என்வாய்" என்றதுக்கு - அவதாரிகையில் தாத்பர்யமொழிய தாத்பர்யாந்தரம் (வேறேசிலரித்யாதி) தம்முடைய வாய்கொண்டுசொல்லவொண்ணுமைக்குஹேது ( மநःபூர்வஇத்யாதி ) அங்கேகாதலைப்பண்ணி-மநஸ்ஸங்கே ப்ரவணமாயிருக்க. அங்கேமநஸ்ஸு ப்ரவணமாஞ லிவர்களையும் சொல்லவொண்ணுதோவென்ன (ஆசைப்படுவதித்யாதி) மநஸ்ஸு பூர்வமாய் வாக்குத்தரமாகைக்கடியேதென்ன ( எல்லாவிந்த்ரியங்களுக்குமித்யாதி ) இப்போது-பரரை நிஷேதிக்கிற ப்ரகரணத்திலே. இப்படிசொல்லுகைக்கு - "நான்பிறரைஸ்துதியேன்" என்றுசொல்லுகைக்கு. ப்ரசங்கமென்னென்னில் - "நீர்பிறரைக்கவிபாடும்" என்றுசொன்னருண்டோவென்னில். பிறரை நிஷேதிக்கிற ப்ரகரணத்திலே ஸ்வநிஷ்டோபதேசத்துக்குச் சேர்த்தியுண்டோவென்றபடி. பரிஹாரம் (ப்ராப்தியித்யாதி) கார்த்தார்த்யாநுசந்தாநம்பண்ணுகிறுரென்றபடி. ப்ராப்தி - சம்பந்தம்.

காதலன்-ஆசையையுடையநான். காதல்-ஆசை. வேயினித்யாரப்ய, மாயமனிசனை-என்வாய்கொண்டு-என்சொல்லவல்லேனித்யந்வயஃ......................*

# ஒன்பதாம்பாட்டு.

வாய்கொண்டுமானிடம்பாடவந்தகவியேனல்லே
னாய்கொண்டசீர்வள்ளலாழிப்பிரானெனக்கேயுளன்
சாய்கொண்டவிம்மையும்சாதித்துவானவர்நாட்டையும்
நீகண்டுகொள்ளென்றுவீடுந்தருநின்றுநின்றே.

## ஆறாயிரப்படி.

(வாய்கொண்டு) மநுஷ்யரைக்கவிபாடுகைக் கீடல்லாதப்ரக்ருதியாய்ப்பிறக்கப்பெற்றேன்; சமஸ்தகல்யாண குணோததியாய் சங்கசக்ரதரனாயிருந்த வெம்பெருமான், தன்னுடையபரமௌதார்யத்தாலே யென்னுடையகவிகளுக்குத்தன்னை விஷயமாகத்தந்தருளப்பெற்றேன்; இன்னுமிப்படி யிஹலோகத்திலே தன்னையெனக் கநுபவிக்கத்தந்தருளி, பின்னை சர்வகாலமும் திருநாட்டையும் கைக்கொள்ளென்று அத்திருநாட்டையுமெனக்குத் தந்தருளுமென்கிறார்..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரமபுருஷார்த்த ப்ரதனானவன்றானே விஷயமாயிருக்க, இதரஸ்தோத்ரத்துக்கு நானதிக்ருதனல்லே னென்கிறார்.

வாய் - ப்ராப்தவிஷயஸ்தோத்ரகரணமானவாகிந்த்ரியத்தை. கொண்டு - கொண்டு. மானிடம்-அப்ராப்தவிஷயமானமநுஷ்யரை. பாட-பாடுகைக்கு. வந்த-வந்த. கவியேன் - கவியானவன். அல்லேன்-அல்லேன். ஆய்-வேதாந்தங்களிலேமீமாம்சிக்கப்பட்ட. சீர்-ஆநந்தாதிகுணங்களை. கொண்ட-உடைய. வள்ளல்-மஹோதாரனாய். ஆழி-கவிபாடுவார்நெஞ்சுதன்வசத்திலேயாம்படி நியமித்துக்கொடுக்குந் திருவாழியையுடைய. பிரான்-மஹோபகாரகன். எனக்கே-எனக்கே. உளன்-அசாதாரணவிஷயமாயுளன். அவன்றான் சாய்கொண்ட-அதிசயிதௌஜ்ஜ்வல்யத்தையுடைத்தான. இம்மையும்-ஐஹிகமான அர்ச்சாவதாராநுபவத்தையும். சாதித்து-உண்டாக்கித்தந்து. வானவர் - நித்யசூரிகளதான. நாட்டையும்-பரவிபூதியையும். சேனைமுதலியாரைப்போலே. நீ-நீ. கண்டு-ஆராய்ந்து. கொள்ளென்று-நிர்வஹியென்று. வீடும்-ஸ்வகைங்கர்யஜநிதமானமோக்ஷாநந்தத்தையும். நின்றுநின்று-க்ரமத்திலேநின்றுநின்று. தரும்-கொடுக்கும்.

சாய்கொண்டவென்றுதொடங்கி - "உஜ்ஜ்வலமான வைஹிகைஶ்வர்யத்தையும் ஸ்வர்க்காதிசுகத்தையும் மோக்ஷத்தையும்தரும்" என்பாருமுளர்.........*

## ௯ - ஒன்பதாம் பாட்டு.

பரமோதாரனனவன் என்கவிக்குத்தன்னை விஷயமாக்கிவைத்தபின்பு இதரஸ்தோத்ரத்துக்கதிகாரி யல்லேனென்கிறார்.

(வாய்கொண்டித்யாதி)வாய்வந்தபடிசொல்லவல்லாரிவரோயிறே. "ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய" (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய) "ஐயரையுமாய்ச்சியையுமநுவர்த்தித்துப் பெருமாள்காடேறவெழுந்தருளாநின்றார், நானுமவரை யநுவர்த்தித்துப்போகிறேன்" என்றிளையபெருமாளறிவிக்க; உமக்குமுடிவேணுமென்றபேக்ஷையுண்டாகில், "முடிசூடுகைக்கு யோக்யனாயிருப்பானொருவன்வேணும்" என்றதுக்கிடாக நோன்பு நோலேனோ; அவரையநுவர்த்திக்கைக்காகவன்றோநானும்மைப்பெற்றது "ஸுஹ்ருஜ்ஜநேராமே-ஸ்வநுரக்தஃ" (ஸுஹ்ருஜ்ஜநேராமே-ஸ்வநுரக்தஃ) உபதேசநிரபேக்ஷமாகப் பெருமாள்திருவடிகளுக்கு நீரோபரிவரிறே, நானின்றிருந்து சொல்லவேண்டுவதொன்றுண்டோ. அடிமையிலுண்டானருசி செவிகண்ணுக்கண் டடிமைசெய்யுமவரிறே. அன்றிக்கே [ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே] (ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே) "கருமுகைமாலையை வெய்யிலிலேயிட்டாற்போலே, பெருமாள் தம்சௌகுமார்யம்பாராதே பித்ரநுவர்த்தநம்பண்ணிக் காட்டிலேபோகாநின்றார், என்புகுருகிறதோ" என்றுவயிறெரிந்திருக்கிற சுஹ்ருஜ்ஜநங்களுக்கு நல்லீரிறே. சுஹ்ருஜ்ஜநமென்கிறது-திருத்தாயார்தொடக்கமான படைவீட்டிலுள்ளாரை. அவர்களுக்கு வேர்ப்பற்றான விவரைநோக்கித் தாரீரொன்றும். [ராமே] (ராமே) நடக்கைமிகையாம்படி, வெறுமனேயிருந்தாலு மாகர்ஷகமான வடிவழகையுடையவர். [ராமேப்ரமாதம்மாகார்ஷீஃ] (ராமேப்ரமாதம் மாகார்ஷீஃ) "பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தஃ" (பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தஃ) என்று-அவதாரகாலமேதொடங்கி அந்வயத்தில்தரித்து வ்யதிரேகத்தில் தரியாதவர்க்கு, இன்றாக ஒருப்ரமாதம்புகுருகைக்கு சங்கையில்லையிறே; சம்பாவிதமானதொன்றைச் சொல்லுகிறாளாகவேணுமே. [ப்ராதரிகச்சதி] (ப்ராதரிகச்சதி) அவரும்முடையமுன்னே நடப்பர்கிடீர்; அவ்வழகிலேகண்வைத்து, நீரதிகரித்ததுக்குச் சோர்வுபிறவாதபடி குறிக்கொள்ளும். [அக்ரதஃப்ரயயௌ] (அக்ரதஃப்ரயயௌ) நடைச்சக்ரவத்துப் பிடிக்கலாம்படி. "ஆடல்பாடல்" இத்யாதி. (வாய்கொண்டித்யாதி) அவன்தன்னை யேத்துகைக்குத் தந்தவாயைக்கொண்டு க்ஷுத்ரரைக்கவிபாடுகைக்குப் பிறந்தவனல்லேன். நான்பிறரைக் கவிபாடினாலென்னுடையஸ்ருஷ்டி ப்ரயோஜநமவன் பெற்றானும்படியென்.

* ஸ்வரூபத்திஸ்யவிறேஸ்ருஷ்டி.

( ஆய்கொண்டவித்யாதி ) நீர் “ அவனைக்கவிபாடக்கடவேன் ” என்றிருந்தாலும் ; வேதங்களும் “ யதோவாசோநிவர்த்தந்தே ” ( யதோவாசோநிவர்த்தந்தே ) என்றுமீளுகிற விஷயமன்றோ, கவிபாடப்போமோவென்ன ; அவன் “ பக்தாநாம் ” ( பக்தாநாம் ) என்கிறபடியே தன்னையெனக்காக்கிவைத்தான், எனக்குக்கவிபாடக்குறையென்னென்கிறார். ( ஆய்கொண்டசீர் ) ஆயப்பட்டசீர். ஹேயப்ரத்யநீக கல்யாணகுணங்கள். வள்ளல்-பரமோதாரன். ( ஆழிப்பிரான் ) இக்குணங்களைக்காத்தூட்டவல்ல பரிகரத்தையுடையவன். ( எனக்கேயுளன் ) என்கவிக்கேதன்னை விஷயமாக்கினான். ( ஆழிப்பிரானித்யாதி ) தானும் தன்பரிகரமுமாயிருக்கிறவிருப்பை யெனக்குக்கவிபாடலாம்படி யெனக்குவிஷயமாக்கினான். “ வலக்கையாழி ” இத்யாதி.

( சாய்கொண்டவிம்மையும்சாதித்து ) ஒளியையுடைத்தான ஐஹிகசுகத்தையும்தந்து. சாய்-ஒளி. கொள்கை-உடைத்தாகை. மோக்ஷசுகத்திலும் நன்றாம்படி ஐஹிகத்திலே ஸ்வாநுபவமே யாத்ரையாம்படிபண்ணித்தருகை. ( சாதித்து ) ஐஹிகங்களோடு மேலுள்ளவற்றோடு வாசியற அவனேசாதநமாகக் காணுமிவர்பெறுவது. ( வானவர்நாட்டையும் ) குடியிருப்பாரோ பாதியாயிற்று பரமபதத்தில் ஸ்ரீவைகுண்டநாதனுக்கு, ப்ராப்திதேசம் நித்யசூரிகளிட்ட வழக்காயிருக்கும். “ பவத்விஷயவாஸிநः ” ( பவத்விஷயவாஸிநः ) என்னுமதுவும் தம்பக்கலிலே யாயிருக்கிறது. ( நீகண்டுகொள்ளென்று ) “ க்ருதம்தஸுகுணம்மயா ” ( க்ருதம்தஸுகுணம்மயா ) என்று-ஸ்ரீபண்டாரத்தைவளர்த்துவைத்து, பெருமாள் மீண்டெழுந்தருளினபோதே ஸ்ரீபரதாழ்வான் காட்டிக்கொடுத்தாற்போலே. வானவர்நாட்டையும் நீகண்டுகொள் என்கையாலே-முன்பேயங்கேயுளரான நித்யசூரிகளோடு இன்றுபுக்கவனோடு வாசியற்றிருக்கை. அன்றீன்றகன்றின்பக்கல் வாத்ஸல்யத்தாலே முன்னீன்றகன்றைக் காற்கடைக்கொள்ளும் சுரபியைப்போலே. “ த்வயிகிஞ்சித்ஸமாபந்நே ” ( த்வயிகிஞ்சித்ஸமாபந்நே ) இத்யாதிவத். ( என்று ) இப்படியே ஆதரத்தோடே சொல்லி. ( வீடும்தரும் ) கைங்கர்யசுகத்தைத்தரும். “ மோக்ஷமஹாநந்தः ” ( மோக்ஷாமஹாநந்தः ) ( நின்றுநின்றே ) “ இப்படிமுழுக்கக்கொடுத்தாலும் ‘ இவனுக்குநாமொன்றும் செய்யப்பெற்றிலோம்’ என்று ‘ருணம்ப்ரவ்ருத்தமிவமே’ என்று திருவுள்ளத்தாலே மிறுக்குப்பட்டுநிற்கும்’’ என்றுநம்மாசார்யர்கள்நிர்வஹிக்கும்படி. ஒருதமிழன் ‘‘அடைவடைவே தருஞ்சொன்னவற்றை’’ என்றான். முதல் ஐஹிகத்திலநுபவிப்பித்து, பின்பொருதேச விசேஷத்தைக்காட்டிக்கொடுத்து,பின்புகைங்கர்யசுகத்தைக்கொடுக்குமென்று. அதவா, சாய்கொண்டவித்யாதிக்கு-ஐஹிகத்தில் ஸ்வாநுபவஸம்ருத்தியையும், தேசவிசேஷப்ராப்தியையும்,கைங்கர்யசுகத்தையும்தருமிடத்தில், சாத்மிக்க சாத்மிக்கத்தருமென்றுமாம்..*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( வாய்கொண்டித்யாதி ) "ஆய்கொண்டசீர் வள்ளலா ழிப்பிரா னெனக்கேயுளன், ஆனபின்பு-வாய்கொண்டு மானிடம்பாடவந்த கவியே னல்லேன்" என்றுவிவக்ஷித்தவதாரிகை ( பரமோதாரனித்யாதி )

பாடுவதுவாய்கொண்டேயாயிருக்க, "வாய்கொண்டு" என்றுவிசேஷித்த துக்கு ரசோக்தியாகபாவம் ( வாய்வந்தபடியித்யாதி ) ஏத்துகைக்குறுப்பாகவாக் கு ஸ்ருஷ்டமானபடியேயென்றுஸ்வபாவார்த்தம், வாய்க்குவந்தபடியென்றுசாடு. "விசித்ராதேஹஸம்பத்தி:" (விசித்ராதேஹஸம்பத்தி:) இத்யாதிப்படியே யவனைஸ்துதிக்கக் கடவவாயைக்கொண்டென்றபடி. "ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதி" (ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதி ) இறே. ஏத்துகைக்குறுப்பாக வாக்குஸ்ரு ஷ்டமாயிற்றென்கிறதுக்குத்ருஷ்டாந்தம் (ஸ்ருஷ்டஸ்த்வமித்யாதி) "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே । ராமே ப்ரமாதம்மாகார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி" (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே, ராமேப்ரமாதம்மாகார்ஷீ: புத்ரப்ராதரிகச்சதி ) இத்யயோத்யாகாண்டே லக்ஷ்ம ணம்ப்ரதிசுமித்ரா. "ஸ்ருஷ்டஸ்த்வம்" (ஸ்ருஷ்டஸ்த்வம்) என்றதுக்கர்த்தம் ( ஐ யரையுமித்யாதி ) அபேக்ஷையுண்டாகில்-எனக்கபேக்ஷையுண்டாகில். "அநுரக்த:" ( அநுரக்த: ) என்னுதே "ஸு" என்று விசேஷித்ததுக்கு பாவம் ( உபதேசேத்யாதி ) அப்படிபெருமாளுக்குப் பரிவரோவென்ன, ரசோக்தியா கவுத்தரம் ( அடிமையிலித்யாதி ) ருசி-ருசியாலே. ( செவிகண்ணுக ) திருவனந் தாழ்வானிறே. சக்ஷுஶ்ரவாவிறே. "ஸுஹ்ருஜ்ஜநே ராமே-ஸ்வநுரக்த:" ( ஸுஹ்ருஜ்ஜநேராமே-ஸ்வநுரக்த: ) என்றந்வயித்து, ( உபதேசேத்யாதிவாக்யத் தாலே ) அர்த்தம்சொல்லி, "ஸுஹ்ருஜ்ஜநே-ஸ்வநுரக்த:, ராமே-ப்ரமாதம் மாகார்ஷீ:" ( ஸுஹ்ருஜ்ஜநே-ஸ்வநுரக்த:, ராமே-ப்ரமாதம்மாகார்ஷீ: ) என்ற ந்வயித்திரண்டாமர்த்தம் ( அன்றிக்கேயித்யாதி ) ரமயதீதி-ராம: என்கிறவ்யுத்ப த்தியைப்பற்ற ( நடக்கைமிகையித்யாதி ) "ப்ரமாதம்" என்றதுக்கு-ஹிம்சை யாகவன்றிக்கே, அநவதாநமாக வர்த்தமருளிச்செய்கிறார் ( பால்யாதித்யாதி ) "கச்சதி-ப்ரமாதம்மாகார்ஷீ:" ( கச்சதி-ப்ரமாதம்மாகார்ஷீ: ) இத்யந்வய:. "ப்ரமாதோநவதாநதா" (ப்ரமாதோநவதாநதா) சோர்வு-ப்ரச்யுதி. அப்ப டிநடை ஆகர்ஷமாயிருக்குமோவென்ன (அக்ரதஇத்யாதி) "ப்ர" என்கிற வுபசர்க் கார்த்தம் (நடைச்சக்ரவத்தித்யாதி) ப்ரகர்ஷேணயயௌஎன்றபடி. நடைச்சக்ரவ த்துப்பிடிக்கையாவது-நடைச்சக்ரவர்த்திவந்தானென்று விருதுபிடிக்கவேண்டும் படியிருக்கை. சம்வாதாந்தரம் (ஆடல்பாடலித்யாதி) "உலாவியுலாவி" என்றதி லேநோக்கு. ஆடல்பாடலவைமாறினர்தாமே-ஆடலும்பாடலுமாகிற வவற்றைத்த விர்ந்தார்களித்யர்த்த:. பெரியாழ்வார்திருமொழி மூன்றும்பத் தாருந்திருமொழி நாலாம்பாட்டு. "தேனுகன்" இத்யாதி. கீழ்பரக்க வுபபாதித்தத்தால் பலிதத்தை "வாய்கொண்டு" இத்யாதிக்கு சப்தார்த்தமாகவருளிச்செய்கிறார் (அவன்தன்னையி

த்யாதி) ஏத்துகைக்கு ஸ்ருஷ்டமானவாயைக்கொண்டு க்ஷுத்ரரைக்கவிபாடிஞலோவென்ன (நான்பிறரையித்யாதி) ஸ்ருஷ்டிப்ரயோஜநம் பகவல்லாபமோவென்ன (ஸ்வமுத்திஸ்யேத்யாதி) "ஸ்வமுத்திஸ்ய ஸ்ரீமாநிதி வததி வாசௌ பநிஷதீ" (ஸ்வமுத்திஸ்யஸ்ரீமாநிதிவதத்வாகௌபநிஷதீ) இதி ஸ்ரீரங்கராஜஸ்தவே. "அக்ரத꞉ ப்ரயயௌ ராம꞉ ஸீதா மத்யே ஸுமத்யமா। ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாம ஹ" ('அக்ரத꞉ப்ரயயௌராமஸ்ஸீதாமத்யேஸுமத்யமா।ப்ருஷ்ட்டதஸ்துதநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாமஹ) இத்யாரண்யகாண்டே. "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்தோ லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்த்தந꞉" (பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தோலக்ஷ்மணோலக்ஷ்மிவர்த்தந꞉) இதிபாலகாண்டே.

(கவிபாடப்போமோவென்னவிதி) கவிபாடலாம்படி சுலபனுயிருக்குமோவிதிபாவ꞉. "எனக்கேயுளன்" என்றத்தைக்கடாக்ஷித்துத்தரம் (அவன்பக்தாநாமித்யாதி) ஜிதந்தாயாம் "நதே ரூபம்" (நதேரூபம்) இத்யாதி. "ஆழிப்பிரான்" என்றத்தை "ஆய்கொண்டசீர்" என்றத்தோடேகூட்டிபாவம் (இக்குணங்ளையித்யாதி) காத்தூட்டுகை-காத்தநுபவிப்பிக்கை. இக்குணங்களை யநுபவிக்குமிடத்தில் விரோதியைவாராமல் காத்தூட்டவல்ல பரிகரத்தையுடையவனென்றபடி. "ஆழிப்பிரான்-எனக்கேயுளன்" என்றுமேலேகூட்டிபாவம் (தானுமித்யாதி) அப்படிபாடினுரோவென்ன (வலக்கையாழியித்யாதி) "மலக்குநாவுடையேற்கு" என்றதிலேநோக்கு.

சாய்-சாயை. ஒளி. இம்மை-ஐஹிகசுகம். ஐஹிகசுகத்துக்கொளியேதென்ன (மோக்ஷசுகத்திலுமித்யாதி) பலிதம் (ஐஹிகங்களோடித்யாதி)

நாடு சூரிகளதாஞலிவனுக்கு ஸ்த்தாநமேதென்ன (குடியிருப்பாரித்யாதி) குடியிருப்பார்-கூட்டுக்குடியிருப்பார். "'நித்யவிபூதிசூரிகளது' என்னுமிடத்தில் ப்ரமாணம் 'தேவாநாம் பூரயோத்யா' (தேவாநாம்பூரயோத்யா) இதி ஸ்ருதி" என்றருளிச்செய்வர். சர்வேஸ்வரனைக்குறித்து சேஷபூதர்சொல்லும்பாசுரம் சேஷிக்குமுண்டாயிருக்கிற தென்கிறுர் (பவத்விஷயவாசிந இத்யாதி) "தேவயம் பவதா ரக்ஷ்யா பவத்விஷயவாஸிந꞉। நகரஸ்தோ வநஸ்தோ வா த்வம் நோ ராஜா ஜநேஸ்வர꞉" (தேவயம்பவதாரக்ஷ்யாபவத்விஷயவாஸிந꞉। நகரஸ்த்தோவநஸ்த்தோவாத்வந்நோராஜாஜநேஸ்வர꞉) இத்யாரண்யகாண்டே ராமம்ப்ரதிமுநய꞉. "பவத்விஷயவாஸிந꞉" (பவத்விஷயவாஸிந꞉) இத்யாதிக்கு-சூரிகளுடைய தேசவாசித்வமும் தத்ரக்ஷ்யத்வமும் விவக்ஷிதம். கொடுத்தென்ஞதே, "கண்டுகொள்ளென்று" என்றதுக்குபாவம்-இவனதானத்தையே யிவனுக்குக்கொடுத்தாற்போலேயிருக்கிறதென்று. இத்தைசத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறுர் (க்ருதம்தசகுணமித்யாதி) "அவேக்ஷதாம் பவாந் கோஸம் கோஷ்டாகாரம் புரம் பலம்। பவதஸ்தேஜஸா ஸர்வம் க்ருதம் தசகுணம் மயா" (அவேக்ஷதாம்பவாந்கோஸம்கோஷ்ட்டாகாரம்புரம்பலம்। பவதஸ்தேஜஸாஸர்வம்க்ருதம்தஸகுணம்மயா) இதியுத்தகாண்டே ராமம்ப்ரதிபரத꞉. "வானவர்நா

டு" என்றுவைத்து, "நீகண்டுகொள்" என்று-இந்தசேதநனுக்குமுன்பே யுண்டானத்தைக் காட்டிக்கொடுக்கிறதாகச் சொல்லக்கூடுமோவென்ன (வானவர்நாட்டையுமித்யாதி) (வாசியற்றிருக்கையிதி) வாசியற்றிருக்கைக்கடி-ஸூரிகளிற்காட்டி லிவன்பக்கலுண்டான வாத்ஸல்யாதிசயமென்றுகருத்து. பழையவர்களிற்காட்டிலின்றுவந்தவன்பக்கலிலே வ்யாமோஹமுண்டாகக்கூடுமோவென்ன (அன்றின்றவித்யாதி) இதுக்குப்ரமாணம் (த்வயிகிஞ்சிதித்யாதி) "க்ஷயிகிஂசித் ஸமாபந்நே கிஂகார்யஂ ஸீதயா மம" (த்வயிகிஞ்சித்ஸமாபந்நேகிங்கார்யம்ஸீதயாமம) இதியுத்தகாண்டே ராவணமகுடபங்காநந்தரோ சுக்ரீவம்ப்ரதிராமஃ.

"வீடு" என்று-மோக்ஷமாய், கைங்கர்யசுகத்தைச்சொல்லுகிறது. வீடென்றால்-சுகத்தைக்காட்டுமோவென்ன (மோக்ஷஇத்யாதி) "முக்திர்மோக்ஷோ மஹாநந்தஃ" (முக்திர்மோக்ஷாமஹாநந்தஃ) இதிநிகண்டுஃ. "நின்றுநின்று" என்றதுக்குமுன்றர்த்தம். முந்தினது (இப்படிமுழுக்கவித்யாதி) மிறுக்குப்பட்டு - க்லேசப்பட்டு. மோக்ஷாதிகளைக்கொடுத்தவநந்தரம். "நின்றுநின்று" என்கையாலே-திருவுளத்திற்குறையோடேநின்றமைதோன்றுகிறதென்றபடி. "ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி" (கோவிந்தேதியதாக்ரந்தத்க்ருஷ்ணமாம்தூரவாஸிநம்। ருணம்ப்ரவ்ருத்தமிவமேஹ்ருதயாந்நாபஸர்ப்பதி) இத்யுத்யோகபர்வண்யேகோநபஞ்சாஶேத் ருதராஷ்ட்ரம் ப்ரதிசஞ்சயோக்தக்ருஷ்ணவசநம். இரண்டாமர்த்தம் (ஒருதமிழனித்யாதி) அடைவடைவே-க்ரமேணக்ரமேண. பூர்வவாக்யவிவரணம் (முதலிலைஹிகத்திலித்யாதி) ஐஹிகசுகமாவது-இங்கேயிருந்தநுபவிக்கிற பகவதநுபவசுகம். மூன்றுமர்த்தம் (அதவேத்யாதி)

மானிடம்பாடவந்தகவியேனல்லேன் - மநுஷ்யரைக் கவிபாடுகைக்குப்பிறந்த கவியானவனல்லேன். எனக்கேயுளன்-கவிபாடுகைக்கெனக்கே யசாதாரணவிஷயமாயுள்ளவன். சாதித்து-தந்து. ஆய்கொண்டசீரித்யாரப்ய, நீகண்டுகொள்ளென்று-நின்றுநின்று-வீடும்தரும், ஆனபின்பு-வாய்கொண்டு மானிடம்பாடவந்த கவியேனல்லேனித்யந்வயஃ.........................................................*

## பத்தாம்பாட்டு.

நின்றுநின்றுபலநாளுய்க்குமிவ்வுடனீங்கிப்போய்ச்
சென்றுசென்றாகிலுங்கண்டுசன்மங்கழிப்பானெண்ணி
யொன்றியொன்றியுலகம்படைத்தான்கவியாயினேற்
கென்றுமென்றுமினிமற்றொருவர்கவியேற்குமே.

### ஆறாயிரப்படி.

(நின்று) என்றேனுமாக வொருகாலம் நம்மையறிந்து, நின்றுநின்று பலநாளிஸ்ஸம்சாரத்திலே யிவ்வாத்மாக்களை ப்ரவேஶிப்பிக்கு மிவ்வு

டலத்தைநீங்கிப்போ யிவ்வாத்மாக்களை சம்சாரத்தைக்கழிக்கவேணுமென்று பார்த்தருளி, ததர்த்தமாக வவஹிதனுய்க்கொண்டு ஜகத்ஸ்ருஷ்டிபண்ணியருளின பரமகாருணிகனுடைய கவியானவெனக்கு மற்றொருவரைக்கவிபாடப்போருமோவென்கிறார்.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்துத்யர்த்தமான கரணகளேபரப்ரதனானவனுக்குக் கவியானவெனக்கு வேறொருவனைக்கவிபாடுகை யநுரூபமன்றென்கிறார்.

பலநாள்-காலமுள்ளதனையும். நின்றுநின்று-இடைவிடாதேநின்று. உய்க்கும்-தன்வசத்திலே சேதநனையாக்கும். இவ்வுடல் - இஶ்ஶரீரத்தை. நீங்கி - விட்டு. போய்-போய். சென்றுசென்றாகிலும்-நெடுங்காலங்கழித்துச்சென்றாகிலும். கண்டு-இச்சேதநன் தன்னையபரோக்ஷித்து. சன்மம்-ஜந்மத்தை. கழிப்பான்-கழிக்கைக்காக. எண்ணி-திருவுள்ளம்பற்றி. ஒன்றியொன்றி-ஸ்ருஷ்டிதோறும் நெஞ்சுபொருந்திப்பொருந்தி. உலகம்-லோகத்தை. படைத்தான்- ஸ்ருஷ்டித்தவனுடைய. கவியாயினேற்கு-கவியானவெனக்கு. இனி-இனி. என்றுமென்றும்-காலமுள்ளதனையும். மற்றொருவர் - மற்றொருவனை. கவி-கவிபாடுகை. ஏற்குமே-தகுதியோ............*

## ஈடு - பத்தாம்பாட்டு.

சர்வேஶ்வரன் கவியானவெனக்கு இதரஸ்தோத்ரகரண மநுரூபமன்றென்கிறார்.

(நின்றுநின்றித்யாதி) அநாதிகாலமிடைவிடாதே, உய்க்கும்-செலுத்தும். இவ்வாத்மாவுக்கு பாதகத்வேநநடத்தும். (இவ்வுடல்) கூற்றங்கண்டாற்போலே பயாவஹமாயிருக்கிறபடி. (இவ்வுடல்) வர்த்தமாநசரீரத்தையும், அத்தோடு ஸஜாதீயமான முன்புள்ளசரீரங்களையும். முன்புள்ளவையும், வர்த்தமாநம்போலே யொருபோகியாய்த்தோற்றுகிறதாயிற்றிவர்க்கு. (நீங்கிப்போய்) விட்டுப்போய். (சென்றுசென்றாகிலும்) ஒன்றல்லாவொருஜந்மத்திலேயாகிலும். (கண்டு) நம்மையிவன்கண்டு. (ஜன்மங்கழிப்பானெண்ணி) ஜந்மசம்பந்தமறும்படி பண்ணவேணுமென்று மநோரதித்து. அன்றியே, சென்றுசென்றாகிலும் கண்டென்று - ஒருசொல்லாய்; நெடுங்காலங்கூடவாகிலும் நம்மையறிந்திவை ஜந்மங்களிற்புகாதபடிபண்ணவேணுமென்று சிந்தித்தென்றுமாம். (ஒன்றியொன்றியுலகம்படைத்தான்) " சோம்பாதிப்பல்லுருவையெல்லாம்படர்வித்தவித்தா " என்கிறபடியே, ஒருகால் ஸ்ருஷ்டித்து பலியாவிட்டால் சோம்பிக்கைவாங்காதே, ஒருப்பட்டொருப்பட்டு லோகங்களை ஸ்ருஷ்டித்தவனுடைய. கர்ஷகனொருகால் பயிர்செய்து பதர்த்தால் பின்பும் பயிர்தன்னையேசெய்யுமாபோலே, இவனும் "ஒருநாளல்லாவொருநாளாகிலுமாம்" என்றிறே ஸ்ருஷ்டிப்பது: *பத்தியுழவன் பழம்புனமிறேயிதுதான். ஒருநாளல்லாவொருநாளாகிலும் நம்மையறிந்து, பலநாளுமிடைவிடா

தே யிவ்வாத்மாவுக்கு பாதகமாய்க்கொண்டுநட்த்துகிற விஶரீரத்தை விட்டுப்போய் இனி யிவ்வாத்மாக்கள் பிறவாதபடிபண்ணவேணுமென்று மநோரதித்து, ஒன்றியொன்றி யுலகம்படைத்தானாயிற்று. (உலகம்படைத்தான் கவியாயினேற்கு) அவன் * எதிர்சூழல்புக்குத்திரிந்து பண்ணினக்ருஷிபலித்து, அவனுக்குக்கவியாகப்பெற்றவெனக்கு. (என்றுமென்றுமித்யாதி) காலதத்வமுள்ளதனையும் வேறுசிலரைக் கவிபாடத்தகுமோ. அவன் ஸௌஹார்த்தமாகி யிப்படிபலித்தது, பின்னையெல்லார்க்கும் பலிக்கவேண்டாவோவென்னில்; அவனுடைய ஸங்கல்பந்தானும், சென்று சென்றாகிலுமென்றிறே-ஒருநாளில் பலிக்குமதன்றிறே; ஆகையால் பலிக்கபலிக்கக்காணுமித்தனை. (என்றுமென்றுமித்யாதி) இனிமேலநேகமாயுள்ள காலமெல்லாம் இச்சரீரமுள்ளதனையு மிதுவேயாத்ரையாயிருந்து, மேல் "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்றும், "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" (அஹமந்நமஹமந்நமஹமந்நம்) என்றும் பாடப்புகுகிறவெனக்கு. (மற்றொருவர்கவியேற்குமே) இப்படியிருந்தபின்பு பகவத்வ்யதிரிக்தர்க்குக் கவிபாடுகைபோருமோ. வேறுசிலர்க்கு நான் கவியாகத்தகுமோவென்னுதல், வேறுசிலர் கவியிலே நானந்வயிக்கத்தகுமோ வென்னுதல் ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (நின்றுநின்றித்யாதி) "உலகம்படைத்தான் கவியாயினேற்கு-மற்றொருவர்கவியேற்குமே" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (ஸர்வேஶ்வரனித்யாதி)

"பலநாள்-நின்றுநின்று-உய்க்கும்" என்றந்வயித்தர்த்தம் (அநாதிகாலமித்யாதி) வீப்ஸையாலே-ப்ரதிதிநமு மொருக்ஷணம் விச்சேதமில்லையென்றுதோன்றுகிறது. விவரணம் (இவ்வாத்மாவுக்கித்யாதி) "இ" என்றதுக்குபாவம் (கூற்றமித்யாதி) கூற்றம் - ம்ருத்யு. "இவ்வுடல்" என்றேகவசநமாகச்சொன்னவர்த்தமாநசரீரம் - முன்புள்ளவற்றுக்கு முபலக்ஷணமென்கிறார் (வர்த்தமாநேத்யாதி) (சரீரங்களையும்) சொல்லுகிறதென்று கூட்டுவது. "இவ்வுடல்நீங்கிப்போய்" என்றதுக்கு-வர்த்தமாநமான விச்சரீரம் நீங்கிப்போயென்றிவ்வளவேகொள்ளலாயிருக்க, (முன்புள்ளசரீரங்களையுமென்கிறது) ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்கிறபோதெல்லாம் "இவ்வுடலைக்கொண்டு ஸ்வசரணகமலஸமாஶ்ரயணத்தைப்பண்ணி இவ்வுடலைக்கழிப்பானாகவேணும்" என்று ஸங்கல்பித்திறே கரணகளேபரங்களைக்கொடுப்பது; ஆகையாலே "இவ்வுடல்" என்று - முன்புள்ள சரீரங்களுக்கெல்லா முபலக்ஷணமாகவேணுமென்னுமத்தைப்பற்ற. யத்வா,மேலேயும் "சன்மம்கழிப்பானெண்ணி" என்றிருக்கையாலே, அத்தோடு "இவ்வுடல்நீங்கிப்போய்" என்றது புநருக்தமாகாமைக்காக; "சன்மம்கழிப்பான்" என்கிறது - இனிமேலுண்டாகக்கடவசரீரம் கழிப்பானென்றாகவேணுமே, ஆகையாலே "இவ்வுடல்" என்று - முன்புள்ளசரீரங்களையும் சொல்லுகிறதென்றுமாம். இத்தால் - முன்புள்ளசரீரங்கள், வர்த்தமாநசரீரம், மேலுண்டாகக்கடவசரீரம், இவற்றையெல்லாம்கழிப்பா னிச்சேதநனெ

ன்றீஸ்வரன் சங்கல்பித்திவற்றை ஸ்ருஷ்டிக்குமென்றபடி. சன்மங்கழிப்பானெண்ணி-ஜந்மத்தைக்கழிக்கைக்காக மநோரதித்து. முன்புள்ளசரீரங்களையும் "இவ்வுடல்" என்றுசொல்லும்படியென்னென்ன (முன்புள்ளவையுமித்யாதி) ஜ்ஞாநவைஶத்யத்தாலேயென்றபடி. ஒருபோகியாக-ஏகபோகமாக.

சென்றுசென்றாகிலும் - (ஒன்றல்லாவொருஜந்மத்திலேயாகிலும்) என்னுதல்; அன்றிக்கே, சென்றுசென்றாகிலுமென்று-முழுச்சொல்லாய், (நெடுங்காலங்கூடவாகிலும்) என்னுதல். கண்டு-அறிந்து. சென்றுசென்றாகிலும் கண்டென்றொருசொல்லாயென்றது - சென்றுசென்றாகிலு மென்றொருசொல்லாயென்றபடி.

ஒன்றி - (ஒருப்பட்டு) உத்தரோத்தரம் லோகஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (சோம்பாதித்யாதி) ஒருகாலல்லா வொருகாலாகிலும் பலிக்கிறதென்று ஸ்ருஷ்டிக்கிறானென்றபடி. சோம்பிக்கைவாங்காதேயிந்தப்பலவகைப்பட்ட சம்சாரிசேதநரை யெல்லாரையும் விஸ்த்ருதராக்கின காரணபூதனே யிதி பாசுரார்த்தஃ. பெரியதிருவந்தாதி பதினெட்டாம்பாட்டு. "தாம்பால்" இத்யாதி. உக்தார்த்தம்த்ருஷ்டாந்தேந சமர்த்தயதி (கர்ஷகனித்யாதி) அவனைகர்ஷகனாகவும், லீலாவிபூதியை க்ஷேத்ரமாகவும் சொல்லலாமோவென்ன (பத்தியுழவனித்யாதி) பக்திகர்ஷகனான க்ருஷ்ணனுடைய வநாதியாய்ப்போருகிற சம்சாரமாகிறவிளைநில மிதிபாசுரார்த்தஃ. பத்தி-பக்தி. புனம்-விளைநிலம். நான்முகன்றிருவந்தாதியிருபத்துமூன்றாம்பாட்டு. "வித்துமிட" இத்யாதி. "சென்றுசென்றாகிலுங்கண்டு-நின்றுநின்று பலநாளுய்க்குமிவ்வுடல் நீங்கிப்போய்-சன்மம்கழிப்பானெண்ணி யொன்றியொன்றி யுலகம்படைத்தான்" என்றந்வயித்தர்த்தம் (ஒருநாளல்லாவித்யாதி) ஸ்ருஷ்டியைச்சொல்லி "இவனுடையகவியாயினேற்கு" என்றதுக்குபாவம் (அவனெதிரித்யாதி)

தடஸ்த்தசங்கை (அவன்ஸௌஹார்த்தமித்யாதி) பரிஹாரம் (அவனுடையவித்யாதி) "என்றுமென்றும்-உலகம்படைத்தான் கவியாயினேற்கு" என்றுகூட்டிதாத்பர்யாந்தரம் (இனிமேலநேகமாயுள்ளவித்யாதி) கவியென்று-ஆழ்வாரைச்சொல்லுதல், ப்ரபந்தத்தைச்சொல்லுதல். அதாவது-வேறுசிலரைக்கவிபாடுமவனுகை தகுமோவென்னுதல், வேறுசிலரைக்கவிபாடுகை தகுமோவென்னுதலென்றபடி. வேறுசிலர்கவியிலே நானந்வயிக்கத் தகுமோவென்றது-வேறொருவர்கவிகளைக்கேட்டு சம்பாவிக்கத்தகுமோ வென்றபடி.

சென்றுசென்றாகிலும்கண்டு-நின்றுநின்று பலநாளுய்க்குமிவ்வுடல் நீங்கிப்போய்-சன்மம் கழிப்பானெண்ணி யொன்றியொன்றி இத்யாரப்யாந்வயஃ.......*

---

# பதினொன்றாம்பாட்டு.

---

ஏற்கும்பெரும்புகழ்வானவரீசன்கண்ணன்றனக்
கேற்கும்பெரும்புகழ்வண்குருகூர்ச்சடகோபன்சொல்
லேற்கும்பெரும்புகழாயிரத்துள்ளிவையுமோர்பத்
தேற்கும்பெரும்புகழ்சொல்லவல்லார்க்கில்லைசன்மமே.

## ஆருயிரப்படி.

(ஏற்கும்) ஸ்வோசிதமான கல்யாணகுணங்களை யுடையனுன வானவரீசன் கண்ணன்றனக்கேற்கும் பெரும்புகழான வண்குருகூர்ச்சடகோபன் சொல்லானதன்மைக்கு சத்ருசமானவர்த்தவத்வ மதுரத்வாதிகுணங்களை யுடையவானவாயிரத்துள் ஏற்கும்பெரும்புகழையுடையவிப்பத்தைச்சொல்லவல்லார்க்கில்லை சன்மமென்கிறுர்.................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி சொல்லவல்லார்க்கு ஜந்மமில்லையென்று பலத்தையருளிச்செய்கிறுர்.

ஏற்கும்-பரத்வசௌலப்யங்களுக்குத்தகுதியான. பெரும்புகழ்-குணப்ரதையையுடையனுய். வானவர்-நித்யசூரிகளுக்கு. ஈசன்-நிர்வாஹகனுனமேன்மையோடே. கண்ணன்றனக்கு - சுலபனுயவதரித்தக்ருஷ்ணனுக்கு. ஏற்கும்-ஸ்தோதாக்களாகைக்கநுரூபமான. பெரும்புகழ்-ஜ்ஞாநாதிகுணப்ரதையையுடையராய். வண்-அழகிய. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்த. ஏற்கும்-பகவத்குணுதிப்ரதிபாதநத்துக்கநுரூபமான. பெரும்புகழ்-லக்ஷணப்ரதையையுடைத்தாயிருக்கிற. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே. ஏற்கும்-இதரஸ்தோத்ரத்தைத்தவிர்த்துபகவத்ஸ்தோத்ரத்தைப்ரதிபாதிக்கையாகிற ஸ்வரூபாநுரூபமான. பெரும்புகழ்-குணப்ரதையையுடைத்தாய்க்கொண்டு. ஓர்-அத்விதீயமான. இவைபத்தும்-இவைபத்தையும். சொல்லவல்லார்க்கு - சொல்லவல்லார்க்கு. சன்மம்-இதரஸ்துதிஹேதுவானஜந்மம். இல்லை-இல்லை.

இது-கலித்துறை...........................................................................*

## ஈடு - பதினென்ரும்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழியினியல்மாத்ரத்தை அப்யசித்தவர்களுக்கு, பிறரைக்கவிபாடயோக்யமான ஜந்மமில்லையென்கிறுர்.

(ஏற்குமித்யாதி) தகுதியானமிக்க புகழையுடையனுய் நித்யசூரிகளுக்கு நிர்வாஹகனுய், அம்மேன்மையோடே வந்தவதரித்து மநுஷ்யத்வே பரத்வத்தையுடைய வன்றனக்கு, ஒன்பதாமோத்திலேநின்று மநுஷ்யத்வேபரத்வத்தைப் பரக்கப்பேசாநின்றதிறே. (ஏற்குமித்யாதி) "அவனுபயவிபூதியுக்தன்" என்றுல் தக்கிருக்குமாபோலே, "சர்வேஸ்வரன்கவிகளிவர்" என்றுல் அதுக்குப்போரும்படி யிருக்கிறவாழ்வா ரருளிச்செய்த. (ஏற்கும்பெரும்புகழாயிரம்) "'யதொவாவொ நிவத-ூஜெ' (யதோவாசோநிவர்த்தந்தே) என்றவிஷயத்தை விளாக்கொலைகொண்ட ப்ரபந்தம்" என்றுல் அதுக்குப்போரும்படியான வாயிரம். (இவையுமோர்பத்தேற்கும்பெரும்புகழ்) ஆயிரத்திலு மிப்பத்துத்தகுதியான பெரும்புகழையுடைத்து. அதாவது-இவ்வாத்மாவினுடை

ய ஸ்வரூபத்துக் கநுரூபமாகப் பிறரைக்கவிபாடாதே கொள்ளுங்கோ ளென்றும், ஸ்வரூபப்ராப்தமான விஷயத்தைக்கவிபாட வாருங்கோளெ ன்றுஞ்சொன்ன பத்தாகையாலேசொன்ன சொன்னவேற்றமெல்லாம் த கும்படி யிருக்குமாயிற்று. (இல்லைசன்மமே) நித்யஸூரிகளை "பிறரைக் கவிபாடாதேகொள்ளுங்கோள்" என்றுகற்பிக்கவேண்டுகிறதில்லையிறே; பிறக்கைசுட்டியிறே பிறரைக்கவிபாடவேண்டுகிறது. பிறரைக்கவிபாடா தே கொள்ளுங்கோளென்று கற்பிக்கவேண்டும்படியான தண்ணியஜந்ம த்திலே யங்வயியார்கள். ........................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (ஏற்குமித்யாதி) "இவையுமோர்பத்தும் - சொல்லவல்லார்க் கு-சன்மம்-இல்லை" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை. இயல்-சப்தம்.

மநுஷ்யத்வே பரத்வமெங்கே சொல்லிற்றென்ன (ஒன்பதாமித்யாதி) ஒன்பதாமோத்து-கீதையில் ஒன்பதாமத்யாயம்.

ஆழ்வார்க்குப் புகழாவது-ஜ்ஞாநாதிகுணப்ரதை. போரும்படி-தகும்படி.

விளாக்கொலைகொண்ட-வ்யாபித்த. விவரணம் (அதாவதித்யாதி)

கேவலரைப்போலே ஜந்மநிவ்ருத்தியை பலமாகச்சொல்லுவானென்னென் ன (நித்யஸூரிகளையித்யாதி) பரஸ்தோத்ரத்துக்கடியான ஜந்மமறுகையும் மஹா பலமென்று கருத்து.

க்ரமேணாந்வய:........................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(சொன்னால்விரோதம்.)

ரம்யஸ்தாநாதியோகாதமிதவிபவதஸ்ஸத்பதப்ராபகத்வாத்ஸ்வஸா
யுஜ்யஜ்ஞாநாநந்தவிதரணாத்ஸ்வசேஷிக்ருதிஹ்நாக: । ஸர்வஸ்யாதாவஸ்யா
ஸஹஸ்ரஸ்ராவதரணமபி ஸூக்திஸூக்த்யாஹி ஸம்ஸ்யாமைத்ரமோ
க்ஷஸ்யாத்வாநாவஸ்திதிவிஷயதநம் ஸ்யாஹரந்நித்தாந்ய: (௯௭)

(ரம்யஸ்த்தாநாதியோகாத்) தென்னாதெனாவென்று வண்டுமுரல் திருவேங் கடத்தென்னானை யென்னப்பன்-ரமணீயமான திருமலையிலே பவ்யனைக்கொண்டு நின்றருளுகையாலும்; (அமிதவிபவத:) குளனார்கழனிசூழித்யாதி-ப்ரமஹரமா ண திருக்குறுங்குடியிலே சமக்ரகல்யாண சம்பத்தையுடைத்தா யிருக்கையாலும்; (சத்பதப்ராபகத்வாத்) ஒழிவொன்றில்லாத பல்லூழிதோறூழி நிலாவப்போம் வழியைத்தரும்-நித்யமாக வர்த்திக்கும்படியாக அர்ச்சிராதிமார்க்க ப்ராபகனுகை

யாலும் ; ( சம்யக்ஸாயுஜ்யதாநாத் ) தன்னுகவேகொண்டுசன்மம் செய்யாமையும் கொள்ளுமே-தன்னோடே பரமசாம்யத்தைத் தருமவனுகையாலும் ; ( அநகவிதரணுத் ) கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம்தரும் கோதிலென்வள்ளல்-அர்த்திக்கைக்குயோக்யமான பௌஷ்கல்யத்தையுடையனு யபேக்ஷிதங்களெல்லாவற்றையுங்கொடுத்து மொன்றுங்கொடுத்ததாக வெண்ணுதபரமோதாரனு மாகையாலும் ; ( சர்வசேஷித்வசிஹ்நாத் ) செம்மின்சுடர்முடியென் திருமாலுக்கு-சர்வஸ்வாமித்வ சூசகமான திருவபிஷேகத்தையும் ஸ்ரீய:பதித்வத்தையு முடையனுகையாலும் ; ( ப்ரக்யாதாக்யாஸஹஸ்ரை: ) ஓராயிரம்பேரு முடையபிரானை-ஸ்தோத்ரம்பண்ணுகைக்கீடாக குணசேஷ்டிதாதி ப்ரதிபாதகங்களா யசங்க்யாதங்களான திருநாமங்களையுடைய னுகையாலும் ; ( அவதரணரஸை: ) வேயின்மலிபுரைதோளி பின்னைக்குமணுளனை-க்ருஷ்ணனுயவதரித்தருளி யநேகவிஹாரங்களைப் பண்ணுகையாலும் ; ( புக்திமுக்த்யாபிமுக்யாத் ) சாய்கொண்டவிம்மையும்சாதித்து வானவர்நாட்டையும் நீகண்டுகொள்ளென்று வீடுந்தரும்-இங்கிருந்தநாள் சரீரதாரணுத்யுபயுக்தமான வைஹிகபோகத்தையும், பின்புபரமபதத்தையும் தருமவனுகையாலும் ; ( த்ரைலோக்யோத்பாதநாச்ச ) சென்றுசென்ருகிலும்கண்டு சன்மம்கழிப்பானெண்ணி யொன்றியொன்றி யுலகம்படைத்தான் - சேதநரொருஜந்மமல்லா வொருஜந்மத்திலேயாகிலு முத்தீர்ணராகவேணுமென்றெண்ணி லோகங்களையெல்லாம் ஸ்ருஷ்டித்தருளுகையாலு மெம்பெருமானொருவனுமே ஸ்தோத்ரம்பண்ணுகைக்கு யோக்யனென்றும் தத்வ்யதிரிக்தர்களெல்லா மயோக்யர்களென்றும் "சொன்னல்விரோதம்" என்கிறதசகத்திலே யாழ்வாரருளிச்செய்தாரென்கிருர்................................................................................(௩௨)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

சொன்னுவில்வாழ்புலவீர்சோறுகூறைக்காக
மன்னுதமானிடரைவாழ்த்துதலா-லென்னுகு
மென்னுடனேமாதவனையேத்துமெனும்குருகூர்
மன்னருளால்மாறும்சன்மம். (௨௯)

( சொன்னுவில் ) இதில்-அசேவ்யசேவை யநர்த்தமென்றும் பகவத்சேவை ப்ராப்தமென்றும் பேசுகிறபாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிருர். அதெங்ஙனேயென்னில் ; * முடியானேயில் முடியாதவாசையை யுடையராய்க் கூப்பிட்டவர், "தம்கூப்பீட்டுக்குத் துணையாவாருண்டோ" என்றுலௌகிகரைப் பார்த்தவிடத்திலவர்கள் பகவதர்ஹகரணங்களைக்கொண்டு க்ஷுத்ரமநுஷ்யர்களைக் கவிபாடித்திரிகிற படியைக்கண்டு, அதுபொறுக்கமாட்டாமல், "இப்பழிவகுத்தவிஷயத்தைவிட்டு அப்ராப்தவிஷயத்தைக் கவிபாடுகையீடல்ல" என்று அவர்களுக்கு ஹிதமருளிச்செய்ய, மீளவுமவர்கள் பழையநிலைகளிலேநிற்க அவர்களைவிட்டு

ஸ்வலாபத்தைச்சொல்லி ப்ரீதராகிற * சொன்னால்விரோதத்தினர்த்தத்தை "சொன்னாவில்" இத்யாதியாலே யருளிச்செய்கிறரென்கை.

(சொன்னாவில்வாழ்புலவீர்) பகவத்ஸ்தோத்ரம்பண்ணுகைக்கு பரிகரமான நாக்கைக்கொண்டு பஜீவிக்கவேணுமென்கிற புலவீர்காள். நீங்கள்விசேஷஜ்ஞரல்லீகோளோ. (சோறுகூறைக்காகமன்னுதமானிடனைவாழ்த்துதலாலென்னாகும்) அஶநாச்சாதநாதி க்ஷுத்ரப்ரயோஜநத்துக்காக க்ஷயிஷ்ணுக்களான க்ஷுத்ரமநுஷ்யனைக்கவிபாடி ஸ்தோத்ரம்பண்ணுகையாலென்ன ப்ரயோஜநம்சித்திக்கும். த்ருஷ்டாத்ருஷ்டபலங்களிலொன்றும் சித்தியாது, அநர்த்தமே சித்திக்குமென்றபடி. "என்னாவதெத்தனைநாளைக்குப்போதும் புலவீர்காள் மன்னுமனிசரைப்பாடிப்படைக்கும் பெரும்பொருள்" என்றருளிச்செய்தத்தை நினைக்கிறது. "கோஸஹஸ்ரப்ரதாதாரம்" (கோஸஹஸ்ரப்ரதாதாரம்) "ஸர்வார்த்திநோத்ருஷ்ட்வாஸமேத்யப்ரதிநந்த்யச" (ஸர்வார்த்திநோத்ருஷ்ட்வாஸமேத்யப்ரதிநந்த்யச) என்னும்விஷயமன்றே. (என்னுடனேமாதவனையேத்துமெனும்) "திருவேங்கடத்தென்னானை யென்னப்பனெம்பெருமானுளனாகவே-என்னாவிலின் கவியானொருவர்க்கும்கொடுக்கிலேன்" என்றும், "ஓராயிரம்பேருமுடையபிரானையல்லால் மற்றியான்கிலேன்" என்றும், "பாடிப்போய்க்காயம் கழித்தவன்றாளிணைக்கீழ்புகும் காதலன்மாயமனிசனை யென்சொல்லவல்லேனென் வாய்கொண்டு" என்றும், "வாய்கொண்டுமானிடம்பாடவந்த கவியேனல்லேன்" என்றும், "உலகம்படைத்தான்கவி" என்றும்-தம்முடையவந்ய விஷயவ்ருத்தி நிவ்ருத்தியையும் ஸ்வவ்ருத்தியான பகவத்ஸ்தோத்ர ப்ரவ்ருத்தியையும்முன்னிட்டு, *"திருமாலவன் கவியானவென்றேடேகூட *என்திருமாலான ஸ்ரீய:பதியை *கவிசொல்லவம்மின்" என்றுபரோபதேசம்பண்ணி, பரோபதேசநிரபேக்ஷமாகத்திருந்தினதம்படியையும் பேசினவராய். (குருகூரித்யாதி) திருநகரிக்குநாதரான வாழ்வாரருளாலே அந்யசேஷத்வத்துக்கடியான ஜந்மம்கழியும். *கண்டுசென்மம்கழிக்கவேண்டிற்றாழ்வார்க்கு, இவர்களுக்கு "சூழ்பிறப்பும் மருங்கேவரப்பெறுமே" என்றவாழ்வாரருளாலே பிறவிப்பெருங்கடல்சுவறிற்று. மாறுகையாவது - ஸவாஸநமாகப்போகை. "இவையுமோர்பத்தேற்கும் பெரும்புகழ்சொல்லவல்லார்க்கில்லை சன்மமே" என்றிறேயித்திருவாய்மொழிக்கு பலஸ்ருதியும்......................(உக)

மூன்றும்பத்தில் - ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - உகூ. பாட்டு - ௩உக.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## மூன்றும்பத்து.

## பத்தாந்திருவாய்மொழி.

### சன்மம்பலபல - ப்ரவேஶங்கள்.

### ஆருயிரப்படி.

(சன்மம்பலபல) எம்பெருமானையொழிய மற்றொருவரைக்கவி பாடுகைக்கிடெல்லாத ப்ரக்ருதியாகப்பெற்றபேற்றை யநுசந்தித்துச்சென்றப்ரீதி-கீழ்; இனிமேல்-எம்பெருமானைக்கவிபாடப் பெற்றபேற்றை யநுசந்தித்துச் செல்லுகிறப்ரீதி.............. ..............................*

### பன்னீராயிரப்படி.

பத்தாந்திருவாய்மொழியில், கீழ்-இதரஸ்தோத்ரத்தினுடைய ஹேயத்வாதிகளையும் பகவத்ஸ்தோத்ரத்தினுடைய வைலக்ஷண்யத்தையு முபதேசித்து, இப்படி விலக்ஷணமான பகவத்விஷயத்தை நாம் சர்வப்ரகாரத்தாலு மநுபவிக்கப்பெறுவதே யென்றதிப்ரீதராய்; அநுபாவ்யனான சர்வேஶ்வரனுடைய அவதாரபலமான விரோதிநிரசநத்தையும், அவதாரத்துக்குமூலமான க்ஷீரார்ணவசாயித்வத்தையும், அநவதிகாதிசயயான சர்வவிதபோக்யதையையும், போகப்ரதிசம்பந்தி சமஸ்த விரோதி நிவர்த்தகத்வத்தையும், அர்த்திகளுக்கர்த்திதார்த்தகாரித்வத்தையும், அவதாரதசையிலு மதிமாநுஷசேஷ்டிதத்தையும், அவதாரநிர்வாஹ்யமான லீலாவிபூதியோகத்தையும், இந்தநிலையிலும் பரத்வஸூசகமான லக்ஷ்மீபதித்வத்தையும், சர்வப்ரகாரரக்ஷகத்வத்தையும், சர்வாந்தராத்மத்வத்தையு மநுசந்தித்து, ஏவம்விதனான சர்வேஶ்வரனை சர்வப்ரகாராநுபவம் பண்ணப்பெற்ற வெனக்கொருவைகல்யம், விச்சேதம், மநःபீடை, பிறுக்கு, க்லேசம், அப்ரீதி, அலமாப்பு, துःகம், அவசாதம், விநாசம் என்றுசொல்லப்பட்ட சமஸ்ததுரிதங்களு மில்லையென்றதிப்ரீதராய், இப்பத்துக்கு தாத்பர்யமான ஸ்வரூபத்தினுடைய ததேகாநுபவத்வத்தையு முபபாதித்து முடிக்கிறார்..................................................*

### ஈடு.

கீழ்த்திருவாய்மொழியிலே - பிறரைக்கவிபாடுகிறவர்களை பகவத்விஷயத்தில் மீட்கப்பார்த்து, அவர்கள்மீளாதொழிய, இவர்களைப்போலேயாகாதே நான்முந்தறமுன்னம் இதரஸ்தோத்ரம்பண்ணுகைக் கநர்ஹகரணனாகப் பெற்றேனென்கிறார்; இதரஸ்தோத்ரம்பண்ண அநர்ஹகரணனான மாத்ரமேயோ, பகவத்ஸ்தோத்ரத்துக் கர்ஹகரணனாகவும்பெற்றேனென்கிறார் - இத்திருவாய்மொழியில். * முடியானேயில் - தாமவனை யநுபவிக்கக்கோலி, அதுபெருமையாலே தாமும்தம்முடைய கரண

க்ராமமும் பெருவிடாய்ப்பட்டுக்கூப்பிட்டார்; தாமிவ்விஷயத்திலே கூப்பிடுகிறுப்போலே சம்சாரிக ளிதரவிஷயங்களைப்பற்றிக் கூப்பிடுகிறபடியையநுசந்தித்து, அவர்களநர்த்தத்தைக்கண்டவாறேதமக்கு * முடியானேயில் பிறந்தவிழவுதானே பேறுய்த்தோற்றிற்று; அதுக்குமேலே யாஸ்ரிதார்த்தமாக கர்மவஸ்யரைப்போலே சம்சாரிகள்நடுவே அவர்களோடொத்த வடிவைக்கொண்டவதரித்த திவ்யாவதாரங்களையும், அவதாரசித்தமான திவ்யசேஷ்டிதங்களையும், வடிவழகையும், பூஷணங்கள்சேர்ந்தசேர்த்தியையும், திவ்யாயுதங்கள் சேர்ந்தசேர்த்தியையும், அகடிதகடநாசாமர்த்யத்தையும், இவற்றையெல்லா மநுபவிக்கப்பெற்றேன், எனக்கொருகுறைகளு மில்லையென்கிறுர்...............................................*

## ஜீயர் அரும்பதம்.

சன்மம்பலபலப்ரவேசம். சங்க்ரஹசங்கதி (கீழ்த்திருவாய்மொழியிலே யித்யாதி) இத்திருவாய்மொழியிலே-இப்படிநிரதிசய ப்ரீதியுண்டாகைக்கு ஹேதுவைக்காட்டாநின்றுகொண்டு விஸ்தரசங்கதி (முடியானேயித்யாதி)

"சன்மம்பலபலசெய்து" என்றத்தைப்பற்ற (திவ்யாவதாரங்களையுமென்றது) "அசுரரைமாளப்படைபொருத" என்றத்தைப்பற்ற (திவ்யசேஷ்டிதங்களென்றது) "எங்குமழகமர்" இத்யாதியைப்பற்ற (வடிவழகையுமென்றது) "மட்டவிழ்தண்ணந்துழாய்முடியான்" என்றத்தைப்பற்ற (பூஷணங்களென்றது) "சங்கொடுசக்கரம்வில்" இத்யாதியைப்பற்ற (திவ்யாயுதங்களென்றது) "தக்கமில்ஞானம்" என்கிறபாட்டிலே - (அகடிதகடநாசாமர்த்யம்.)..............*

---

## பத்தாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

சன்மம்பலபலசெய்துவெளிப்பட்டுச்சங்கொடுசக்கரம்வில்
லொண்மையுடையவுலக்கையொள்வாட்டண்டுகொண்டுபுள்ளூர்ந்துலகில்
வன்மையுடையவரக்கரசுரரைமாளப்படைபொருத
நன்மையுடையவன்சீர்பரவப்பெற்றநானேர்குறைவிலனே.

## ஆருயிரப்படி.

அசங்க்யேய திவ்யாவதாரங்களைப்பண்ணி * சகலமநுஜநயநவிஷயதாங்கதனுய் சங்கசக்ரசார்ங்கமுசல கட்காதிதிவ்யாயுத தரனுய்க்கொண்டுஇந்தலோகத்திலே அதிபலபராக்ரமரான அசுரராக்ஷசரை ஸஸைந்யமாக நிரசித்தமஹாகுணத்தையுடைய ஞனவனுடைய அந்தக்குணங்களையிப்படிவாழ்த்தப்பெற்ற வெனக்கினியென்ன குறையுண்டென்கிறுர்*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில்,அநேகாவதாரமுகத்தாலே ஆஶ்ரிதவிரோதி நிரசநம்பண்ணி னவன்குணங்களை ஸ்துதிக்கப்பெற்றநானொருகுறையுடையேனல்லேனென்கிறார்.

"அஜாயமாநஃ" (அஜாயமாநஃ) என்கிறபடியே அகர்மவஶ்யனாய்வைத்து, பல-தேவாதிஜாதிபேதத்தையும். பல-ஒரோன்றிலவாந்தரபேதத்தையுமுடைத்தான. சன்மம்-ஜந்மவிசேஷங்களை. செய்து-சங்கல்பமாத்ரத்தாலன்றியே இதரசஜாதியனாய்க்கொண்டுபண்ணி. வெளிப்பட்டு - அதிந்த்ரியமானவிக்ரஹம் சம்சாரிகள்கண்ணுக்கு விஷயமாம்படி ப்ராதுர்ப்பவித்து. அவதாரப்ரயோஜநமான சாதுபரித்ராண துஷ்க்ருத்விநாசத்துக்குறுப்பாயுள்ள, சங்கொடுசக்கரம் - தன்னில்தான்பிரியாத சங்கசக்ரங்கள். வில்-ஸ்ரீசார்ங்கம். ஒண்மையுடைய-விரோதிகளைபக்நராக்கும். உலக்கை-முசலாயுதம். ஒள் - எதிரிகளையழிக்குமிடத்தில்கைவிடாத. வாள்-நந்தகம். தண்டு - கதையாகிறவிவற்றை. கொண்டு - உபகரணமாகக்கொண்டு. புள்-பெரியதிருவடியை. ஊர்ந்து-நடத்தி. உலகில்-தனக்குரக்ஷணீயமானலோகத்தில். வன்மை-இவ்வழகுகண்டுபடாதவன்மையை. உடைய-உடையரான. அரக்கரை-ராக்ஷசரையும்.அசுரரை-அசுரர்களையும். மாள-மாண்டுபோம்படியாக.படை-எதிரெதிரேபடைவகுத்து. பொருத - பொருத. நன்மை - செவ்வையாகிறநன்மையை. உடையவன்-உடையவனுடைய. சீர்-சௌர்யவீர்யபராக்ரமங்களையும் ஆஶ்ரிதவிஷயத்தில் ஸ்வாமித்வவாத்ஸல்யங்களையும். பரவ - பரக்கப்பேசிஸ்துதிக்க. பெற்ற-பெற்ற. நான்-நான். ஓர்குறைவு-தேசாந்தரத்திலும் காலாந்தரத்திலும் தேஹாந்தரத்திலும் பகவத்விஷயத்தில் இன்னவம்சமநுபவிக்கப்பெற்றிலோமென்றொருகுறை. இலன்-உடையேனல்லேன்.

குறைவு - வைகல்யம்.........................................................................*

## ஈடு-முதற்பாட்டு.

முதற்பாட்டில்-இத்திருவாய்மொழியிற்சொல்லுகிறஅர்த்தத்தை சங்க்ரஹேண அருளிச்செய்கிறார்; திவ்யாயுதங்களோடே யவன்வந்தவதரிக்கும்படியை யநுசந்திக்கப்பெற்ற எனக்கொருகுறைகளு மில்லையென்கிறார்; (ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக அநேகாவதாரங்களைப்பண்ணி அவர்கள்விரோதிகளை நிரசியாநின்றுள்ள எம்பெருமானுடைய கல்யாணகுணங்களைப்புகழப்பெற்ற வெனக்கொருகுறைவில்லையென்கிறார்.) (சன்மம்பலபலவித்யாதி) அகர்மவஶ்யனனதான் கர்மவஶ்யருங்கூடப் பிறவாதஜந்மங்களை யேறிட்டுக்கொண்டுவந்து ரக்ஷிப்பானாயிருக்கிறபடியை யநுசந்திக்கப்பெற்ற வெனக்கொருகுறைகளு மில்லையென்கிறார்; சர்வேஶ்வரனாய்மேன்மையடித்திவற்றேடேதோய்வின்றிக்கே யிருக்கையன்றிக்கே, இவைபட்டவிடாைத் தானுமொக்கவந்துபட்டு ரக்ஷிப்பானாயிருக்கிறபடியை யநுசந்திக்கப்பெற்ற வெனக்கொரு குறைகளுமில்லையென்கிறார்.

(சன்மம்பலபலசெய்து) அநேகாவதாரங்களைப் பண்ணுகிற்குமாயிற்று. இவ்வவதாரத்தை யடியறியுமவர்கள் அவதாரத்துக்கவ்வருகு பரத்வத்திலும் போகமாட்டாதே யிறேயிருப்பது; "தஸ்ய தீராஃ பரி

ஜாநந்தியொகிழ” (தஸ்யதீராঃபரிஜாநந்தியோநிம்) என்னக்கடவதிறே, “ஜநகஜவஜெஷிவ)ழ” (ஜந்மகர்மசமேதிவ்யம்) என்று-தானும்நெஞ்சுளுக்கி யிறேயிருப்பது, ‘‘பிறந்தவாறும்’’ என்று-தீமதாமக்ரோஸரரான இவரும்வித்தராயிருப்பர். ஜ்ஞாநாதிக்யமாயிருந்ததிறே ஆழங்காற்படுகைக்குஹேது. இனியதுவிஞ்சின விடங்களிலே மிகவுமாழங்காற்படுகைக்குடலாமித்தனையிறே. (பல) ஓரவதாரத்தை யநுசந்தித்தால் ‘‘எத்திறம்’’ என்றுவித்தராமவர் அநேகாவதாரத்தைப் பொறுக்கமாட்டாரிறே. (பலபல) கர்மவஶ்யன்பிறவிக்கெல்லை காணநின்றோம், அகர்மவஶ்யன் பிறவிக்கெல்லை காண்கிறிலோமென்றதாயிற்று. கர்மத்துக்கவதியுண்டு, அநுக்ரஹத்துக்கவதியில்லை. தன்னுடைய ஜந்மங்களைத்தானே சொல்லப்புக்காலும் ‘‘வஹுநி’’(பஹூநி)என்னும்படியாயிறேயிருப்பது.(பலபல) தேவாதியோநிபேதங்களும், அவாந்தரபேதங்களும். (செய்து) ஆவிர்ப்பாவமாத்ரமன்றிக்கே, கர்மவஶ்யன் பத்துமாசம் கர்ப்பவாசம்பண்ணுமாகில் ‘‘ததஸ்வாஜஷெஸஊவெஸ’’(ததஶ்சத்வாதஶேமாஸே) என்று-பன்னிரண்டு மாசம் கர்ப்பவாசம்பண்ணி வந்தவதரிக்கை. ‘‘பன்னிருதிங்கள்வயிற்றிற்கொண்டவப்பாங்கிலுல்’’ என்றார்களிறே பெற்றவர்களும். ‘‘விதாவ-ரெணவிதூஊநெஹ்ரநியொநளநாவெஷவிநுநதெதംவ்ருஹநு’’ (பிதாபுத்ரோணபித்ருமாந்யோநியோநௌநாவேதவிந்மநுதேதம்ப்ருஹந்தம்)என்கிறபடியே-சர்வகாரணபூதனனதான் ஸ்வகார்யங்களிலேயொன்றுக்குக்கார்யமாயிறே வந்தவதரித்தது. (வெளிப்பட்டு) ‘‘நவக்ஷுஷாஹ்ருஹ்ஹெத’’ (நசக்ஷுஷாக்ருஹ்யதே) என்கிறதன்னைக் கண்ணுக்குவிஷயமாக்கி. எப்போதும்போரகிறவிடத்திலே நிதிகண்டெடுப்பாளைப்போலே, அப்ராக்ருததிவ்ய சம்ஸ்த்தாநத்தை யிதரஸஜாதீயமாக்கிவந்தவதரிக்கை. அப்ராக்ருதமான த்ருஷ்டிகளாலே சதாதர்ஶநம்பண்ணக்கடவடிவைமாம்ஸசக்ஷுஸ்ஸுக்களுக்கு விஷயமாக்கிக்கொண்டுவந்துகாட்டுகை. * என்றேனும் கட்கண்ணாற்காணாத வவ்வுருவையிறே கண்ணுக்கிலக்காக்குகிறது. (சங்கொடித்யாதி) தன்னில்பிரியாத சௌப்ராத்ரம்; ‘‘ஶஹூதாஊதஷுகஷுஹஸெதந’’ (கச்சதாமாதுலகுலம்பரதேந) இத்யாதிவத். அவதரிக்கும்போது திவ்யாயுதங்களோடேவந்தாயிற் றவதரிப்பது. இங்குநின்றும்போவார்க்கு ப்ராப்யராமவர்களோடேகூடவந்தாயிற்றவதரிப்பது. கண்டநுபவித்தவநந்தரம் ‘‘அடியார்கள்குழாங்களை-உடன்கூடுவதென்றுகொலோ’’ என்று ப்ரார்த்திக்கவேண்டாதபடி யவர்களோடேகூட்க்காட்சிகொடுக்கை. (சங்கொடுசக்கரம்) ஒன்றேயமைந்திருக்கச்செய்தே. (வில்)ஒருகொத்துக்கொருவரைக்கொண்டு வருகையன்றிக்கே. (ஒண்மையுடையவுலக்கை) ஒண்மை-அறிவு. * கருதுமிடம் பொருதும்படி ஜ்ஞாநாதிகராயிருப்பார்களே. (ஒள்வாள்தண்டுகொண்டு) கையிலே திவ்யாயுதங்களைக்கண்டால் ‘‘இவைவினைக்குடலாக தரித்துக்கொண்டிருக்கிறான்’’ என்

திருப்பார்சம்சாரிகளாயிற்று; அங்ஙனன்றிக்கே நித்யசூரிகள், "அழகுக்குடலாக தரித்துக்கொண்டிருக்கிறான்" என்றிருப்பர்கள்; இவருமவர்களிலேயொருவராகையாலே அழகுக்குடலாகவே யநுசந்திப்பது. ஒருகற்பகத்தருப்பணைத்துக்கணுத்தோறுமரும்பினாற்போலேயாயிற்றுவடிவும்திவ்யாயுதங்களும்சேர்ந்தசேர்த்தியிருப்பது.(புள்ளூர்ந்து) இதுவுமொருசேர்த்தியழகு; * பொன்மலையின்மீமிசைக்கார்முகில்போலேயிறேயிருப்பது. (உலகில்)இவ்வழகுதானொருதேசவிசேஷத்தே நித்யசூரிகளநுபவிக்குமதிறே, அங்ஙனேயிருக்கச்செய்தே யிங்கேயநுபவிக்கும்படிபண்ணினான். (வன்மையித்யாதி) இவ்வழகைக்கண்டு நெஞ்சுநெகிழாதவர்களான ராக்ஷசர்களையு மசுரர்களையும். இவ்விஷயத்தில் தம்முடைய மென்மைபோலே யெல்லார்க்கு மிருக்குமோவென்றிருக்கிறார். * நினைதொறும்சொல்லுந்தோறும் நெஞ்சிடிந்துகுமேதமக்கு. அவனைக்காணுதபோது "ஈஸ்வரோஹம்" என்றிருக்கலாம்; திவ்யாயுதங்களோடே அழகியவடிவழகைத்திருவடி திருத்தோளிலேகண்டால், "சரணம்" என்னுதல், எழுத்துவாங்குதல்செய்கையன்றிக்கே யெதிரிடுவதே!பையல்களென்கிறார். அழுகுக்கிலக்காய்வாழமாட்டாதே, அம்புக்கிலக்காய் முடிந்துபோவதே! என்கிறார்.(மாளப்படைபொருத)அவர்கள் முடியும்படியாயுதத்தாலேபொருத. யுத்தத்திலேபுக்குநின்று, ஆரோதமடித்தல், "ஸ்வகீயஜந்துக்கள்" என்றுந்ருஸம்ஸ்யங்கொண்டாடுதல் செய்யாதே,"ஆஸ்ரிதவிரோதிகள்"என்றழியச்செய்தநன்மையுடையவன்.அன்றியே, சங்கல்பத்தாலேசெய்யாதே, அவதரித்து யுத்தம்பண்ணிமுடித்த நன்மையாகவுமாம். * மழுங்காதஞானமேபடையாக மலருலகில் தொழும்பாயார்க்களித்தாலுன்சுடர்ச்சோதிமறையுமிறே" என்றாரிறேயிவர்தாம். அக்நீஷோமீயஹிம்ஸைகளில் கைகூசினுறில்ப்ராயஸ்சித்தம்பண்ணவேண்டாநின்றதிறே. (நன்மையுடையவன்சீர்பரவப்பெற்றநான்) அவனுடைய கல்யாணகுணங்களை யக்ரமமாகச்சொல்லப்பெற்றநான். (ஓர்குறைவிலனே) முதலிலே சம்சாரிகளைப்போலே யறியாதொழிதல்; அவதரித்துக்கண்ணுக்கிலக்காய், பாசுரமிட்டுப்பேசநிலமன்றிக்கேயிருத்தல்; சிசுபாலாதிகளைப்போலே, "நம்மிலேயொருத்தன்" என்று பரிபவித்துமுடிந்துபோதல்; ஸ்ரீவிஸ்வரூபத்தி லர்ஜுநனைப்போலே நீச்சுநீராதலன்றிக்கே, இவ்விஷயத்தைப்புகழப்பெற்ற வெனக்கொருகுறைகளுமில்லையென்கிறார். "ஸொஸ்நுதெஸவ ஸாநகாந" (ஸோஸ்நுதேஸர்வாந்காமாந்) என்றொரு தேசவிசேஷத்திலே யநுபவிக்கக்கடவ குணநுபவத்தை யிங்கே யநுபவிக்கப்பெற்றவெனக்கு, "பரமபதத்திற்போகப்பெற்றிலேன்" என்கிறகுறையுண்டோ...*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (சன்மமித்யாதி) இத்திருவாய்மொழியிற்சொல்லுகிறவர்த்தத்தையென்றது - பகவத்ஸ்தோத்ரத்துக்கர்ஹகரணராகப்பெறுகையாலே ஹ்ருஷ்ட

ராகையாகிறவர்த்தத்தையென்றபடி. திவ்யாயுதங்களோடே இத்யாத்யவதாரிகா சதுஷ்டயத்துக்கும்-அந்வயபேதேநபேதமாசக்கொள்வது. "சங்கொடுசக்கரம்" என்றுதொடங்கி, "தண்டுகொண்டு - சன்மம் பலபலசெய்துவெளிப்பட்டவன் - சீர்பரவப்பெற்றநானோர்குறைவிலன்" என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (திவ்யாயுதங்களோடேயித்யாதி) ஏதத்விவரணம் (ஆஶ்ரிதேத்யாதி) இதுக்கு - "அசுரரைமாளப்படைபொருத" இத்யாதியிலேநோக்கு. "சன்மம்பலபலசெய்துவெளிப்பட்டு-புள்ளூர்ந்து" இத்யாதி, மேலெல்லாம்கூட்டியருளிச்செய்கிறார் (அகர்மவஶ்யனுனவித்யாதி) ஏதத்விவரணம் (சர்வேஶ்வரனுயித்யாதி) இந்தவவதாரிகைக்கு-சிலஸ்ரீகோசங்களிலேபாடமில்லை. இந்தவவதாரிகா சதுஷ்டயமும்-ஒரோபதங்களிலே நோக்காக உத்தரோத்தரவிவரணமாதல்.

ஜந்மம் த்யாஜ்யமாயிருக்க ஈடுபடக்கூடுமோவென்ன (இவ்வவதாரத்தையித்யாதி) (அடியறியுமவர்கள்) "அடி-நிர்ஹேதுகக்ருபை" என்றறியுமவர்களென்றபடி. "அவதாரத்திலேயீடுபட்டிருப்பர்கள்" என்றதுக்குப்ரமாணம் (தஸ்யேத்யாதி) தீராஃ-ஜ்ஞாநாதிகாஃ. பரிஜாநந்தி-பரிதோஜாநந்தியென்றுய், சுற்றிச்சுற்றிப்பார்ப்பர்களென்றபடி. ப்ரமாணம்காட்டி அநுஷ்டாநமுங்காட்டுகிறுர் (ஜந்மகர்மசேத்யாதிவாக்யத்வயேந) "ஜந்மகர்மசமேதிவ்யம்" "பஹூநிமேவ்யதீதாநி" இத்யாதிகீதாயாம்.லிகிதம். தீமதாமக்ரேஸரர்க்கு வித்தராகக்கூடுமோவென்ன (ஜ்ஞாநாதிக்யமித்யாதி) ஆழங்காற்படுகை-மக்நமாகை. சேதநன் பிறவிக்கெல்லையுண்டாகைக்கும், அவன்பிறவிக்கெல்லையில்லாமைக்கும் ஹேதுவையருளிச்செய்கிறுர் (கர்மத்துக்கித்யாதிவாக்யத்வயேந) "பிறவிக்கெல்லையில்லை" என்றதுக்கு பகவதுக்தியுங்காட்டுகிறுர் (தன்னுடையவித்யாதி) "பலபல" என்றமீமிசைக்கு-அசங்க்யேயமென்று கீழேசொல்லி, தேவாதிபேதேந பேதஞ்சொல்லுகிறதென்றர்த்தாந்தரம் (தேவாதீத்யாதி) "செய்து" என்றதுக் கர்த்தத்வயம்-பத்துமாசமன்றிக்கே பன்னிரண்டுமாசம் கர்ப்பவாசம்பண்ணியென்னுதல், ஸ்வகார்யங்களிலேயொன்றுக்குக்கார்யமாய்ப்பிறந்தென்னுதல். முந்தினவர்த்தம்(ஆவிர்ப்பாவமாத்ரமித்யாதி)பாலகாண்டே, "ததஶ்சத்வாதஶேமாஸே சைத்ரேநாவமிகேதிதௌ" (ததஶ்சத்வாதஶேமாஸேசைத்ரோநாவமிகேதிதௌ) இத்யாரப்ய, "கௌஸல்யாஜநயத்ராமம் ஸர்வலக்ஷணஸம்யுதம்." (கௌஸல்யாஜநயத்ராமம்ஸர்வலக்ஷணஸம்யுதம்) "பன்னிரண்டுமாசம்கர்ப்பவாசம்பண்ணி" என்னுமதுக்கு ப்ரமாணந்தரம் (பன்னிருதிங்களித்யாதி) பன்னிரண்டுமாசம் வயிற்றிலேபேணிவைத்துக்கொண்டிருந்தவந்தநன்மையாலே யிதிபாசுரார்த்தஃ. பாங்கு-நன்மை. க்ஷேமமென்றபடி. பெரியாழ்வார்திருமொழி மூன்றும்பத் திரண்டாந்திருமொழி யெட்டாம்பாட்டு. ஸ்வகார்யங்களிலேயொன்றுக்குக்கார்யமாகப்பிறந்தென்றிரண்டாமர்த்தம் (பிதாபுத்ரேணேத்யாதி) (யோநியோநௌ) யோநௌயோநௌ. யோனிகள்தோறும். அவதாரங்கள்தோறுமென்றபடி. பிதா-ஜகத்பிதா. சர்வகாரணபூதனென்றபடி. புத்ரேணபித்ருமான்-புத்ரனைப்பிதாவாகவுடையவன். ஸ்வகார்யங்களுக்குக்கார்யமாயிருப்பனென்றபடி.(நாவேதவிதித்யாதி) "அஜாயமாநோ பஹுதா விஜாயதே தஸ்ய தீராஃ பரிஜாநந்தி யோநிம்" (அஜாயமாநோபஹுதாவிஜாயதேதஸ்ய தீராஃபரிஜாநந்தியோநிம்) "பிதா புத்ரேண பித்ருமாந்" (பிதாபுத்ரேண பித்ருமாந்) இத்யாதி ஶ்ருதிகளையறியாதவனிந்த வவதாரமஹாத்ம்யத்தையறியாதே, "பரப்ரஹ்மத்துக்குஜந்மமுண்டோ" என்று விசிகித்ஸைபண்ணுவனென்றபடி. "பிதாபுத்ரேண" என்றதுக்கர்த்தம் (சர்வகாரணபூதனுனவித்யாதி)

"வெளிப்பட்டு" என்றதுக்கு சப்தார்த்தம் (நசக்ஷுஷேத்யாதி) "வெளிப்பட்டு" என்றபதசாமர்த்யத்துக்குபாவம் (எப்போதுமித்யாதி) (போலே) என்றவநந்தரம்-காணும்படியென்றுசேஷம். "நசக்ஷுஷா க்ருஹ்யதே" (நசக்ஷுஷா க்ருஹ்யதே) இத்யாதிவாக்யவிவரணம் (அப்ராக்ருதமானவித்யாதி) "கண்ணுக்கவிஷயம்" என்கிறதுக்குப்ரமாணாந்தரம் (என்றேனுமித்யாதி) ஒருநாளும்காண்கைக்குப்பரிகரமல்லாதபுறக்கண்ணாலே காணவொண்ணாத அந்தத்திருமேனியை யிதிபாசுரார்த்தஃ. பெரியதிருவந்தாதி யிருபத்தெட்டாம்பாட்டு.

"சங்கொடுசக்கரம்" என்கிற த்ருதீயைக்குபாவம் (தன்னிற்பிரியாதவித்யாதி) இதுக்கு த்ருஷ்டாந்தம் (கச்சதேத்யாதி) "சங்கொடு" என்றுதொடங்கி, "தண்டுகொண்டு-சன்மம்பலபலசெய்து" என்றந்வயித்துபாவம் (அவதரிக்கும்போதித்யாதி) அவற்றோடேயவதரிக்கைக்கு ப்ரயோஜநமேதென்ன (இங்குநின்றுமித்யாதி) அநுபாவ்யனான தான்வந்தவதரித்தாற்போராதோ, திவ்யாயுதங்களோடே வந்தவதரிக்கவேணுமோவென்ன (கண்டநுபவித்தவித்யாதி) "ஒடு" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (ஒன்றேயமைந்திருக்கச்செய்தேயென்று) சௌந்தர்யாநுபவாதிமுகத்தாலே சாதுபரித்ராண துஷ்க்ருத்விநாசாதிகளுக்கொன்றேயமைந்திருக்கச்செய்தேயென்றபடி. ஒருகொத்துக்கொருவனாயென்றது - ஆயுதவர்க்கத்துக்குத் திருவாழியைக்கொண்டு வருகையன்றிக்கேயென்றபடி. ஒண்மை-அறிவும், அழகும். ஒண்மை-ஆயுதங்களுக்கெல்லாம் விசேஷணமாகக்கண்டுகொள்வது. உபபாதநம் (கருதுமிடமித்யாதி) வாளுக்குவிசேஷணமானவொண்மையையும் - எல்லாவற்றுக்கும் விசேஷணமாக்கி, இத்தால்-ப்ராப்யமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (கையிலேயித்யாதி) இந்தவொண்மை-அழகு. ஆக, ஜ்ஞாநாதிகருமா யழகியருமாயிருப்பர்களென்றபடி. "தேஜோபலைஶ்வர்யமஹாவபோதஸுவீர்யஶக்த்யாதிகுணைகராஶிஃ" (தேஜோபலைஸ்வர்யமஹாவபோதஸுவீர்யஶக்த்யாதிகுணகராஶிஃ) என்றது-ஒன்றின்விசேஷணமெல்லாவற்றுக்குமானதுக்குத்ருஷ்டாந்தமாகக்கண்டுகொள்வது. வினை-யுத்தம். நித்யசூரிகளப்படியிருந்தாலிவர்க்கேதென்ன (இவருமித்யாதி) திவ்யாயுதங்களழகுக்குடலாமாகாரத்தை ரூபகமாகவருளிச்செய்கிறார் (ஒருகற்பகத்தருவித்யாதி) கணுத்தோறும்-கணுக்கள்தோறும்.

வன்மை-காடிந்யம். அவர்களுக்கு நெஞ்சுநெகிழ்ச்சியில்லாமை சித்தமாயிருக்க, அத்தைச்சொல்லுகிறதுக்குத் தாத்பர்யம் (இவ்விஷயத்திலித்யாதி) மென்மை-மார்த்தவம். இவர்க்குமென்மையுண்டென்னு மதுக்குப்ரமாணம் (நினைதொறுமித்யாதி) அவ்வழகைக்கண்டு நெஞ்சுநெகிழாத ப்ரகாரத்தை ஆஶ்சர்யப்படுகிறார் (அவனையித்யாதி) பையல்கள்-க்ஷுத்ரர்கள். (அழகுக்கிலக்காயித்யாதி) விவரணமாதல், மேலுக்கவதாரிகையாதல். "தண்டுகொண்டு" என்றத்தை-மேலேகூட்டி பாவாந்தரம் (அவர்கள்முடியும்படியித்யாதி) படை-ஆயுதமும், யுத்தமும். மாளும்படிபொருதாலது நன்மையோ, பரஹிம்ஸைநன்மையாமோவென்ன: ஆஶ்ரிதார்த்தமாகையாலே நன்மையென்கிறார் (யுத்தத்திலேயித்யாதி) (ஆரோதமித்யாதி) அர்ஜுநனைப்போலே யாரோதமடித்தல், ஆந்ருஶம்ஸ்யம் கொண்டாடுதலென்றபடி. ஆரோதம்-நிவ்ருத்திவ்ரதம். "அஹிம்ஸாபரமோதர்மஃ" (அஹிம்ஸாபரமோதர்மஃ) என்று பரஹிம்ஸைபண்ணவொண்ணாதென்றிருத்தலென்றபடி. சங்கல்பத்தாலேசெய்தால்-அதுநிறமாகாதே குணத்துக் கவத்யமாமென்னு மதுக்குப்ரமாணம் (மழுங்காதவித்யாதி) "ஆஶ்ரிதவிரோதிகள்" என்றழித்தாலும் ஹிம்ஸைதோ

ஷமன்றேவென்ன ( அக்நீஷோமீயேத்யாதி ) இத்தால் - " அஹிம்ஸாபரமோ யதர்ம: " (அஹிம்ஸாபரமோதர்ம8) இத்யாதிக்கிவர்கள் விஷயமன்றென்றபடி.

" ஓர்குறைவிலன் " என்கையாலே - சம்பாவிதமான குறைகளைக்காட்டுகிறார் (முதலிலேயித்யாதி) நீச்சுநீராவது-தறைகாணவொண்ணுமை. "குறைவிலன்" என்றதுக்குத்தாத்பர்யம் (ஸோஸ்நுதஇத்யாதி) யத்வா, "குறைவிலன் " என்றதுக்கிரண்டாம் தாத்பர்யமாதல்.

உலகில்-சங்கொடுசக்கரம்வில் இத்யாரப்ய, தண்டுகொண்டு-சன்மம்பலபலசெய்துவெளிப்பட்டு; மீளவும், சங்கொடுசக்கரமித்யாரப்ய, க்ரமேணுந்வய:...*

---

## இரண்டாம்பாட்டு.

---

குறைவிற்றடங்கடற்கோளரவேறித்தன்கோலச்செந்தாமரைக்கண்,ணுறைபவன்போலவோர்யோகுபுணர்ந்த வொளிமணிவண்ணன்கண்ணன்,
கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவியசுரரைக்காய்ந்தவம்மா
னிறைபுகழேத்தியும்பாடியுமாடியும்யானெருமுட்டிலனே.

### ஆருயிரப்படி.

(குறைவில்) இப்படியெம்பெருமானுடைய திவ்யாவதார திவ்ய சேஷ்டிதங்களைத் திரளவநுபவித்து, பின்னையவற்றைத் தனித்தனியேயநுபவிக்கிறார்.

தன்னுள்ளே யெம்பெருமான் கண்வளர்ந்தருளுகையாலேகுறைவற்றவாப்தகாமமான தடங்கடலிலே * பணுமணிவ்ராதமயூகமண்டலப்ரகாசமாநோதர திவ்யதாமனுயிருந்த திருவநந்தாழ்வான்மேலே யேறியருளி தத்ஸம்ஸ்பர்ஸஜநித நிரதிசயசுகாநுபவநிரதனுயிருந்து, ஆஸ்ரிதபரித்ராணுர்த்தமாக வசுதேவக்ருஹேவதீர்ணனுய், ஹேயப்ரத்யநீகனுய், கறையணிமூக்குடைப் புள்ளைக்கடாவியசுரரைக்காய்ந்தவம்மான் நிறைபுகழ்களை நிரஸ்தசமஸ்த ப்ரதிபந்தகனுய்க்கொண்டேத்தியும் பாடியுமாடியுமநுபவிக்கப்பெற்றேனென்கிறார்........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவ்விரோதிநிரஸநார்த்தமான வவதாரத்துக்கு மூலமான க்ஷீரார்ணவசாயியினுடைய ரக்ஷணர்த்த ப்ரவ்ருத்தியால்வந்தபுகழை ப்ரீதிபூர்வகமாகவநுபவிக்கப்பெற்றநானெரு விச்சேதமுடையேனல்லேனென்கிருர்.

குறைவில்-தன்னுடைய ஸம்ஶ்லேஷத்தாலே பரிபூர்ணமாய். தடம்-கண்வளருகைக்கிடமுடைத்தான. கடல்-கடலிலே. கோள்-பெருமிடுக்கனை. அரவு-திருவநந்தாழ்வான்மேல். ஏறி-ஏறி. தன்-தன்னீஶ்வரத்வஸூசகமான. கோலம்-அழகையுடைத்தாய். செம்-சிவந்த. தாமரை-தாமரைபோலேயிருக்கிற திருக்கண்கள்மலரும்படி. கண்ணுறைபவன்போல-உறங்குவான்போலே. ஓர்-அத்விதியமான. யோ

ரு - திவ்யாத்மஸ்வரூபாநுசந்தாநத்திலும் ஜகத்ரக்ஷணசிந்தையிலும். புணர்ந்த-பொருந்தி. மணி-தகட்டிலழுத்தினமாணிக்கம்போலே. ஒளி-பேரொளியையுடைத்தான. வண்ணன்-வடிவையுடையனாய். கண்ணன்-அக்கிடையைவிட்டு "𑌆𑌗𑌤𑍋 𑌮𑌥𑍁𑌰𑌾𑌂 𑌪𑍁𑌰𑍀𑌂" ( ஆகதோமதுராம்புரீம் ) என்று க்ருஷ்ணனாயவதரித்து. கறை-அண்டம்பக்வமாவதற்குமுன்னேயுடைக்கையாலே அக்ரத்திலேகருகுதலாகிற வடையாளத்தை. அணி-ஆபரணமாகவுடைத்தான. மூக்குடை - திருமூக்கையுடைய. புள்ளை-பெரியதிருவடியை. கடாவி-நடத்தி. அசுரரை-அசுரரை. காய்ந்த-ஸ்வப்ரதாபத்தாலே நசிப்பித்த. அம்மான் - சர்வாதிகனுடைய. நிறை - பரிபூர்ணமான. புகழ்-விஜயப்ரதையை. ஏத்தியும்-ப்ரீதியுக்தனாய்க்கொண்டு ஸ்தோத்ரம்பண்ணியும். பாடியும்-இசையிலேவைத்துப்பாடியும். ஆடியும்-ஹர்ஷத்தாலேந்ருத்தம்பண்ணியும்வர்த்திக்கிற. யான் - நான். ஒரு - ஒரு. முட்டு - விச்சேதம். இலன்-உடையேனல்லேன்.

முட்டு-விலக்கு. கறையணிமூக்கென்று - விரோதிகளைத்துண்டிக்கையாலே கறையேறினமூக்கென்றுமாம். கோள் - மிடுக்கு. ஒளியுமாம்......................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

முதற்பாட்டில் - திருவவதாரங்களைச்சொன்னார், இதில்-திருவவதாரகந்தமாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்து, அங்குநின்றும் ஸ்ரீவசுதேவகுமாரனாய்வந்து திருவவதாரம்பண்ணி ஆஸ்ரிதவிரோதிகளை யழியச்செய்த க்ருஷ்ணனுடைய புகழைப்பேசப்பெற்ற எனக்கொருதட்டில்லை யென்கிறார்.

( குறைவிற்றடங்கடல் ) நானேயன்று, என்னிலும் குறைவற்றாருண்டு. " தடங்கடல் " என்னாநிற்கச்செய்தே, குறைவிற்றடங்கடலென்றது - " திருமேனிநீதீண்டப்பெற்று-மாலும்கருங்கடலேயென்னோற்றாய் " என்னுமாபோலே அவனோட்டை ஸ்பர்ஸசுகத்தாலே குறைவற்றிருக்கை. யசோதைப்பிராட்டி க்ருஷ்ணனைத்தன்மடியிலேவளர்த்தி யுகக்குமாபோலே, சர்வேஸ்வரனைத்தன்னுள்ளே யிட்டுக்கொண்டு அத்தாலேயுகந்து குறைவற்றிருக்கை. ( தடங்கடல் ) அசங்குசிதமாகக் கண்வளர்ந்தருளும்படி யிடமுடைத்தானகடல். ( கோளரவேறி ) கோளென்று-ஒளியாய், திருமேனியோட்டை ஸ்பர்ஸத்தாலே நிரவதிகதேஜஸ்ஸையுடையனான திருவநந்தாழ்வான்மேலே யேறியென்னுதல் ; அன்றிக்கே, கோளென்று-மிடுக்காய், " 𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑌲𑍈𑌕𑌧𑌾𑌮𑌨𑌿 " ( ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி) என்கிறபடியே, சர்வேஸ்வரனும் சர்வேஸ்வரியுங்கூடித் துகையாநின்றால் பொறுக்கைக்கீடான தாரணசாமர்த்யத்தையுடையனாயிருக்குமென்னுதல். (அரவு) மென்மை, குளிர்த்தி, நாற்றம், இவற்றை ப்ரக்ருதியாகவுடையனாயிருக்கை. ( தன்னித்யாதி ) வெறும்புறத்திலே யாலத்திவழிக்கவேண்டும்படியாய், சர்வைஸ்வர்யசூசகமாய், பெரியபிராட்டியாரோட்டைக் கலவியாலேவந்த ஆநந்தசூசக

மாய், அப்போதலர்ந்த செவ்வித்தாமரையை யோருபமைசொல்லலாம்படி அழகியதாய்ச்சிவந்திருந்துள்ள திருக்கண்கள். (உறைகை - உறங்குகை) கண்ணுறைகை - கண்வளர்ந்தருளுகை. கண்வளருகையென்றுபேராய், ஜகத்ரக்ஷணசிந்தாயுக்தனுகை. (ஓர்யோகுபுணர்ந்த) "சகலப்ராணிகளும் நம்மைக்கிட்டிக்கரைமரஞ்சேர்ந்ததாம் விரகேதோ!" என்று இவற்றினுடைய ரக்ஷணோபாயசிந்தைபண்ணினால், அவ்வநுசந்தாநம்பொருமையாலே நாக்குலரும்; அப்போது, கர்ப்பூரநிகரம் வாயிலேயிடுவாரைப்போலே, "ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்" (ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்) என்று - தன்னைத்தானே யநுசந்தியாநிற்கும். இப்படி யநுசந்தித்தவாறே ரக்ஷணோபாயந்தோற்றுமே (ஒளிமணிவண்ணன்கண்ணன்) ரக்ஷ்யவர்க்கத்தைத் தன்வடிவழகாலே கரைமரஞ்சேர்கைக்காக க்ருஷ்ணனாய்வந்தவதரித்தவன். * ஆட்கொள்ளத்தோன்றியவாயர்தங்கோவிறே. ஒளியையுடைய நீலமணிபோலேயிருக்கிற வடிவையுடைய க்ருஷ்ணன். (கறைபணியித்யாதி) ப்ரதிபக்ஷத்தைக்கொன்று கறைகழுவ அவசரமின்றிக்கேயிருக்கையாலே கறையேறி அதுவே யாபரணமாயிருக்கும் மூக்கென்னுதல்; அன்றிக்கே, தாயார் "புத்ரமுகங்காணவேணும்" என்னுமபிநிவேசத்தாலே மூட்டையாயிருக்கிற பருவத்திலே யொருவுத்யோகத்தைப்பண்ணினாளாய், அத்தாலோரடையாளம்பிறந்து, அதுதான் எம்பெருமானுக்கு ஸ்ரீவத்ஸத்தோபாதியாய், அத்தையாபரணமாகவுடைய புள்ளென்றுமாம். (கடாவி) ரதாதிகளைநடத்துமாபோலே, திருமேனியோட்டை ஸ்பர்ஶத்தாலேதிமிர்ந்து, வடிம்பிட்டுத் தாக்கிநடத்தவேண்டியிருக்கிறபடி. "த்வதங்க்ரிஸம்மர்த்தகிணாங்கஶோபிநா" (த்வதங்க்ரிஸம்மர்த்தகிணாங்கஶோபிநா) என்னக்கடவதிறே. (அசுரரைக்காய்ந்த) இப்படிபெரியதிருவடியை நடத்தாநின்றுகொண்டு ஆசுரவர்க்கத்தைநசிப்பித்த. ஆஶ்ரிதருடையபோகோபகரணமே ஆஶ்ரிதவிரோதிநிரசநபரிகரமுமென்கை. (அம்மான்) இப்படி சிறியத்தைப்பெரியதுநலியாதபடிநோக்கும் நிருபாதிகசேஷி. (நிறைபுகழித்யாதி) இந்தரக்ஷணத்தாலே குறைவற்றபுகழை, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஏத்தியும்பாடியும், ப்ரேமபாரவஶ்யத்தாலே இருந்தவிடத்திலிராதே யாடியும் வர்த்திக்கிறநான், பகவத்போகத்துக்கொரு ப்ரதிஹதியுடையேனல்லேனென்கிறார். மூட்டுவிலக்கு ..........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (குறைவிலித்யாதி) வ்ருத்தாநுவாத பூர்வகமாகப் பாட்டெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (முதற்பாட்டிலித்யாதி)

என்னிலும் குறைவற்றாருண்டென்றது-அவன் சீர்பரவிக்குறைவற்றவென்னிலும், திருமேனிதிண்டப்பெற்றுக் குறைவற்றாருமுண்டென்றபடி; தமக்கு பாஹ்

யஸம்ஶ்லேஷமில்லையிறே. தாம்குறைவற்றது - கீழ்ப்பாட்டிலே, “சீர்பரவப்பெற்ற நானோர்குறைவிலன்” என்றதைப்பற்ற. கடலுக்குக்குறைவறுதி-பரப்பாலேயோவென்ன (தடங்கடலித்யாதி) (திருமேனியித்யாதி) முதற்றிருவந்தாதி பத்தொன்பதாம்பாட்டு. “மாலும்கருங்கடலே” இத்யாதி. சர்வகாலமு மவன்றிருமேனியை நீஸ்பர்ஶிக்கப்பெற்று, அந்தஸ்பர்ஶசுகத்தாலே மயங்காநிற்கிற கறுத்தகடலே, இப்பேறுபெறுகைக் கென்னசாதநாநுஷ்டாநம்பண்ணினை யித்யர்த்தஃ. த்ருஷ்டாந்தபூர்வகமாகவிவரணம் (யசோதையித்யாதி) கோள்-தேஜஸ்ஸும், மிடுக்கும். (ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநேத்யாதி) ஸ்தோத்ரே. “தயாஸஹாஸீநம்” (தயாஸஹாஸீநம்) இத்யாதி. தன்கோலம்-தன்னதானகோலத்தையுடையவிதிசப்தார்த்தஃ. கோலம்-அழகு. ஆலத்திவழிக்க - ஆலத்தியெடுக்க. த்ருஷ்டிபரிஹாரம்பண்ணவென்றபடி. வெறும்புறத்திலே யாலத்திவழிக்கவென்றது - ஒருவொப்பனையால்வந்தவழகுக்கன்றிக்கே ஸ்வதஃ உண்டானவழகுக் காலத்திவழிக்கவேண்டும்படியாயென்றபடி. இத்தால்-இதரநிரபேக்ஷஸ்வாபாவிக சௌந்தர்யத்தையுடைய திருக்கண்களென்றபடி. “செம்” என்றதுக்குபாவம் (சர்வைஶ்வர்யேத்யாதிவிசேஷணங்கள்) “போல” இத்யாதிக்குபாவம் (கண்வளருகையென்றித்யாதி) “போல” என்கையாலே (போரயென்றது) “யோகஸ்ஸந்நஹநோபாயத்யாநஸங்கதியுக்திஷு” (யோகஸ்ஸந்நஹநோபாயத்யாநஸங்கதியுக்திஷு) என்றதில்-உபாயத்தையும் த்யாநத்தையுமடைவேகாட்டுகிறார் (சகலேத்யாதி) ரக்ஷணோபாயசிந்தைபண்ணினாலென்னுமளவும் - ஓரர்த்தம். அவ்வநுசந்தாநமென்றுதொடங்கி-இரண்டாமர்த்தம். ஓர்-அத்விதீயம். யோகுபுணர்ந்த-ரக்ஷணோபாயசிந்தைபண்ணுகிறவென்றும், ஸ்வாத்மத்யாநம்பண்ணுகிறவென்று மர்த்தத்வயம். “ஆத்மமாயாமயீம்திவ்யாம் யோகநித்ராம்ஸமாஸ்திதஃ। ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்மதுஸூதநஃ” (ஆத்மமாயாமயீம்திவ்யாம் யோகநித்ராம்ஸமாஸ்த்திதஃ। ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்மதுஸூதநஃ) இதிஷஷ்டேம்பே.

“உபாயசிந்தைபண்ணி” என்றதுக்கநுகுணமாக மேலிற்பதத்துக்கவதாரிகை (இப்படியித்யாதி) இப்படியநுசந்தித்தவாறே-ஆத்மத்யாநம் பண்ணினவாறேயென்றபடி. தோற்றுமே-அவதாரமே யுபாயமென்றென்றபடி. கனாமரம்சேர்கைக்கு க்ருஷ்ணனாய்வந்தவதரித்தானென்னு மதுக்குப்ரமாணம் (ஆட்கொள்ளவித்யாதி) எல்லாரையு மடிமைகொள்ளுகைக்காகவந்தவதரித்த கோபநிர்வாஹகனையித்யர்த்தஃ. பெரியாழ்வார்திருமொழி முதற்பத்தேழாந்திருமொழி சாற்றுப்பாட்டு. சப்தார்த்தம் (ஒளியையித்யாதி)

“சுடாவி” என்றதக்குஸ்வாரஸ்யம் (ரதாநிகளையித்யாதி) நிமிர்ந்து-ஸ்தப்தமாய். வடிம்பிட்டுத்தாக்கினால் துஃகரூபமாயிராதோவென்ன; போக்யமாயிருக்குமென்கிறார் (த்வதங்க்ரீத்யாதி) ஸ்தோத்ரே. வடிம்பிட்டுத்தாக்கி-தநிபோட்டுக்கிளப்பி. “புள்ளைக்கடாவியசுரரைக்காய்ந்த” என்றதுக்குபாவம் (ஆஶ்ரிதருடையவித்யாதி) ஆஶ்ரிதனானவன் ஈஶ்வரனையநுபவிக்குமிடத்திலதுக்கு வர்த்தகத்வேநோபகரணமாயிருக்குமென்றபடி.

ப்ரதிஹதி-ப்ரதிபந்தகம்.........................................................*

# மூன்றாம்பாட்டு.

முட்டில்பல்போகத்தொருதனிநாயகன்மூவுலகுக்குரிய
கட்டியைத்தேனையமுதைநன்பாலைக்கனியைக்கரும்புதன்னை
மட்டவிழ்தண்ணந்துழாய்முடியானைவணங்கியவன்றிறத்துப்
பட்டபின்னையிறையாகிலும்யானென்மனத்துப்பரிவிலனே.

## ஆறாயிரப்படி.

(முட்டில்) நித்யசித்தாசங்க்யேயபோகனாய், நிரஸ்தசமாப்யதிகனாய், சர்வேஶ்வரனாயிருந்துவைத்து, மநுஷ்யலோகத்திலே மநுஷ்யசஜாதீயதயா வசுதேவக்ருஹேவதீர்ணனாய், சர்வலோகத்துக்கும் பொதுவாய் பரமபோக்யபூதனான எம்பெருமானைவணங்கி யவன்றிறத்துப்பட்டபின்னையென்மநஸ்ஸில் துஃகமெல்லாம்போயிற்றென்கிறார்............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரவதிக சர்வப்ரகாரபோக்யதையை யநுபவித்தநான் ஒருமநஃபீடையையுடையேனல்லேனென்கிறார்.

மூவுலகுக்கு-த்ரிவிதசேதநாசேதநங்களுக்கு. உரிய - அசாதாரணபூதனாய். முட்டில்-அவிச்சிந்நமாய். பல்-பஹுவிதமான. போகம் -போகஸம்ருத்தியையுடைய. ஒரு-அத்விதீயனான. தனிநாயகன்-ப்ரதாநநாயகனாய். நன்-அந்தர்ப்பஹிஸ்சரஸநமான. கட்டியை-கருப்புக்கட்டி. நன் - சர்வரஸஸமவாயமான. தேனை - தேன். நன்-நித்யபோக்யமான. அமுதை-அம்ருதம். நன்-ஸ்வாபாவிகரஸமானநன்மையையுடைய. பாலை-பால். நன் - அப்போதேநுகரவேண்டும்பக்வமான. கனியை - கனி. நன்-கணுத்தோறுமினிதான. கரும்புதன்னை-கரும்பு. என்னலாம்படி சர்வவிதபோக்யதையையுடையனாய், மட்டு - இந்தபோக்யதாஸூசகமாய் மதுஸ்யந்தியாய். அவிழ்-விகசிதமாய்க்கொண்டு. தண்-குளிர்ந்து. அம்-அழகியதான. துழாய்-திருத்துழாயாலே யலங்க்ருதமான. முடியானை - திருவபிஷேகத்தையுடையவனை. வணங்கி-இந்தபோக்யத்வசேஷித்வங்களுக்குத்தோற்றுவணங்கி. அவன்றிறத்து-அவன்விஷயத்திலே. பட்டபின்னை-அநந்யார்ஹமாம்படி யுட்பட்டபின். யான்-பரிபூர்ணவிஷயாவகாஹியானநான். இறையாகிலும்-ஏகதேசமாகிலும். பரிவு-இதரவிஷயசம்பாவிதமான அலாபவைகல்ய விச்சேததுஃகோத்தரத்வாதிநிபந்தநமான பரிப்பானது. என்-என். மனத்து-மநஸ்ஸில். இலன்-உடையேனல்லேன்.

பரிவு-பரிப்பாய், மநஃபீடையென்கிறபடி. மூவுலகுக்குரிய கட்டியென்று-சேஷித்வத்தோபாதிபோக்யதையும் சாதாரணமென்றுமாம்........................*

## ஈடு_மூன்றாம்பாட்டு.

சர்வேஶ்வரனுடைய போக்யதாநுசந்தாந ப்ரீதிபலாத்காரத்தாலே அவனுக்கடிமைசெய்கையிலே ப்ரவ்ருத்தனானவெனக்கு, க்ஷுத்ரவிஷயப்ராவண்யத்தால்வரும் ஹ்ருதயதுஃகமில்லையென்கிறார்.

(முட்டிலித்யாதி) சிலநாள்சென்றவாறே முட்டுப்படக்கடவதன் றிக்கே, அசங்க்யேயமான போகங்களையுடையனுய் அத்விதீயனுன தனி நாயகன். அதாவது-தன்னை "நாயகன்" என்றால், பின்னையிரண்டாம்விர லுக்காளில்லாதபடியிருக்கை. ப்ரஹ்மாதிகளுக்கு மேகாதிபத்யஞ்சொல்ல க்கடவது, அவர்களை வ்யாவர்த்திக்கைக்காக - அத்விதீயனுனதனிநாயக னென்கிருர். மூவுலகுக்குரிய - (ஒருதனிநாயகன்) என்று கீழேகூட்டுவ து. ((முட்டில்பல்போகம்) ஐஸ்வர்யகைவல்யங்களை வ்யாவர்த்திக்கிற து.) "த்ரைலோக்யமபிநாதேநயேநஸ்யாந்நாதவத்தரம்" (த்ரை லோக்யமபிநாதேநயேநஸ்யாந்நாதவத்தரம்) என்கிறபடியே. [சர்வலோக ஶரண்யாய என்று] என்னேபாதி பெருமாளுக்குங்களால் சொல்லலாவ துண்டோவென்னும்படியிறேயிருப்பது. அன்றிக்கே, (மூவுலகுக்குரிய- கட்டியைத்தேனை என்று) போக்யதையும் சர்வசாதாரணமாயிருக்கை.(க ட்டியை) உள்ளோடு புறம்போடு வாசியற ரஸகநமாயிருக்கை. "ரஸோ வைஸ:" (தேனை) கட்டியின்காடிந்யந்தவிர்ந்திருக்கை. (அமுதை) சாவா மல் காப்பதுமாய் விலக்ஷணபோக்யமுமாயிருக்கை. (நன்பாலை) அவில க்ஷணர்க்கும் போக்யமாயிருக்கை. நன்மை எங்கும்கூடக்கடவது. (கனி யை) கண்டபோதே நுகரலாம்படி பக்வபலமாயிருக்கை. (கரும்புதன் னை) கைதொட்டு ரஸிப்பிக்கவேண்டுங்குற்றமின்றிக்கேயிருக்கை. ஆக, "ஸர்வரஸ:" என்கிறபடியே-கீழ்ச்சொன்னவையெல்லா முபமானமாகப் போராமையாலே, அதுதன்னையேசொல்லுகிறது. இவருடையஷட்ரஸ மிருக்கிறபடி. (மட்டவிழித்யாதி) மதுஸ்யந்தியாநிற்கிற திருத்துழாயா லே யலங்க்ருதமான திருவபிஷேகத்தையுடையவனை. ஆக, ஆஶ்ரயணீய வஸ்துவுக்கு ஸ்வரூபஞ்சொல்லிற்று. (வணங்கியவன்றிறத்துப்பட்டபின் னை) வணங்கிக்கொண்டு அவன்றிருவடிகளிலேகிட்டுகை சேஷபூதனுக் குஸ்வரூபம். காலயவநஜராசந்தாதிகளைப்போலே படைவீட்டையடைம திட்படுத்திவந்து கிட்டுகையன்றிக்கே, முறையிலேயவன்பக்கலிலே அந் வயித்தபின்பு. (இறையாகிலும்) அத்யல்பமும். (யான்) விஷயாந்தரவிமு கனுனநான். (என்மனத்துப்பரிவிலனே) "'ரஸம்ஹ்யேவாயம்லப்த்வாநந்தீ பவதி' (ரஸம்ஹ்யேவாயம்லப்த்வாநந்தீபவதி) என்று-ஒருதேசவிசேஷ த்திலேபோனல் பூர்ணநுபவம்பண்ணலாவது, இங்கேயிருந்து குறைய வநுபவியாநின்றேன்" என்னுமத்தால்வரும் மனோதுஃகமுண்டோவென க்கென்கிருர். ....................................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்ரும்பாட்டு (முட்டிலித்யாதி) "மூவுலகுக்குரியகட்டியை" இத்யாரப் ய, "என்மனத்துப்பரிவிலன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சர்வேஶ் வரனுடையவித்யாதி)

முட்டுப்பட - தட்டுப்பட. அநித்யமென்றபடி. "ஒரு, தனி" என்கிறவிப் பைக்கர்த்தம் (தன்னைநாயகனென்றுலித்யாதி) "தனிநாயகன்" என்றுற்போராதோ, "ஒரு" என்றுவிசேஷிக்கிறதென்னென்ன (ப்ரஹ்மாதிகளுக்குமித்யாதி) (அத்விதியனான தனிநாயகன்) அத்விதீயனுகையாலே தனிநாயகனென்று ப்ரசித்தன். "மஹாவ்ருக்ஷம், பாலுண்ணி" என்றுற்போலேயன்றென்றபடி. "மூவுலகுக்குரிய" என்றத்தைக்கீழேகூட்டினபோதைக்கு ப்ராமாணங்கள் (த்ரைலோக்யமபீத்யாதி) "𑌅𑌨𑍁𑌰𑍂𑌪𑌸𑍍𑌸𑍈𑌵 𑌨𑌾𑌥𑍋 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌵𑌾𑌨𑍍 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌾𑌗𑍍𑌰𑌜𑌃 । 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌮𑌪𑌿 𑌨𑌾𑌥𑍇𑌨 𑌯𑍇𑌨 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌾𑌥𑌵𑌤𑍍𑌤𑌰𑌮𑍍" (அநுரூபஸ்ஸைவநாதோ லக்ஷ்மீவாந்லக்ஷ்மணாக்ரஜ: । த்ரைலோக்யமபிநாதேநயேநஸ்யாந்நாதவத்தரம்) இத்யயோத்யாகாண்டே பௌராந்ப்ரதிதஶரத:. "𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌶𑌰𑌣𑍍𑌯𑌾𑌯 𑌰𑌾𑌘𑌵𑌾𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 । 𑌨𑌿𑌵𑍇𑌦𑌯𑌤 𑌮𑌾𑌂 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌵𑌿𑌭𑍀𑌷𑌣𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍". (ஸர்வலோகஶரண்யாயராகவாயமஹாத்மநே । நிவேதயதமாம்க்ஷிப்ரம்விபீஷணமுபஸ்த்திதம்) இதியுத்தகாண்டே சுக்ரீவப்ரமுகாந்வாநராந்ப்ரதிவிபீஷண:. "மூவுலகுக்குரிய" என்கிறவித்தால் - இவன் குற்றத்தைக்காட்டி யீஶ்வரன் தன்ஸ்வாதந்த்ர்யத்தாலே கைவிடநினைத்தால் வழக்குப்பேசிப் பற்றலாமென்னு மாகாரந்தோற்றுகிறதென்னு மத்தை யுதாஹரணபூர்வகமாக வருளிச்செய்கிறுர் (சர்வலோகேத்யாதி) "𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌶𑌰𑌣𑍍𑌯𑌾𑌯" (ஸர்வலோகஶரண்யாய) என்றதுக்கர்த்தம் (என்னுபாதியித்யாதி) அதாவது, ஔபாதியென்று - அம்ஶமாய், சர்வசப்தத்திலே தானு மந்தர்ப்பூதனுகையாலே யெனக்கு சரண்யரான வம்சத்தையுடைய பெருமாளுக் குங்களாற்சொல்லலாம் கண்ணழிவுண்டோவென்றபடி. அன்றிக்கே, என்னுபாதி-என்னைப்போலேயென்றுய், "ராவணாநுஜன், அதேசகாலத்திலேவந்தான்" என்றெனக்கு தோஷம்சொன்னுற்போலே, பெருமாளை "சர்வலோகசரண்யரன்று" என்னப்போமோ, என்னை "இந்தலோகத்திலே யந்தர்ப்பூதனன்று" என்னப்போமோ வென்றபடியென்னுதல். (சர்வலோகசரண்யாய என்று-எனக்கும் கூறுகொள்ளலாம்படியான பெருமாளுக்கு) என்றுபாடாந்தரமுண்டு, அப்போதைக்கு மர்த்தமிதுவே.

(ரஸகநமாயிருக்கை) "𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑍋 𑌰𑌸𑌘𑌨 𑌏𑌵" (க்ருத்ஸ்நோரஸகநஏவ) என்கிற ஶ்ருதியோடே சமாநார்த்தமென்றபடி. உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (ரஸோவைஸ:என்றது) எங்கும் - கட்டி முதலானவற்றிலும். கண்டபோதே - பாகாதி நிரபேக்ஷமாகவென்றபடி. நுகருகை-புஜிக்கை. கனியில் வ்யாவ்ருத்தி (கைதொட்டித்யாதி) "கட்டியை" இத்யாதிக்குத்தொகுத்துபாவம் (ஆகவித்யாதி) அதுதன்னையே-தார்ஷ்டாந்திகமானவஸ்துதன்னையே. அவனுடையபோக்யதையை யாருகச்சொன்னதிலேரஸோக்தி (இவருடையவித்யாதி)

"அவன்திறத்துப்பட்டபின்னை" என்னவமையாதோ, "வணங்கி" என்று விசேஷிக்கிறதென்னென்ன (காலயவநேத்யாதி) அடைமதிட்படுத்தி - முற்றிகைபோட்டு. முறையிலே-சேஷத்வப்ராப்தியிலே. அவன்றிறத்துப்பட்டபின்னை- (அவன்பக்கலிலே யந்வயித்தபின்பு) பரிவு-து:கம். "பரிவிலன்" என்றதுக்கு - அவதாரிகையிலே (க்ஷுத்ரவிஷயப்ராவண்யத்தால்வரும் ஹ்ருதயது:கமில்லை) என்றருளிச்செய்து, (இங்கேயிருந்து குறையவநுபவியாநின்றேனென்னுமத்தால்வரும் மநோது:கமுண்டோ) என்றர்த்தாந்தரமிவ்விடத்திலே யருளிச்செய்கிறுர்.

“ 𑌰𑌸𑍋𑌵𑍈𑌸𑌃𑌰𑌸𑌂𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌯𑌂 ” ( ரஸோவைஸ: ரஸம்ஹ்யேவாயம் ) இத்யாதி. தனிநாயகன் - ப்ரதாநநாயகன். உரிய - தகுதியான. மட்டு-தேன். அவிழுகை - ப்ரவஹிக்கை. க்ரமேணாந்வய:.................................*

# நான்காம்பாட்டு.

பரிவின்றிவாணனைக்காத்துமென்றன்றுபடையொடும்வந்தெதிர்ந்த
திரிபுரஞ்செற்றவனும்மகனும்பின்னுமங்கியும்போர்தொலையப்
பொருசிறைப்புள்ளைக்கடாவியமாயனையாயனைப்பொற்சக்கரத்
தரியினையச்சுதனைப்பற்றியானிறையேனுமிடரிலனே.

## ஆறாயிரப்படி.

(பரிவின்றி) ஓரநிஷ்டகந்தம் வாராதபடி வாணனை ரக்ஷிக்கவென்று ப்ரதிஜ்ஞைபண்ணிக்கொண்டு ஸஸைந்யனாய்வந்து ப்ரத்யவஸ்த்திதனான த்ரிபுரதஹநஜநித நிரவதிக ஶௌர்யகர்வாதிரூடனான ருத்ரனும், அவனிலுமதிசூரனாயிருந்த வவன்மகனும், பின்னையு மதிபலபராக்ரமனானவக்நியும் யுத்தத்திலே நிரஸ்தராம்படி யசுரரக்ஷோவிநாசநமான திருச்சிறகையுடையனான பெரியதிருவடியைக்கடாவிய வாஶ்சர்யபூதனை, வாணனுடையதோள்களைத்துணித்தருளுகைக்காகத் திருவாழியைச்சுழற்றியருளினபோதைத் திருவாழியும் கையுமிருந்தவழகாலே சகலஜநமநோநயநஹாரியாய், ஆஶ்ரிதஜநங்களோடு நித்யசம்ஶ்லேஷஸ்வபாவனாய், நிரதிசய ஸௌஶீல்ய விசிஷ்டனாயிருந்தவனைப்பற்றி யானிறையேனு மிடரிலே னென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போகப்ரதிபந்தகசமஸ்தவிரோதிநிவர்த்தகனாய் ஆஶ்ரிதரைக் கைவிடாத வவனைப்பற்றின நானொருமிறக்குடையேனல்லேனென்கிறார்.

அன்று-அநிருத்தனுக்காகத்தானேயெழுந்தருளினவன்று. வாணனை-வாணனை. பரிவு-மிறுக்கு. இன்றி-அற. காத்தும்-காக்கக்கடவோம். என்று - என்றுபஹுமாநோக்திபண்ணி. படையொடும்-ஆயுதங்களோடே. வந்து-வந்து. எதிர்ந்த - எதிரேறின. திரிபுரஞ்செற்றவனும்-திரிபுரதஹநசக்த்யபிமாநியானருத்ரனும், மகனும்-அவன்மகனாய் தேவசேநாபதியான வேற்றத்தையுடைய சுப்ரஹ்மண்யனும். பின்னும்-அதுக்குமேலே. அங்கியும்- “ ருத்ரன்றான்” என்னலாம்படி க்ரௌர்யத்தையுடைய அக்நியும். போர்-“இனியொருயுத்தம்” என்றுவாரோமென்று தொலைய-நிவ்ருத்தராய்ப்போம்படி. பொரு-பொருகிற. சிறை - திருச்சிறகையுடைய. புள்ளை-பெரியதிருவடியை. கடாவிய-நடத்தின. மாயனை-ஆஶ்சர்யபூதனாய். ஆயனை-அவதாரமுகத்தாலே தன்னைத்தாழவிட்டுநிற்குமவனாய். பொன்-தர்ஶநீயமான. சக்கர

த்ர-திருவாழியையுடையனைக்கொண்டு. அரியினை-விரோதிகளையழியச்செய்து. அச்சுதனை-ஆஶ்ரிதரைக்கைவிடாதவனை. பற்றி-ப்ராபித்து. யான்-அநுபவிக்கிறேன். இறையேனும்-ஏகதேசமும். இடர்-மிறுக்கை. இலன்-உடையேனல்லேன்.

இடர்-இடைஞ்சலாய், மிறுக்கென்றபடி.......................................*

## ஈடு-நான்காம்பாட்டு.

தேவதாந்தரங்களைப்பற்றினார்க் கவர்கள் தஞ்சமல்லவென்னுமிடத்தையும், தன்னைப்பற்றினார்களைத் தான்விட்டுக்கொடானென்னுமிடத்தையும்காட்டின விவனைப்பற்றின வெனக்கொருது:கமில்லையென்கிறார்.

(பரிவின்றியித்யாதி) அநிருத்தாழ்வானைப்பற்ற க்ருஷ்ணனெடுத்துவிட்டவளவிலே வாணன் ருத்ரன்பக்கலிலேசென்று, "க்ருஷ்ணன்நமக்கெதிரியாய்வாராநின்றான்" என்றுசொன்னவாறே, தலையில்வைத்த பூவாடாமல் வருத்தமறவாணனைக் காக்கக்கடவோமென்று சொன்னானாயிற்று க்ருஹத்துக்குள்ளேயிருந்து தந்தாம் சேவகஞ்சொல்லுவாரைப்போலே. இச்சக்ரவர்த்திதிருமகன் "ஏதத்வ்ரதம்மம" (ஏதத்வ்ரதம்மம) என்கிறானே. (அன்று) அநிருத்தாழ்வானைச்சிறையில்வைத்தவன்று. (படையொடும்வந்தெதிர்ந்த) "தனக்குவிஜயம்வ்யவஸ்த்திதம்" என்று அதுகாண்கைக்கு சேனையைத்திரட்டிக்கொண்டுவந்த. "முண்டனீறன்" இத்யாதி. படை-ஆயுதமென்றுமாம்; "பாரவஶ்யம்ஸமாயாதஶ்ஶூலீ" (பாரவஶ்யம்ஸமாயாதஶ்ஶூலீ) என்று ஆயுதத்தோடே மோஹித்தபடி. தன்வெறுமையைமுன்னிட்டு அஞ்சலியைகொண்டுவந்துகிட்டும் விஷயத்தை யிப்படி சாயுதனாயெதிரிடுகைக்கு ஹேதுவென்னென்ன (திரிபுரஞ்செற்றவனும்) த்ரிபுரதஹநமாகிற அபதாநத்தாலே சஞ்சாதாபிமாநனாகையாலே. கடல்கடைகிறபோது எட்டுவடிவுகொண்டுநின்று கடைந்தாற்போலே, த்ரிபுரதஹநசமயத்திலே வில்லுக்குமிடுக்காயும், நாணிக்குத்திண்மையாயும், அம்புக்குக்கூர்மையாயும், தனக்கந்தராத்மாவாயு மெதிரிகளைத்தலைசாயும்படிபண்ணி த்ரிபுரத்தையழித்துக்கொடுத்தான்; அத்தையறியாதே அஜ்ஞரானவர்கள் இத்தையவன்தலையிலேவைத்துக்கவிபாட, இத்தைத்தானுங்கேட்டு "மெய்யிறே" என்றுப்ரமித்து, "அதுசெய்தநமக்கிவனைவெல்லத்தட்டென்" என்றுவந்தெதிரிட்டானாயிற்று. இத்தால் சொல்லிற்றாயிற்று-ருத்ரன்தன்னை யபாஶ்ரயமாகப்பற்றினாரை ஆபத்துவந்தவாறே காட்டிக்கொடுத்தோமென்னுமிடமும், சர்வேஶ்வரன்தன்னைப்பற்றினாரையெல்லாவளவிலும் ரக்ஷிக்குமென்னுமிடமும். (மகனும்) பிதாவானருத்ரன்வளர்ந்தபின்பு செய்தவற்றைப்பருவம் நிரம்புவதற்கு முன்னேசெய்திளமறியாய்ப்பெருமிடுக்கனாய் தேவசேநாபதியான சுப்ரஹ்மண்யனும். (பின்னுமங்கியும்) அவனுக்குமேலே நாற்பத்தொன்பதக்

கிளும். (போர்தொலைய) போரிலேமாள. (பொருசிறைப்புள்ளித்யாதி) ப்ரதிபக்ஷத்தின்மேலே பொருகிறபக்ஷத்தையுடைய பெரியதிருவடியைக்கருத்தறிந்துநடத்தவல்ல வாஸ்சர்யபூதனை. இங்காஸ்சர்யமாவது-வாணனுடையகரத்தைக்கழித்து அவனையிறையிலிசெய்து, நாட்டுக்குத்தானேநின்றிறையானவாஸ்சர்யம். * வாணனாயிரங்கரங்கழித்தவாதிமாலிறே. (ஆயனை) அவன்தோற்றது தன்தரங்குலையாதே நிற்கிறநிலையிலே, இவன்வென்றதும்தன்னைத்தாழவிட்டவிடத்திலே. (பொற்சக்கரத்தரியினை) அநுகூலர்க்குஸ்ப்ருஹணீயமானதிருவாழியைதரித்துசத்ருக்களுக்கப்ரத்ருஷ்யனானவனை. [க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்] [க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோஜாநேத்வாம்புருஷோத்தமம்] தோள்வலிகண்டபின்பாயிற்று சர்வேஸ்வரனென்றறிந்தது (அச்சுதனை) ஆஸ்ரிதரைநழுவவிடாதவனை. ருத்ரன்தன்னை யாஸ்ரயித்தவாணனைக் கைகழியவிட்டோடினானிறே; * சடையானோடவடல்வாணன் றடந்தோள்துணித்ததலைவனிறேயிவன். தலைமையாவது-வாணனைக் கைம்முதலறுத்துத்தலையழியாமேவைத்தநிலைமை. அநிருத்தாழ்வானுக்காக மார்விலேயம்பேற்கையாலே "ஆஸ்ரிதர்க்குத்தஞ்சம்" என்று விஸ்வஸிக்கத்தட்டில்லை. (பற்றியாணிறையேனுமிடரிலனே) இவனைப்பற்றினவெனக் கல்பதுஃகமுமில்லை. "பேரன்" என்றிருக்கையாலே அநிருத்தாழ்வானுக்கு நாலுநாள் சிறையிலிருக்கவேண்டிற்று, "அடியேன்" என்றுபற்றினவெனக் கதுவும் வேண்டிற்றில்லை ..................................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (பரிவின்றியித்யாதி) "பின்னுமங்கியும்போர்தொலைய, புள்ளைக்கடாவிய, அச்சுதனை" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (தேவதாந்தரங்களையித்யாதி)

வாணன் "என்னைக்காக்கவேணும்" என்றபோது ருத்ரன்பண்ணின ப்ரதிஜ்ஞையை துச்சீகரிக்கிறூர் (அநிருத்தாழ்வானித்யாதிவாக்யத்வயத்தாலே) அநிருத்தாழ்வானைப்பற்ற-அநிருத்தாழ்வான்நிமித்தமாக. பரிவின்றி-(வருத்தமற) காத்துமென்று-(காக்கக்கடவோமென்று) சேவகம்-பௌருஷம். சேவகம்சொல்லுகிற மாத்ரமேயோ, சாமர்த்த்யமில்லையோவென்ன (இச்சக்ரவர்த்திதிருமகனித்யாதி) தான்பலவானாகவபிமாநித்திருக்கையாலே, தனக்கு ஸஹாயத்வேநவன்று சேனையைக்கூட்டிக்கொண்டுவருகிறது; தன்சௌர்யம் பார்க்கைக்காகவிறேயென்கிறூர் (தனக்குவிஜயமித்யாதி) சேனையோடேவந்ததுக்கு ப்ரமாணம் (முண்டனீறனித்யாதி) முண்டிதனாய் பஸ்மச்சந்நனானருத்ரன், மக்கள்-சுப்ரஹ்மண்யன் முதலானபுத்ரர்கள், வெப்பு-ஜ்வரம், மோடி-பிடாரி, அங்கி-நாற்பத்தொன்பதக்நிக்கும் கூடஸ்த்தனானவக்நி, ஓடிட-ஓடிப்போக இதிபாசுரார்த்தஃ. திருச்சந்தவிருத்த மெழுபத்தோராம்பாட்டு. "வண்டுலாவுகோதை" இத்யாதி. ஆயுதத்தோடேவந்தானோ

வென்ன, ப்ரமா ம் (பாரவஸ்யமித்யாதி) "வாரவஸ்ரம்ஸமாயாதஸ்ஸ்ரீ ஜூம்ஹணம் தஜஸா। வாஞ்சஜந்யஸ்ய வோஷெண ஸார்ங்க விஸ்ஃபூர்ஜிதேந ச" (பாரவஸ்யம்ஸமாயாதஸ்ஸஏலீஜ்ரும்பண தேஜஸா । பாஞ்சஜந்யஸ்யகோஷேண ஸார்ங்கவிஸ்ப்பூர்ஜிதேநச) "சூலி" என்று-மோஹித்தபடி சொல்லுகிறதென்றபடி. மோஹமாவது-ஸாஞ்சலிஹஸ்தனாய்வந்துகிட்டும் விஷயத்தை ஸாயுதபாணியாய்வந்துகிட்டுகைக்கு ஹேதுவானவஜ்ஞாநம். இது-பாரவஸ்யசப்தார்த்தமன்று, "சூலி" என்கிறபதத்திலார்த்திகமானவர்த்தம்.

வெறுமை-ஆகிஞ்சந்யம். "திரிபுரம்செற்றவன்" என்றத்தைப்பற்ற (தனக்குவிஜயம் வ்யவஸ்த்திதமென்றது) திரிபுரம்செற்றது ஈஸ்வரனந்தராத்மாவாகையாலேயன்றே, அதபிமாநஹேதுவானபடி யெப்படியென்ன (கடல்கடைகிறவித்யாதி) இத்தால்-இப்பாட்டால். இத்தால்சொல்லிற்றுயிற்றித்யாதிவாக்யம் - பாட்டின்வ்யாக்யாநத்தின்முடிவிலேயானால்நல்லது. பருவம்நிரம்புவதற்குமுன்னேசெய்தது-க்ரௌஞ்சபர்வதத்தையெய்கை. ருத்ரன் ப்ரௌடனாயிறே த்ரிபுரதஹநம்பண்ணிற்று. இளமறி-இளம்குட்டி.

(கரம்) பலி-கப்பமும், ஹஸ்தமும். இறையிலிசெய்து - கப்பமில்லாதவனாக்கியென்றும், க்ஷுத்ரதேவதையாகிற ஸ்வாமியில்லாதவனாகப்பண்ணியென்றும். நின்றிறை-ஸ்த்திரமானஸ்வாமி. அவன்கரத்தைக்கழித்தத்தான் ஸ்வாமியானதுக்குப்ரமாணம் (வாணனுயிரமித்யாதி) வாணனுடைய வாயிரம்கரத்தையும்கழித்தகாரணபூதனான சர்வேஸ்வரனிதிபாசுரார்த்தஃ. திருச்சந்தவிருத்த மைம்பத்துமூன்றும்பாட்டு. "மோடியோடு" இத்யாதி.

"திரிபுரம்செற்றவன்" என்று-அவனைச்சொல்லி, "ஆயனை" என்று - இவனைச்சொல்லுகையாலே பலித்தபாவம் (அவன்தோற்றதித்யாதி)

அரி-சிம்ஹஸ்ரேஷ்டம். அத்தாலே-அப்ரத்ருஷ்யத்வம் அப்ரத்ருஷ்யத்வே ப்ரமாணம் (க்ருஷ்ணக்ருஷ்ணேத்யாதி) "பரஸம்பரமாத்மா நமநாதிநிதநம்பரம்" (பரோஸம்பரமாத்மாநமநாதிநிதநம்பரம்) இத்யுத்தரார்த்தம். பஞ்சமேம்ஸேருத்ரஃ. "மஹாபாஹோ-புருஷோத்தமம்ஜாநே" (மஹாபாஹோ-புருஷோத்தமம்ஜாநே) என்றதுக்கு தாத்பர்யம் (தோள்வலியித்யாதி)

"அச்சுதன்" என்றதின் வ்யதிரேகசித்தமான வர்த்தத்தை யருளிச்செய்கிறார் (ருத்ரன்தன்னையித்யாதி) ஓடினமைக்கு ப்ரமாணம் (சடையானித்யாதி) ருத்ரனோடே, மிடுக்குடைய வாணனுடைய பெரியதோள்களைத்துணித்த ஸ்ரேஷ்டனிதிபாசுரார்த்தஃ. திருமொழி யைந்தாம்பத்து முதற்றிருமொழி யேழாம்பாட்டு. தலைமை-ஸ்ரைஷ்ட்யம். இவனையானால் நம்பலாமோவென்ன (அநிருத்தேத்யாதி)

பற்றி-ஆஸ்ரயித்து. "எனக்கல்பதுஃகமுமில்லை" என்கையாலே-அநிருத்தாழ்வானுக் கல்பதுஃகமுண்டென்று திருவுள்ளம்பற்றி, அவனுக்கு துஃகமுண்டாகைக்கும் தமக்கில்லாமைக்கும் ஹேதுவை யருளிச்செய்கிறார் (பேரனித்யாதி வாக்யத்வயத்தாலே)

க்ரமேணார்வ்யஃ ...........................................................*

## ஐந்தாம்பாட்டு.

இடரின்றியேயொருநாளொருபோழ்திலெல்லாவுலகுங்கழியப்
படர்புகழ்பார்த்தனும்வைதிகனுமுடனேறத்திண்டேர்கடவிச்
சுடரொளியாய்நின்றதன்னுடைச்சோதியில்வைதிகன்பிள்ளைகளை
யுடலொடுங்கொண்டுகொடுத்தவனைப்பற்றியொன்றுந்துயரிலனே.

### ஆறுயிரப்படி.

(இடரின்றியே) ஸ்வசரணாரவிந்தசேஷதைக ரதித்வமாகிற ப்ரதிதமானதேஜஸ்ஸையுடையனான பார்த்தனும் வைதிகனுமுடனேற, ஒருநாளொருபோதி லெல்லாவுலகுங்கழியவநாயாசேநதிண்டேர்கடவி, நிரவதிகதேஜோவிசிஷ்டமான தன்னுடைய ஸ்ரீவைகுண்டத்திலேயிருந்த வைதிகன் பிள்ளைகளை யவ்வுடலோடுங்கொண்டு கொடுத்தவனைப்பற்றியொன்றுந்துயரிலேனென்கிறார்.........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அர்த்தியானவைதிகனுடைய அர்த்திதார்த்தகாரியானவனைப்பற்றின நானொருக்லேசமுடையேனல்லேனென்கிறார்.

இடர்-மிறுக்கு. இன்றியே - இன்றிக்கே. ஒருநாள் - ஒருதிவசத்திலே. ஒருபோழ்தில்-ஒருகர்மஞ்சமைந்து கர்மாந்தராநுஷ்ட்டாநத்துக்கிடையாயிருப்பதொருகாலத்திலே. எல்லாவுலகும் - சர்வலோகத்துக்கும். கழிய - அவ்வருகேகழிந்துபோம்படியாக. படர்புகழ்-க்ருஷ்ணாஶ்ரயத்வாதியாலே விஸ்தீர்ணயசாவான. பார்த்தனும்-அர்ஜுநனும். வைதிகனும்-ப்ராஹ்மணனும். உடன்-கூட. ஏற-ஏறிப்போம்படி. திண் - காரணதத்வாந்வயத்திலும் கார்யரூப சைதில்யம்பிறவாதபடி திண்மையையுடைத்தான. தேர்-தேரை. கடவி - கடவி. சுடரொளியாய் - அத்யுஜ்ஜ்வலதேஜோமயமாய். நின்ற - பரிணாமாதிரஹிதமாய்நின்ற. தன்னுடை - தன்னதான. சோதியில் - பரஞ்ஜ்யோதிஶ்ஶப்தவாச்யமானதேசத்திலே. வைதிகன்பிள்ளைகளை-அந்தவைதிகபுத்ரர்கள் நால்வரையும். உடலோடும்-காலக்ருதபரிணாமமில்லாததேசமாகையாலே அந்தசரீரத்தோடேயும். கொண்டு-கொண்டுவந்து. கொடுத்தவனை-அவனுக்குக்கொடுத்தவனை. பற்றி-கிட்டியநுபவித்து. அத்தாலே, ஒன்றும்-ஒருப்ரகாரத்தாலும். துயர்-சம்சாரக்லேஶம். இலன்-இன்றியிலேயொழிந்தேன்........*

### ஈடு-ஐந்தாம்பாட்டு.

வைதிகபுத்ராநயநத்தை யநுசந்தித்து, இவனைப்பற்றினவெனக்கொருதுஃகமுமில்லையென்கிறார்.

(இடரின்றியே) ஒருவருத்தமுமின்றியே. (ஒருநாள்) ஏகாஹதீக்ஷையானக்ரதுவிலே. (ஒருபோழ்தில்) ப்ராதஸ்ஸவநம் தலைக்கட்டிமாத்யந்திநஸவநத்துக்குமுன்னே. (எல்லாவுலகுங்கழிய) ஆவரணசப்தங்க

ளுக்கு மவ்வருகுபட. (படர்புகழ்பார்த்தனும்) "𑌯𑌸𑍍𑌯𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍀𑌚𑌗𑍋𑌪𑍍𑌤𑌾𑌚𑌸𑍁𑌹𑍃𑌚𑍍𑌚𑍈𑌵𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃" (யஸ்யமந்த்ரீசகோப்தாசஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந:) என்கிறபடியே க்ருஷ்ணனையே சர்வவிதபந்துவுமாகப்பற்றின புகழையுடைய அர்ஜுநனும். (வைதிகனும்) க்ருஷ்ணன்றிருவடிகளிலே நிரவதிகமான ஸ்நேஹத்தையுடைய ப்ராஹ்மணனும். (உடனேற) தன்னோடேகூடவேற. (திண்டேர்கடவி) இவர்களைத்தேரிலேயேற்றிக்கொண்டு, கார்யாகாரங்குலையாமே, மூலகாரணமான ப்ரக்ருதிபர்யந்தமாகத் தேருக்குத்திண்மையைக்கொடுத்துநடத்தி. பிண்டாவஸ்தையிலும் கடமநுவர்த்திக்குமாபோலே. ஒளி-அழகு. (சுடரொளியாய்நின்ற) நிரவதிகதேஜோரூபமாய் ஏகரூபமாய்நின்ற. (தன்னுடைச்சோதியில்) தனக்கசாதாரணமானதேசம். தன்னுடையகாந்தி வெள்ளமிட்டாற்போலேயிருக்கை. "𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌕𑌾𑌨𑌲𑌦𑍀𑌪𑍍𑌤𑌂𑌤𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌂𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃" (அத்யர்க்காநலதீப்தம்தத்ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மந:) என்கிறபடியே-ஆயிரக்கோடி அக்ந்யாதித்யர்களுடைய தேஜஸ்ஸையொட்டவைத்தொரு தேசமாகவகுத்தாற்போலே யிருக்கையாலே யிவர்களுக்குக் கண்கொண்டுபார்க்கவொண்ணாது; ஆகையாலே தமஸ்ஸளவிலே யிவர்களைநிறுத்தி, தன்னிலமாகையாலே தானேபோய்ப்புக்கான். ஜலத்திலே மத்ஸ்யமுலாவுமாபோலே தேசிகரே புகவேண்டும் நிலமிறே. (வைதிகன்பிள்ளைகளை) ப்ராஹ்மணபுத்ரர்களை. (உடலொடுமித்யாதி) கொண்டுபோகிறபோதைப்படியி லொன்றுங்குறையாதபடி கொண்டுவந்துகொடுத்தானாயிற்றுகாலக்ருதபரிணாமமில்லாத தேசமாகையாலே. (உடலொடுமித்யாதி) பூசினமஞ்சளும், உடுத்தினபட்டும், இட்டசவடிப்பூணூலும், இட்டகாதுப்பணிகளுமான வொப்பனையிலொன்றுங்குறையாதபடிகொண்டுவந்துகொடுத்தவனையென்றுமாம். "பிறக்கப்பிறக்கக்கொண்டுபோனார்களாகில் இப்போதிவையெல்லாமுண்டோ" என்று பட்டரைக்கேட்க, ருஷிபுத்ரர்களாகையாலே பிறக்கிறபோதேயவற்றோடேபிறப்பர்காணும்" என்றருளிச்செய்தார். (பற்றியித்யாதி) சமுத்ரத்தில் நீரை ஸஹ்யத்திலே யேற்றுமதுவே வருத்தமுள்ளது, ஸஹ்யத்தில்நீரை சமுத்ரத்திலேகொண்டுவருமன்று ஒருவருத்தமில்லையே; அப்படியே, அங்குப்புக்காரை இங்கேமீட்கையாகிறது அவன்றிருவுள்ளத்தோடுசேராது, இங்குள்ளாரை யங்கேகொண்டுபோகையாயிற் றவன்றிருவுள்ளத்திற்பொருந்துவது. புத்ரார்த்தியானவளவன்றியே ஸ்வரூபாநுரூபமாகவவன்றிருவுள்ளத்துக்குப்பொருந்தினசெயலை யாசைப்பட்ட வெனக்கொரு து:கமுண்டோவென்கிறார். கர்மசம்பந்தமற்றுப்போகாமையாலேயாயிற்றிவர்களுக்கு மீளவேண்டிற்று. கர்மசம்பந்தமற்றார்போகக்கடவதேசத்திலே யிவர்கள்போனபடியென்பின்னையென்னில்; நாய்ச்சிமார் தங்கள் ஸ்வாதந்த்ர்யங்காட்டுகைக்காக இவர்களை யங்கேயழைப்பித்தார்களாயிற்று. அங்ஙனன்றிக்கே, "இங்ஙின்

றநீர்மையிலியாமுறுமை" என்று தொடங்கி, "மங்கவொட்டு" என்று மடிபிடித்துக்கூப்பிடும்படி சம்சாரத்தில் விரக்திபிறந்தும், "காதல்கடலின்மிகப்பெரிதால்" என்றும், "மண்டிணிஞாலமுமேழ்கடலுநீள்விசும்புங்கழியப்பெரிதால்" என்றும், "அதனிற்பெரியவென்னவா" என்றுமிப்படி பகவத்விஷயத்திலே கண்ணழிவற்றபக்திவிளைந்துபோக வாசைப்படுகிற வெனக்கொருதுஃகமில்லையென்கிறார்.................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (இடரின்றியேயித்யாதி) "வைதிகன்பிள்ளைகளை" இத்யாதி, மேலெல்லாம்கடாக்ஷித்தவதாரிகை (வைதிகபுத்ரேத்யாதி)

"படர்புகழ்-வைதிகன்" என்றுகூட்டியர்த்தம் (க்ருஷ்ணனித்யாதி) * படர்புகழ்-உபயார்வயியென்றுபாவம். படர்-பரந்த

தேருக்குத்திண்மையேதென்ன (இவர்களைத்தேரிலேயித்யாதி) ப்ரக்ருதியிலேபோயும் தேருக்குத்திண்மையைக்கொடுத்து நடத்தினதுக் கஸம்பாவிதமானத் ருஷ்டாந்தம் (பிண்டாவஸ்த்தையிலுமித்யாதி) இது அகடிதமென்றபடி.

மீமிசையாக்கியர்த்தாந்தரம் (ிரவதிகேத்யாதி) மூந்தினவர்த்தம்-தேஜிஷ்டமாயமுதொயிருக்கிறவென்றபடி. ஏகரூபமாயென்றது-"நின்ற" என்றதினர்த்தம். இது-வைதிகபுத்ரர்களுடைய வைகரூப்யத்துக்கு ஹேதுவாகச்சொன்னபடி. "தன்னுடைச்சோதி" என்றதுக்கடைவே யர்த்தத்வயம் (தனக்கசாதாரணேத்யாதிவாக்யத்வயத்தாலே) பரமபதத்தினுடைய தீப்த்யதிசயம்சொல்லுகைக்கு ப்ரயோஜநம் (அத்யர்க்கேத்யாதிவாக்யத்வயத்தாலே) தன்னிலமானு லிவர்களுக்கங்கே போகப்போகாதோவென்ன (ஜலத்திலேயித்யாதி)

சிலகாலம்சென்றிருக்க, ஒன்றும்குறையாதேயிருக்குமோவென்ன (காலக்ருதேத்யாதி) "உடலோடும்" என்றதுக்கு - இங்கிருந்தபாலசரீரத்தோடுமென்று முந்தினவர்த்தம்; இட்டவாபரணங்களோடேயென்று த்விதீயார்த்தம். உடல்-சரீரமாதல், ஆபரணமாதல். சவடிப்பூணூல்-பொன்யஜ்ஞோபவீதமென்னுதல், சவடியும் பூணூலுமென்னுதல். சவடி - உடைநாண். ப்ராஸங்கிகம் (பிறக்கப்பிறக்கவித்யாதி)

இவருக்குத்துயராவது-அவன்திருவுள்ளத்துக்குப் பொருந்தாதசெயலை யாசைப்படுகையென்று விவக்ஷித்து; அவன்திருவுள்ளத்துக்குப்பொருந்தாத செயலேதென்கிற சங்கையிலே; அவன்திருவுள்ளத்துக்குப்பொருந்தாததின்னது, பொருந்துமதின்னதென்னுமத்தை ஸநிதர்ஶநமாக வருளிச்செய்கிறார் (சமுத்ரத்திலித்யாதிநாலுவாக்யத்தாலே) இப்படி திருவுள்ளத்துக்குப்பொருந்தாதத்தை யவன்செய்தது ப்ராஹ்மணனுடைய நிர்ப்பந்தத்துக்காகவென் றருளிச்செய்யாநின்றுகொண்டு, இப்படிக்கொத்ததுஃகம் தமக்கில்லையென்கிறார் (புத்ரார்த்தியித்யாதி) வைதிகபுத்ரர்களுக்கு புநராவ்ருத்திவருகைக்குஹேது - கர்மசம்பந்தமற்றுப்போகாமையென்றும், இவர்களங்கேபோகைக்கு ஹேதுவின்னதென்று மருளிச்செய்யாநின்றுகொண்டு, தாம் நிர்வேதத்தோடே, "அவனைப்பெறவேணும்" என்றுசைப்படுகையாலே தமக்கு புநராவ்ருத்திரூபமான துஃகமில்லையென் றர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (கர்மசம்பந்தமித்யாதிநாலுவாக்யத்தாலே) அவர்கள்ருசி முன்னாகப்போக

வில்லை, நாய்ச்சிமார் "க்ருஷ்ணனைக்காணவேணும்" என்றாசைப்பட்டழைப்பிக்கப்போனார்களித்தனை; நானங்ஙனன்றிக்கே ருசிமுன்னாகப்பற்றினவனாகையாலே துக்கந்தமில்லையென்கிறாரென்றபடி. முந்தினவர்த்தத்தில்-வைதிகனில் வ்யாவ்ருத்தி; த்விதீயார்த்தத்தில்-தத்புத்ரர்களில் வ்யாவ்ருத்தி. அங்ஙனன்றிக்கேயென்றது-சம்சாரத்தில் விரக்திபூர்வகமாக வீஶ்வரனை யாஶ்ரயியாமையாலே கர்மசம்பந்தமறாமற்போகையன்றிக்கேயென்றபடி. (இந்நின்றவித்யாதி) இவற்றின்நிலைநின்றஸ்வபாவத்தை யினிநானடையாதபடி. மங்கவொட்டு-நசிக்கச்சம்மதி. காதல்-அபிநிவேசம். மண்டிணிஞாலம்-மண்சேர்ந்தபூமி.

கழிய-தனக்குக் கீழேயாம்படி. "[Grantha text] ..." (யஸ்யமந்த்ரீசகோப்தாசஸுஹ்ருச்சைவஜநார்த்தந꞉ । ஹரிஸ்த்ரைலோக்யநாதஸ்ஸகிந்நுதஸ்யநநிர்ஜிதம்) இதிராஜஸூயத்ருதராஷ்ட்ர꞉. "[Grantha text] ..." (அத்யர்க்காநலதீப்தம்தத்ஸ்த்தாநம் விஷ்ணோர்மஹாத்மந꞉ । ஸ்வயைவப்ரபயாராஜந்துஷ்ப்ரேக்ஷம்தேவதாநவை꞉ ) இத்யாரண்யபர்வண்யார்ஷ்டிஷேணவசநம்.....................................................*

# ஆறம்பாட்டு.

துயரில்சுடரொளிதன்னுடைச்சோதிநின்றவண்ணநிற்கவே
துயரின்மலியுமனிசர்பிறவியிற்றோன்றிக்கண்காணவந்து
துயரங்கள்செய்துதன்றெய்வநிலையுலகிற்புகவுய்க்குமம்மான்
றுயரில்சீர்க்கண்ணன்மாயன்புகழ்துற்றயானோர்துன்பமிலனே.

## ஆறாயிரப்படி.

( துயரில் ) சமஸ்தஹேய ப்ரத்யநீகநிரதிசய தேஜோவிசிஷ்ட ஸ்வாசாதாரண திவ்யரூபத்தோடேகூட, சமஸ்தஹேயாஸ்பத மநுஷ்யசஜாதீயதயா வதீர்ணனாய், * சகலமநுஜநயந விஷயதாங்கதனாய், அசேஷஜநமநோநயநஹாரி திவ்யசேஷ்டிதாநிருர்வாணனாய்க்கொண்டு, தன்னுடைய வைஸ்வரமான ஸ்வபாவத்தை யிந்தலோகத்திலே யாவிஷ்கரித்தருளும் ஸ்வபாவனாய், ஆஶ்சர்யபூதனாய், ஹேயப்ரத்யநீக கல்யாணகுணவிசிஷ்டனான கண்ணன்புகழ்துற்றயானோர் துன்பமிலேனென்கிறார்....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இதரசஜாதீயனாயவதரித்து நிற்கிறநிலையிலே யதிமாநுஷவ்யாபாரங்களைப்பண்ணும் க்ருஷ்ணனுடைய குணங்களை பூர்ணமாகவநுபவிக்கப்பெற்ற நானொரு அப்ரீதியையுடையேனல்லேனென்கிறார்.

துயரில்-அப்ராக்ருதமாகையாலே துக்காதிப்ரதிபடமாய். சுடரொளி-சுத்தசத்வாத்மகமானதாலே அத்யுஜ்ஜ்வலதேஜோரூபமாய். தன்னுடை - ஸ்வாசாதாரணமான. சோதி-பரஞ்ஜ்யோதிஸ்ஸப்தவாச்யமானவிக்ரஹமானது. நின்றவண்ணமே - யதாபூர்வாவஸ்தாயியாயே. நிற்க - நிற்க. தீபாத்தீபப்ரவ்ருத்திபோலே தத்ஸஜாதீயமான வப்ராக்ருதவிக்ரஹத்தையுடையனாய்க்கொண்டு. துயரில்-துக்கத்திலே. மலியும்-வர்த்தித்துவரக்கடவதான. மனிசர்-மநுஷ்யருடைய. பிறவியில்-ஜந்மத்திலே. தோன்றி-ஆவிர்ப்பவித்து. கண்காண - அதீந்த்ரியவிக்ரஹத்தை மாநுஷசக்ஷுஸ்ஸுக்குவிஷயமாக்கிக்கொண்டுவந்து. துயரங்கள்செய்து - ரூபௌதார்யகுணங்களாலும் சௌர்யவீர்யாதிகுணங்களாலு மாஸ்ரிதாநாஸ்ரிதவிபாகமற நோவுபடுத்தி. ஆத்யசாரத்யாதிகளைப்பண்ணித்தாழ்ந்தநிலையிலே, தன்-தனக்கசாதாரணமாய். தெய்வம்-திவ்யமான. நிலை-பரத்வஸ்திதியை. வைஸ்யரூப்யாத்யாவிஷ்காரத்தாலே, உலகில்-தன்வாசியறியாதலோகத்திலே. புகவுய்க்கும்-நிலைநிறுத்தக்கடவனான. அம்மான்-சர்வாதிகனாய். துயரமில் - ஹேயப்ரத்யநீகனாய். சீர்-கல்யாணகுணாத்மகனான. கண்ணன்-க்ருஷ்ணனாகிற. மாயன்-ஆஸ்சர்யவானுடைய. புகழ்-குணசேஷ்டிதாதிப்ரதையை. துற்ற-நெருங்கவநுபவிக்கப்பெற்ற. யான்-நான். ஓர்-ஒரு. துன்பம்-அப்ரீதியை. இலன்-உடையேனல்லேன்.

துன்பம் - இன்பத்துக்கெதிர்தட்டானவப்ரீதி..................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

தன்னுடைய அப்ராக்ருதவிக்ரஹத்தை யிதரசஜாதீயமாக்கி சம்சாரிகள் கண்ணுக்குவிஷயமாக்கின க்ருஷ்ணகுணங்களை யநுபவிக்கப்பெற்ற வெனக்கொருதுஃககந்தமில்லை யென்கிறார்.

( துயரிலித்யாதி ) ஹேயப்ரத்யநீகமாய், சுத்தசத்வமயமாகையாலே நிரவதிகதேஜோரூபமாய், பிறர்க்குள்ளதொன்றன்றிக்கே தனக்கசாதாரணமான விக்ரஹமானது. ( நின்றவண்ணம்நிற்கவே ) அங்கிருக்கும்படியி லொன்றுங்குறையாமே, விளக்கிற்கொளுத்திய விளக்குப்போலே அங்குநின்ற வண்ணமிங்குநிற்க. * ஸ்வாம்ப்ரக்ருதி மதிஷ்டாயவிறே. ( துயரிலித்யாதி ) துஃகசாகரத்திலே யழுந்தாநின்றுள்ள மநுஷ்யருடைய ஜந்மங்களிலே ஆவிர்ப்பவித்து. " [illegible] " ( தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம் ) என்கிறபடியே வந்துதோற்றி. ( கண்காணவந்து ) மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு விஷயமன்றியேநித்யசூரிகளுக்கு சதாதர்ஸநவிஷயமானதன்னை மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு விஷயமாக்கி. ( துயரங்கள்செய்து ) அநுகூலரை யழகாலே நோவுபடுத்தியும், ப்ரதிகூலரை யாயுதத்தாலே நோவுபடுத்தியும். [ [illegible] ] ( க்ருத்வாபாராவதரணம்ப்ருதிவ்யாஃப்ருதுலோசநஃ । மோஹயித்வாஜகத்ஸர்வம்கதஸ்ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம் ) ப்ரதிகூலரைமுட்டக்கோலாலேசாடியும் அநுகூலரைக் கண்ணழகாலேசாடி

யும்போனபடி. “ இணைக்கூற்றங்கொலோ ” என்னும்படியிறே கண்ண ற்று நலியும்படி. ( தன்தெய்வநிலை ) தன்னுடைய அப்ராக்ருதமானஸ்வ பாவத்தை. ( உலகில் ) இதுக்கிட்டுப்பிறவாத சம்சாரத்திலே. ( புகவு ய்க்கும் ) ப்ரவேசிப்பிக்கும். ( அம்மான் ) அபேக்ஷாநிரபேக்ஷமாக சம் சாரிகளுக்குத் தம்படிகளை வெளியிடுகைக்கு வேண்டும்ப்ராப்திசொல்லு கிறது. பரமபதத்திலே நடையாடக்கடவ ஸ்வபாவத்தை சம்சாரிகளுக்கு த்தெரிவித்தது அங்குள்ளாரோடுள்ளப்ராப்தியிங்குள்ளாரோடு மொத்தி ருக்கையாலே. தூத்யசாரத்யங்களைப்பண்ணித் தன்படியைத்தெரிவித்து, இச்செயலாலே லோகத்தையெழுதிக்கொண்டவ னென்றுமாம். ( துயர மில்சீர்க்கண்ணன் ) ஹேயப்ரத்யநீக கல்யாணகுணங்களை யுடையக்ருஷ் ணன். ( மாயன் ) ஆஶ்சர்யமானகுண சேஷ்டிதங்களையுடையவன். ( பு கழ்துற்றயான் ) அவனுடையகல்யாணகுணங்களை நெருங்க புஜிக்கப்பெ ற்றநான். ( ஓர் துன்பமிலனே ) அவன் தன்னப்ராக்ருத திவ்யமங்களவிக் ரஹத்தைக்கொண்டு இவ்வுடம்போடே யணையலாம்படி கிட்டுவானுயிற் றபின்பு, நான் “ இஶ்ஶரீரத்தைவிட்டங்கேபோ யவ்வுடம்போடேயணை வேன் ” என்றுலெனக்கவனருமைப் படுத்துமோ.........................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு ( துயரிலித்யாதி ) “ தன்னுடைச்சோதிநின்றவண்ணம்நிற்க வே, கண்காணவந்து, புகழ்துற்றயான் ” இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (த ன்னுடையவித்யாதி )

சப்தார்த்தம் ( ஹேயப்ரத்யநீகமாயித்யாதி ) அங்கிருக்கும்படி-பரமபதத் திலிருக்கும்படி. பலிதம் ( விளக்கிலித்யாதி ) அங்குநின்ற வண்ணமிங்குநிற்கச் செய்தே யென்றபடி. வண்ணம்-ப்ரகாரம். அஜஹத்ஸ்வபாவதைக்கு ப்ரமாணம் ( ஸ்வாம்ப்ரக்ருதிமித்யாதி ) கீதாயாம். பூர்வமேவலிகிதம். மலிதல்-மிகுதியாய், அழுந்துகையைச் சொல்லுகிறது. “ தோன்றி ” என்றதுக்குசம்வாதம் ( தேவகீ த்யாதி ) இதமபிபூர்வமேவலிகிதம்.

வக்ஷ்யமாணஶ்லோகத்தையுட்கொண்டருளிச்செய்கிறார் (அநுகூலனாயித் யாதி) “ க்ருத்வாபாராவதரணம் ” (க்ருத்வாபாராவதரணம்) இத்யாதி, மௌ ஸலபர்வணி. ஶ்லோகார்த்தம் (ப்ரதிகூலனாயித்யாதி) “ ப்ருதிவ்யாঃ-பாராவ தரணம்க்ருத்வா, ப்ருதுலோசநঃ-ஜகத்ஸர்வம்மோஹயித்வா ” (ப்ருதிவ்யாঃ- பாராவதரணம்க்ருத்வா, ப்ருதுலோசநঃ-ஜகத்ஸர்வம்மோஹயித்வா) என்றத்தால் பலித்தவர்த்தமிது. முட்கோல்-அம்பும், தாற்றுக்கோலும். சாடுகை-கொல்லுகையு ம், நலிகையும். கண்ணழகுபாதகமோவென்ன (இணைக்கூற்றமித்யாதி) இரண்டும் ருத்யுக்களோவித்யர்த்தঃ. கண்ணற்று - தயையில்லாதே. ப்ராப்தி - ஸ்வாமித்வம். “ அப்ராக்ருதமானஸ்வபாவத்தை ” என்றுதொடங்கி, “ அம்மான் ” என்னுமளவு ம் சொன்னவர்த்தத்தை விசதீகரிக்கிறார் (பரமபதத்திலேயித்யாதி) ஸ்வபாவத்தை- பரமபதத்திலேவர்த்திக்கிற வப்ராக்ருதவிக்ரஹத்தை. கீழே - “ அம்மான் ” என்ற

த்ஸதப்பூர்வபாவியாக்கி யருளிச்செய்தது, இங்கே-அபரபாவியாக்கி, "தெய்வநிலை" என்றதுக் கர்த்தாந்தரம் (தூத்யேத்யாதி) "தெய்வநிலை" என்றதுக்கு-அப்ராக்ருதமான விக்ரஹமென்று முந்தினவர்த்தம், ஆஸ்ரிதபாரதந்த்ர்யமென்றிரண்டாமர்த்தம். தன்படியை - தன்னுடைய வாஸ்ரிதபாரதந்த்ர்யமாகிற ஸ்வபாவத்தை. உய்க்கும்-செலுத்தும். சிலஸ்ரீகோஸங்களிலே (இச்செயலாலே லோகத்தையெழுதிக் கொண்டவனென்றுமாம்) என்று விசதமாகத்திருத்தண்டு. "தனக்கசாதாரணமாய் திவ்யமானபரத்வஸ்த்திதியை லோகத்திலே நிலைநிறுத்தக்கடவனான" என்றுமை.

"துயரம்" என்று - துःகமாய், அதுஹேயமாகையாலே (ஹேயமென்றது) துற்றுகை - (நெருங்கபுஜிக்கை)

க்ரமேணாந்வயः. ..........................................................*

---

# ஏழாம்பாட்டு.

---

துன்பமுமின்பமுமாகியசெய்வினையாயுலகங்களுமா
யின்பமில்வெந்நரகாகியினியநல்வான்சுவர்க்கங்களுமாய்
மன்பல்லுயிர்களுமாகிப்பலபலமாயமயக்குக்களா
லின்புறுமிவ்விளையாட்டுடையானைப்பெற்றேதுமல்லலிலனே.

## ஆறாயிரப்படி.

(துன்பமும்) புண்யபாபரூப கர்மங்களுக்கும் பலபோகபூமியான லோகங்களுக்கும் கர்மபலபூதமான ஸ்வர்க்கநரகங்களுக்கும்ஸ்வர்க்கநரகாதிபலபோக்தாக்களான வாத்மாக்களுக்கு மந்தராத்மபூதனாய், நிகிலஜகதுதய விபவலயாதிலீலனா யிருந்தவனைப்பெற்று ஏதுமல்லலிலே னென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கர்மாநுரூபமாக லீலாவிபூதியை நிர்வஹிக்கிறவனைப்பெற்று ஏகதேசமுமல்லலிலேனென்கிறார்.

துன்பமும்-அப்ரீதிரூபமான துःகமும். இன்பமும் - ப்ரீதிரூபமானசுகமும். ஆகிய-உண்டாம்படி. செய்-சேதநனால்செய்யப்பட்ட. வினை-பாபரூபமாயும்புண்யரூபமாயுமுள்ளகர்மங்களுக்கு. ஆய்-நிர்வாஹகனாய். உலகங்களும்-இவற்றையநுஷ்டிக்கைக்கிடானபூலோகப்ரதேசங்களுக்கு. ஆய்-நிர்வாஹகனாய். இக்கர்மபலங்களாய், இன்பமில்வெம்-சுககந்தரஹிதமான. நரகு-நரகத்துக்கும். ஆகி, இனிய-ப்ரீதிகரமானபோக்யவஸ்துக்களாலே. நல்-நன்றாய். வான்-சீரியதான. சுவர்க்கங்களும்-ஸ்வர்க்கப்ரதேசங்களுக்கும். ஆய்-நிர்வாஹகனாய். மன்-கர்மாநுஷ்டாநதசையோடுபலபோகதசையோடுவாசியற அநுவ்ருத்தராகையாலேநித்யராய். பல்-அசங்க்யாதரான. உயிர்களும்-ப்ராணிகளுக்கும். ஆகி-நிர்வாஹகனாய். பலபல-குணபேதத்தாலும் மதிபேதத்தாலும் ருசிபேதத்தாலு மசங்க்யேயமாய். மாயம்-ப்ரக்ருதிகார்யமான. மயக்குக்களால்-சேதநனுடையமோஹவிகாரங்களாலே. இன்பு

றும்-ரசாவஹமான.இவ்விளையாட்டுடையானை-இவ்விபூதியில்லீலையையுடையவனை. பெற்று-உள்ளபடியறிந்துகிட்டப்பெற்று. ஏதும்-ஏகதேசமும். அல்லல்-இக்கர்மவஶ்யமானசம்சாரத்திலலமாப்பு. இலன்-உடையேனல்லேன்.

அல்லல்-அலமாப்பு..........................................................................*

## ஈடு-ஏழாம்பாட்டு.

அகர்மவஶ்யனுகையாலே ஈஶ்வரனுக்கிவ்விபூதியிலுள்ளது லீலாரஸமாத்ரமாகையாலே, அத்தையநுசந்தித்தவெனக்குக் கர்மவஶ்யதையுமில்லை; இந்தலீலாவிபூதியி லந்தர்ப்பவிக்கவும் வேண்டாவென்கிறார்.

( துன்பமித்யாதி ) சுகதுக்கங்களுக்கு ஹேதுவான புண்யபாபரூபகர்மங்களுக்கு நியாமகனாய். ( உலகங்களுமாய் ) இவற்றையார்ஜிக்கும் பூமியைச்சொல்லுதல், போகபூமியைச்சொல்லுதல். ( இன்பமில்வெந்நரகாகி ) சுகலேசமின்றிக்கே யிருக்கிறநரகத்துக்கு நிர்வாஹகனாய். ( இனியநல்வான்சுவர்க்கங்களுமாய் ) நரகத்திற்காட்டி லல்பசுகத்தையுடைத்தான ஸ்வர்க்காதிகளுக்குநிர்வாஹகனாய். உலகங்களுமாயென்றவிடம்-ஆர்ஜநபூமியைச்சொல்லிற்றாகில், இவைபோகபூமிகளாகிறன; அன்றிக்கே, அங்கே-போகபூமியைச்சொல்லிற்றாகில், இங்கு - சுகதுக்கமாத்ரங்களிலேயாகிறது. ( மன்பல்லுயிர்களுமாகி ) கர்மகர்த்தாக்களும் தத்பலபோக்தாக்களுமாய், நித்யராயசங்க்யாதரான ஆத்மவர்க்கத்துக்கு நிர்வாஹகனாய். ( பலபலவித்யாதி ) அசங்க்யேயமான ப்ரக்ருதிவிகாரமுகத்தாலுண்டான சேதநருடைய மதிவிப்ரமங்களாலே ப்ரீத்யாவஹமான லீலைகளையுடையவனைப்பெற்று. சர்வசுஹ்ருத்தாய் பரமகாருணிகனான சர்வேஶ்வரனுக்கு, தன்னையகன்று சேதநர் துஃகப்படுகிறவிது ப்ரீதிஹேதுவாகிறபடி யெங்ஙனேயென்னில்; இவற்றைத்தன் தயையாலேரக்ஷிக்க நினைத்தாலதிவற்றுக்கநிஷ்டமாயிருக்குமிருப்பு அவனுக்குஹாஸ்யஹேதுவாய், அவ்வழியாலே லீலாரசசாதநமாய்விட்டது, இதுக்குநேர்கொடுநேரோதாத்பர்யமிது. கொடுத்தசைதங்யந்தான்பொதுவாய் ருசிபேதத்தாலே வழிவிலங்கிப்போ யநர்த்தத்தைவிளைத்துக்கொண்டிருக்கிற படியைக்கண்டு, “ நாமொன்றைநினைத்துச்செய்ய இவையொன்றைச்சூழ்த்துக்கொண்டபடிகண்டாயே ” என்றுபிராட்டிமுகத்தைப்பார்த்து ஸ்மிதம்பண்ண, அதுகோல்விழுக்காட்டாலே லீலாரசமாய்த்தலைக்கட்டும். ( ஏதுமல்லலிலனே ) அவனுடைய அகர்மவஶ்யதையை யநுசந்தித்தவெனக்குக்கர்மவஶ்யதையில்லை, ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளை அவனுடையலீலையாக வநுசந்தித்தவெனக்கு லீலாவிபூத்யந்வயமாகிறதுஃகமில்லையென்கிறார். [ ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா । இதி மாம் யோऽபிஜாநாதி கர்மபிர்ந ஸ பத்யதே ] ( நாமாம்கர்மாணிலிம்பந்திநமே கர்மபலேஸ்ப்ருஹா । இதிமாம்யோபிஜாநாதி கர்மபிர்நசபத்யதே )

[𑌮𑌮𑌮𑌾𑌯𑌾𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾। 𑌮𑌾𑌮𑍇𑌵𑌯𑍇𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌮𑌾𑌯𑌾𑌮𑍇𑌤𑌾𑌂𑌤𑌰𑌨𑍍𑌤𑌿𑌤𑍇]
(மமமாயா துரத்யயா|மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாந்தரந்திதே) என்றும் இப்படிநம்மையறிந்தவன் கர்மங்களால் பந்திக்கப்படமாட்டா னென்றும்; நான்பந்தித்தபந்தத்தை யாவனொருவனென்னையே கால்க ட்டியவிழ்க்கப்பார்க்கிறான், அவனித்தைக்கடக்குமென்று மவன்சொல் லிவைத்தபடியே, அவன்றன்னையே பற்றிவிடுவித்துக்கொள்ள விருக்கிற வெனக்கொரு க்லேசமில்லையென்கிறார்..............................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (துன்பமித்யாதி) "இவ்வினையாட்டுடையானைப்பெற்று" இத்யாதியிலேநோக்காக வவதாரிகை (அகர்மவஶ்யனித்யாதி)

"துன்பமுமின்பமுமாகிய" என்கிறசாமாநாதிகரண்யம்-கார்யகாரணபா வ நிபந்தநமென்கிறார் (சுகதுःகங்களுக்குஹேதுவானவித்யாதி) அப்ரீதிரூபமான துःகமும், ப்ரீதிரூபமான சுகமுமுண்டாம்படி சேதநனாலேபண்ணப்பட்ட புண்ய பாபரூபமான கர்மங்களுக்குநியாமகனாயென்று சப்தார்த்தம். "வினையாய்" எ ன்கிறசாமாநாதிகரண்யம்-நியாம்யநியாமக பாவநிபந்தநமென்றபடி. மேலுமிப்ப டியே கண்டுகொள்வது.

"வினையாய்" என்றத்தோடே "உலகங்களுமாய்" என்றதுக்கிரண்டுவ கையாகசங்கதி (இவற்றையித்யாதிவாக்யத்வயத்தாலே) ஆர்ஜநபூமியைச்சொன் னபக்ஷத்தில், "உலகங்கள்" என்கிறபஹுவசநம்-தேசபேதத்தைப்பற்றவென்று கண்டுகொள்வது. வெந்நரகு-க்ரூரமானநரகம், இனியநல்வான்சுவர்க்கங்களுமா ய்-ப்ரீதிகரமானபோக்யவஸ்துக்களாலேநன்றாய்ச் சீரியதானஸ்வர்க்கப்ரதேசங்க ளுக்கும் நிர்வாஹகனாய். சுகாநுபவமேயானஸ்வர்க்கமென்னவேண்டியிருக்க, அல் பசுகத்தையுடைத்தானவென்றது-முமுக்ஷுக்களுக் கவற்றிலேஶ்ரத்தைபிறவாமை க்காக. புநருக்தியைப்பரிஹரிக்கிறார் (உலகங்களுமாயென்றவிடமித்யாதி) நரகு-ந ரகமென்னுதல், துःகமென்னுதல். சுவர்க்கம்-ஸ்வர்க்கமென்னுதல், சுகமென்னுதல்.

கீழே-கர்மங்களையும் தத்பலங்களையுஞ்சொல்லுகையாலே, ததநுகுணமான வர்த்தம் (கர்மகர்த்தாக்களுமித்யாதி) கர்மத்தைப்பண்ணி, அநந்தரம் கர்மபலத் தையநுபவிக்குமவர்களு மாயென்றபடி. சப்தார்த்தம் (நித்யராயித்யாதி)

மாயங்களாலுண்டான மயக்குக்கள்-ப்ரக்ருதிவிகாரங்களாலுண்டான ம திவிப்ரமங்கள். இன்புறுமிவ்வினையாட்டுடையானை-சேதநருடைய மதிவிப்ரமங்க ளாலே ப்ரீத்யாவஹமான விவ்விபூதியில் லீலையையுடையவனை. தடஸ்த்தசங்கை யை யநுவதித்து பரிஹரிக்கிறார் (சர்வசுஹ்ருத்தாயித்யாதி) இதுக்கு-லீலைக்கு. "இவற்றைத்தன்தன்மையாலே" இத்யாதிவாக்யவிவரணம் (கொடுத்தசைதந்ய மித்யாதி) பொதுவாய்-பந்தமோக்ஷங்களுக்குப் பொதுவாயென்றபடி. கோல்வி ழுக்காட்டாலே-பர்யவசாநகத்யா.

அவனுடையவகர்மவஶ்யதையை யநுசந்தித்தவனுக்குக் கர்மவஶ்யதையில் லையென்றதுக்குப்ரமாணம் (நமாம்கர்மாணிலிம்பந்தீத்யாதி) ஜகத்ஸ்ருஷ்டியைய வனுக்கு லீலையாகவநுசந்தித்தால் லீலாவிபூத்யந்வய மில்லையென்றதுக்குப்ரமா

ணம் ( மமமாயேத்யாதி ) ஏதத்ப்ரமாண த்வயமபிகீதாயாம். இந்தஶ்லோகத்வய த்துக்கு மடைவேயர்த்தம் ( இப்படிநம்மையித்யாதி ) க்ரீடாப்ரவ்ருத்தேந - தேவேநநிர்மிதா-தைவீஎன்று, ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் லீலையாயிருக்கு மென்றபடி. " திவ்க்ரீடா " இத்யாதிதாத:.

க்ரமேணாந்வய:.......................................................................*

# எட்டாம்பாட்டு.

அல்லலிலின்பமளவிறந்தெங்குமழகமர்சூழொளிய
னல்லிமலர்மகள்போகமயக்குக்களாகியுநிற்குமம்மா
னெல்லையில்ஞானத்தன்ஞானமஃதேகொண்டெல்லாக்கருமங்களுஞ்செய்
யெல்லையின்மாயனைக்கண்ணனைத்தாள்பற்றியானோர்துக்கமிலனே.

## ஆறாயிரப்படி.

(அல்லலில்) து:கா ஸம்பிந்ந நிரவதிகாநந்த விசிஷ்டனாய், கல்யாணதம நிரதிசயௌஜ்ஜ்வல்யவிசிஷ்டனாய், நிரதிசயசௌகுமார்யசௌந்தர்யாதி கல்யாணகுண பரிபூர்ணையாயிருந்த பெரியபிராட்டியாரோடுள்ள வநவரதஸம்ஶ்லேஷ ஜநிதப்ரீதியாலே யப்ரக்ருதிங்கதனாய் தத்ஸம்ஶ்லேஷாநுகுண நிரதிசய திவ்யஜ்ஞாநனாய் அந்தஜ்ஞாநத்தையேகொண்டு பிராட்டியுடைய ப்ரீத்யர்த்தமாக ஜகத்ஸ்ருஷ்ட்யாதி லீலைகளைப்பண்ணி யருளுகிற வாஶ்சர்யபூதனான வண்டுவரைப்பெருமானுடைய திருவடிகளைப் பற்றி நான் நிரஸ்தசமஸ்த து:கனானேனென்கிறார் .......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாத்மபரனாய் ஸ்ரிய:பதியாய்க்கொண்டு சங்கல்பமாத்ரத்தாலே சகலநிர்வாஹகனானவன் திருவடிகளை யாஶ்ரயித்த நானொரு து:கத்தையுடையேனல்லேனென்கிறார்.

அல்லலில்-க்லேஶப்ரசங்கரஹிதமான. இன்பம் - ஆநந்தகுணத்துக்கு. அளவு-அவதி. இறந்து-இன்றியே. எங்கும்-சர்வப்ரதேசங்களிலும். அமர்-பரம்பின. அழகு-அவயவசௌந்தர்யத்தோடு. சூழ்-சேர்ந்த. ஒளியன்-சமுதாயரூபலாவண்யப்ரபையையுடையனாய். இவ்வாநந்தத்தோடும் வடிவழகோடும், அல்லிமலர்-தாமரைப்பூவை வாசஸ்த்தாநமாகவுடையளாகையாலே நிரதிசயபோக்யபூதையாய். மகள்-நாரீணாமுத்தமையானபிராட்டியோட்டை. போகம்-கலவியாலே. மயக்குக்களாகியும் - " அந்யோந்யாதிஶயித ரஸ நிஷ்டா மநஸா ஹ " (அந்யோந்யாத்வைதநிஷ்ட்டாகநரஸகஹநாந்) என்று ஸ்வபரவிபாகப்ரதிபத்திமயங்கும்படியான போகாநந்தரூபனாய்க்கொண்டும். நிற்கும்-நிற்கிற. அம்மான் - சர்வாதிகனாய். எல்லையில்-நிரூத்தமான ஆநந்தமுமழகும் போகமும்போலே யெல்லையிறந்திருக்கக்கடவதான. ஞானத்தன்-ஜ்ஞாநவைபவத்தையுடையனாய். அஃது - நிரபேக்ஷமான அந்த. ஞானமே-ஜ்ஞாநத்தையே. கொண்டு-கொண்டு. எல்லாக்கருமங்களும்-கார்ய

பூத சமஸ்தஜகத்தையும். செய்-சங்கல்பமாத்ரத்தாலேநிர்வஹிக்குமவனாய். எல்லையில்-அபர்யந்தமான. மாயனை-ஆஸ்சர்யசேஷ்டிதங்களையுடையனான. கண்ணனை-க்ருஷ்ணனை. தாள்-திருவடிகளை. பற்றி-சிக்கெனப்பிடித்து. யான்-நான். ஓர் - ஒரு. துக்கம்-துக்கத்தை. இலன்-உடையேனல்லேன்.

துக்கமாவது - அநிஷ்டாநுபவம்..........................................*

## ௫டு - எட்டாம்பாட்டு.

நித்யவிபூதியை யநுபவித்துக்கொண்டிருக்கிற மேன்மையையுடையவன் ஜகத்ரக்ஷணம்பண்ணும் நீர்மையை யநுசந்திக்கப்பெற்ற வெனக்கொரு துஃகமில்லையென்கிறார்.

(அல்லலித்யாதி) ஸ்வர்க்காதிகளிற்போலே துஃகமிஸ்ரமாய் பரிச்சிந்நமாயிராதே, துஃககந்தரஹிதமாய் சுகைகதாநமா யபரிச்சிந்நமானவாநந்தத்தையுடையவன். (எங்குமழகமர்) த்ரிபாத்விபூதியெல்லாம் வெள்ளமிடும் காந்தியையுடையவன். (சூழொளியன்) அழகென்று-அவயவசோபையாய், சூழொளியென்று-சமுதாயசோபையைச் சொல்லுகிறது. அன்றிக்கே (எங்குமழகமர்) பாதாதிகேச மவயவங்களைத்தனித்துப்பார்த்தால் "இங்கேயழகுகுடிகொண்டது, இங்கேயழகுகுடிகொண்டது" என்னும்படி பாதாதிகேசம்பழிப்பற்று. (சூழொளியன்) த்ரிபாத்விபூதியடங்கலும் காந்திபூரத்தாலே வெள்ளமிடாநிற்குமாயிற்று. லாவண்யமான தெங்குமொக்க வ்யாபித்து அலையெறியும்படியாயிருக்கை. (அல்லிமலர் மகளித்யாதி) இவ்வழகு காட்டிலெறித்த நிலாவாகாதபடி நெஞ்சோடே யநுபவிப்பாரைச்சொல்லுகிறது. புஷ்பத்தில் பரிமளம் வடிவுகொண்டிருக்கிறாப்போலே நிரதிசயபோக்யையான பெரியபிராட்டியாரோட்டை சம்ஸ்லேஷத்தாலேபிறந்த ஆஸ்சர்யமான மயக்கத்தையுடையனானசர்வேஸ்வரன். மயக்குக்கள்-ஆநந்தங்கள். மயங்கல்-கூடலும், கலத்தலும். (ஆகியும்நிற்கும்) தன்னுடையவாநந்தத்துக்குமேலே ஸ்ரீயஃபதித்வத்தால்வந்த வாநந்தத்தை யுடையனாயிருக்கும். (அம்மான்) ஆநந்தமயனாய் ஸ்ரீயஃபதியாமவனிறே சர்வேஸ்வரன். (எல்லையில்ஞானத்தன்) "மநஸ்வீ" என்னுமாபோலே, ப்ரணயதாரையி லவளுக்கும் ஆனைக்குக்குதிரைவைக்கவல்ல ஜ்ஞாநாதிக்யத்தையுடையவன். (ஞானமஃதேகொண்டித்யாதி) தானுமவளுமான சேர்த்தியிற்பிறந்த வெளிச்சிறப்பே சஹாயாந்தர நிரபேக்ஷமான சாதநமாகக்கொண்டு, இக்கார்யஜாதத்தையெல்லாமுண்டாக்குமாயிற்று. " யஸ்யாவீக்ஷ்யமுகந்ததிங்கிதபராதீநோவிதத்தேகிலம்" ) (யஸ்யாவீக்ஷயமுகந்ததிங்கிதபராதீநோவிதத்தேகிலம்) என்றாரிறே. இம்முகத்தாலேயிறே "பஹுஸ்யாம்" என்பது. அல்லாதார்க்கடைய, விஷயங்களோட்டைச்சேர்த்தி ஜ்ஞாநஹாநியையும் பலஹாநியையும் ரூபஹாநியையும் பண்ணுவிக்கும்; இவ்விஷயமவற்றுக்கெதிர்த்தட்டாயிருக்கும். (எல்லையில்மாயனை) சங்கல்ப ரூபஜ்ஞாநத்தாலே ஸ்ரு

ஷ்ட்யாதிகளைப்பண்ணவல்ல ஆஸ்சர்யசக்தியுக்தனை. இப்படிப்பட்டவனு ரென்னில் (கண்ணனை) க்ருஷ்ணனே. "க்ருஷ்ணவஹிலோகாநாம்" (க்ருஷ்ணஏவஹிலோகாநாம்) (கண்ணனைத்தாள்பற்றியானேர் துக்கமிலனே) பிராட்டி சந்நிதியுமுண்டாய், அவள்புருஷ்காரமாக ஸஹகாரிநிரபேக்ஷமாக நங்காரியஞ்செய்யுமவனுமாய், "ஏஷஹ்யேவாநந்தயாதி" (ஏஷஹ்யேவாநந்தயாதி) என்கிறபடியே ஆநந்தாவஹனனவனைப்பற்றினவெனக்கொருதுஃகமில்லையென்கிறுர் ...................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (அல்லலிலித்யாதி) "அல்லலிலின்பம்" இத்யாதியைப்பற்ற (நித்யவிபூதியையித்யாதி) "கண்ணன்" என்றதைப்பற்ற (நீர்மையையென்றது)

"அல்லலில்-அளவிறந்த-இன்பம்" என்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகமாகவர்த்தம் (ஸ்வர்க்காதிகளிற்போலேயித்யாதி) துஃகரஹிதமா யளவிறந்தவாநந்தத்தையுடையவனித்யர்த்தஃ.

"எங்கும்-அழகமர், எங்கும்-சூழொளியன்" என்றபடி. இதக்குமூன்றர்த்தம். முந்தினது, "அழகு" என்று-தேஜஸ்ஸாய், "சூழொளியன்" என்று - திருமேனியெங்கும் சூழ்ந்தவொளியையுடையவனென்றபடி; அதாவது - சமுதாயசோபை. இத்தையருளிச்செய்கிறுர் (த்ரிபாத்விபூதியெல்லாமித்யாதி) இந்தவர்த்தத்துக்கு, மேலேயிருக்கிற ( லாவண்யமானது ) இத்யாதிவாக்யம்-இங்கே "சூழொளியன்" என்றதுக்கர்த்தமாக வருசந்தேயம். இரண்டாமர்த்தம் ( அழகென்றவயவசோபையாயித்யாதி) அதாவது-அவயவங்களெங்கும் தனித்தனியே பூர்ணமானவழகையுடையனுய்; "ஒளி" என்று-சமுதாயசோபையாய், திருமேனியெங்கும்சூழ்ந்திருக்கிற சமுதாயசோபையையுடையவனென்றபடி; மூன்றுமர்த்தம், அழகென்று-சௌந்தர்யம்; ஒளியென்று - தேஜஸ்ஸு. இத்தையருளிச்செய்கிறுர் ( பாதாதிகேசமித்யாதி ) ஆக, "அழகு" என்று-தேஜஸ்ஸாதல், சௌந்தர்யமாதல்; "ஒளி" லாவண்யமாதல், தேஜஸ்ஸாதல். சௌந்தர்யம் - அவயவசோபை. லாவண்யம்-சமுதாயசோபை. காந்தியும் தனியே ஒருவிக்ரஹகுணம்.

இத்தைத்தளமாக்கிக்கொண்டு மேலிற்பதத்துக்கு ரசோக்தியாகவர்த்தம் (இவ்வழகித்யாதி) நெஞ்சோடேயநுபவிப்பாளென்றது-சாடு. ஸஹ்ருதயமாகவென்றும், வக்ஷஸ்த்தலத்திலிருந்தென்றும். இரண்டர்த்தமுமிங்கே யுபயுக்தம். சப்தார்த்தம் (புஷ்பத்திலித்யாதி) "ஆகியும்" என்றசப்தார்த்தம் (தன்னுடையவாநந்தத்துக்கித்யாதி) "இன்பமளவிறந்து" என்று-ஸ்வாபாவிகமான வாநந்தம்சொல்லிற்றிறே. "அல்லலிலின்பம்" இத்யாதியையும், "அல்லிமலர்மகள்" இத்யாதியையுங்கூட்டிபாவம் (ஆநந்தமயனுயித்யாதி)

"எல்லையில்ஞானத்தன்" என்று-ப்ரணயதாரையில் விதக்தனென்னுதல், ஸ்ருஷ்டிஹேதுவான சங்கல்பரூபஜ்ஞாநத்தையுடையவனென்னுதல். பிராட்டியோட்டைச்சேர்த்திசொன்னவநந்தரம், "எல்லையில்ஞானத்தன்" என்கையாலே - போகப்ரகாரங்களையறிகைக்கீடான ஜ்ஞாநாதிக்யத்தை யிதுக்கர்த்தமாக வருளிச்செய்கிறுர் (மநஸ்வீத்யாதி) "மநஸ்வீ தத்கதஸ்தஸ்யா:" (மநஸ்வீதத்கதஸ்தஸ்யாஃ) இத்யாதி பாலகாண்டே, பூர்வமேவல்கிதம். ஆனைக்குக்குதிரை வைக்கவல்லவென்றது-ஆ

ஊக்குக்குதிரை சரியாகாதாற்போலே, அவளுடையஜ்ஞாநத்திலும் விஞ்சினவெ ன்றபடி.

"எல்லையில்ஞானத்தன்" என்றதுக்கு - பிராட்டியோட்டைச் சேர்த்தியா லே விசதமாகப்பிறந்த சங்கல்பரூப ஜ்ஞாநத்தையுடையவனென்றர்த்தாந்தரம் வி வக்ஷித்து, "ஞானமஃதேகொண்டு" என்றதுக்கர்த்தம் (தானுமவளுமானவித்யா தி) க்ரியதஇதி-கர்மஎன்று விவக்ஷித்து (இக்கார்யஜாதத்தையெல்லாமென்றது) சேர்த்தியிற்பிறந்த ஜ்ஞாநத்தாலே ஸ்ருஷ்டிக்கும்படி யெங்ஙனேயென்ன (யஸ்யா வீக்ஷ்யேத்யாதி) அதாவது - சம்ஸ்லேஷசமயத்திலோடமேற்றிக் கூலிகொள்ளும ளவானபோது "இவளொருகார்யம் நம்மையேவுவதுகாண்" என்றிருக்குமளவில் ஜகத்திதத்தை யவள்நியமிக்க, அத்தாலே தயமாநமநாவாய்க்கொண்டு "பஹுஸ்யாம்" என்று ஸ்ருஷ்ட்யாதிகளிலே யொருப்படுமென்றபடி. "ஸ்வஸ்திஸ்ரீர்திஶதாத³ஶேஷஜக³தாம்ஸர்க³ோபஸர்க³ஸ்தி²தீ: ஸ்வர்க³ம்து³ர்க³திமாபவர்க³ிகபத³ம்ஸர்வஞ்ச குர்வன்ஹரி:। யஸ்யாவீக்ஷ்யமுக²ம்ததி³ங்கி³தபராதீ⁴நோவித⁴த்தேகி²லம்க்ரீடே³யம்க²லுநாந்யதா²ஸ்யரஸதா³ஸ்யாதை³கரஸ்யாத்தயா" (ஸ்வஸ்திஸ்ரீர்த்திஶதாதஶேஷஜகதாம்ஸர்க்கோப ஸர்க்கஸ்த்திதிஸ்வர்க்கம்துர்க்கதி மாபவர்க்கிகபதம்ஸர்வஞ்சகுர்வன்ஹரி: । யஸ்யாவீக்ஷ்யமுகம்ததிங்கிதபராதீநோ விதத்தேகிலம்க்ரீடேயம்கலுநாந்யதாஸ்யரஸதாஸ்யாதைகரஸ்யாத்தயா) இதிஸ்ரீஸ்துதௌ. "பஹுஸ்யாம்" என்று-தான்சங்கல்பித்தன்றோ ஸ்ருஷ்டிப்பதென்ன (இம்முகத்தாலே யித்யாதி) சாடு. இம்முகத்தாலே-இவள்முகத்தாலே, இப்ரகாரத் தாலேயென்றும். இத்தால்-அவன் சங்கல்பிக்கிறது மவள்நியமிக்கையாலே யென் றுகருத்து. ஸ்த்ரீகளோட்டைச்சேர்த்தி ஜ்ஞாநமாந்த்யஹேதுவன்றோவென்ன (அ ல்லாதார்க்கித்யாதி) (இவ்விஷயமிதி) "எல்லையில்ஞானத்தன் ஞானமஃதேகொண் டு, எல்லையில்மாயனை, அழகமர்சூழொளியன்" என்று-ஜ்ஞாநசக்தி சௌந்தர்யங் களைச்சொல்லுகையாலே, இவ்விஷயமவற்றுக் கெதிர்த்தட்டாயிருக்குமென்றபடி. இந்தவதிசயங்களெல்லா மவள்சேர்த்தியாலேயென்றுகருத்து.

(கண்ணனை) "க்ருஷிர்பூ⁴வாசக:ஶப்³தோ³ணஶ்ச நிர்வ்ருதிவாசக:। விஷ்ணுஸ்தத்³பா⁴வயோகா³ச்ச க்ருஷ்ண இத்யபி⁴தீ⁴யதே" (க்ருஷிர்ப்பூவாசகஶ்ஶப்தோ ணஶ்சநிர்வ்ருதிவாசக: । விஷ்ணுஸ்தத்பாவயோகாச்சக்ருஷ்ணஇத்யபிதீயதே) எ ன்கிறபடியே ஆநந்தாவஹனென்றபடி. க்ருஷ்ணனுக்கு ஸ்ருஷ்ட்ருத்வமுண்டோ வென்ன (க்ருஷ்ணஏவஹீத்யாதி) "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:। க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ⁴தமித³ம் விஶ்வம் சராசரம்" (க்ருஷ்ணஏவஹி லோகாநாமுத்பத்திரபிசாப்யய: । க்ருஷ்ணஸ்யஹிக்ருதேபூதமிதம்விஸ்வம் சராச ரம்) இதிராஜஸூயே.

பிராட்டிசந்நிதியைச்சொன்னவநந்தரம், ஜகத்ஸ்ருஷ்டியைச்சொன்னது க்குபாவம் (பிராட்டிசந்நிதியுமுண்டாயித்யாதி) "ஞானமஃதேகொண்டெல்லாக்க ருமங்களும்செய்" என்றத்தைப்பற்ற (அவள்புருஷகாரமாகவித்யாதி) "கண்ண ன்" என்றதுக்கர்த்தம் (ஆநந்தாவஹனென்றது)

அல்லிமலர்மகளென்றுதொடங்கி, அம்மான்-அல்லலிலின்பமென்றுதொடங்கி, எல்லையில் ஞானத்தனென்றுதொடங்கி, யானேர்துக்கமில னித்யங்வய:...*

## ஒன்பதாம்பாட்டு.

துக்கமில்ஞானச்சுடரொளிமூர்த்திதுழாயலங்கற்பெருமான்
மிக்கபன்மாயங்களால்விகிருதஞ்செய்துவேண்டுமுருவுகொண்டு
நக்கபிரானோடயன்முதலாகவெல்லாருமெவையுந்தன்னு
ளொக்கவொடுங்கவிழுங்கவல்லானைப்பெற்றொன்றுந்தளர்விலனே.

### ஆறாயிரப்படி.

(துக்கமில்) சமஸ்தஹேயராஹிதனாய், சர்வஜ்ஞனாய், நிரதிசய தேஜோமய திவ்யரூபனாய், திருத்துழாயாலே யலங்க்ருதனாய், தன்னுடைய விசித்ரசக்திகளாலே ஸ்வாபிமததிவ்யரூபங்களைக்கொண் டாஸ்சர்ய திவ்யசேஷ்டிதங்களைச்செய்து, ப்ரஹ்மாதி சர்வாத்மாக்களையு மொருகாலே திருவயிற்றிலே யொடுங்கவிழுங்க வல்லானைப்பெற்றொன்றுந் தளர்விலேனென்கிறார்.....................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகாரரக்ஷகனான ஆபத்ஸகனைப்பற்றினானொரு தளர்த்தியை யுடையேனல்லேனென்கிறார்.

துக்கம்-து꞉கஸ்பர்ஶம். இல்-இல்லாத. ஞானம் - ஜ்ஞாநத்தையுடையனாய். சுடரொளி-அத்யுஜ்ஜ்வலதேஜோமயரூபமான. மூர்த்தி-விக்ரஹத்தையுடையனாய். துழாயலங்கல்-திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனான. பெருமான்-சர்வாதிகனாய்வைத்து. மிக்க- "பராஸ்யஶக்திர்விவிதைவ" (பராஸ்யஶக்திர்விவிதைவ) என்கிறபடியே அநவதிகாதிசயையாய். பல்-பஹுவிதைகளான. மாயங்களால்-ஆஸ்சர்யசக்திகளாலே. * இச்சாக்ருஹீதமான வேண்டுமுருவு-அபிமதவிக்ரஹங்களை. கொண்டு-பரிக்ரஹித்து. விகிருதம்-இதரசஜாதீயப்ரதிபத்தி பண்ணலாம்படியானசேஷ்டாவிகாரங்களை. செய்து-பண்ணுமவனாய். அவ்வளவன்றியே நக்கன்-திகம்பரனாய். பிரானோடு-ஈஸ்வராபிமாநியானருத்ரனும். அயன் - அவனுக்குத்பாதகனாய் அஜனென்றுப்ரசித்தனானப்ரஹ்மாவும். முதலாக-முதலாக. எல்லாரும்-எல்லாச்சேதநரையும். எவையும்-அசேதநங்களையும். ஒக்க-தாரதம்யமில்லாதபடி. தன்னுள்-அகவாயில். ஒடுங்க - ஏகதேசத்திலேயொதுங்கும்படியாக. விழுங்கவல்லானை-விழுங்கவல்லரக்ஷணசக்தியுக்தனை. பெற்று-லபித்து. ஒன்றும்-ஒரு. தளர்வு-தளர்த்தியை. இலன்-உடையேனல்லேன்.

தளர்வு-பலஹாநி.....................................................*

### ஈடு - ஒன்பதாம்பாட்டு.

அகடிதகடநா சமர்த்தனான வடதளசாயியை யநுபவிக்கப்பெற்ற வெனக்கொருதளர்வுமில்லை யென்கிறார். மஹாப்ரளயவ்ருத்தாந்தத்தை யநுசந்திக்கிறா ரென்னவுமாம்.

(துக்கமிலித்யாதி) ஹேயப்ரத்யநீகமான ஜ்ஞாநத்தையும், நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தையு முடையனாய், அவ்வடிவுக்கலங்காரமாகப்போரும்படியான திருத்துழாய்மாலையை யுடையனானசர்வேஸ்வரன். அலங்கலென்பது-மாலை. (மிக்கவித்யாதி) அபரிச்சேத்யமாய்ப்பலவகைப்பட்ட ஆஸ்சர்யசக்தியோகத்தாலே. (வேண்டுமுருவுகொண்டு-விகிருதஞ்செய்து) இச்சாக்ருஹீதமான விக்ரஹங்களைப்பரிக்ரஹித்து விக்ருதங்களைப்பண்ணாநிற்கும். அதாவது-சிறியவடிவைக்கொண்டு பெரியலோகங்களை வயிற்றிலேவைத்து ஒருபவனான வாலந்தளிரிலே கண்வளர்ந்தருளுகையாகிற அகடிதகடநா சாமர்த்த்யத்தைச்சொல்லுகிறது.(நக்கபிரானித்யாதி) ஸ்வகோஷ்ட்டிக் குபகாரகனாக ப்ரசித்தனாயிருக்கிற ருத்ரனோடேகூட, அவனுக்கும் ஜநகனானவேற்றத்தையுடைய சதுர்முகன்றொடக்கமான எல்லாச்சேதநாசேதநங்களையு மொருகாலே ப்ரளயம் தேடிலுங்காணவொண்ணாதபடி வயிற்றிலேவைத்து ரக்ஷிக்கவல்ல சர்வரக்ஷகனை. ஒடுங்கவிழுங்குகையாவது - "ஏழுலகுமுண்டுமிடமுடைத்து" என்கிறபடியே சிறுவயிற்றிலே பெரியலோகங்களைவைத்தால், ஈர்க்கிலத்திக்காய் கோத்தாற்போலேவிசைத்து வேறாயிராதே அடங்கித்தகுதியாயிருக்கை. இப்படிப்பட்டவனை (பெற்றொன்றும்தளர்விலனே) சர்வசக்தியாய், ப்ரஹ்மாதிகளுக்கும் ரக்ஷகனானவனை அநந்யப்ரயோஜநனாயாஸ்ரயித்தவெனக்கொரு துःகமுண்டோவென்கிறார். நைமித்திகப்ரளயமானபோது, அவர்களுக்குரக்ஷ்யமான த்ரைலோக்யத்தைரக்ஷிக்கையாலே அவர்களுக்கும் ரக்ஷகனென்கை.....................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (துக்கமித்யாதி) "விழுங்க" என்கிறபத ஸ்வாரஸ்யத்தைப்பற்ற-முந்தினவவதாரிகை. "நக்கபிரான்" இத்யாதியாலே-ப்ரஹ்மாதிகளையும் விழுங்கினதாகச்சொல்லுகையாலே (மஹாப்ரளயவ்ருத்தாந்தமென்றது) அப்போது, விகிருதஞ்செய்கையாவது - ஸ்தூலாகாரத்தை சம்ஹரித்து ஸூக்ஷ்மாகாரத்திலே நிறுத்துகை. "விழுங்க" என்றதுக்கு - "அத்தாசராசரக்ரஹணாத்" என்னக்கடவதிறே. விழுங்குகையாவது - தன்ஸ்வரூபசங்கல்பாதிகளாலே சத்தையை நோக்குகை.

"சுடரொளி" என்கிறமீமிசைக்கர்த்தம் (நிரவதிகேத்யாதி)

விகிருதம்-விருத்தையான க்ருதியித்யர்த்த8. "விக்ருதங்கள்" என்றத்தை விவரிக்கிறார் (அதாவதித்யாதி) பவனான-முகிழ்விரியாத.

நக்கன்-நக்நன். அவனிவருக் குபகாரகனோவென்ன (ஸ்வகோஷ்ட்டிக்கித்யாதி) ஒடுங்குகை-அடங்குகை. (ஏழுலகுமுண்டுமிடமுடைத்திதி) ஸ்பஷ்டோர்

த்தஃ. திருமொழிபதினோரம்பத் தைந்தாந்திருமொழி மூன்றும்பாட்டு. "ஆழ்கடல்சூழ்" இத்யாதி. விசைத்து-மிகுத்து.

தளர்வு-சைதில்யம். அதாவது-தஃகம். (சர்வசக்தியாயிதி) "வேண்டுமுருவுகொண்டு-விகிருதஞ்செய்து" என்கையாலே-சர்வசக்தித்வம். நைமித்திகப்ரளயத்தில் ப்ரஹ்மாதிகளுக்கு சலநம்சொல்லலாமோவென்ன (நைமித்திகேத்யாதி) த்ரைலோக்யத்தையு மளக்கப்புக்கபாரிப்பாலே ப்ரஹ்மலோகத்தளவு மளந்தாற்போலே, இவர்களையும் ரக்ஷகனுனதன்பாரிப்பாலே வயிற்றிலேவைத்தானென்றால் விரோதமில்லையென்றபடி. "எச்சில்தேவரல்லாதார்தாமுளரே" என்னக்கடவதிறே. நைமித்திக ப்ரளயமானபோதென்றது-சொன்னயோஜனையிலென்றபடி. அதாவது-நைமித்திகப்ரளயத்தில் லோகங்களைவயிற்றிலேவைத்து வடதளசாயியாயிருந்தபோது ப்ரஹ்மருத்ராதிகளை வயிற்றிலேவைத்ததில்லையிறே, ஆகையாலேயவர்களை வயிற்றிலேவைத்து ரக்ஷிக்கையாவது-அவர்களுக்கு ரக்ஷ்யமானத்ரைலோக்யத்தை ரக்ஷிக்கையென்றபடி. மஹாப்ரளயமானபோது, லயஸ்த்தாநமாகையாலே - "தன்னுள்" என்கிறது.

க்ரமேணுர்வயஃ.............................................................................*

---

## பத்தாம்பாட்டு.

---

தளர்வின்றியேயென்றுமெங்கும்பரந்ததனிமுதல்ஞானமொன்று
யளவுடையைம்புலன்களறியாவகையாலருவாகிநிற்கும்
வளரொளியீசனைமூர்த்தியைப்பூதங்களைந்தையிருசுடரைக்
கிளரொளிமாயனைக்கண்ணனைத்தாள்பற்றியானென்றுங்கேடிலனே.

### ஆறுயிரப்படி.

(தளர்வின்றியே) அநாயாஸேந சர்வதாசர்வத்ரநியந்த்ருதயாவ்யாப்தனுய், ஜகத்காரணபூதனுய், ஜ்ஞாநரூபனுய், ஸ்வேதர சமஸ்தவிஸஜாதீயனுய், வ்யாப்யபூதரான வாத்மாக்களுடைய பரிச்சிந்நவஸ்து க்ராஹகமான விந்த்ரியங்களுக்கபூமியாய், வ்யாப்யவஸ்துகததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனுய், ஸ்வாஸாதாரணதிவ்யரூபவிசிஷ்டனுய், ப்ருதிவ்யாதிபூதசந்த்ரசூர்யாதிஜகச்சரீரனுய், தன்னுடைய நிரவதிக தேஜோவிசிஷ்டரூபத்தோடேகூடவந்து வசுதேவக்ருஹேவதீர்ணனுன வெம்பெருமானுடைய திருவடிகளைப்பற்றி யினியொருநாளும் கேடிலேனென்கிறுர் ............*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாந்தராத்மபூதனுன க்ருஷ்ணனைப்பற்றின நானொரு அழிவையுடையேனல்லேனென்கிறுர்.

என்றும்-சர்வகாலத்திலும். எங்கும் - சர்வதேசத்திலும். தளர்வின்றியே-தன்னுடையநியந்த்ருத்வசக்திக்குத்தளர்த்தியில்லாதபூர்த்தியோடே. பரந்த-வ்யாபித்திருக்குமவனாய். தனி-அத்விதீயமாய். முதல்-சமஸ்தகாரணமான. ஞானமொன்றாய்-ஜ்ஞானைகநிரூபணீயனாய். அளவுடை-விஷயபரிச்சேதங்களான.ஐம்புலன்கள்-இந்த்ரியங்களேந்துக்கும். அறியாவகை-அறியவொண்ணாதபடி. அருவாகி-நிரவயவஸ்வரூபனாய். நிற்கும்-வர்த்திக்குமவனாய். வளர்-இப்படி வ்யாப்தியால்வந்த நியந்த்ருத்வத்தாலே அபிவ்ருத்தமான. ஒளி-ஔஜ்ஜ்வல்யத்தையுடைய. ஈசனை-ஸ்வாமியாய். மூர்த்தியை-அசாதாரணதிவ்யவிக்ரஹயுக்தனாய். பூதங்களைந்தை-சமஷ்டிரூபபூதங்களையும். இருசுடரை - வ்யஷ்டிரூபசந்த்ராதித்யர்களையும். சரீரமாகவுடையனாகையாலே அவைதானென்று சொல்லலாம்படியாய், கிளர்-அவதாரப்ரயுக்தமான வபிவ்ருத்தியையுடையவாய். ஒளி-அத்யுஜ்ஜ்வலமான. மாயனை-ஆஶ்சர்ய குணங்களையுடைய. கண்ணனை-க்ருஷ்ணனை. தாள்-திருவடிகளை. பற்றி - ஆஶ்ரயித்திருக்கிற. யான்-நான். என்றும்-சர்வகாலத்திலும். கேடு - ஒருஅழிவை. இலன்-உடையேனல்லேன் ..........................................................*

## ௱- பத்தாம் பாட்டு.

ஜகச்சரீரியாய் சத்தையையும் நோக்குமவனாய், ஆபிமுக்யம்பண்ணினாரை அசாதாரணவிக்ரஹத்தோடேவந்தவதரித்து ரக்ஷிக்குமவனைப் பற்றின வெனக்கொரு கேடில்லையென்கிறார்.

(தளர்வின்றியேயித்யாதி) என்றுமுண்டாய் எங்குமொக்க வ்யாபியாநின்றா லொருதளர்த்தியின்றிக்கே, ஸ்ருஷ்டிக்குமிடத்தி லத்விதீயகாரணமாயுள்ள சங்கல்பரூபஜ்ஞாநத்தையுடையனாய். அன்றியே, தளர்வித்யாதிக்கு-ஒருபதார்த்தத்திலும் குறைவுபடாதபடி யெங்குமொக்கவேகரூபமாக வெல்லாக்காலத்திலும் வ்யாபித்து, இவற்றை ஸ்ருஷ்டிக்குமிடத்தில் த்ரிவிதகாரணமும் தானேயாய், விலக்ஷணஜ்ஞாநஸ்வரூபனாய். (அளவுடையித்யாதி) உழக்காலேகடலை முகக்கவொண்ணாதாப்போலே, பரிச்சிந்நவஸ்து க்ராஹகமான இந்த்ரியங்களாலே அபரிச்சேத்யவஸ்துவை க்ரஹிக்கவொண்ணாதிறே. ( அருவாகிநிற்கும் ) அவற்றாலறியவொண்ணாதபடி யவிஷயமாயிருக்கும். ( வளரொளியீசனை ) இப்படி சேதநாசேதநங்களோடேகூடி அவற்றுக்கந்தராத்மாவாய்ப்புக்குநின்றால் தத்கததோஷங்க ளவனுக்கு ஸ்பர்ஶியாதோவென்னில்; “ அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி ” ( அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி ) என்கிறபடியே தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாய், நியந்த்ருத்வத்தால்வந்த புகரையுடையனாயிருக்கும். (மூர்த்தியை) இப்படி ஜகச்சரீரியாயிருக்கச்செய்தே அப்ராக்ருத திவ்யவிக்ரஹயுக்தனாய்க்கொண்டு நித்யவிபூதியிலிருக்குமிருப்பைச்

சொல்லுகிறது. (பூதங்களைந்தையிருசுடரை) அசாதாரணவிக்ரஹத்தோபாதி ஜகச்சரீரியாய்நிற்கிற வதுவு மிவர்க்கநுபாவ்யமாம்படியிறே, அத்தோடொக்க (பூதங்களைந்தை யிருசுடரையென்றது) காரணமானப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களையும், கார்யவர்க்கத்தில்தலையான சந்த்ரசூர்யர்களையுமுடையனாய் லீலாவிபூதிக்கு நிர்வாஹகனாயிருக்குமிருப்பைச்சொல்லுகிறது. (கிளரொளிமாயனைக்கண்ணனை) இவ்விபூதிக்குள்ளே அப்ராக்ருததிவ்ய ஸம்ஸ்த்தாநத்தை யிதரஸஜாதீயமாக்கிக்கொண்டுவந்து க்ருஷ்ணனாய்வந்தவதரித்தவனை. (கண்ணனைத்தாள்பற்றி) "மாமேகம்ஶரணம் வ்ரஜ" (மாமேகம்ஸரணம்வ்ரஜ) என்றவன்திருவடிகளைப்பற்றி. (யானென்றுங்கேடிலனே) இவன்விமுகனானவன்றும் ப்ராப்தியாலே சத்தையை நோக்கி, இவனாபிமுக்யம்பண்ணினவன்று கண்ணுக்குத்தோற்றிநின்று ரக்ஷிக்குமவன்திருவடிகளை முறையிலேபற்றின வெனக்கொருநாளுமநர்த்தமில்லை. மூர்த்தியை-தனிமுதல்ஞானமொன்றாய்-பூதங்களைந்தை யிருசுடரை-என்றுமெங்கும்பரந்து-தளர்வின்றியே - அளவுடையைம்புலன்களறியாவகையாலருவாகிநிற்கும் வளரொளியீசனை -கிளரொளிமாயனைக் கண்ணனைத்தாள்பற்றியானென்றுங்கேடிலனித்யந்வயঃ .................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( தளர்வின்றியேயித்யாதி ) "எங்கும்பரந்த" இத்யாதியைப்பற்ற ( ஜகச்சரீரியாயித்யாதி ) " கிளரொளிமாயனைக்கண்ணனை " இத்யாதியைப்பற்ற ( ஆபிமுக்யம்பண்ணினாரையித்யாதி )

" என்றும் " - நித்யமாயிருப்பதாய், " எங்கும்-தளர்வின்றியே-பரந்த " எங்குமொக்க சங்கோசமின்றிக்கே பரந்திருப்பதாய், " தனிமுதல் " - அத்விதீய காரணமாய், ஞானமொன்றாய்-அத்விதீயமான சங்கல்பரூபஜ்ஞாநத்தை யுடையனாயென்று முந்தினவர்த்தம். இந்தவர்த்தத்தில், " ஞானமொன்றாய் " என்று-ஜ்ஞாநத்துக்கத்விதீயத்வமாவது-ஸ்வாபதசையிலும் க்ஷயியாதிருக்கை.தளர்த்தி-சங்கோசம். இரண்டாமர்த்தத்திலே, தளர்வின்றியே - ( குறைவுபடாதபடி ) என்றர்த்தம். ( த்ரிவிதகாரணமுமிதி ) " தனி " என்று-நிமித்தத்வமும், " முதல் " என்று-உபாதாநத்வமும், " என்று " என்று-ஸஹாயாந்தர நைரபேக்ஷ்யமும்சொல்லுகிறது. ஆக, நிமித்தஸஹகார்யந்தர நிரபேக்ஷமான வுபாதாநகாரணமென்றபடி. " ஞானம் " என்று-தர்மபூதஜ்ஞாநமாதல், ஸ்வரூபஜ்ஞாநமாதல்.

* அளவுடையைம்புலன்களாகையாலே யவற்றாலறியவொண்ணாதபடி நிற்குமென்கிறார் (உழக்காலேயித்யாதி) "அளவுடை" என்றத்தைப்பற்ற (உழக்காலேயென்றது) விஷயபரிச்சேதகங்களான பஞ்சேந்த்ரியங்களாலறியவொண்ணாதபடி ஸூக்ஷ்மரூபனாயிருக்குமென்று சப்தார்த்தம். அரு-ஸூக்ஷ்மம். ( அறியாவகையால் ) ஆல்-அசை. அறியாவகை-அறியவொண்ணாதபடி.

"அருவாகிநிற்கும்" என்றவநந்தரம், "வளரொளி" என்றதுக்குபாவம் (இப்படியித்யாதி) * ஈசனுகையாலே * வளரொளியாயிருக்குமென்றபடி.

"மூர்த்தி" என்று—விக்ரஹமாய், அசாதாரணவிக்ரஹவிசிஷ்டனென்றபடி. "மூர்த்தியை" என்றவநந்தரம், "பூதங்களைந்தையிருசுடரை" என்றதுக்குபாவம் (அசாதாரணேத்யாதி) பூதபஞ்சகத்தையு மிருசுடரையும்சொன்னல் - ஜகச்சரீரத்வம்சொன்னதாமோவென்ன (காரணமானவித்யாதி) "இருசுடரை" என்று - கார்யவர்க்கத்தைச்சொல்லுகையாலே, "பூதங்களைந்தை" என்றது -காரணமானபூதபஞ்சகபரம்.

கிளரொளிமாயனை - அபிவ்ருத்தமாயத்யுஜ்ஜ்வலமான வாஶ்சர்யகுணங்களையுடையவனை யிதிசப்தார்த்த:. "அருவாகி-எங்கும்பரந்த-கண்ணனைத்தாள்பற்றியானென்றும் கேடிலன்" என்றுகூட்டிபாவம் (இவன்விமுகனனவித்யாதி)

"ஞானம்" என்று-ஸ்வரூபஜ்ஞாநமாகச்சொன்ன விரண்டாமர்த்தத்தைக் கடாக்ஷித்தந்வயமருளிச்செய்கிருர் (மூர்த்தியையித்யாதி) தர்மபூதஜ்ஞாநபரமானமுந்தினவர்த்தத்தில், க்ரமேணுந்வய:..................................................*

# பதினென்றம்பாட்டு.

கேடில்விழுப்புகழ்க்கேசவனைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
பாடலோராயிரத்துளிவையுமொருபத்தும்பயிற்றவல்லார்கட்கவன்
நாடுநகரமுநன்குடன்காணநலனிடையூர்திபண்ணி
வீடும்பெறுத்தித்தன்மூவுலகுக்குந்தருமொருநாயகமே.

## ஆருயிரப்படி.

(கேடில்) நித்யசித்தகல்யாணகுணவிசிஷ்டனுன கேசவனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன பாடலோராயிரத்து ளிவையுமோர்பத்தும் பயிற்றவல்லார்கட்கவன், நாடும் நகரமும் நன்குடன்காணநல்லசம்பத்துக்களை யிந்தலோகத்திலே யநுபவிப்பித்து, அவர்களை நிரஸ்த சமஸ்தசாம்சாரிக து:காக்கி யவர்களுக்குத் தன்னுடைய சர்வேஶ்வரத்வத்தையும் தருமென்கிருர் ..................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக ஸ்வாராஜ்யப்ராப்தியை யருளிச்செய்கிருர்.

கேடில் - ஹேயப்ரத்யநீகமாகையாலே அழிவற்று. விழு - கல்யாணமாகையாலே விழுப்பத்தையுடைத்தான. புகழ்-குணப்ரதையையுடைய. கேசவனை-கேசிஹந்தாவானக்ருஷ்ணனை. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொன்ன-அருளிச்செய்த. பாடல்-கீதரூபமாய். ஓர்-அத்விதீயமான. ஆயிரத்துள்-ஆயிரத்துள். ஒரு-பகவதநுபவப்ரதிபாதகமான. இவைபத்தும் - இவைபத்தையும். பயிற்றவல்லார்கட்கு-சப்தார்த்தங்களிற்செறிவுதோன்றும்படி சொல்லவல்லார்களுக்கு. அவன்-அந்தக்ருஷ்ணன். நாடும்-அவிசேஷஜ்ஞப்ரசுரமானநாடும். நகரமும்-விசேஷஜ்ஞப்ரசுரமானநகரமும். நன்குடன் - ஶ்லாகாரூபமானநன்மையோடேகூட. காண-காணும்படியாக. நலனிடை-பகவத்பாகவதவிஷயத்திலே சேஷத்வசம்பத்தோடே. ஊர்திபண்ணி-நடக்கும்படிபண்ணி. வீடு - மோக்ஷாநந்தத்தையும். பெறுத்தி-கொடுத்து. தன்-தன்னுபாதிசேதநாசேதநங்களையும் தத்சம்பந்தாநுசந்தாநத்தாலே ஸ்வபோக்யத்வேந அபிமாநிக்கும்படி. மூவுலகுக்கும்-அவற்றுக்கு. ஒருநாயகம்-அத்விதீயநாயகத்வத்தை. தரும்-தரும்.

இவனுக்கத்விதீயநாயகத்வம் - பகவத்ஸ்வரூபாந்தர்ப்பாவத்தால்வந்த ததாத்மகத்வத்தாலென்றுகருத்து. பயிற்றவல்லாரென்று - பயிலுவிக்கவல்லாரென்றுமாம். இது - அறுசீராசிரியவிருத்தம்........................................................*

---

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யசித்தாரை சர்வலோகப்ரசித்தமாம்படி ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயிலேநடத்தி, மேலேபரமபதத்திலே சென்றால் தன்னைஸ்வர்யமிவர்களிட்டவழக்காக்குமென்கிறார்.

(கேடிலித்யாதி) கேடின்றிக்கே விழுப்பத்தையுடைத்தான, புகழ்-நித்யசித்தகல்யாணகுணங்களையுடைய, கேசிஹந்தாவையாயிற்றுக்கவிபாடிற்று. (குருகூர்ச்சடகோபன்சொன்ன) "ரகுவரசரிதம் முநிப்ரணீதம்" (ரகுவரசரிதம்முநிப்ரணீதம்) என்கிறபடியே, அவதாரத்துக்கவ்வருகுபோகமாட்டாத ஆழ்வாராயிற்றுக்கவிபாடினர். (பாடலோராயிரம்) "பாட்யே கேயே ச மதுரம்" (பாட்யேகேயேசமதுரம்) என்னுமாபோலே, இசையோடேயாயிற்றுப்பிறந்தது. (இவையுமொருபத்தும்) முத்துமுகமறிந்துகோத்துச் சேர்வைபார்க்குமாபோலே (இவையுமொருபத்தென்கிறர்) பயிற்றவல்லார்க்கு - சொல்லவல்லார்க்கு. பயிற்ற என்கிறவித்தை-பயிலஎன்றாக்கி, அப்யசிக்கவல்லார்கட்கென்னுதல். அவன்-தருமென்றந்வயம். நாடு-அவிசேஷஜ்ஞர். நகரம்-த்ரவ்யவிசேஷமறிந்திருக்கும்விசேஷஜ்ஞர். நன்குடன்காண - நன்மையோடேகாண. "இவனுமொருவனே" என்றுகொண்டாட. (நலனிடையூர்திபண்ணி) நன்மைக்குநடுவே நடக்கும்படிபண்ணி. நன்மையாவது-ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ. (வீடு

ம்பெறுத்தி) பரமபுருஷார்த்தமோக்ஷத்தையுங்கொடுத்து. (தன்மூவுலகுக்குந்தருமொருநாயகம்) தன்னதான த்ரிவிதாத்மவர்க்கத்துக்கு மிவன் ருனத்விதீயநாயகனும்படிபண்ணிக்கொடுக்கும். அவன்றன்னதான வைஸ்வர்யத்தை இவன் "என்னது" என்னும்படிபண்ணும். அதாகிறது-இவனுக் கைஸ்வர்யங்கொடாநிற்கச்செய்தே, இதுதனக்குப் புறம்பாம்படியிருக்கையன்றிக்கே தன்னைஸ்வர்யத்திலே அந்தர்ப்பூதமாம்படிபண்ணிக்கொடுக்கும் ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிசமம் (கேடிலித்யாதி) "இவைபத்தும் பயிற்றவல்லார்கட்கு" என்றுதொடங்கி, "தருமொருநாயகம்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியப்யசித்தாரையித்யாதி) "நாடும்நகரமும்" இத்யாதியைப்பற்ற (சர்வலோகப்ரசித்தமாம்படியென்றது) ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயாவது - ஜ்ஞாநபக்தி வைராக்யங்கள்.

விழு-ஶ்லாக்யமான. மேலிற்பதத்தையும் கூட்டிக்கொண்டிதுக்கர்த்தம் (நித்யசித்தேத்யாதி)

"கேசவனைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (ரகுவரசரிதமித்யாதி) "ததுபகதஸமாஸ" (ததுபகதஸமாஸ) இத்யாதி, "பாட்யேகேயேசமதுரம்" (பாட்யேகேயேசமதுரம்) இத்யாதி ச, பாலகாண்டே. பூர்வமேவலிகிதம். அவதாரத்துக்கு - க்ருஷ்ணுவதாரத்துக்கு. வால்மீகிராமாவதாரத்துக் கவ்வருகுபோக மாட்டாதாப்போலே, இவரும் க்ருஷ்ணுவதாரத்துக்கவ்வருகுபோகமாட்டாரென்றபடி.

பாடலோராயிரம் - காநரூபமானவத்விதீயமான வாயிரம். "இவையுமொருபத்து" என்றதுக்கு - விஸ்மயத்திலே நோக்கென்றருளிச்செய்கிறார் (முத்தித்யாதி) பயிலுகை - அப்யசிக்கை. பயிற்றுகை - அப்யசிப்பிக்கை; "பயிற்ற" - என்றால், சொல்லவென்று காட்டுமோவென்ன (பயிற்றவென்கிறவித்தையித்யாதி)

காட்சிக்குநன்மையேதென்ன (இவனுமித்யாதி) ஊர்தி - நடக்கை. "மூவுலகு" என்று - (த்ரிவிதாத்மவர்க்கம்) "லோகஸ்துபுவநேஜநே" (லோகஸ்துபுவநேஜநே) என்று லோகசப்தம் - ஜநவாசி. ஈஶ்வரனேபாதி யிவனுமொரு ராஜாவோவென்ன (அவன்றன்னதானவித்யாதி) விவரணம் (அதாகிறதித்யாதி) யத்வா, ஈஶ்வரனன்றே வத்விதீயநாயகன், ஆனபின்பு, இவனுமப்படியானு லவனுடைய நாயகத்வத்துக்குக்குறையாமேயென்ன (அவன்றன்னதானவித்யாதி) என்னுதல். இவனுக்கத்விதீயநாயகத்வம் - பகவத்ஸ்வரூபாந்தர்ப்பாவத்தாலே வந்த ததாத்மகத்வத்தாலேயென்றுகருத்து. ஒருநாயகம் - அத்விதீயநாயகத்வம்.

கேடிலித்யாரப்ய, வல்லார்கட்கு நாடுநகரமித்யாரப்ய, ஒருநாயகம் - அவன்-தருமித்யந்வய: ..........................................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( சன்மம்பலபலசெய்து. )

ப்ராதுர்ப்பாவாநுபாவாத்பரிஜநவிபவாத் பாவநாலங்க்ரியத்வா
ஜ்ஜைத்ரவ்யாபாரயோகாதகடிதகடநாத்தேவபாவப்ரஸித்தே: । ஆஸ்சர்
யக்ரீடநத்வாத்ஸரஸிஜநிலயாநந்தநாத்ஸந்தவ்ருத்தேரைஸ்வர்யவ்யக்திமத்வா
தபஹ்ருததநுஷாங்கேஸவம்ப்ரஜஹௌ. (௫௫)

(ப்ராதுர்ப்பாவாநுபாவாத்) சன்மம்பலபலசெய்து வெளிப்பட்டு-ஆஸ்ரித சம்ரக்ஷணார்த்தமாக வநேகாவதாரங்களைப்பண்ணி யநவதிகப்ரபாவத்தை யுடையனாகையாலும்; (பரிஜநவிபவாத்) குறைவிற்றடங்கடல் கோளரவேறி, கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவி - மிகவும்மிடுக்கையுடைய திருவநந்தாழ்வானைத் திருப்படுக்கையாகவும் விரோதிநிரசநசீலனான பெரியதிருவடியை வாஹநமாகவுமுடையனாகையாலும்; (பாவநாலங்க்ரியத்வாத்) மட்டவிழ்தண்ணந்துழாய்முடியானே-மதுஸ்யந்தியாய் ப்ரமஹரமான திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதனாகையாலும்; (ஜைத்ரவ்யாபாரயோகாத்) வாணனைக்காத்துமித்யாதி-பாணசுரரக்ஷணார்த்தமாக சேனையோடேகூடவந்தெதிர்த்த, த்ரிபுரசம்ஹாரம்பண்ணின த்ரிணேத்ரனுமவன் மகனானஷண்முகனுமக்நியும் யுத்தத்திலேபராஜிதராயோடும்படி பெரியதிருவடியைநடத்த வல்லனாகையாலும்; (அகடிதகடநாத்) ஒருநாளொருபோழ்திலித்யாதி-ஒருநாளிலேயொருமுஹூர்த்தத்திலே யொருவருத்தமின்றியே யெல்லாலோகங்களும் கழியும்படியாக, தன்னைநாதனாகவும் தூதனாகவும்படைத்த புகழையுடையவர்ஜுநனும் வைதிகனுமுடனே யேறத்தேரைநடப்பித்து, அப்ராக்ருததேஜோரூபமானதிருநாட்டிலேபுக்கு,வைதிகபுத்ரர்களை யவ்வுடம்போடப்பருவத்தோடேகொண்டுவந்துகொடுத்தவகடிதகடநா சாமர்த்த்யத்தையுடையனாகையாலும்; (தேவபாவப்ரஸித்தே:) தன்தெய்வநிலை யுலகிற்புகவுய்க்குமம்மான் - தன்னுடையவப்ராக்ருதஸ்வபாவத்தைலோகத்திலே யாவிஷ்கரிக்கையாலும்; (ஆஸ்சர்யக்ரீடநத்வாத்) மாயமயக்குக்களாலின்புறு மிவ்விளையாட்டுடையானை-ஆஸ்சர்யமான ஜகத்வ்யாபாரரூபலீலையை யுடையனாகையாலும்; (ஸரஸிஜநிலயாநந்தநாத்) அல்லிமலர்மகள்போக மயக்குக்களாகியுநிற்குமம்மான்-பெரியபிராட்டியாரோட்டைக் கலவியால்வந்த நிரதிசயாநந்தத்தை யுடையனாகையாலும்: (சந்தவ்ருத்தே:) வேண்டுமுருவுகொண்டு- யதேஷ்டமான வ்யாபாரத்தை யுடையனாகையாலும்; (ஐஸ்வர்யவ்யக்திமத்வாத்) தளர்வின்றியேயித்யாதி-சமஸ்தவஸ்துக்களினு மாத்மதயாவ்யாப்தனா யவற்றுக்கெல்லாம்காரணமாய் தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாய் நிரதிசயௌஜ்ஜ்வல்யனுமா யிருக்கையாலுமெம்பெருமான் சர்வபாபங்களையும் போக்குமவனென்று " சன்மம்பலபல " என்கிறதசகத்திலே யாழ்வாரருளிச் செய்தாரென்கிறார்,..........................................(௫௫)

ஸவம்ஸஸ்றாஹ்ஹஶூராதநவிஹிதஜமதூ்யத்ஸுஹாமஹ்யொமாலெதீவூ்ாலெவரகூ்திகாளிவிஷதநதயொநூாஷாநாஷுகா ஹா । ஸஹ்ராஷாவெஹவகாஹணாவஸிகமணொ தூஷணாஷக்ஷகூ ஷ்ரா ஷூதரகாதீவஹமாஷு ஹஸஹமதநம் ஷூாஹநாயம் தூதீயெ. (கூசு)

இப்படித்ருதீயசதகத்திலே பத்துதசகங்களாலும் ப்ரதிபாதிதங்களான வர்ந்தங்களை சங்க்ரஹித்து ப்ரதர்ஶிப்பித்தருளுகிறார்.

நிரதிசயசௌந்தர்யத்தை யுடைத்தாகையாலும், தன்றிருமேனியினின்றும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகையாலும், தாம்நினைத்தபடியே சேவ்யனாய்த்திருமலையிலே நின்றருளுகையாலும், சர்வசரீரனாகையாலும், ஆஶ்ரிதரைப்பிச்சேற்றவல்ல திருமேனிகாந்தியை யுடையனாகையாலும், அர்ச்சாவதாரம்பண்ணி யெல்லார்க்கும் சுலபனாகையாலும், தன்னுடையகுண விக்ரஹாதிகளிலே யீடுபட்டவர்களை சர்வோத்க்ருஷ்டராகப் பண்ணுமவனாகையாலும், மநஸ்ஸுமுதலான சர்வேந்த்ரியங்களையு மாகர்ஷிக்குமவனாகையாலும், தானொருவனே ஸ்தோத்ரவிஷயனாகையாலும், சர்வபாபங்களையும் நிவர்த்திப்பிக்குமவனாகையாலு மெம்பெருமான் * நித்யநிரவத்ய நிரதிசயௌஜ்ஜ்வல்ய சௌந்தர்யசௌகந்த்ய சௌகுமார்ய லாவண்யயௌவநாத்யநந்தகுண நிதிதிவ்யரூபனென்று த்ருதீயசதகத்திலேயாழ்வா ரருளிச்செய்தா ரென்கிறார்.........................................(கூசு)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

சன்மம்பலசெய்துதானிவ்வுலகளிக்கும்.
நன்மையுடையமால்குணத்தைநாடோறு - மிம்மையிலே
யேத்துமின்பம்பெற்றேனெனுமாறனையுலகீர்
நாத்தழும்பவேத்துமொருநாள். (கூ0)

(சன்மம்பலசெய்து) இதில்-பகவதர்ஹகரணனா னெனக்கொருகுறைகளு மில்லையென்றபாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; இதரரைக்கவிபாடுகைக் கநர்ஹகரணனான மாத்ரமன்றிக்கே, பகவத்விஷயத்தைக் கவிபாடுகைக் கர்ஹகரணனாகவும்பெற்றேன், எனக்கினிவேண்டுவதுண்டோவென்று ஹ்ருஷ்டராகிற * சன்மம்பலபல வினர்த்தத்தை சங்க்ரஹித்தருளிச்செய்கிறார். "சன்மம்பலசெய்து" இத்யாதியாலேயென்கை.

"சன்மம்பலபலசெய்து" என்கிறபாட்டு இத்திருவாய்மொழிக் குயிர்ப்பாட்டாகையாலே யத்தைக்கடாக்ஷித் தருளிச்செய்கிறார் (சன்மம்பலசெய்தென்று) "வஹுதாவிஜாயதெ" (பஹுதாவிஜாயதே) என்றும், "வஹூநிமெ

வ்யதீதாநி" (பஹூநிமேவ்யதீதாநி) என்றுஞ்சொல்லுகிறபடியே அசங்க்யாதமான வவதாரங்களைப்பண்ணி. (சன்மம்பலசெய்துதான்) அகர்மவஶ்யனுனதான் "கௌஸல்யாஜநயத்" (கௌஸல்யாஜநயத்) "ஜாதோஹம்யத்தவோதராத்" (ஜாதோஹம்யத்தவோதராத்) என்னும்படி ஆஶ்ரிதார்த்தமாக வசங்க்யாதமான வவதாரங்களைப்பண்ணி, (இவ்வுலகளிக்கும்) தன்வாசியறியாதசம்சாரிகளை ரக்ஷிக்கும். ரக்ஷணந்தான்-விரோதிநிரசந பூர்வகமாயிறேயிருப்பது. "குணவாந்கஶ்சவீர்யவாந்" (குணவாந்கஶ்சவீர்யவாந்) இறே. விரோதிகளைப்போக்கி யீரக்ஷைபாலே தடவிரக்ஷிக்கும் நன்மையுள்ளது சர்வேஶ்வரனுக்கிறே, "நஹிபாலநஸாமர்த்யம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்" (நஹிபாலநஸாமர்த்யம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்) உலகில்வன்மையுடைய வரக்கரசுரரை மாளப்படைபொருத நன்மையுடையவன்சீர்" என்றத்தைச்சொல்லுகிறது (இவ்வுலகளிக்கும்நன்மையுடைய மால்குணமென்று) "சீர்பரவப்பெற்றநான்" என்றத்தை (மால்குணத்தைநாடோறுமிம்மையிலேயேத்துமின்பம்பெற்றேன்) என்கிறது. ஒருதேசவிஶேஷத்திலே "விபந்யவ:" "விண்ணோர்பரவும்" என்றுஸ்துதித்து, "ஸோஶ்நுதேஸர்வாந்காமாந்ஸஹப்ரஹ்மணா" (ஸோஶ்நுதேஸர்வாந்காமாந்ஸஹப்ரஹ்மணா) என்றநுபவிக்குங்குணங்களை யிவ்விபூதியிலே ஸ்தோத்ரம்பண்ணுகையாலுண்டான வாநந்தத்தைப்பெற்றேன். "குறைவுமுட்டுப்பரிவிடர்துயர்துன்பமல்லல் துக்கத்தளர்வுக் கேடுகளின்றி யம்ருதாநந்தமக்நரானவர்" என்றிறே யாசார்யஹ்ருதயத்திலு மருளிச்செய்தது. (ஏத்துமின்பம்பெற்றேனென்மாறனையலகினாத்தழும்பவேத்துமொருநாள்) இப்படியவன் கல்யாணகுணங்களை ஸ்துதிக்கப்பெற்றேனென்றருளிச்செய்தவாழ்வாரை, லௌகிகராயுள்ளவர்களே, நாத்தழும்பேறும்படி ஸ்துதியுங்கோள்; அதுதான் பலநாள்வேண்டா, ஒருநாளமையும். "வீவில்காலமிசை மாலைகளேத்தி மேவப்பெற்றேன் வீவிலின்பமிகஎல்லை நிகழ்ந்தனன்மேவியே," "பகலிராப்பரவப்பெற்றேன்" என்கிறநிர்ப்பந்தம்வேண்டா (ஒருநாள்) சக்ருத்ஸேவிக்கவமையும், சர்வதாசரசமாயிருக்கும். "நாவினுனவிற்றின்பமெய்தினேன்" என்னும்விஷயமிறே........................(௩௦)

மூன்றும்பத்தில் - பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - ௩௦. பாட்டு - ௩௩௨.

மூன்றும்பத்துசம்பூர்ணம்.



